(எம்மான்—எம்முடைய இறைவன்), ஏதிர்ந்த பகல்குன்ற பல் உகுத்தோன்—(மாறுபட்ட சூரியனுடைய) வலியழியப் பல்லைத் தகர்த்தோன், பழனம் அன்ன பல் வளைக்கே—அவனுடைய திருப்பழனமெ(ம)ன்ற திருப்படை வீட்டையொத்த பல வளைகளையுடையாளுக்கு, உண்டே இடை—இடை உண்டோ? (எ-று).

---

## 5. உட்கோள்.

*இறைதிருக்கரத்து மறிமானோக்கி*
*உள்ளக்கருத்து வள்ளலறிந்தது.*

(இ-ள்) சுவாமியினுடைய திருக்கரத்து மான்மறி(யின் நோக்கினை உடையாளின்) மனத்தின் நினைவை நாயகன் அறிந்தது.

---

அணியு மமிழ்து மென்னாவியு மாயவன் றில்லைச்சிந்தா
மணியும் பராலறி யாமறை யோனடி வாழ்த்தலரிற்
பிணியு மதற்கு மருந்தும் *பிறழுப்பிறழ மின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே.

(ப-ரை) (அணியும் அமிழ்தும் என் ஆவியும் ஆயவன்—எனக்கு ஆபரணமும் அமிழ்தும் என் உயிரும் ஆயவன், தில்லைச் சிந்தாமணியும்—தில்லைக்கண் சிந்தாமணிபோல் அன்பர்க்கு நினைந்தவை கொடுப்போன்) ...உம்பரால் அறியா மறையோன்—தேவர்களாலும் அறியப்படாத வேதிய வடிவன்,

---

**5. தலைவன் கூற்று :—** இச் செய்யுட்பாடமும் உரையின் முற்பகுதியும் ஏட்டில் சிதைந்திருந்தன. மேலே எழுதப்பெற்ற உரையின் முதற்பகுதி—நகவளைவுக்குள் உள்ளவை—பேராசிரியர் உரையைப் பின்பற்றி எழுதப்பெற்றன.

(பிரதிபேதம்) * பிறழப் பிறழும்

அடி வாழ்த்தலரின்—பாதங்களை வாழ்த்தமாட்டாதாரைப் போல, பிறழப் பிறழ—பார்க்கப் பார்க்க, பிணியும் அதற்கு மருந்தும்—நோயுமாய் நோய்க்கு மருந்துமாகா நின்றன, மின்னும் பணியும் புரை மருங்குல்—மின்னையும் அரவின் படத்தையும் நிகர்த்த இடையினையுடையளாய், பெருந்தோளி படைக்கண்களே-பெரிய தோளினையுடையாள் வேல்போலும் கண்கள்.

கண்கள் (பிறழப் பிறழப்) பார்க்கப் பார்க்க நோயும் அதற்கு மருந்துமாக நின்றது; எங்ஙனென்னின், பொது நோக்கத்தாலே பார்க்க நோயாகா நின்றது; உள்ளக்கருத்து வெளிப்படு(வத)னோடு கூடிய நோக்கத்தாலே பார்த்தபோது அதற்கு மருந்தாக நின்றது

**கைக்கிளை முற்றிற்று.**

---

பொதுநோக்கு :—

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. (குறள் 1091)

இக்குறளுக்குப் பரிமேலழகர் பின்வருமாறு உரைகூறுவர்:- 'நோய் செய்யு நோக்கு: அவண் மனத்தினுய காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்ற நோக்கு; மருந்தாய நோக்குத் தன்கணிகழ்கின்ற அற்பு நோக்கு. நோய் செய்யும் நோக்கினைப் பொதுநோக்கென்பாருமுளர்; அது நோய் செயிற் கைக்கிளையாவதல்லது அகமாகாமையறிக.'

கண் தருகாமம். 'கண்தர வந்த காம வொள்ளெரி' என்பது குறுந்தொகை (305-1).

'குறிப்பறிதலே வழிநிலைக் காட்சியாய்ப் புகுமுகம் புரிதல், என்னும் மெய்ப்பாடு கூறிய தாஉமாயிற்றென்று' கூறி இச்செய்யுளை உதாரணமாகக் காட்டுவர் இலக்கணவிளக்க ஆசிரியர். (சூத். 491 உரை).

## 6. தெய்வத்தை மகிழ்தல்.

அன்னமென்னடை யரிவையைத்தந்த
மன்னிருந்தெய்வத்தை மகிழ்ந்துரைத்தது.

(இ-ள்) அன்னத்தின் நடையைப் போன்ற மதுர நடையினையுடைய நாயகியைக் கூட்டின நிலைபெற்ற பெரிய தெய்வத்தைச் சந்தோஷித்துச் சொன்னது.

---

வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வானுகத்தின்
துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல் லோன்
[கயிலைக்
கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவை யல்லால் வியவே னயவேன் றெய்வமிக்கனவே.

(ப-ரை) வளைபயில் கீழ்கடல் நின்று இட—சங்கு செறிந்த கீழைச் சமுத்திரத்தினின்று கழியைப் போக்கிட, மேல்கடல் வான் நுகத்தின்—மேலைக்கடலிலே போகட்ட பெரிய நுகத்தின், துளை வழி—துளையிடத்தே, நேர்கழி கோத்தென—அத்துளை கோத்த கழி சென்று கோப்புண்டாற்போல, தில்லைத்தொல்லோன்—பெரும்பற்றப்புலியூர்க்குப் பழையவனாகிய முதலியாருடைய, கயிலை—ஸ்ரீ கயிலாயத் திருமலையின், கிளை வயின் நீக்கி—ஆயக்கூட்டத்தாரிடத்து நின்றும் பிரித்து, இக் கெண்டையங் கண்ணியைக் கொண்டு தந்த—கெண்டை போலும் நயந்த கண்ணினையுடையாளை நான் கண்டு கூடுவதாகக் கூட்டின, விளைவையல்லால் வியவேன்—இப்படிக்கு விளைந்த விளைவையல்லது கொண்டாடுவதில்லை; நயவேன் தெய்வம் மிக்கனவே—வேறு தெய்வங்களையும் விரும்புவதில்லை. (எ-று.)

---

6. தலைவன் கூற்று. கழி—கயிறு. 'கழிவிடும் பரி; கழி—கயிறு' (தக்க. 132 உரை).

இவளைத் தந்த தெய்வத்தையல்லது நயவேனென்று அவளது நலத்தை மிகுத்தமையின், இதுவும் நலம் பாராட்டல் (பே-ரை).

## 7. புணர்ச்சி துணிதல்.

கொவ்வைச்செவ்வாய்க் கொடியிடைப்பேதையைத்
தெய்வப்புணர்ச்சி செம்மறுணிந்தது.

(இ-ள்.) கொவ்வைக் கனியை யொத்த சிவந்த வாயினையுங் கொடிபோலும் இடையினையுமுடைய நாயகியைக் கந்தருவமண மென்று நாயகன் அறுதியிட்டது.

---

ஏழுடை யான்பொழி லெட்டுடை யான்புய மென்னைமுன்னாள்
ஊழுடை யான்புலி யூரன்ன பொன்னிவ் [1]வுயர்வரைவாய்ச்
சூழுடை யாயத்தை நீக்கும் விதி[2] துணை யாயமனனே
யாழுடை யார்மணங் காணணங் காய்வந் தகப்பட்டதே.

[ப-ரை.] ஏழுடையான் பொழில்—புவி ஏழுக்கும் உடையவன், எட்டுடையான் புயம்—எட்டுத் திக்கையும் திருக்கரங்களாக உடையவன், என்னை முன் ஆள் ஊழ் உடையான்—நான் தனக்கு அடிமை செய்வதற்கு முன் விதியுடையவன், புலியூர் அன்ன—சிதம்பரத்தை ஒத்த, பொன்—பொன் போன்றவளை, இவ் உயர் வரைவாய்—இந்த உயர்ந்த மலையிடத்து, சூழ் உடை

---

7. தலைவன் கூற்று.

(பா-ம்.) [1]உயர் பொழில்வாய். [2]துணையாமனனே.

ஏழுடையான் பொழில் : "பொழிலேழென்பதற்கு ஏழு சோலையெனச் சொல்லுவாருமுளர். இப்பொருள் காளக்கவிக்குப் பொருந்தாது. பொழிலேழென்பது ஏழு பூமி; 'ஏழுடையான் பொழிலெட்டுடையான் யான்புயம்' எனத் திருக்கோவையில் இரண்டு பொருளுமுளவென வுணர்க." (தக். 70. உரை.)

பேராசிரியருரை, 'என்னை முன்னாளூழுடையான்' என்ற பகுதிக்கு 'எனக்கு ஆட்படுந்தன்மை யுண்டாவதற்கு முன்னே என்னை யாள்வதொரு புதிதாகிய முறைமையை யுடையான்' என்றும், 'அணங்காய் வந்தகப்பட்டது' என்ற பகுதிக்கு 'முன் வருத்துவதாய் வந்தகப்பட்டது' என்றும் கூறுகிறது.

ஆயத்தை நீக்கும்—சுற்றிப் பிரியாத ஆயக்கூட்டத்தாரிடத்தினின்றும் நீக்கின, விதி துணையாய மனனே—விதியே துணையாகிய நெஞ்சமே, யாமுடையார் மணங்காண் அணங்காய் வந்து அகப்பட்டதே—(கந்தருவ மணம் கைகூட ஒரு பெண்ணுருகவந்து (என் கைக்குள்) சிக்கிக்கொண்டது (எ-று.)

---

## 8. கலவியுரைத்தல்.

கொலைவேலவன் கொடியிடையொடு
கலவியின்பங் கட்டுரைத்தது

(இ-ள்.) (விலங்குகளின்) உயிரை வேட்ட வேலினையுடைய நாயகன் பொன்மருங்குலையுடைய நாயகியுடனே கூட்டத்தால் படும் இன்பம் இசையச் சொன்னது.

---

சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வம்[1] தந்தின்று நானிவ ளாம்பகுதிப்
பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பிற்
கற்பா வியவரை வாய்க்கடி[2] தோட்ட களவகத்தே.

---

இப்பகுதிக்கட்கே பிறிதோர் எட்டுச் சுவடியில், (1) 'பொழிலேழுடையான் புயமெட்டுடையான் எனக் காட்டப்படுந்தன்மை யுண்டாவதற்கு முன்னே என்னை ஆள்வதொரு பதியாகிய முறைமையை யுடையான்' என்றும், (2) 'அணங்காய் வந்தது' என்பதற்கு, உள்ளம் செல்லவும் இது தகாது என்று விலக்குதலான், முன்வருத்தமானவையில் தெய்வத்தன்மையை யுடைத்தாய் வந்ததெனினும் அமையும்' என்று கூறப்பட்டுள்ளன.

இச்செய்யுளைத் தேய்வப்புணர்ச்சி துணிதற்கு உதாரணமாகக் காட்டுவர் இலக்கண விளக்க ஆசிரியர். (சூ. 491 உரை).

---

8. (பா-ம்.) 1. தந்தன்று. 2. தோட்ட.

[ப-ரை.] சொல்பால் அமுது இவள்—சொல்லும் பகுதியில் அமுது இவள், யான் சுவை என்ன—(யான் அதன் சுவையென்று) சொல்லும்படி, துணிந்திங்ஙனே—அறுதியிட்டபடியே. நற்பால் வினை தெய்வம் தந்தின்று—நல்ல கூறுபாட்டையுடைய விதியாகிய தெய்வம் தந்தின்று (தந்தது); நான் இவளாம் பகுதிப் பொற்பு—நானென்றும் இவளென்றும் வேறுபட்ட இவ் வழகை, யார் அறிவார்—யாராலே அறியப்படும்? புலியூர் புனிதன்—பெரும்பற்றப்புலியூரிலே உளனாகிய தூயவன், பொதியின் வெற்பில்—அவனுடைய பொதியமாமலையில், கல் பாவிய வரைவாய்—கல் பாய்ந்தகன்ற மலையிடத்து, கடிதொட்ட களவகத்தே—காவலை நீங்கின களவகத்தே. (ஃ-று).

நானென்றும் இவளென்றும் வேறுபட்ட இவ்வகை யாராலேயறியப்படும் என்ன, ஓருயிர்க் கோருடம்பானால் இன்பம் அனுபவிக்க வொண்ணாதென்று ஒருயிர்க்கு இரண்டுடம்பானால் இவ்வாழ்க்கை யாராலே அறியப்படும்? அனுபவிக்கிற நானே அறியுமித்தனை என்றுபடும்.

---

## 9. இருவயினொத்தல்.

ஆராவின்பத் தன்புமீதூர
வாரார்முலையை மகிழ்ந்துரைத்தது.

(இ-ள்.) அமையாத இன்பத்தாலே அன்புமிகுந்து செல்ல, கச்சார்ந்த தனங்களை யுடையாளை விரும்பிச் சொன்னது.

---

8. தலைவன் கூற்று.

தந்தின்றென்பதைப் பேராசிரியர் தந்து இன்று எனப் பிரித்துப் பொருள் கொள்வர். 'கடிதோட்ட என்பதற்குக் கடியப்பட்ட தொகுதியையுடைய களவென்றுரைப்பினும் அமையும். தோட்டவென்றது தலைமகள் ஆயத்தையும் தன் இளைஞரையும், கடிதோட்டவென்பது பாடமாயின், மணந்தொடங்கிய களவென்றுரைக்க' என்பதும் பேராசிரியர் உரை.

உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச் சிற்றம் பலத்தொருத்
[தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக்
[கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதி
[தாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே.

[ப-ரை.] உணர்ந்தார்க்கு உணர்வு—தன்னை உணர்ந்தவர் களுக்கு உணர்வானவன் அரியோன்—அத்தன்மை உணராதார்க்கு அரியவன், தில்லைச் சிற்றம்பலத்து ஒருத்தன்—பெரும்பற்றப்புலியூரிற் திருச்சிற்றம்பலத்தே யுளனாகிய ஒப்பில்லாதவன், குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய்—அவனுக்குக் குணமாகிய சிவானந்த மகிமை வெளிப்பட்டாற்போல வெளிப்பட்ட கொவ்வைக்கனிபோற் சிவந்த வாயினையுடைய,

---

9. தலைவன் கூற்று. உணர்ந்தார்க் குணர்வரியோன்—ஒருகால் தன்னை உணர்ந்தவர்கட்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்த விருத்தி யொடுங்குதலான் மீட்டுணர்வரியோன்; உணர்ந்தார்க்குக் குணந்தான் வெளிப்பட்டவென இயைத்துரைப்பினுமமையும். உணர்ந்தார்க் குணர்வரியோன் என்பதற்குத் தவத்தாலும் தியானத்தாலும் எல்லாப் பொருள்களையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியோனெனினும் அமையும்.

அல்குல்போல வளர்கின்றதென்றவழி, ஒருகாலைக் கொருகால் வளருமென்றாரல்லர். என்னை, குறைபாடுள்ளதற்கன்றே வளர்ச்சியுண்டாவது; அல்லாதூஉம் எஞ்ஞான்றும் வளருமெனின், அல்குற்கு வரம்பின்மையும் தோன்றும். மற்றென்னை கருதியதெனின், இயற்கைப் புணர்ச்சி புணர்கின்ற காலத்து இவள் பதின்மூன்றாண்டும் பத்துத் திங்களும் புக்காள்; ஆகலின் இவளது அல்குல் இலக்கணக் குறைபாடின்றியே வளராநின்றது. வளர்ந்து பன்னிரண்டு நிரம்பினால் ஒருபெற்றியே நிற்கும். அதுபோல, இவன் காதலும் உள்ளமுள்ளளவு நிறைந்து பின்னைக் குறைபாடின்றி ஒருபெற்றியே நிற்குமென்பது.'' (பே-ரை).

இச்செய்யுட் கருத்தை 'வேட்ட பொழுதின வையவை போலுமே, தோட்டார் கதுப்பினாள் தோள்' என்ற குறளுடன் (1105) ஒப்பிடுக.

இதனை நலம்பாராட்டற்குச் செய்யுளென்பர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ. 493 உரை).

கொடியிடை தோள்-வஞ்சிக்கொடிபோன்ற இடையினையுடைய இவளுடைய தோள்கள், புணர்ந்தால் புணருந்தொறும்—கூடிணல் கூடுந்தோறும், பெரும்போகம் பின்னும் புதிதாய்—பெரிய போகமானது பின்னும் ஒருகாலைக் கொருகால் புதிதாய், மணந்தாழ் புரிகுழலாள்—மணம் செறிந்த அளகத்தினையுடையவள். அல்குல்போல் வளர்கின்றதே—அல்குலினது பெருமைக்கு உவமை யில்லாதது போல, இவ்வின்பத்திற்கு உவமையில்(லாமல்) பெருகாநின்றது. இதென்ன வியப்போ? (எ-று).

---

## 10. கிளவி வேட்டல்.

அன்னமன்னவ ளவயவங்கண்டு
மென்மொழிகேட்டு விருப்புற்றது.

(இ-ள்.) நடையாலன்னத்தை யொத்தவள் அவயவத்தைப் பார்த்து மெல்லிய வார்த்தையினைக் கேட்டதாக விரும்பினது

---

அளவியை யார்க்கு மறிவரியோன் றில்லை யம்பலம்போல்
வளவிய வான்கொங்கை வாட்டடங் கண்ணுதன் மாமதியின்
பிளவியன் மின்னிடை பேரமை தோளிது பெற்றியென்றூர்
கிளவியையென்னோ வினிக்கிள்ளை யார்வாயிற் கேட்கின்றதே.

[ப-ரை] அளவியை யார்க்கும் அரிவரியோன்-தன்னுடைய திருவெல்லை யாவராலும் அறிதற்கு அரியவன், தில்லையம்பலம் போல்—திருவம்பலத்தையொத்த. வளவிய வான்கொங்கை—வளப்பத்தை உட்கொண்டிருந்தன கனதனங்களும்; வாள் தடம்கண்—பெரிய கண்கள் வாள் போன்றிருந்தன; நுதல் மாமதியின் பிளவியல்—நெற்றியும் பாதி மதியின் இயல்பாயிருந்தது; மின் இடை—இடையும் மின் போன்றிருந்தது; பேர் அமை தோள்—பெரிய தோள்களும் வேய்தாமாகி இருந்

---

10. தலைவன் கூற்று. இதனைச் சொற்கேட்க விரும்புதற்குச் செய்யுள் என்பர் இலக்கண விளக்க ஆசிரியர். (சூ. 493 உரை).

தன; இது பெற்றி யென்றால்—அவயவங்களின் இயல்புகள் இவையானால், கிளவியை என்னோ இனி கிள்ளையார்பால் கேட்கின்றதே—கிளியை ஒப்பார் வாயில் வார்த்தையைக் கேட்குந் தரந்தான் என்ன? அவயவங்களின் இயல்புகள் இவையானால் அவர் வார்த்தையும் இவற்றிற்குத் தக்கனவல்லவோ? (எ-று)

---

## 11. நலம்புனைந் துரைத்தல்.

பொங்கிழையைப் புனைநலம்புகழ்ந்
தங்கதிர்வேலா னயர்வுநீங்கியது.

(இ-ள்.) மிகுந்த ஆபரணங்களையுடையாளை (அவள்புனைந்த நலன்களைப் புகழ்ந்து) அழகின ஒளியினையுள்ள வேலினையுடையவன் வருத்தமகன்றது.

---

கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுரு கக்குனிக்கும்
பாம்பலங் காரப் பரன்றில்லை யம்பலம் பாடலரின்
தேம்பலஞ் சிற்றிடை யீங்கிவ ளங்கனி வாய்கமழும்
ஆம்பலம் போதுள வோவளி காணும் மகன்பணையே.

[ப்-ரை.] கூம்பல் அம் கைத்தலத்து அன்பர் என்பு ஊடு உருக குனிக்கும்—கூம்புதலையுடைத்தாகிய அழகிய கைத்தலங்களை உடைய அடியார் என்புகளெல்லாம் கரைந்து உருகும்படி ஆடி அருளின்ற, பாம்பு அலங்கார பரன்—அரவாபரண அலங்காரச் சிவன், தில்லையம்பலம்—அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் திருவம்பலத்தை, பாடலரில்—பாடமாட்டாதாரைப் போல, தேம்பலம் சிற்றிடை—தளர்ச்சியையுள்ள அழகிய சிற்றிடையினையுடைய, ஈங்கு இவள் தீங்கனி வாய் கமழும்—இவளுடைய செய்த்த நிறமுடைத்தாகிய கனிவாய் விரிமை(?) போலே நாறுவன, ஆம்பல் அம் போது உளவோ—ஆம்பற்பூவும் சில உண்டோ? அளிகாள் நும் அகன் பணையே—வண்டுகாள்! நம்முடைய அகன்ற மருதநிலத்துண்டாகிற் சொல்லுவீராக.

---

### 11. தலைவன் கூற்று.

(கு-ரை.) புனைநலமென்றது புனையப்பட்ட இயற்கை நலத்தை. அயர்வு நீங்கியது—சொல்லாடாமையினுண்டாகிய வருத்தம் நீங்கியது. (பே-ரை.)

சொற்கேளாது அயர்வு நீங்கியதற்குச் செய்யுள் (இலக். விளக். 493 உரை.)

## 12. பிரிவுணர்த்தல்.

பணிவள ரல்குலைப் பயிர்ப்புறுத்திப்
பிணிமலர்த்தாரோன் பிரிவுணர்த்தியது.

(இ-ள்.) பாம்பினது படத்தை யொத்து மிக்க அல்குலை யுடையாளை, பயிலாத பொருளாகிய பரிவுக்கு அருவருக்கப் பண்ணி, கட்டப்பட்ட மாலையையுடையவன் பிரிவு அறிவித்தது.

---

சிந்தா மணிதெண் கடலமுதந் தில்லை யானருளால்
வந்தா லிகழப் படுமே மடமான் விழிமயிலே
அந்தா மரையன்ன மேநின்னை யானகன் றாற்றுவனே
சிந்தா குலமுற் றென்னையென் னை[1]வாட்டந் திருத்துவதே.

[ப ரை.] சிந்தாமணி தெண்கடல் அமுதம்—சிந்தாமணி என்கின்ற வள்ளலும், தெளிந்த கடலிலே உண்டாகிய அமுதமும், தில்லையான் அருளால்—திருவம்பலநாதன் திருவருளினாலே, வந்தால் இகழப்படுமே—இவை சிலர்க்குண்டானால் வேண்டா என்று இகழப்படுமோ? மடமான் விழிமயிலே—மெல்லிய மானோக்கம் போன்ற நோக்கினையுடையாய்! சாயலால் மயிலை ஒப்பாய்! அம்தாமரை அன்னமே—அழகிய தாமரைக்கண் வாழும் அன்னமே! நின்னை யான் அகன்று ஆற்றுவனே—உயிரினும் சிறந்த நின்னை இருதலைப்புள்ளின் ஒருயிரன்ன யான் பிரிவாற்றுவனோ? சிந்தாகுலமுற்று என்னே—சிந்தையானது வருத்தமுற்று ஏன்தான், என்னை வாட்டம் திருத்துவதே—என்னை நோய் செய்கின்றது? சொல்லுவாயாக வேண்டும் (எ-று).

---

12. தலைவன் கூற்று.

(பா-ம்) [1] வாட்டத் திருத்துவதே.

பயிர்ப்பு—பயிலாத பொருட்கண் வந்த அருவருப்பு; ஈண்டுப் பயிலாத பொருள் பிரிவு (பேராசிரியர்).

இருதலைப் புள்ளின் ஒருயிர்: இவ்வாறே கலி. 89 : 4; அகநா 12 : 5; பரி 8 : 72-3, பரிமேல், குறள் 1109, பரிமேல், சீவக. 1220, 1632, 17667-8, 2098 என்ற நூற்பகுதிகளிலும் உரைகளிலும் கூறப்பட்டமை நோக்கத்தக்கது.

## 13. பருவாலறிதல்.

பிரிவுணர்ந்த பெண்கொடிதன்
பருவரலின் பரிசுநினைந்தது.

(இ-ள்) தன் பிரிவை அறிந்து பெண்ணுருக்கொண்ட ஒரு வல்லிச்சாதக் கொடியைப் போன்றவளுடைய துன்பத்தி னியல்பை விசாரித்தது.

---

கோங்கிற் பொலியரும் பேய்கொங்கை பங்கன் குறுகலரூர்
தீங்கிற் புகச்செற்ற கொற்றவன் சிற்றம் பலமனையாள்
நீங்கிற் புணர்வரி தென்றோ நெடிதிங்ங னேயிருந்தால்
ஆங்கிற் பழியா மெனவோ வறியே னயர்கின்றதே.

[ப-ரை] கோங்கின் பொலி அரும்பு ஏய் கொங்கை பங்கன் —கோங்கினது பொலிவு பெற்ற அரும்பை யொத்த திருமுலைத் தடங்களையுடைய ஈசுவரியாரைப் பாகத்திலே உள்ளவன், *குறுகலர் ஊர் தீங்கில் புக—தன்னை வந்து சேராதவருடைய முப்புரங்கள் தீங்காகிய புத்த சமயத்திலே புகுதலாலே, செற்ற கொற்றவன்—அழித்த வெற்றியினையுடையவன், சிற்றம்பலம் அனையாள்—அவனுடைய திருச்சிற்றம்பலம் போன்றவள், நீங்கின் புணர்வு அரிது என்றோ—பிரிந்தால் தன்னைக் கூடுதற்கு அரிதென்றோ, நெடிது இங்ஙனே இருந்தால்—நெடும்பொழுது இங்ஙனம் தாழ்க்க இருந்தால், ஆங்கு—அவ்விடத்து, (ஆவது, சுற்றத்தாரிடத்தும் அயலாரிடத்தும்) இல்பழியாம் எனவோ—குடிப்பழியாமென்றோ அறியேன்—அறிகிலேன்; அயர்கின்றது —வருந்துகின்றது.

---

13. தலைவன் கூற்று.

குறுகலர் ஊர் தீங்கில் புக—குறுகாதார் புரங்கள் பாசண்ட தரும மாகிய தீங்கிலே புகுதலான். அனையாள், அயர்கின்றது (எனக்கூட்டுக) (பேராசிரியர்).

## 14. அருட்குணமுரைத்தல்.

கூட்டிய தெய்வத் தின்னருட் குணம்
வாட்டமின்மை வள்ள லுரைத்தது.

(இ-ள்.) (தெய்வத்தின் அருளினது செய்திக்குக் குறைவிலாமையை உரைத்தது)

---

தேவரிற் பெற்றநஞ் செல்வக் கடிவடி வார்திருவே
யாவரிற் பெற்றினி யார்சிதைப் பாரிமை யாதமுக்கண்
மூவரிற் பெற்றவர் சிற்றம் பலமணி மொய்பொழில்வாய்ப்
பூவரிற் பெற்ற குழலியென் வாடிப் புலம்புவதே

[ப-ரை.] தேவரில் பெற்ற நம் செல்வக் கடி - தேவர் தரப் பெற்ற நம்செல்வமுடைத்தாகிய மணத்தை, வடிவு ஆர்திருவே- அழகார்ந்த இலக்குமியை ஒப்பாய்!. யாவரில் பெற்று இனியார் சிதைப்பார்-இதனை அழித்தற்கு யாவரிடத்திலே பதம் பெற்று யாவராலே அழிக்கலாம்? இமையாத முக்கண் மூவரில் பெற்றவர் - இமையாத மூன்று திருநயனங்களும் சந்திராதித்தர், அக்கினித்தேவன் என்கின்ற மூவராலேயுடையவர், சிற்றம்பலம் அணி மொய் பொழில்வாய் - அவருடைய திருச்சிற்றம்பலத்தைச் சூழ்ந்து சேர்ந்த பொழிலிடத்து, பூவரிற் பெற்றகுழலி- (பூவினால் துற்றவள் அளகத்தினை யுடையாய்!) என வாடிப் புலம்புவதே - என் தான் மெலிந்து வருந்துகின்றது? எ-று,

---

14. தலைவன் கூற்று.

கொளுவின் பொருள், செய்யுள் ஆகியவை எட்டில் சிதைந்துள்ளன. உரையில் சிற்றம்பலம் பணி என்றெழுதப்பெற்றிருக்கிறது.

இமையா முக்கண் மூவரில் பெற்றவர்: 'உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண் மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்'; (திருமுருகு. 153-4); இமையா முக்கண்......பிஞ்ஞகனே (தே - திருக்கள்ளில் 3).

இதனைத் தெய்வத்திறம் பேசுதற்குச் செய்யுளென்பர் இலக். விளக்க ஆசிரியர் (சூ. 497 உரை).

## 15 இடமணித்துக் கூறி வற்புறுத்தல்.

மடவரலை வற்புறுத்தி
இடமணித்தென் றவனியம்பியது.

(இ-ள்) மடப்பத்தை வெற்றியாக வுடையவளை வலியுறுத்தி, 'உங்கள் இடத்துக்கு எங்கள் இடம் அண்ணிது' என்று நாயகன் சொன்னது.

---

வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்களப த்தொளி பாயநும்மூர்க்
[1] கருங்குன்ற வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே

[ப-ரை] வரும் குன்றம் ஒன்று உரித்தோன்—இருஷிகள் யாகத்திலே தோன்றி, மலை கால் படைத்தாற் போலே மேல் வருகின்ற யானையை உரித்தவன், தில்லை அம்பலவன் மலயத்து இரும் குன்றவாணர் இளங்கொடியே—பெரும்பற்றப்புலியூர்க்கு உளனாகிய திருவம்பலநாதன் வரையிடத்துப் பெரிய மலைக்குக் கர்த்தராகிய குறவாணர்க்கு மகளாகிய வஞ்சிக்கொம்பே! இடர் எய்தல்—துக்கிக்க வேண்டா; எம் ஊர்—எங்கள் ஊர், பரும் குன்ற மாளிகை—பெரிய குன்றத்தை ஒத்த மாளிகைகளில், நுண் களபத்து ஒளி பாய-நுண்ணிய வெண்சாந்தொளி பரக்க, நும் ஊர் கருங்குன்ற வெண்ணிறக் கஞ்சுகம் ஏய்க்கும்—உங்கள் ஊர் கரிய குன்றத்துக்கு இட்ட வெள்ளைநிறச் சட்டையை ஒக்கும், கனங்குழையே—கனத்த குழையினை உடையாய்! வருந்தாதே என்றது.

---

15. தலைவன் கூற்று.

(பா-ம்) [1] கருங்குன்றம் வெண்ணிற

நும் ஊர் கரு குன்றம் வெள் நிறம் கஞ்சுகம் எய்க்கும்—நும்மூர்க் குண்டாகிய கரிய குன்றம் வெள்ளை நிறத்தையுடைய சட்டையிட்டதனேடொக்கும். கருங்குன்ற வெண்ணிறமென்பது பாடமாயின், நுண்களபத்தொளி பரப்ப அவ்வொளி நும்மூர்க் கருங்குன்றத்திற்கிட்ட வெண்ணிறக்கஞ்சுகத் தோடொக்குமென்க. (பே-உரை.)

## 16. ஆடிடத்துய்த்தல்.

வன்புறையின் வற்புறுத்தி
அன்புறுமொழியை அருககன்றது.

(இ-ள்.) வலியுறுத்தும் வார்த்தைகளாலே வலியுறுத்தி, விரும்பத்தக்க வார்த்தையினை யுடையாள் அருகினின்று நீங்கியது.

---

தெளிவளர் வான்சிலை செங்கனி வெண்முத்தந் திங்களின்வாய்ந்
தளிவளர் வல்லியன் னாய்முன்னி யாடுபின் யானளவா
ஒளிவளர் தில்லை யொருவன் கயிலை யுகுபெருந்தேன்
துளிவளர் சாரற் கரந்துங்ங னேவந்து தோன்றுவனே.

[ப-ரை.] தெளி - நான் முன்பு சொன்ன வார்த்தைகளைத் தெளிவாயாக; வளர் வான் சிலை - கால் நிமிர்த்த பெரிய சிலைகளையும், செங்கனி - சிவந்த கொவ்வைக் கனியையும், வெண் முத்தம் - வெண்மையுடைய முத்து நிரையினையும், திங்களின் வாய்ந்து-ஒரு திங்களிடத்தே வாய்க்கக்கண்டு, அளிவளர் வல்லி அன்னாய் - வண்டுச்சாதிகள் மிக்க வல்லிகாரத்தை ஒப்பாய்! முன்னி ஆடு - முற்பட்டு விளையாடுவாயாக; பின் - அதற்குப் பின்னே, யான்-நான். அளவா ஒளி - அளவிடப்படாத ஒளியாயுள்ளவன். வளர் தில்லை ஒருவன் - மிக்க பெரும்பற்றப்புலியூரிலே ஒப்பில்லாதவன், கயிலை - அவனுடைய ஸ்ரீ கயிலாயத்தில், உகுபெருந்தேன் துளி வளர் சாரல் - உகா நின்ற பெரிய தேன் துளிகளால் மிகுந்த வரைச் சாரலிடத்து, கரந்து உங்ஙனே வந்து தோன்றுவனே - ஒளித்து ஒரு பக்கத்தாலே வந்து தோன்றக் கடவேன் (எ-று).

---

**16.** தலைவன் கூற்று.

* பாடலிலும் உரையிலும் தென் துளி என்றே எழுதப்பட்டுள்ளன.
வன்புறை - வற்புறுத்தும் சொற்கள். உங்ஙன் - இடைப்பக்கம்.
பெருந்தேன் - அளவிற்பெரிதாகியமலைத்தேன்: 'நெடுவரைப்பெருந்தேன்; பெருந்தேன் கண்படுவரை (குறுந்தொகை 60; 1-2; 273: 5); சிறுர் கவண் வாய்த்த மணியின் சிதை பெருந்தேன். (சிற். 252).

இதனைப் பிரிந்து வருகென்றற்குச் செய்யுளென்பர் இலக். விளக்க ஆசிரியர் (497 உரை).

## 17. அருமையறிதல்.

சுற்றமுமிடனுஞ் சூழலுநோக்கி
மற்றவளருமை மன்னனறிந்தது

(இ-ள்) ஆயக்கூட்டத்தாரையும், மடவரார் புகுதற்கரிய இடத்தையும், சூழ்ந்த பொழிலையும் பார்த்து, மற்றந்த நாயகியுடைய அருமையை நாயகன் அறிந்தது.

---

புணர்ப்போ னிலனும் விசும்பும் பொருப்புந்தன் பூங்கழலின்
துணர்ப்போ தெனக்கணி யாக்குந்தொல் லோன்றில்லைச்
[சூழ்பொழில்வாய்
இணர்ப்போ தணிகுழ லேழைதன் னீர்மையிந் நீர்மையென்
[றுற்
புணர்ப்போ கனவோ பிறிதோ வறியேன் புகுந்ததுவே.

[ப-ரை.] நிலனும் விசும்பும் பொருப்பும் புணர்ப்போன்—பூமியையும் ஆகாயத்தையும் மலைகளையும் படைக்கின்றவன், தன் பூங்கழலின் துணர்போது—தன் பொலிவினையுடைத்தாகிய ஸ்ரீபாதங்களாகிய இணையொத்த பூக்களை, எனக்கு அணி ஆக்கும் தொல்லோன்-என் முடிக்கு அணியாக்கும் தொல்லோன், தில்லை சூழ் பொழில்வாய் - அவனுடைய பெரும்பற்றப் புலியூரைச் சூழ்ந்த பொழிலிடத்தே, இணர்போது அணிகுழல் ஏழை தன் நீர்மை—கொத்துப் பூ அணிந்த கூந்தலினையுடைய நாயகி தன்மை, இ நீர்மை—இத்தன்மையாயிருந்தது, என்றால்—ஆனபொழுது, புணர்ப்போ-மாயமோ ? கனவோ—தரிசனங் கண்டோமோ ?, பிறிதோ—அன்றி நாம் அறியாதன சிலவோ?, அறியேன் புகுந்ததுவே—இவளுடன் கூடின பின்பு தோன்றினது இன்னபடி என்று அறிகிலேனில்லை (எ-று.)

---

**17. தலைவன் கூற்று.**

(கு-ரை) போது இணர் அணிகுழல் என்றும், தில்லைசூழ் பொழில் வாய் புகுந்தது என்றும் பேராசிரியர் பொருத்திப் பொருள் கூறுவர். 'பொழில் வாயிணர்ப் போதென்பாருமுளர்; பிறிதோ என்பதற்கு நனவென்பாருமுளர்' என்பதும் பேராசிரியருரை.

இதனை 'ஆயவெள்ளம் வழிபடக் கண்டது மாயமோ' என்றதற்குச் செய்யுளாக அமைப்பர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 501 உரை).

## 18. பாங்கியை யறிதல்.

கடல்புரையாயத்துக் காதற்றோழியை
மடவரல் காட்ட மன்னன றிந்தது.

(இ-ள்.) கடலையொத்த ஆயக் கூட்டத்தாரிடத்து அன்புடைய தோழியை மடப்பத்தையுடையவள் காட்ட நாயகன் அறிந்தது.

---

உயிரொன் றுளமுமொன் றொன்றே சிறப்பிவட் கென்னொ [டென்னப்
பயில்கின்ற சென்று செவியுற நீள்படைக் கண்கள்விண்வாய்ச்
செயிரொன்று முப்புரஞ் செற்றவன் றில்லைச்சிற் றம்பலத்துப்
பயில்கின்ற கூத்த னருளென லாகும் பணிமொழிக்கே.

[ப-ரை.] விண்வாய் செயிர் ஒன்று முப்புரம் செற்றவன் - விசும்பிடத்தே குற்றமுடைய மூன்று புரத்தை அழித்தவன், தில்லை சிற்றம்பலத்து பயில்கின்ற கூத்தன்—பெரும்பற்றப்புலியூர் திருவம்பலத்தே ஆடியருளுகிற திருக்கூத்தை உடையவன், அருள் எனலாகும் பணிமொழிக்கே - அவனுடைய திருவருளென்று சொல்லா நிற்கின்ற தாழ்ந்த வார்த்தையினை உடையாளுக்கு, சென்று செவியுற நீள்படைக்கண்கள்-காதை மோதி நீண்ட வேல் போலும் கண்கள்; உயிர் ஒன்று - எனக்கும் இவளுக்கும் உயிரொன்று, உளமும் ஒன்று -இவளுடைய கருத்தும் ஒன்றுபட்டிருக்கும், ஒன்றே சிறப்பு இவட்கு என்னோடு உடன்பயில்கின்ற இருவருக்கும் மாதா பிதாக்களால் செய்யப்படும் சிறப்புக்களும் ஒன்றுபட்டிருக்கும். (எ-று).

அதனால் இவளே தலைவிக்குச் சிறந்தவள்போலும் என உட்கொண்டான்.

### இயற்கைப் புணர்ச்சி முற்றிற்று.

---

18. தலைவன் கூற்று.

உயிரொன்று......நன்றே; யானென்று நீயென் றிருவகையோநம் மிருவருக்கும், ஊனென் றுயிரொன் றுளமுமொன் றென துரையளவோ (திருவாரூர்க்கோவை. 155)

அருள் என்றது அருளால் வரும் ஆனந்தத்தை (பே-ரை). அருள். தலைவிக்கு: 'அற்புதமோ சிவனருளோ அறியேனென் றதிசயித்தார். (கடுத்தாட். 140)

இச்செய்யுளை வாயில் பெற்றுய்தற்கு உதாரணமாகக் காட்டுவர் இலக். விளக்க ஆசிரியர் (சூ 501 உரை.)

## 2. பாங்கற் கூட்டம்.

இனிப் பாங்கற் கூட்டம் வருமாறு. தெய்வப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன், தெருண்டு வரைதலைத் தெருளானாயின், தன் பாங்கனுதல் இடந்தலைப்பாட்டானுதல் இரண்டனுள் ஒன்றாற் சென்றெய்தல் முறைமையென்ப. (பேரா.)

அவற்றுள், பாங்கற் கூட்டமாவது.

[1]நினைதல், [2]வினுதல், [3]உற்ற துரைத்தல்,
[4]கழறல், [5]மறுத்தல், [6]கவன் றுரைத் தல்லே,
[7]வலியழி வுரைத்தல், [8]விதியொடு வெறுத்தல்,
[9]நொந்து கூறல், நோதல் நீங்கி
[10]இயலிடங் கேட்டல், [11]இயலிடம் கூறல்,
[12]வற்புறுத்தல், [13]குறிவழிச் சேறல், [14]காண்டல்,
[15]வியந்து ரைத்தல், அம் மெல்லியல் தன்னைக்
[16]கண்டமை கூறல், கருத்துக் கேற்பச்
[17]செவ்வி செப்பல், [18]அவ்விடத் தேகல்
ஈங்கிவை நிற்க,
இடந்தலை தனக்கும்
[1]ஆங்கவள் மெலிதல், [2]பொழில்கண்டு மகிழ்தல்,
நீங்கா மகிழ்வொடு [3]நிலைகண்டு வியத்தல்
[4]தளர்வகன் றுரைத்தல், [5]மொழிபெற வருந்தல்,
[6]கண்புதை [7]வருத்தங் காவல், [8]நாண்விடல்,
நண்பொடு சென்று [9]நன்மருங் கணைதல்,
[10]இன்றி யமையாமை, [11]ஆயத் துய்த்தல்,
[12]நின்று வருந்தல், நிகழா றைந்தும்
துன்று பாங்கற் றுறையென மொழிப.

---

## 19. பாங்கனை நினைதல்.

எய்தற்கருமை ஏழையிற்றோன்றப்
பையுளுற்றவன் பாங்கனை நினைந்தது.

(இ-ள்.) கூடுதற்கரியபடி நாயகியிடத்தே தோன்ற, அத னாலே கிலேசமுற்றவன் தோழனை நினைந்தது.

---

**பூங்கனை யார்புனற் றென்புலி யூர்புரிந் தம்பலத்துள்
ஆங்கெனை யாண்டுகொண் டாடும் பிரானடித் தாமரைக்கே
பாங்கனை யானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தால்
ஈங்கெனை யார்தடுப் பார்மடப் பாவையை யெய்துதற்கே.**

[ப-ரை.] பூ கனை ஆர் புனல் தென்புலியூர் அம்பலத்துள் - பொலிவினையும் ஆரவாரத்தையும் உடைத்தாகிய நிறைந்த நீராலே சூழப்பட்ட தெற்குத் திருப்பதியாயிருந்துள்ள பெரும் பற்றப் புலியூரில் திருவம்பலத்திடத்தே, ஆங்கு எனை ஆட் கொண்டு - அப்படியே என்னை அடிமைகொண்டு, புரிந்து ஆடும் பிரான் - விரும்பி ஆடுகிற சுவாமி, அடி தாமரைக்கே பாங்கனை - அவனுடைய திருவடித் தாமரைகளிலே சார்புள்ள வனை, யான் அன்ன பண்பனை - எனக்கு என்னையொத்த செய்தி யுடையவனை, கண்டு இப்பரிசு உரைத்தால் - அவனைக் கண்டு இங்குப்புகுந்த படியைச் சொன்னால், ஈங்கு எனை யார் தடுப்பார் - இவ்விடத்து என்னை யாராலே தகைப்படும்? மடப்பாவை எய்துதற்கே மடப்பமுடைத்தாய ஓவியம்போன்ற இவளைக் கூடுமிடத்து. (இவ்விடத் தென்னை யாரால் தகைப்படும் என்றது).

---

19. **தலைவன் கூற்று:**

(கு-ரை.) பூ என்பதற்கு பூக்கனை உடைத்தாய், என்றும்; அம் பலத்து புரிந்து என்று கூட்டி அம்பலத்துள் விரும்பி என்றும், அடித் தாமரைக்கே பாங்கனை என்பதற்கு அடியாகிய தாமரைகட்கே பாங்கா யுள்ளவனை என்றும், பொருள் கூறுவர் பேராசிரியர். 'தென்புலியூர் ......கொண்டு என்ற பகுதிக்கு பிறவுமுனைப்ப'ர என்றும் அவர் கூறுவர்.

பையுள் - நோய்; மயக்கம். கூடுதற்........தோன்ற என்பதை நாயகியிடத்தே கூடுதற்கு அரியபடி தோன்ற என இயைக்க. கனை ஆர வாரம்.

தலைவன் பாங்கனைச் சார்தற்குச் செய்யுளாக இதனை அமைப்பர் இலக். விளக்க ஆசிரியர் (505 உரை).

## 20. பாங்கன் வினுதல்.

கலிகெழு திரடோண் மெலிவது கண்ட
இன்னுயிர்ப்பாங்கன் மன்னனை வினவியது.

(இ-ள்) புகழார்வம் பொருந்தின தோள்கள் இளைத்தது கண்டு இனிதாகிய சீவனை யொத்த தோழன் நாயகனைக் கேட்டது.

---

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தை
[யுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலி னுய்ந்தவொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத்தோட்கென்கொ லாம்புகுந் தெய்தியதே.

(ப-ரை.) சிறை வான் புனல் தில்லை—வான நீராலே ஊரைச் சுற்றிச் செய்யப்பட்ட மிக்க செல்வம் பொருந்தின தில்லைச் சிற்றம்பலத்திலும், என் சிந்தையுள்ளும்—என்னுடைய மனமாகிய தூய்தலான விடத்தும், உறைவான்—இவ்விரண்டிட

---

20. பாங்கன் கூற்று.

இவ்வுரையின் பிற்பகுதி ஏட்டில் சிதைந்துள்ளது. அதற்குப் பேராசிரியர் கூறும் உரை பின்வருமாறு :— தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ—இனிய தமிழின் துறைகளிடத்து நுழைந்தாயோ? அன்றி ஏழிசை சூழல் புக்கோ—அன்றி ஏழிசையினது சூழலின்கண் புகுதலானோ? இறைவா—இறைவனே, தடவரை தோட்கு புகுந்து எய்தியது என்கொலாம்—பெரியவரை போலும் நின் தோள்கட்கு மெலியப் புகுந்து எய்தியது என்னோ?

சிறைவான் புனற்றில்லை: 'சிறைசெய்த தாநீர்த் திருத்தில்லை' (தில்லைச் சிவகாமி. 13)

சிறை—அணை. கூடல்—சங்கம்: 'கூடற்புலவீர்' (தமிழ் விடு. :4)

னும் ஒக்க உறைபவன், உயர் மதில் கூடலின் ஆய்ந்த—அவ னுயர்ந்த மதிலால் சூழப்பட்ட திருவாலவாயிலில் இருந்து ஆராய்ந்த, தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ—இனி தாகிய அகமும் புறமும்,........ தாயோ?, அன்றி ஏழிசை சூழல் புக்கோ—அதுவல்லாதாகில் . ஏழிசைச் சூழ்ச்சியாகிய........ பாடலுமாய்ந்தா... .....கொலோ, புகுந்தெய்தியதே—சுவாமி, உன்னுடைய பெருவரை நிகர்த்த தோளுக்கு என்னதான் வந்துற்றது (எ. று.)

---

## 21. உற்றதுரைத்தல்.

மற்றவன் வினவ
உற்ற துரைத்தது.

(இ-ள்.) (வருந்தியதற்குக் காரணத்தைப் பாங்கன் வினவ தலைவன் தலைவியால் தனக்குற்றதைக் கூறியது).

---

கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங் கோளிழைக் [கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப் பணைமுலைக்கே
தேம்பற் றுடியிடை மான்மட நோக்கிதில் லைச்சிவன்றாள்
ஆம்பொற் றடமலர் சூடுமென் னுற்ற லகற்றியதே.

(ப-ரை.) மான் மடநோக்கி—மானின் மெத்தென்ற நோக் கத்தினை உடையளுவடைய, அ பணை முலைக்கே தேம்பல் துடி யிடை—அந்தப் பணைத்த தனங்களின் பொறை ஆற்றுது தேம்

---

ஏழிசை—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. இவற்றின் எழுத்துக்கள் ச ரி க ம ப த நி; இவ்வேழெழுத் தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்ய இவற்றுள்ளே ஏழிசையும் பிறக்கும் என்பர் அடியார்க்கு நல்லார். சூழல் என்பது இசைகளால் இயன்ற பண்ணும் பாடலும் முதலாயினவற்றை; ஒண்டீந்தமிழ்: ' மதுர மொழுகிய தமிழினியல் பயில் மதுரை' (மீனுட்சி. 4)

புதலை உடைத்தாய தமருகமொத்த இடையானது, தில்லை சிவன் அருளாம் பொன்தட மலர் சூடும் என் ஆற்றல் அகற்றியதே— திருவம்பல நாதனுடைய சீபாதங்களாகிய அழகிய பெரிய மலர் களைச் சூட்டவல்ல என் வலிமையை அழித்தது. கோம்பிக்கு ஒதுங்கி மேயா மஞ்ஞை—பச்சோந்திக்குப் பயப்பட்டு ஒதுங்கிப் புறப்பட்டு இரை கவரமாட்டா மயில், குஞ்சரம் கோள் இழைக் கும் பாம்பைப் பிடித்து—யானையைக் கோட் செய்து கொல்ல வல்ல பாம்பைப் பிடித்து, படம் கிழித்தாங்கு—அதனுடைய படத்தைக் கிழித்ததனோடொக்கும். (எ-று.)

---

**21. தலைவன் கூற்று.**

மயில் பாம்பைப் பிடித்துப் படத்தைக் கிழித்தாற்போல, இடை என் ஆற்றலை அகற்றியது என்று பேராசிரியர் பொருளமைதி செய்து, மடநோக்கி என் ஆற்றலை அகற்றியது, மஞ்ஞை பாம்பைப் பிடித் துப் படத்தைக் கிழித்தாற் போலுமெனக் கூட்டியுரைப்பாருமுளர் என்று கூறுகின்றார்.

மயில் அரவைப் பிடித்தல் : 'அஞ்சிறைக் கலாப மஞ்ஞை யணங் கர வட்ட தேனும்' (சிந்தா. 1405). அரவு யானையை வருத்துதல் : 'சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை, கான யானை யணங்கி யாங்கு' (குறுந். 119 : 1-2). இச்செய்யுளின் கருத்தை,

> ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
> ணண்ணாரு முட்குமென் பீடு. (குறள். 1088)

என்ற குறளுடன் ஒப்பிடுக.

## 22 கழறியுரைத்தல்.

வெற்பனைத்தன் மெய்ப்பாங்கன்
கற்பனையிற் கழறியது.

(இ-ள்) நாயகனைத் தன் மெய்யான தோழன் நெருங்கிச் சொல்லும் வார்த்தைகளாலே மறுத்தது.

---

உளமாம் வகைநம்மை யுய்யவந் தாண்டுசென் றும்பருய்யக்
[1]களமார் [2]விடமமு தாக்கிய தில்லைத்தொல் லோன்கயிலை
வளமாம் பொதும்பரின் வஞ்சித்து நின்றோர் வஞ்சிம்மருங்குல்
இளமான் விழித்ததென் றேவின் றெம்மண்ண லிரங்கியதே.

(ப-ரை) உளமாம் வகை நம்மை—உள்ளோமாயும் இல்லோமாயும் பிறந்தும் இறந்தும் திரிகின்ற நம்மை (எப்பொழுதும் உள்ளோமாம்படி). உய்ய வந்து ஆண்டு—பிழைக்கும்படி தானே வந்தாண்டு, (அடிமைகொண்டு), சென்று உம்பர் உய்ய—தன்னிடத்திலே சென்று தேவர்கள் பிழைக்கும்படி, களம் ஆர் விடம் அமுதாக்கிய தில்லை தொல்லோன் — கண்டத்திலே நிறைந்த விடத்தைத் திருவமுதாகக்கொண்ட பெரும்பற்றப் புலியூரிற் பழையவன், கயிலை வளமாம் பொதும்பரின்—அவனுடைய கயிலாய வரையின் வளமுடைத்தாய மாமர நெருக்கத்திடத்தே, வஞ்சித்து நின்று — துன்பஞ் செய்கிற வடிவை இன்பஞ் செய்கிற வடிவுபோலே கரந்துநின்று, ஓர் வஞ்சி மருங்குல் இளமான் விழித்ததென்றே—வஞ்சிக் கொம்பினை ஒத்த இடையினையுடையாள், ஒரு நோக்கத்தால் இளையமான் போல்வாள், பார்த்தாளென்றே, இன்று எம் அண்ணல் இரங்கியதே—இப்பொழுது என்னுடைய நாயகன் வருந்தியது? (எ-று).

---

22 பாங்கன் கூற்று.

(பா-ம்) [1] களமாம் [2] விடமமிர்தாக்கிய

களமார் விடமென்பதூஉம் பாடம் (பே. உரை).

## 23. கழற்றெதிர் மறுத்தல்.

ஆங்குயிரன்ன பாங்கன்கழற
வளந்தருவெற்ப னுளந்தளர்ந்துரைத்தது.

(இ-ள்) அவ்விடத்தை உயிரை நிகர்த்த தோழன் மறுத்துச் சொல்ல, எல்லா வளப்பத்தினையும் தருகிறவரையினையுடையவன் மனஞ்சலித்துச் சொன்னது

---

சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத் தில்லைச்சிற்
[றம்பலத்து
மாணிக்கக் கூத்தன் வடவான் கயிலை மயிலைமன்னும்
பூணிற் பொலிகொங்கை யாவியை யோவியப்
[பொற்கொழுந்தைக்
காணிற் [1] கழறிலை கண்டிலை மென்றோட் கரும்பினையே.

(ப-ரை) சேணிற் பொலி செம்பொன் மாளிகை—அதிதூரத்தே பொலிந்து தோன்றுகிற செம்பொன் மண்டபங்களை உடைத்தாகிய, தில்லை சிற்றம்பலத்து—பெரும்பற்றப்புலியூரில் திருச்சிற்றம்பலத்தில், மாணிக்கக் கூத்தன்–மாணிக்கம்போலும் அழகிய திருக்கூத்தினையுடையவன், வடவான் கயிலை மயிலை—அவனுடைய வடக்கின்கண் உண்டாகிய கயிலாயத்தின் மயிலின் சாயலொப்பாளை, மன்னும் பூணின் பொலி கொங்கை ஆவியை—நிலைபெற்ற ஆபரணங்களால் சிறந்த முலைகளையுடைய என் உயிரை ஒப்பாளை, ஓவிய பொன் கொழுந்தை—சித்திரமாகப் பொன்னுலெழுதிய வல்லிசாதம் போல்வாளை, காணின் கழறிலை–கண்டாயாகில் இங்ஙனே வெறுத்துச் சொல்லமாட்டாய்; கண்டிலை மென்றோள் கரும்பினையே—மெல்லிய தோள்களையுடையாளாய் அக்கரும்பை ஒப்பாளைக் கண்டிலைகாண். ஆனபடியால் சொன்னாய் இத்தனை. (எ-று.)

---

23. தலைவன் கூற்று.

பி-ம். [1] கழறலை.

பொன் மாளிகைத் தில்லை; பொன்மாளிகைத் துஞ்சின தேவர் என்ற பிரயோகத்தையும் காண்க.

மென்றோட் கரும்பினை என்பதற்கு மெல்லிய தோளிலெழுதிய கரும்பையுடையாளை எனினும் அமையும் (பே-ரை).

## 24. கவன்றுரைத்தல்.

கொலைக்களிற்றண்ணல் குறைநயந்துரைப்பக்
கலக்கஞ்செய்பாங்கன் கவன்றுரைத்தது,

(இ-ள்) கொலைத் தொழிலையுடைய யானை அனைய நாயகன் குறைபெற விரும்பிச் சொல்ல, அதற்குக் கலக்கம் செய் பாங்கன் கிலேசத்தைச் சொன்னது

---

விலங்கலைக் கால்விண்டு [1]மென்மே லிடவிண்ணு
[மண்ணுமுந்நீர்க்
கலங்கலைச் சென்றவன் றுங்கலங் காய்கமழ் கொன்றைதுன்று
மலங்கலைச் சூழ்ந்தசிற் றம்பலத் தானரு [2]ளில்லவர்போல்
துலங்கலைச் சென்றிதென் னேவள்ள லுள்ளந் துயர்கின்றதே,

(ப-ரை) விலங்கலை கால் விண்டு மென்மேலிட—மேருமுதலாகிய மலைகளைக் காற்றுனது மேல் கிழாக்கி ஒடித்து மென் மேல் போகட, விண்ணும் மண்ணும்—ஆகாயமும் பூமியும், முந்நீர் கலங்கலை சென்ற அன்றும் கலங்காய் — கடலே கலங்குதல் அடைந்த அந்நாளினும் உனக்கொரு சலிப்பற்றிருப்பை ; கமழ் கொன்றை துன்றும்—நறு நாற்றம் கமழ்கின்ற கொன்றைப்பூவாலே நெருங்கின, அலங்கலை சூழ்ந்த சிற்றம் பலத்தான்—மாலையை அணிந்த திருச்சிற்றம்பலவன், அருளில் லவர்போல் — அவனுடைய அருளில்லவர்போல், துலங்கலை சென்று—நடுக்கத்தை அடைந்து, இது என்னே, வள்ளல் உள்ளம் துயர்கின்றது — இங்ஙன் என்தான், வள்ளலே ! உன்னுடைய மனம் வருந்துகின்றதே ! (எ-று)

---

24, பாங்கன் கூற்று.

(பி-ம்) 1 மேன்மேல் 2 ளில்லவரில்

இதென்னே என்பது வினவுதல் கருதாது அவனது கவற்சியை விளக்கிநின்றது ; கலக்கம் செய்பாங்கன் ; தலைமகனைக் கலக்கிய பாங்கன் எனினுமமையும் (பே. ரை.). இதென்னே : ' உதுக்காண் டுவே யிதுவென் மொழிகோ, (குறுந் 191)

## 25. விதியொடு வெறுத்தல்.

கல்விமிகுபாங்கன் [1]கழறிடச்
செல்வமிகுசிலம்பன் தெரிந்துசெப்பியது

(இ-ள்) கல்வியான் மிக்க பாங்கன் மறுப்ப, செல்வத்தாலே மிக்க மலையினையுடையவன் ஆராய்ந்து சொல்லியது.

---

நல்வினை [2]யுன்னை நயந்தின்று வந்து நடுங்குமின்மேற்
கொல்வினை [3]வல்லவன் கோங்கரும் பாமென்று பாங்கன்
[சொல்ல
வில்வினை மேருவில் வைத்தவன் றில்லைதொ ழாரின்வெள்கித்
தொல்வினை யாற்றுய ரும்மென தாருயிர் துப்புறவே

(ப-ரை) நடுங்குமின்மேல்—துளும்பாநின்ற மின்போன்ற இடையின் மேலே. கொல்வினைவல்ல — கொலைத் தொழிலைக் கற்ற, வன் கோங்கு அரும்பு ஆம்—..........ஒத்த முலைகளாங் காணும், என்று பாங்கன் சொல்ல—என்று பாங்கன் என்னைத்

---

25. தலைவன் கூற்று.

பி-ம். 1. கழற வெள்கி 2. யுந்நயந் தந்தின்று ; யுந்நயந் தந்தது 3. வல்லன.

பேராசிரியர் உரைப்பதிப்பில் இச்செய்யுள் 26 ஆவதாக அமைந்திருக்கிறது. அவர் கூறும் உரை (பொழிப்பு) பின்வருமாறு :— கொல்லுந் தொழிலை வல்லன நடுங்கு மின்மேலுண்டாகிய கோங்கரும் புகளாமென்று யான் பற்றுக்கோடாக நினைத்திருந்த பாங்கன்றானே இகழ்ந்து சொல்லுதலால் (வில்லின்றொழிலினை மேருவின்கண் வைத்தவனது தில்லை தொழாரைப்போல) நாணிப்பழையதாகிய தீவினையாற்றுயருறா நின்ற எனது அரிய உயிர் வலியுறும் வண்ணம் யான் உம்மைச் செய்த நல்வினையும் வந்து பயன்றந்ததில்லை.

துவளச்சொல்ல, வில்லிஃன மேருவின் வைத்தவன்—வில்லினது கொல்லும் தொழிலே மேருவென்னும் மலேயிடத்தே உண்டாக்கினவன், தில்லே தொழாரின் வெள்கி—அவனுடையத் திசை நோக்கிக் கும்பிடமாட்டாரைப்போல் மேனி வெளுத்து, தொல் விஃனயால் துயரும்—முன்பு செய்த தீவிஃனயாலே வருந்துகிற, எனது ஆருயிர் துப்புறவே—எனது பெறுதற்கரிய உயிர் வலியுறும்படி, நல்விஃன உன்ஃன நயந்தின்று—நான் இம்மையிற் செய்த புண்ணியமும் வந்து பயன்பட்டதில்லே. (எ-று)

முற்பிறப்பிற் செய்த தீவிஃனயை இப்பிறப்பிற் செய்த நல்விஃன கெடுக்குமென்பார்கள். என் அளவில் அதுவும் கண்டிலேன் என்பது கருத்து.

---

ஏட்டில் இப்பாடலும் உரையும் சிலவிடங்களிற் சிதைந்து காண்கின்றன. பாடலிலும் உரையிலும் 'உன்ஃன நயந்தின்று' என்பதில் உன்ஃன என்பதற்கேற்க உரை காணப்படவில்லே. என்ஃன நயந்தின்று என்றிருப்பின் அமையலாம். எனினும் பிற ஆராய்ச்சிகளுக்கு உதவுமெனக் கருதி ஏட்டில் உள்ளவாறு பதிப்பிக்கப்பட்டது. வன் கோங்கு என்ற பகுதி உரையிற் பிறழ்ந்து எழுதப்பெற்றுள்ளது.

## 26. வலியழிவுரைத்தல்.

நிறைபொறைதேற்றம் நீதியொடுசால்பும்
மரியுறுநோக்கிற்கு வாடினேனென்றது.

(இ-ள்) நிறைந்த புலன்களை நிறுத்தலும் பொறையுடைமையும் தெளிவுடைமையும் உலகத்தோடு ஒழுக்கமும் அமைவுடைமையும் இவ்வைந்து குணங்களையும், மான் கன்றின் நோக்கம் பெற்றவள் நயனவிகாரத்தாலே இழந்தேனென்றது.

---

தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம் பித்தனென்று
மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றுவ னெத்துணையும்
கலைச்சிறு திங்கண் மிலைத்தசிற் றம்பல வன்கயிலை
மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினனே.

(ப-ரை.) தலைப்படு சால்பினுக்கும் தளரேன்—தலைமையான சால்புடைமையானும் உள்ளம் குறைவுபடேன்; (தலையான சால்பென்னை? நிறையும் பொறையும் கூடிய சால்பென்றுபடும்). சித்தம் பித்தன் என்று மலைத்து அறிவார் இல்லை—வேறுபட விசாரித்தாய் காண் என்று மாறுபட்டு அறிவாருமில்லை; (தெளிவுடைமை தோன்றுகின்றது). யாரையும் தேற்றுவன் எத்துணையும்—எங்ஙனே கலங்கினவர்களையும் எவ்வளவும் செல்லத் தெளிவிப்பேன்; (கலங்கினரைத் தெளிவிக்கை, உலக நீதியாகையால், நீதியுடைமை தோன்றுகிறது). கலைச்சிறு திங்கள் மிலைத்த—ஒரு கலையாகிய சிறு பிறையைச் சூடின, சிற்றம்பலவன் கயிலைமலை—திருச்சிற்றம்பல நாதனுடைய கயிலாயத் திருமலையில், சிறுமான் விழியால்—இளைய மான் விழியால், (அழிவுற்று மயங்கினனே — அயர்ந்து மயங்கினேன்) (எ-று.)

---

**26. தலைவன் கூற்று.**

சால்பழிந்துள்ளந் தளரேன் என்பான் சால்பினுக்குந் தளரேன் என்றான். தலைப்படு சால்பென்பதற்கு எல்லாப் பொருளுள்ளும் சிவனைத் தலைப்பட்டுச் சென்றொடுங்கும் ஊழியென்றுரைப்பினுமமையும் (பே-ரை)

இப்பாடல் பேராசிரியர் உரைப்பதிப்பில் 25 ஆம் பாடலாக வந்துள்ளது.

இதனைக் கிழவோன் வேட்கை தாங்கற்கருமை சாற்றற்குச் செய்யுளாக அமைப்பர் இலக். விளக்க ஆசிரியர். (சூ. 505 உரை.)

## 27. பாங்கனெந்துரைத்தல்.

இன்னுயிர்ப்பாங்க னேழையைச்சுட்டி
யின்னது தன்மை நினைந்திலையென்றது.

இதன் உரை சிதைந்துள்ளது.

---

ஆலத்தி னாலமிழ் தாக்கிய கோன்றில்லை யம்பலம்போற்
கோலத்தி னாள்பொருட் டாக வமிழ்தங் குணங்கெடினும்
காலத்தி னான்மழை மாறினு மாறாக் கவிகைநின்பொற்
சீலத்தை நீயு நினையா தொழிவதென் றீவினையே.

(இச் செய்யுளுக்குப் பொழிப்புரையே காணப்படுகிறது. அதுவும் சிதைந்துள்ளது. எஞ்சியவை பின்வருமாறு.)

நஞ்சையமுதஞ் செய்யும்.........துக்கொண்ட சுவாமி அவனுடைய பெரும்பற்றப்புலியூரிற் றிருவம்பலத்தை ெ.........அழகினை யுடையாள் காரணமாக அமுதமானது தன் சுவைமாறிக் கைப்பினும் பெய்யும்.........மைபெ...........ழியினுந் தவிராத கொடையினையுடைய உன்னுடைய அழகிய ஆசாரத்தை நீயும் நினையாது மறக்க வேண்டினது நான் செய்த பாவம் இத்தனை யென்றது.

---

27. தலைவன் கூற்று.

இதற்குப் பேராசிரியர் கூறும் உரை :—

ஆலத்தினால் அமிழ்து ஆக்கிய கோன் தில்லை அம்பலம்போற் கோலத்தினாள் பொருட்டு ஆக—நஞ்சால் அமுதத்தை யுண்டாக்கிய இறைவனது தில்லையம்பலம் போலும் அழகையுடையாளொருத்தி காரணமாக, அமிர்தம் குணம் கெடினும் காலத்தினான் மழை மாறினும்—அமிர்தம் தன்குணங்கெடினும் பெய்யுங்காலத்து மழை பெய்யாது மாறினும், மாறாக் கவிகை நின் பொன் சீலத்தை-மாறாத வண்மையை யுடைய நினது பொன்போலப் பெறுதற்கரிய ஒழுக்கத்தை, நீயும்—அறிவறிந்த நீயும், நினையாது ஒழிவது என் தீவினை—அறியாதொழிகின்றது எனது தீவினைப் பயன் (எ-று).

ஆலத்தினால் அமிழ்தாக்கிய கோன்—ஆலமொன்று மமுதொன்று பண்டமுது செய்யுமையர் பணியன்றியே (தக்க. 650).

## 28. இயலிடங்கேட்டல்.

கழுமலெய்திய காதற்றோழன்
செழுமலைநாடனைத் தெரிந்துவினவியது.

(இ-ள்.) நாயகன் கிலேசித்ததற்கு வருத்தமுற்ற காதற்றோழன் வளப்பமுடைய மலையின்மேலுண்டாகிய நாட்டினை உடையவனை ஆராய்ந்து கேட்டது.

---

நின்னுடை நீர்மையு நீயுமிவ் வாறு நினைத்தெருட்டும்
என்னுடை நீர்மை யிதென்னென்ப தேதில்லை யேர்கொண்
[முக்கண்
மன்னுடை மால்வரை யோமல ரோவிசும் போசிலம்பா
என்னிடம் யாதிய னின்னையின் னேசெய்த வீர்ங்கொடிக்கே.

(பொழிப்புரை) நின்னுடைய தன்மையும் நீயும் இத்தன்மையர்யவிட்டன என்றால், உன்னைத் தெளிவிப்பேன் என்கின்ற என்னுடைய தன்மை இது எதனில் ஏற்பட்டதொன்று? பெரும்பற்றப்புலியூரிலே உளனாகி அழகுக்கு அழகுகொண்ட மூன்று திருநயனங்களையுடைய பெருமலையோ? (வரையர மகளிர் என்றுபடும்); தாமரைப் பூவோ? (இலக்குமி என்றுபடும்) ஆகாயமோ? (வானவர் மகளிர் என்றுபடும்) நாயகனே! இவையிற்றிலே, அவளுக்கு இடம் எந்த விடம்தான்? அவளுடைய இயல்பு எது? சொல்லுவாயாக (எ-று).

---

28. பாங்கன் கூற்று.

பிறர் கண் போலாது மூன்று கண்ணுமிருந்தன வாயினும் அவை தாம் ஓரழகுடையவென்னும் கருத்தால், ஏர்கொண் முக்கண் என்றார் (பே-ரை).

'எவ்விடத் தெவ்வியற்றென் றற்கு' மேற்கோள் (இலக். விளக்க சூ. 505 உரை).

## 29. இயலிடங்கூறல்.

அழுங்கலெய்திய வாருயிர்ப்பாங்கற்குச்
செழுங்கதிர்வேலோன் தெரிந்துசெப்பியது.

(இ-ள்.) நாயகனுடைய துக்கத்துக்கு வருந்தின அரிய உயிர்த் தோழனுக்கு வளமையும் ஒளியுமுள்ளதொரு வேலையுடையவன் ஆராய்ந்து சொன்னது.

---

விழியாற் பிணையாம் விளங்கிய லான்மயி லாமிழற்றும்
மொழியாற் கிளியா முதுவா னவர்த முடித்தொகைகள்
கழியாக் கழற்றில்லைக் கூத்தன் கயிலைமுத் தம்மலைத்தேன்
கொழியாத் திகழும் பொழிற்கெழி லாமெங் குலதெய்வமே.

(உரை) நோக்கத்தால் மானென்று சொல்லலாம்; விளங்குகின்ற சாயலால் மயிலெனலாம்; கொஞ்சும் மழலையால் கிளி எனலாம்; மிக்க தேவர்கள் பலரும் வந்து வணங்குகையாலே அவருடைய முடித்திரள்கள் மரபு (தவறுமையையு)டைய கழலையுடைய பெரும்பற்றப் புலியூரில் முதலியாருடைய கயிலாய மலையில் தோன்றும் தேன் அருவியானது முத்துக்களைக் கொழித்தாற்போல விளங்குகின்ற காவுக்கழகாய் நிற்பவள் எம்முடைய குலதெய்வம் (எ-று.)

---

**29.** தலைவன் கூற்று.

முத்தம் யானைக்கோட்டிலும் வேயினும் பிறந்த முத்து. (பே-ரை).

'இவ்விடத்தில்யெற்றென்றற்கு' மேற்கோள் (இலக். விளக். உ-ரை. சூ. 505)

## 30. வற்புறுத்தல்.

பெயர்ந்துரைத்த பெருவரைநாடனை
வயங்கெழுபுகழோன் வற்புறுத்தியது.

(இ-ள்.) ஆற்றாமையின் நீங்கி இடனியல்பு சொன்ன பெரிய மலை மேலுண்டாகிய (நாட்டிற்குத் தலைவனை) பூமியிலே பொருந்தின புகழுடைய பாங்கன் வலியுறுத்தியது.

---

குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண்டி யான்போய் வருவன்வண் பூங்
[கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறையே.

(பதவுரை) குயிலை—வார்த்தையிற் குயிலையொப்பாளை, சிலம்படிக் கொம்பினை—சிலம்பை அடியிலேயுடையதொரு வஞ்சிக் கொம்பினை ஒப்பாளை, தில்லை எம் கூத்தப்பிரான்—பெரும்பற்றப்புலியூரிற் கூத்தனாகிய எமது சுவாமியுடைய, கயிலைச் சிலம்பிற் பைம் பூம் புனம் காக்கும்—ஸ்ரீகயிலாய மலையில் பச்சென அழகிய புனங்காக்கிற, கருங்கண் செவ்வாய்—கரிய கண்களையும் சிவந்த வாயினையும் உடையளாய, மயிலை—மயிலைப் போன்ற சாயலையுடையாளை, சிலம்ப, கண்டியான் போய் வருவன்—நாயகனே, நான் போய்க்கண்டு வரக் கடவேன்; வண்பூங் கொடிகள்—வளவிய வல்லிசாதத்தை யொத்த பாங்கிமார்கள், பயில சிலம்பு எதிர் கூய் பண்ணை நண்ணும் பளிக்கறையே—பலகாலம் சிலம்பெதிர் கூவிக் களிக்கிற விளையாட்டுப் பொருந்தின பளிக்கறையிடத்து, யான் போய்க் கண்டு வருவன்—நான் போய்ப் பார்த்து வருவேன். நீ கிலேசியாதொழிக வேண்டும் (எ-று).

---

30. பாங்கன் கூற்று.

பாங்கன் இறைவனைத் தேற்றற்குச் செய்யுள் (இலக்கண விளக்க, சூ. 505 உரை.)

## 31. குறிவழிச் சேறல்.

அறைகழலண்ண லருளினவழியே
நிறைவுடைப்பாங்க னினைவொடுசென் றது.

(இ-ள்) ஆரவாரிக்கிற வீரக்கழலையுடைய நாய(கன்) ஏவிய (வழியே) புலனை நிறுத்தவல்ல பாங்கன் (நினைவொடு சென் றது).

---

கொடுங்கால் குலவரை யேழேழ் பொழிலெழில் குன்றுமன்று
நடுங்கா தவனை நடுங்க நுடங்கு நடுவுடைய
விடங்கா வயிற்கண்ணி மேவுங்கொ லாந்தில்லை ஈசன்வெற்பில்
தடங்கார் தருபெரு வான்பொழி னீழலந் தண்புனத்தே.

(பொழிப்புரை) கொடிய காற்றாலே அழகிய மலைகளேழும், பூமிகள் ஏழும், அழகழிக்கின்ற ஊழியிறுதிக் காலத்தும் அன் றும் தனக்கொரு பயமில்லாதவன் ஒருவனை, அவனும் நடுங்குவ தாக அசைகின்ற இடையினையுடைய, விடத்தைக் கான்று கொண்டிருக்கிற வேல்போன்ற கண்களையுடையவள் நிற்பள் கொல்லோ? (என்கிற ஐயத்தாலே நில்லாளோ என்றும் படும்). திருவம்பலநாதனுடைய மலையில் பெருங்கார் தங்குகிற பெரி தாகி நீண்ட பொழிலின் நிழலுடைத்தாகிய அழகிய குளிர்ந்த புனத்திடத்தே நிற்பளோ நில்லாளோ என்ற ஐயத்தில் போன னன்.

---

31. பாங்கன் கூற்று.

தடங்கார் தருபெருவான்பொழில். தரு உவம உருபு. "பண்தரு தீஞ்சொல் (கோவைச் 16). தடங்கார்பொழில் என்பதற்குக் கார்தங்கும் பொழிலெனினுமமையும். பே-ரை)

## 32. குறிவழிக்காண்டல்.

குளிர்வரை நாடன் குறிவழிச் சென்று
தளிர்புரை மெல்லடித் தையலைக் கண்டது.

(இ-ள்) குளிர்ந்த மலைமேலுண்டாகிய நாட்டினையுடையவன் குறித்த இடத்து ஏறச்சென்று தளிரை ஒத்த மதுரமான அடியிணையுடைய நாயகியைக் கண்டது.

---

வடுக்க ணிவைவஞ்சி யஞ்சி மிடையிது வாய்பவளம்
துடிக்கின் றவாவெற்பன் சொற்பரி சேயான் றொடர்ந்துவிடா
வடிச்சந்த மாமல ரண்ணல்விண் ணோர்வணங் கம்பலம்போல்
படிச்சந்த முமிது வேயிவ ளேயப் பணிமொழியே,

(பொ-ரை) அவன் சொன்ன மாவடு ஒத்த கண்களும் இவையே; வஞ்சிக் கொம்பைத் தோற்கச்செய்த இடையின் அழகும் இதுவே; வாயானது பவளம்போலும் துடிக்கின்றது. நாயகன் சொன்னபடியாக விருந்தது; நான் பற்றிவிடாத திருவடியாகிய பெரிய மலர்களையுடைய சுவாமி, அவனைத் தேவர்கள் வணங்குகின்ற திருவம்பலத்தை...அது எய்துவான் ......இவளே; தாழ்ந்த வார்த்தையினை உடையாளும் இவளே ஆகவேண்டும். (எ-று)

---

32. பாங்கன் கூற்று.

வடிக்கண் என்பதே பேராசிரியர் பாடம்; வடிவென்பது வடுவகிருக்கோர் பெயர் (பே-ரை.)

'இரும்பீர் வடியன்ன உண்கண் (கலி 64 : 21). இச்சொல் வடுவகிருக்கேயன்றி வடுவுக்கும் பெயராய் வழங்கும்: கொக்கின் நறுவடி விதிர்த்த' (பெரும்பாண். 309)

அம்பலம்போல் படிச்சந்தமும் இதுவே—அம்பலம் போலும் ஒப்பும் இதுவே என்பது பேராசிரியர் உரை. இப்பகுதிக்குரிய உரை ஏட்டில் சிதைந்துள்ளமை வருந்தத்தக்கது.

## 33. தலைவனை வியந்துரைத்தல்.

நயந்தவுருவு நலனுங்கண்டு
வியந்தவனையே மிகுத்துரைத்தது.

(இ-ள்) நாயகன் விரும்பிய வடிவையும் நன்மையையும் பார்த்து ஆச்சரியப்பட்டு நாயகனையே மிகுத்துச் சொன்னது.

---

குவளைக் களத்தம் பலவன் குரைகழல் போற்கமலத்
தவளைப் பயங்கர மாகநின் றாண்ட வவயவத்தின்
இவளைக்கண் டிங்குநின் றங்குவந் தத்துணை யும்பகர்ந்த
கவளக் களிற்றண்ண லேதிண்ணி யானிக் கடலிடத்தே.

(பொ-ரை) நீலப் பூவை யொத்த திருமிடற்றையுடைய திருவம்பலநாதன் ; அவனுடைய திருவீரக் கழல் ஆரவாரிக்கிற சீபாதங்களை யொத்த தாமரைப் பூவில் உயர்ச்சியுடைய சீதேவியைப் பயப்படும்படி நின்று அடிமைகொண்ட அவயவங்களையுடைய இவளைப் பார்த்து இவ்விடத்தே நின்று, அவளை அம் சொல் ஆற்றிவந்து, நான் கழறவும், எவ்வளவு மறுத்துச் சொன்ன, வேண்டிய கவளம் கொள்ளுகிற யானையையுடைய நாயகனே, இந்தக் கடல் சூழ்ந்த புவியில் திடநெஞ்சன் அவனேயாய் இருந்தான் (என்றுபடும்).

---

**33. பாங்கன் கூற்று.**

இவ்வளவு அழகுடையாளைப் பார்த்தும், அவளை விட்டுப்பிரிந்து, என்னுடைய வலிய சொற்களுக்கும் விடை கூறிய தலைவன் மிகுந்த திடநெஞ்சமுடையன் என்று கூறிப் பாகன் தலைவியை வியக்கின்றான்.

தாமரைப்பூ சிவபிரான் திருவடிக்கு ஒப்பு. அப்பூவிலிருப்பவள் திருமகள். அத்திருமகளை விஞ்சிய அழகு வாய்ந்தவள் தலைவி. அவளைக் கண்டும் அவளை விட்டுப் பிரிந்து வரத்துணிந்த தலைமகளின் மனத்திடம் வியக்கத்தக்கது என்பது கருத்து. கவளக்களிறு, தான் விரும்பும் கவளம் பெற்று வளர்ந்த களிறு. கவளத்த யானை (சிற். 112) என்பதற்கு ' தான் விரும்பும் கவளமுண்டு வளர்ந்த யானை ' என்றும், ' அது ஒருவரால் கட்டப்பட்டு பிடிபட்டதன்றாகலான், அதனை வெல்வ தரிது ' என்றும் பேராசிரியர் கூறுவர்.

## 34. கண்டமை கூறல்.

பிடிமிசைவைத்துப் பேதைய துநிலைமை
அடுதிறலண்ணற் கறியவுரைத்தது.

(இ-ள்) ஒரு பிடியானையைச் சொல்லுவாரைப் போல, நாயகியுடைய நிலைமையை, கொல்லும் வினயம் வல்ல வேலினையுடைய நாயகனுக்குச் சொன்னது.

---

பணந்தா ழரவரைச் சிற்றம் பலவர்பைம் பொற்கயிலைப்
புணர்ந்தாங் ககன்ற பொருகரி யுன்னிப் புனத்தயலே
மணந்தாழ் பொழிற்கண் வடிக்கண் பரப்பி மடப்பிடிவாய்
நிணந்தாழ் சுடரிலை வேலகண் டேனென்று நின்றதுவே

(பொ-ரை) படம் மிக்க பாம்பைத் திரு அரை நாணாக வுடைய திருவம்பலநாதருடைய, சோலையாற் பசுத்துப் பொலிவினையுடைய கயிலை மலையில், தன்னுடனே கூடி ஆங்கு அகன்ற, பொருதல் இயல்பினையுடைய களிற்று யானையை நினைந்து, புனத்தின் ஒருபக்கத்தே,மணமிகுந்த பொழிலிடத்தே. மாவடு வகிரை யொத்த கண்களாலே பார்க்கப் பார்த்து, ஒரு மடப்பிடியானை, வாயிலே நிணமிக்கு, கொலைத் தொழிலாற் சிறந்த வேலினையுடையவனே! நிற்கக் கண்டேன் காண். (எ-று)—எனவே, அவ்விடத்து ஏறச் செல்க என்றுபடும்.

---

### 34. பாங்கன் கூற்று.

வடி என்பது வடுவகிருக்கோர் பெயர். வடிக்கண். (கலி. 64-21).

புனத்தயலே யென்றான், புனத்து விளையாடும் ஆயத்தை நீங்கி நிற்றலின். வடிக்கண் பரப்பியென்றான், இன்ன திசையால் வருமென்றறியாது சுற்றெங்கு நோக்குதலின். (பே-ரை.)

## 35. செவ்வி செப்பல்.

அற்புதன்கயிலை மற்பொலிசிலம்பற்
கவ்வுருக்கண்டவன் செவ்விசெப்பியது.

(இ-ள்) அழகிய முதலியாருடைய ஸ்ரீ கயிலாயத் திருமலையில் வளப்பமிக்க மலையினையுடைய நாயகனுக்கு, அவன் சொன்ன உருவைக் கண்டு வந்த பாங்கன் தான் கண்ட செவ்வி செப்பியது.

---

கயலுள வேகம லத்தலர் மீது கனிபவளத்
தயலுள வேமுத்த மொத்த நிரையர னம்பலத்தின்
இயலுள வேயிணைச் செப்புவெற் பாநின தீர்ங்கொடிமேற்
புயலுள வேமலர் சூழ்ந்திரு ளேங்கிப் புரள்வனவே.

[ஏட்டில் இப்பாடலுக்கு உரை மிகவும் சிதைந்து கிடக்கின்றது. கீழே கொடுக்கப்பெற்றிருப்பது பேராசிரியர் உரை.]

(ப-ரை) வெற்பா-வெற்பா! நினது ஈர்ங்கொடிமேல் **கமலத்து அலர்மீது கயல் உளவே**—நினது ஈர்ங்கொடிக்கண் தாமரைப்

---

35. பாங்கன் கூற்று.

இச்செய்யுளில் தலைவியின் அவயவங்கள் கூறப்படுகின்றன. ஈர்ங்கொடி (சிற். 28). புரள்வன புயல்உளவே; புயல்-குழலைக்குறித்தது. குழல்கள், ஐம்பாலானவாயினமையிற் பன்மையாற் கூறினர். (சீவக. 164. நச். உரை).

பின்வரும் செய்யுட்களுடன் இதனை ஒத்து நோக்குக:—

இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன்,
இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும்,
கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக்கண்டேன்.
—(கம்பர்)

வாவிகண் டேன்மலர்ச் சோலைகண் டேன்மருங் கேமருங்கில்
பாவிகண் டேன்முலைப் பாரங்கண் டேன்பனி நீரரும்பும்
காவிகண் டேன்கண்ட நின்வழி யேதன் கருத்துவைத்த
ஆவிகண் டேன்கண்டி லேனண்ண லேநின் அறிவின்மையே.
—(அம்பிகாபதிக் கோவை 63)

பூவின்மேற் கிடப்பன சில கயல்களுளவே; கனி பவளத்து அயல் ஒத்த நிரைமுத்தம் உளவே—கனிந்த பவளத்திற் கயல் இனமொத்த நிறையாகிய முத்துக்களுளவே; இணைச் செப்பு அரன் அம்பலத்தின் இயல் உளவே—இணையாகிய செப்பு அரனது அம்பலத்தின் இயல்பையுடையனவுளவே; மலர் சூழ்ந்து இருள் தூங்கிப் புரள்வன புயல் உளவே—மாலை சூழ்ந்து இருள் செறிந்து கிடந்து புரள்வன புயலுளவே?—உளவாயின் யான் கண்ட உருவம் நீ கூறிய உருவமாம் எ. று.

## 36. அவ்விடத்தேகல்.

அரிவைய துநிலைமை யறிந்தவனுரைப்ப
எரிகதிர்வேலா னேகியது,

(இ-ள்.) நாயகியுடைய நிலைமையை அறிந்துவந்த பாங்கன் சொல்ல மிகுந்த பிரகாசத்தையுடைய வேலினையுடையவன் போனது.

எயிற்குல மூன்றிருந் தீயெய்த வெய்தவன் றில்லையொத்துக்
குயிற்குலங் கொண்டுதொண் டைக்கனி வாய்க்குளிர் [முத்தநிரைத்
தயிற்குல வேல்கம லத்திற் கிடத்தி யனநடக்கும்
மயிற்குலங் கண்டதுண் டேலது வென்னுடை மன்னுயிரே.

(பொ-ரை) மதிற் சாதிகள் மூன்றையும், மிகுந்த தீயை அவை எய்தும்படி எய்தவனுடைய சிதம்பரம் போன்று, வார்த்தையால் குயிலை ஒத்து, கொவ்வைக்கனி போன்ற வாயிலே மதுரமாகிய முத்தை நிரைத்து, கூரிதாகிய அழகிய வேலினைக் கமலத்தின் மேலே கிடத்தி, அன்னம்போல் நடக்கிற, சாயலால் மயிலை ஒப்பாளைக் கண்டாயாகில், அவளே என்னுடைய நிலைபெற்ற உயிர் ஆகும் (எ-று).

---

36. தலைவன் கூற்று.

எயிற்குலம் மூன்று என்றார், அவை இரும்பும் வெள்ளியும் பொன்னுமாகிய சாதி வேறுபாடுடைமையின்; தொண்டைக் கனிவாய் என்பதற்குத் தோண்டைக்கனிபோலும் வாயென்பாருமுளர் (பே-ரை.)

## 3. இடந்தலைப்பாடு.

பாங்கற் கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப்பாடு நிகழும்; இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற் கூட்டம் நிகழும்.

பொழிலிடைச் சேறல் இடந்தலை சொன்ன
வழியொடு கூட்டி வகுத்திசினோரே.

என்றபடி பொழிலிடைச் சேறல் ஒன்றே இடந்தலைப் பாட்டிற்கு உரியது முன் 2. பாங்கற் கூட்டச் சூத்திரத்தில் 'ஈங்கிவைநிற்க இடந்தலை தனக்கும்' என்று கூறியவாறு, 'மின்னிடை மெலிதல்' முதல், 'நின்று வருந்தல் ஈறாகக் கூறப் பட்ட கிளவிகளோடு கூட்டி இடந்தலைப்பாடாம் என்று வகுத் துரைத்துக்கொள்க. (பே-ரை).

---

## 37. மின்னிடை மெலிதல்.

மன்னனை நினைந்து
மின்னிடை மெலிந்தது.

(இ-ள்) நாயகனை நினைந்து மின்போன்ற இடையுடையாள் வாடியது.

---

ஆவியன் னாய்கவ லேலலக லேமென் றளித்தொளித்த
வாவியன் னார்மிக் கவாவி னராய்க்கெழு மற்கழிவுற்
றாவியன் னார்மன்னி யாடிடஞ் சேர்வர்கொ லம்பலத்தெம்
ஆவியன் னான்பயி லுங்கயி லாயத் தருவரையே.

(உரை.) 'என் ஆருயிரை ஒப்பாய்! கவலேல்! (கிலேசி யாதே) நாம் நம்மிற் பிரியோம் காண்' என்று தலையளி செய்து, இப்பொழுது ஒளித்துப்போன, அருஞ்சுரத்திலே நீர் வேட்டற்கு உதவும் தாமரைத் தடாகம் போன்றவர், என் பேரிலே மிகுந்த ஆசையுடையராய் என்னுடைய காரணமாக

நெஞ்சழிந்து, என்னுடைய உயிர்த்தோழிமார்கள் நிலைபெற்று விளையாடுகிற விடத்திலே செல்வரோ? இங்கேற வருவரோ? (எ-று).

கொல் என்ற ஐயத்தால் இங்கேற வருவரோ என்றுபடும். திருவம்பலத்தே உளனாகி, என் உயிரை ஒத்த முதலியார் வாழ்கின்ற ஸ்ரீகயிலாயமாகிய அரிய இடத்தே செல்வரோ? இங்கே வருவரோ? என்னும் நினைவுடனே நின்றாள்.

---

---

37. தலைவி கூற்று.

இப்பகுதியை 'இடந்தலை தனக்கு மாமாறு சொல்லுமாறு' என்று பேராசிரியர் தொடங்குகின்றார்.

'ஒளித்த ஆவி அன்னார்' என்று பிரித்து, 'மறைந்த என் ஆவியை ஒப்பார்' என்று பொருள் கூறுவர் பேராசிரியர். இவ்வுரையாசிரியர் 'வாவி அன்னார்' என்று கொண்டார். இன்னும் பேராசிரியர், 'ஆயத்திடை வருவர் கொல்லோவென ஐயத்துள் ஒருதலையே கூறினார்' என்றும், 'ஆய வெள்ளத்துள்ளே வருவர்கொல்லோ என்னும் பெருநாணினானும், ஆற்றாமையால் இறந்துபட்டனர் கொல்லோ என்னும் போச்சத்தினாலும் மீதூரப்பட்டுத் தன் தன்மையளன்றி நின்று இவ்வகை உசாவினாளென்பது' என்றும் கூறினார்.

கெழுமல்—சேர்தல்.

## 38. பொழில்கண்டு மகிழ்தல்.

மணங்கமழ்பொழிலின் வடிவுகண்டு
அணங்கெனநினைந் தயர்வுநீங்கியது,

(இ-ள்) நறுநாற்றம் கமழ்கின்ற பொழிலின் வடிவை ஆராய்ந்து, தெய்வத்தை ஒத்த தன் நாயகியாக நினைந்து வருத்தம் நீங்கியது.

காம்பிணை யாற்களி மாமயி லாற்கதிர் மாமணியால்
வாம்பிணை யால்வல்லி யொல்குத லான்மன்னு மம்பலவன்
பாம்பிணை யாக்குழை கொண்டோன் கயிலைப் பயில்புனமும்
தேம்பிணை வார்குழ லாளெனத் தோன்றுமென் சிந்தனைக்கே.

(பொ-ரை.) வேய் இணைந்து நிற்றலால் தோள்களை ஒத்தும், களிப்பையுடைய கரிய மயில்களால் சாயலை ஒத்தும், ஒளியுடைத்தாகிய நீலமணிகளால் கூந்தலை ஒத்தும், இளமான் நோக்கத்தால் விழியை ஒத்தும், (இருத்தலானும்) வல்லிசாதத்தின் இடமாதல் இடை நுடங்கலானும், நிலைபெற்ற புலியூர்த் திருவம்பலவன் பாம்பைத் தன் குழையாபரணமாகக் கொண்டவனுடைய கயிலாயத்தில் இவள் வாழ்கின்ற புனமும், தேனையுடைத்தாகிய மாலையினை யணிந்த நீண்ட குழலையுடையவளென்னும்படி தோன்ற என் மனத்தை இன்புறுத்தாநின்றது (எ-று.)

---

38. தலைவன் கூற்று.

பாம்பு இணையாக் குழை கொண்டோன்—பாம்பை ஒன்றும் ஒவ்வாத குழையாகக்கொண்டவன்; பாம்பை இணைத்து இழையாகக் கொண்டவன் எனினும் அமையும், (பே-ரை).

'தேம்பிணைவார் குழலாளெனத் தோன்றுநின்றது' என்றதற்குத் 'தேம்பிணையையுடைய நெடிய குழலையுடையாளென்றே தோன்றுநின்றது' என்று பொருள் கூறிப் 'புனமும் யான் இன்புறத் தோன்றுநின்றது' என்று பொருள் கூறுவாருமுளர் என்பர் பேராசிரியர்.

இலக்கண விளக்க ஆசிரியர் இச்செய்யுளை, 'அவளை எதிர்ப்பட்ட இடத்தினை அவளாகக் கூறுவதற்கு, மேற்கோளாகக் காட்டுவர்.

முருக்கின் புதுமலரான் முல்லை நகையால்,
நெருக்கியெழுஞ் செவ்விள நீரால்—குருக்கொடியால்
ஈன்ற குழைமுகத்தா னுனயந்த நன்னுதலைப்
போன்ற துயர்பூம் பொழில்

என்ற களவியல் மேற்கோள் செய்யுள் இதனுடன் ஒப்பிடத்தக்கது.

## 39. உயிரெனவியத்தல்.

வெறியுறுபொழிலின் வியன்பொதும்பரின்
நெறியுறுகுழலி நிலைமைகண்டது.

(இ-ள்) நறு நாற்ற மிக்க காவிடத்து அகன்ற சோலை யிடத்து நெறித்தல் பொருந்தின கூந்தலையுடையவள் நின்ற படியைக் கண்டது.

---

நேயத்த தாய்நென்ன லென்னைப் புணர்ந்துநெஞ் சந்நெகப்
[போய்
ஆயத்த [1]தாயமு தாயணங் காயர னம்பலம்போல்
தேயத்த தாயென்றன் சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிது
மாயத்த தாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே.

(இப்பாடலின் உரை மிகவும் சிதைந்துள்ளது.)

அன்புடைத்தாய், நேற்று என்னுடனே கூடி என் நெஞ்சு நெகிழும்படி கூடிப்போய் ஆயக் கூட்டத்.........தாய.........இப் பொழுதே.........தாய் வந்து நின்ற இதுவோ என்னுடைய நிலை பெற்ற உயிரென்றது.

(பேராசிரியர் உரை)

(பொழிப்பு) நெருநல் உள்ள நெகிழ்ச்சி உடைத்தாய் என்னைக் கூடி, பின் நேயமில்லதுபோல என் நெஞ்சுடையும் வண்ணம் நீங்கிப்போய், ஆயத்தின் கண்ணதாய், இன்பத்தைச் செய்தலின் அமுதமாய், துன்பத்தைச் செய்தலின் அணங்காய், புலப்பாட்டான் அரனது அம்பலம் போலும் ஒளியை யுடைத்தாய், புலப்படாது வந்து என் சிந்தைக் கண்ணதாய், ஆராயின் பெரிதும் மாயத்தையுடைத்தாய் வந்து நின்றது இதுவோ, எனது மன்னுயிர்? (எ-று.)

---

(பாட பேதம்) [1] அமிழ்தாய்.

## 40. தளர்வகன்றுரைத்தல்.

பனிமதி நுதலியைப் பைம்பொழி லிடைத்
தனிநிலைகண்டு தளர்வகன் றுரைத்தது.

(இ-ள்) குளிர்ந்த மதிபோன்ற நெற்றியை உடையாளை அழகிய பொழிலிடத்தே தனியே நிற்கின்ற நிலையைக் கண்டு சலிப்பறுத்துப் பேசினது.

---

தாதிவர் போதுகொய் யார்தைய லாரங்கை கூப்பநின்று
சோதிவ ரிப்பந் தடியார் சுனைப்புன லாடல்செய்யார்
போதிவர் கற்பக நாடுபுல் லென்னத்தம் பொன்னடிப்பாய்
யாதிவர் மாதவ மம்பலத் தான்மலை யெய்துதற்கே.

(உரை) அல்லி பரந்த பூக்களைக் கொய்யார்; பாங்கிமார் அழகிய கைகளைக்கூப்ப நின்று ஒளியும் அழகுமுடைய பந்தடிக்கின்றாரில்லை; சுனையில் நீர் குடைந்து விளையாடுகின்றாரில்லை; பூக்கள் பரந்த கற்பகமுடைத்தாகிய தெய்வலோகம் இவர் போதுகையினாலே அழகு அழிய, தம்முடைய பொலிவுபெற்ற அடிகள் நிலத்திலே பரவி, திருவம்பலநாதன் திருமலைக்கே வந்து தங்குதற்கு, இவர் பண்ணப் புகுகின்ற தவம் எதுதான் என்ன, எல்லாத் தவமும் முடித்தன்றோ? (எ-று.)

---

**39. தலைவன் கூற்று.**

நேயமுடைமையும் நேயமின்மையும், இன்பஞ் செய்தலும் துன்பம் செய்தலும், புலப்படுதலும் புலப்படாமையும், ஒருபொருட்கு இயையாமையின், 'பெரிதும் மாயத்ததாகி' என்றான். 'என்மாட்டு அருளுடைத்தாய், முற்காலத்து என்னை வந்து கூடி, அருளில்லது போல, என்னெஞ்சுடையும் வண்ணம் போய், தன் மெய்யடியார் குழாத்ததாய், நினைதொறும் அமிழ்தம் போல இன்பம் செய்து, கட்புலனாகாமையின், துன்பம் செய்து அம்பலம்போலும் நல்ல தேசங்களின் கண்ணதாய் வந்து என் மனத்தகத்ததாய் இத்தன்மைத்தாகலின் பெரிதும் மாயத்தை யுடைத்தாய் எனது நிலைபெறும் உயிர் வந்து தோன்றாநின்ற' தென வேறுமொரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க. (பேராசிரியர்).

இலக்குமி என்ற அதிகாரம் பெற்றார் எதுவெ.......... பண்ணுகின்றார் எனப்படும் ......ஒத்தபடி என் என்னின், தவம் பண்ணுவாரும் எல்லா நினைவுகளையும் போகவிட்டு, மனத்திலே ஒரு நினைவாகி.....(பண்)ணுவார்கள். அப்படியே விரும்பும் பூப்ப(றித்தல் முதலிய) நினைவுகளையெல்லாம் போக விட்டு மனத்திலே ஒரு நினைவுடனே நிற்கையாலே ......இவர் பெரிய தவமென்றானெனக் கொள்க.

.........அரிதென் மெலிந்து உரைத்தது.

---

40. தலைவன் கூற்று.

தவஞ் செய்வார் புறத்தொழில்களை விட்டு அகத்தானொன்றை யுன்னி மலைக்கண் தங்குவரன்றே; இவளும் பூக்கொய்தல் முதலாகிய தொழில்களைவிட்டு மனத்தால் தன்னை நினைந்து வரையிடத்து நிற்ற லான் யாதிவர் மாதவமென்றான். (பே-ரை).

யாதிவர் மாதவம்: "பவ, மன்னு ரெனநிற்ப வோதுமின்" (திருக்கோவை: 8).

## 41. மொழிபெற வருந்தல்.

கூடற் கரிதென
வாடி யுரைத்தது.

(இ-ள்), சார்தற்கு அரிது என மனம் வாடி உரைத்தது.

---

காவிநின் றேர்தரு கண்டர்வண் டில்லைக்கண் ணார்கமலத்
தேவியென் றேயையஞ் சென்றதன் றேயறி யச்சிறிதும்
மாவியன் றன்னமென் னோக்கிநின் வாய்திற வாவிடிலென்
ஆவியன் றேயமிழ் தேயணங் கேயின் றழிகின்றதே.

(ப-ரை.) காவிநின்று ஏர் தரு கண்டர்—நீலமலர் நின்று ஒளி செய்கின்ற திருமிடற்றையுடையவர், வண் தில்லை—அவருடைய வளமுடைய தில்லையில், கண் ஆர் கமலம்—இடமார்ந்த செந்தாமரைப் பூவிலுள்ள தேவி என்றே ஐயம் சென்றது அன்றே—சீதேவி என்றே எனக்கு ஐயம் செல்லாநின்றது; அறிய சிறிதும்—அல்லவென்னும் இடமறியும்படி சிறிதாகிலும். மா இயன்றன்ன மெல் நோக்கி—மான் நோக்கத்தால் இயன்றாற் போலவே பார்க்கின்ற பார்வையினை யுடையாய்! நின் வாய் திறவாவிடில்—உன் வாயால் ஒரு வார்த்தை சொல்லாதபொழுது. என் ஆவி அன்றே—என் உயிர் அல்லதே; அமுதே அணங்கே—எனக்கு இன்பமும் துன்பமும் ஒருக்காலே செய்தலால் அமுதத்தையும் வருத்தத்தையும் ஒப்பாய்; இன்று அழிகின்றதே—இப்பொழுது அழிகின்றது என் உயிரன்றோ? (எ-று.)

வேறொரு பொருள் அழிந்தால் மீட்டுக்கொளலாம்; உயிரழிந்தால் யாராலே மீட்டுக்கொள்ளலாகும்? என்றுபடும்.

---

41. தலைவன் கூற்று.

இத்துறையின் கொளுவும் அதன் உரையும் ஏட்டிற் காணப்படவில்லை.

இச்செய்யுளுடன்,

செய்ய மலரிற் றிருமகளே யென்றுன்னை
ஐய முறுகின்றே னல்லையேல்—உய்ய
உரைதந் தருளா யுயிர்வருமோ போனல்
விரைதந்த மேனியாய் மீட்டு

என்ற கிளிவித் தெளிவுச் செய்யுளையும் ஒப்பிடுக.

கமலத், தேவியென் றேயையஞ் சென்றது : இதனை, 'அந்தாத் தார் மய னேயென வையுறும்' என்ற சிந்தாமணி (134) அடியோடும், 'தொழிலால் மயனே யெனத்துணிந்து வடிவால் ஐயமுறுந்தச்சன்' என்ற அதன் நச். உரையோடும் ஒப்பிடுக.

இச் செய்யுளைக் 'கூடற்கரிதென வாடியுரைத்தற்கு' மேற்கோளாகக் காட்டுவர் இலக். விளக்க ஆசிரியர்.

## 42. நாணிக்கண் புதைத்தல்.

ஆயிடைத்தனிநின் ளுற்றுதழிந்து
வேயுடைத்தோளியோர் மென்கொடி[1] மறைந்தது.

(இ-ள்.) நாயகன் சொன்னவிடத்தில் தனியே நின்று ஆற்றுது அழிந்துவேயின் தன்மையால் சிறந்த தோள்களை உடையவள் ஒரு மெல்லிய வல்லிசாதக் கொடியில் ஒதுங்கியது.

---

அகலிடந் தாவிய வானே னறிந்திறைஞ் சம்பலத்தன்
இகலிடந் தாவிடை யீசற்றெ ழாரினின் னற்கிடமாய்
உகலிடந் தான்சென் றெனதுயிர் நையா வகையொதுங்கப்
புகலிடந் தாபொழில் வாயெழில் வாய்தரு பூங்கொடியே.

(ப-ரை.) அகலிடம் தாவிய வானேன்—பூமியைத் தாவி அளந்த புருஷோத்தமன், அறிந்து இறைஞ்சும்—அவன் நம் மால் வணங்கப்படுவான் ஒருவனென்று அறிந்து வணங்குகிற, அம்பலத்தின்—திருவம்பலத்தின், இகல் இடம் தா விடை—மாறுபாடுடைய இடங்களிலே தாவிச் செல்லுகிற இடபத்தினையுடைய, ஈசன் தொழாரின்—முதலியாரைத் தொழாதவரைப் போலே இன்னற்கு இடமாய்—கிலேசத்துக்கு ஒரு கொள்கலமாய், உகலிடம் தான் சென்று-விசனப்படும் இடத்துச் சென்று, எனது உயிர் நையா வகை-என்னுடைய உயிரானது கிலேசியாதபடி, ஒதுங்க-நான் ஒதுங்கும்படி, புகலிடம் தா—எனக்குப் புகலிடம் தருவாயாக; பொழில்வாய் எழில் வாய் தரு பூங்கொடியே—பொழிலிடத்தே அழகு வாய்க்கப் பூத்த வல்லிசாதமே!

எனக்குப் புகலிடம் தருவாயாக என்று அந்த வல்லிசாதத்து ஒதுங்கியது. (எ-று.)

---

42. தலைவி கூற்று.

பாடபேதம். 1 யடைந்தது.

இதனை 'வழிபாடு மறுத்தற்கு'ச் செய்யுளாக அமைப்பர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ. 494. உரை) வழிபாடு மறுத்தல்—இடம் பெற்றுத் தழுவியபின் தலைவி வேட்கைக் குறிப்புக் கண்டு தலைவன் சார்தலுற்ற வழி அவள் அதற்குடன்படாது மறுத்தல்.

## 43. கண்புதைக்க வருந்தல்.

வேற்றருங்கண்ணிணை மிளிர்வனவன்றுநின்
கூற்றருமேனியே கூற்றெனக்கென்றது.

(இ-ள்) வேலொத்த கண்ணிணைகள் உலாவுவனவே அல்ல; கொல்லுதற்கரிய மேனியே எனக்குக் கூற்றுவனாகா நின்றது.

---

தாழச்செய் தார்முடி தன்னடிக் கீழ்வைத் தவரைவிண்ணோர்
சூழச்செய் தானம் பலங்கை தொழாரினுள் ளந்துளங்கப்
போழச்செய் யாமைவை வேற்கண் [1]புதைத்தபொன் [னேயெனாநீ
வாழச்செய் தாய்சுற்று முற்றும் புதைநின்னை வாணுதலே.

(ப-ரை.) தாழச் செய்தார் முடி—தன்னை வந்து வணங்கினவர்கள் தலையினை, தன் அடிக்கீழ் வைத்து—தன்னுடைய திருவடி நிழலிலே வைத்து, அவரை விண்ணோர் சூழச் செய்தான்—அவர்களுக்குத் தேவர்களைப் பரிவாரமாகச் செய்தவன், அம்பலம் கை தொழாரின்—திருவம்பலம் தொழாதவர்களைப் போல, உள்ளம் துளங்க—மனம் நடுங்க, போழச்செய்யாமை வை வேல் கண் புதைத்த பொன்னே —(போழும் வண்ணம் செய்யாமல்) கூரிய வேல்போன்ற கண்களை மூடிக்கொண்ட பொன்னை ஒப்பாய்! என்னை நீ வாழச் செய்தாய்—நான் பிழைக்கும்படி செய்தாய்; சுற்றுமுற்றும் புதை நின்னை வாணுதலே—ஒளி சிறந்த வெற்றியினையுடையாய்! என் மனம் நடுங்காமல் செய்யவேண்டியிருந்தாயாமாகில் மேனி முழுதும் புதைப்பாயாக. (எ-று)

---

43, தலைவன் கூற்று.

பா-ம். 1 புதைந்து.

இடையூறு கிளத்தற்குச் செய்யுளாக இதனை இலக்கண விளக்க ஆசிரியர் காட்டுவர். (சூ. 495. உரை).

## 44 நாண்விடவருந்தல்

ஆங்ஙனங்கண் டாற்றுளாகி
நீங்கினாளொடு நேரிழைநின்றது.

(இ-ள்) நாயகன் அங்ஙனம் சொன்னபடியைக் கண்டு ஆற்றுத்தன்மை உடையளாய் நாண் நீக்கத்துடனே நுண் தொழிலாற் சிறந்த ஆபரணங்களையுடையாள் நின்றது.

---

குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை யேத்தலர்
[போல்
வருநாள் பிறவற்க வாழிய ரோமற்றென்கண் மணிபோன்
றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த
அருநா [1]ணழியத் தழல்சேர் மெழுகொத் தழிகின்றதே.

(ப-ரை) குரு நாள் மலர் பொழில் சூழ்-நிறமுடைத்தாகிய செவ்வி மலருடைத்தாகிய சோலை சூழப்பட்ட, தில்லை கூத்தனை ஏத்தலர் போல்—பெரும்பற்றப்புலியூரில் கூத்தனாகிய முதலியாரை வாழ்த்தாரைப் போலே. வருநாள் பிறவற்க-மேல்வரும் நாள்கள் இங்ஙனே நாணழியப் பெருதொழிவேனாக; மற்று என் கண்மணி போன்று-மற்றும் என் கண்ணினுள் சோதி போன்று, ஒரு நாள் பிரியாது உயிரிற் பழகி-ஒரு நாளும் என்னை விட்டு நீங்காதே என் உயிர்போலப் பின்னமறப் பழகி, உடன் வளர்ந்த-நான் வளரத் தான் வளர்ந்த, அரு நாண்-பெருதற்கரிய நாணமானது, அழிய அழல் சேர்—அழியத்தக்க அக்கினியைச்சேர்ந்த, மெழுகொத்து அழிகின்றதே—மெழு(கைப்போல்) உருகி அழியாநின்றது (எ-று).

ஆதலால் மேல்வரு நாட்கள் இங்ஙனே நாணழியப் பிறவா தொழிய வேண்டும் என்றது.

வாழியும் அரோவும் அசைகள்.

---

44. தலைவி கூற்று.

பா-ம். 1. ணளியத் தழல்சேர்.

மற்று-அசை. வாழி என்பது இத்தன்மைத்தாகிய இடுக்கணின்றி இந்நாண் வாழ்வதாக என்றவாறு.

'மறுத்தெதிர்க்கோட'ற்குச் செய்யுளென்பர் இலக். விளக்க ஆசிரியர். (சூ. 495. உரை).

## 45. மருங்கணைதல்.

ஒளிதிகழ்வார்குழ லளிகுலம்விலக்கிக்
கருங்களிற்றண்ணன் மருங்கணைந்தது.

(இ-ள்) ஒளியே மிகுத்தி(ருக்கின்ற) நீண்ட அளகத்தின் வண்டுச் சாதிகளை ஓட்டுவாரைப் போலே, கரிய யானையையுடைய நாயகன் பக்கத்தே சென்று சேர்ந்தது.

---

கோலத் தனிக்கொம்ப ரும்பர்புக் கஃதே குறைப்பவர்தம்
சீலத் தனகொங்கை தேற்ற கிலேஞ்சிவன் றில்லையன்னாள்
நூலொத்த நேரிடை நொய்ம்மையெண் ணாதுநுண் டேன
[சையாற்
சாலத் தகாதுகண் டீர்வண்டு காள்கொண்டை சார்வதுவே.

(ப-ரை.) கோல தனி கொம்பர் உம்பர் புக்கு அஃதே குறைப்பவர் தம்—அழகிய தனிக் கொம்பின் உச்சியின் நெறியிருந்து அடிக்கொம்பை வெட்டுகிறவருடைய, சீலத்தன கொங்கை—அந்தச் செய்தி போன்றிருந்த தனங்களும். தேற்றகிலேம் — இவையிற்றைத் தெளிவிக்கப் போந்தோமுமில்லை; சிவன் தில்லை அன்னாள்—முதலியாருடைய திருவம்பலத்தை ஒப்பவள், நூலொத்த நேரிடை நொய்ம்மை எண்ணாது—நூல் போன்ற இடையின் கனமில்லாதலை விசாரியாதே, நுண் தேன் நசையால்—அற்புதத் தேனின் இச்சையாலே, சாலவும் தகாது கண்டீர், வண்டுகாள், கொண்டையிலே சார்வதுவே—சாலவும் தகாது காணும் வண்டுகாள்! கொண்டையிலே சார்ந்திருக்குமது! (எ-று.)

நீங்(குங்)களென்று வண்டுச் சாதிகளை ஓட்டுவாரைப் போலே சென்று அருகு சேர்ந்தது.

---

45. தலைவன் கூற்று

தேற்றகிலேம் என்பது தெளிதற்கண் வந்தது. தேற்றகிலேம் என்பதற்கு 'இவை இத்தன்மையா யிருத்தலான் இது வீழுமென்றி யான் தெளிகின்றிலேன்' என்று பொருள் கூறி. 'முலைகளைத் தெளிவிக்கமாட்டோம் என்பாருமுளர்' என்பர் பேராசிரியர்.

பின்வரும் ஏதத்தை நோக்கின் நீயிர் பயனுகை நினைக்கின்ற இஃது சிறப்புச் சிறிதென்னுங் கருத்தால், அவ்வகை நின்றமை குறிப்பினு லுணர்ந்த தலைமகன் இவ்வகை சொல்லிச் சார்ந்தானென்பது.

(பே-ரை)

## 46. இன்றியமையாமை கூறல்.

வென்றிவேலவன் மெல்லியானைக்
கின்றியமையாமை யெடுத்துரைத்தது.

(இ-ள்.) வெற்றிவேலை யுடையவன் மெல்லிய இயல்பினை யுடையாளையின்றித் தனக்கொரு பொழுதும் செல்லாமையை மிகுத்துச் சொன்னது.

---

நீங்கரும் பொற்கழற் சிற்றம் பலவர் நெடுவிசும்பும்
வாங்கிருந் தெண்கடல் வையமு மெய்தினும் யான்மறவேன்
தீங்கரும் பும்மமிழ் துஞ்செழுந் தேனும் பொதிந்துசெப்புங்
கோங்கரும் புந்தொலைத் தென்னையு மாட்கொண்ட
[கொங்கைகளே.

(ப-ரை) நீங்கரும் பொன்கழல்—கண்டால் விட்டு நீங்குதற்கரிய அழகிய சீபாதங்களையுடைய, சிற்றம்பலவர்—திருச்சிற்றம்பலநாதன், நெடு விசும்பும்—அவனுடைய மிக்க தெய்வலோகமும், வாங்கு இரும் தெண் கடல் வையகமும்—வளைந்த பெரிய கடலால் சூழப்பட்ட பூலோகமும், எய்தினும் யான் மறவேன்—பெறினும் நான் மறக்கப்படாது; தீங்கரும்பும் அமிழ்தும் செழுந்தேனும் பொதிந்து செப்பும் கோங்கரும்பும் தொலைத்து—தீங்கரும்பு, அமிழ்து, செழுந்தேன் இவற்றை பரிகரித்துக்கொண்டு, வடிவினால் பொற்செப்பையும் கோங்கரும்பையும் தோற்பித்து, என்னையும் ஆட்கொண்ட கொங்கைகளே—என்னையும் வசமாக்கிக்கொண்ட கொங்கைகளை (எ-று.)

கொங்கைகளைத் தெய்வலோகமும் பூலோகமும் நான் பெறினும் மறவேன் என்றவாறு.

---

46. தலைவன் கூற்று.

இச்செய்யுள் பின்வருவனவற்றோடு ஒருவகை ஒப்புடைமை பெற்றிருப்பதைக் காண்க :

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு. (குறள் 1103)

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தே ளுடும்
இரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே ;
பூப்போ லுண்கட் பொன்போன் மேனி
மாண்வரி யல்குற் குறுமகள்
தோண்மாறு படூஉம் வைகலொ டெமக்கே (குறுந். 101)

## 47. ஆயத்துய்த்தல்.

தேக்கமழ் சிலம்பன்
பாங்கிற் கூட்டியது.

(இ-ள்.) நறுநாற்றம் கமழ்கின்ற மாலையினையுடையவன் பாங்கிமாரிடத்தே சேரவிட்டது.

---

சூளா மணியும்பர்க் காயவன் சூழ்பொழிற் றில்லையன்னாய்க்
காளா யொழிந்ததென் னாருயி ராரமு தேயணங்கே
தோளா மணியே பிணையே பலசொல்லி யென்னை துன்னும்
நாளார் மலர்ப்பொழில் வாயெழி லாய நணுகுகவே.

(ப-ரை.) சூளாமணி உம்பர்க்கு ஆயவன்—தேவர்களுக்கு முடிமணியாய் உள்ளவன், சூழ்பொழில் தில்லை அன்னாய்க்கு—பொழில் சுற்றிய சிதம்பரத்தின் இயல்பை உடையாட்கு (நினக்கு), ஆளாய் ஒழிந்தது என் ஆருயிர்—என்னுடைய பெறுதற்கரிய உயிர் வசமாகிவிட்டது; அமுதே-பெறுதற்கரிய அமுதே போல்வாய்; அணங்கே-தெய்வமாக நிற்பாய்; தோளாமணியே-துளைக்கப்படாத இரத்தினத்தை ஒப்பாய்; பிணையே-நோக்கத்தால் மான்பிணைக்கு ஒப்பாய்; பல சொல்லி என்னை?-இனிப் பல சொல்லுவது என்னை? துன்னும் நாள் ஆர் மலர் பொழில் வாய்-செறிந்த நாட் செவ்வி மலரால் மிக்க சோலையிடத்தே, எழில் ஆயம் நணுகுக-(அழகிய) கூட்டத்தாரிடத்தே சேர்வாயாக (எ-று.)

---

47. தலைவன் கூற்று.

(கு-ரை.) அமுதே அணங்கே; அடுக்கிய விளிகளாற் காதற் சிறப்பு விளங்கும். (பே-ரை): 'ஆயிழையாய், மானே' (சிராமலை. 311)

## 48. நின்று வருந்தல்.

பாங்கிற்கூட்டிப் பதிவயிற்பெயர்வோன்
நீங்கற்கருமை நின்றுநினைந்தது.

(இ-ள்) பாங்கிமாரிடத்தே (அவளைச் சேரச் செய்து, தன் பதியை நோக்கிப் பெயர்வோன்) அவள் தன்னால் விட்டு நீங்குதற்கு அரிய படியை நின்று விசாரித்தது.

---

பொய்யுடை யார்க்கரன் போலக லும்மகன் றூற்புணரின்
மெய்யுடை யார்க்கவ னம்பலம் போல மிகநணுகும்
மையுடை வாட்கண் மணியுடைப் பூண்முலை வாணுதல்வான்
பையுடை வாளரவத் தல்குல் காக்கும் பூம்புனமே.

(ப-ரை.) (அகன்றால்.) பொய் உடையார்க்கு அரன்போல் அகலும்—(விட்டு நீங்கினால்,) பொய்யன்பு பூண்டவர்க்கு மகாதேவர் அகன்றாற் போலே அகலா நிற்கும்; புணரின், மெய் உடையார்க்கு அவன் அம்பலம் போல மிக நணுகும்—அணைந்தால், மெய்யன்பு உடையவர்க்கு, அவன் அம்பலம் போல மிகவும் அணுகா நிற்கும்; மையுடை வாள் கண்—மை எழுதப்பட்ட ஒளி சிறந்த கண்ணிணையும், மணி உடை பூண்முலை—முத்து மணி அணியப்பட்டு ஆபரணங்களாற் சிறந்த முலையிணையும், வாள் நுதல்-பிரகாசம் செய்த நெற்றியினையுமுடைய, வான் பை உடை வாள் அரவத்து அல்குல்—பெரிய படத்தை உடைய ஒளிபொருந்திய அரவம் போன்ற அல்குலினையுடையவள், காக்கும் பைம்பூம்புனமே—அவள் காவல் பச்சென்று பொலிவுடைத்தாகிய புனம் இப்படிச் செய்யாநின்றது. (எ-று.)

---

48. தலைவன் கூற்று.

(பாங்கற் கூட்டம் முற்றிற்று.)

## 3. இடந்தலைப்பாடு.

பாங்கற் கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப்பாடு நிகழும்; இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற் கூட்டம் நிகழும். இஃது ஒரு துறையுடைத்து

பொழிலிடைச்சேற லிடந்தலைசொன்ன
வழியொடுகூட்டி வகுத்திசினோரே. (பே-ரை.)

---

## 49. பொழிலிடைச் சேறல்.

ஐயரிக்கண் ணியை யாடிடத்தேசென்
றெய்துவனெனநினைந் தேந்தல்சென்றது.

---

(இ-ள்.) 'அழகிய வரி பரந்த கண்ணிணையுடையாளை விளையாடிடத்தே சென்று சேரக்கடவேன்' என்று நினைந்து நாயகன் போனது.

---

என்னறி வால்வந்த தன்றிது முன்னுமின் னும்முயன்றால்
மன்னெறி தந்த திருந்தின்று தெய்வம் வருந்தனெஞ்சே
மின்னெறி செஞ்சடைக் கூத்தப் பிரான்வியன் றில்லைமுந்நீர்
பொன்னெறி வார்துறை வாய்ச்சென்று மின்றோய் பொழி
[லிடத்தே.

(ப-ரை) என் அறிவால் வந்தது அன்று இது முன்னும்—முன்பு நான் இது வேண்டுமென்ன என்னுடைய நினைவினாலே வந்ததொன்றன்று; இன்னும் நான் முயன்றால்—இன்னமும் நான் உற்சாயித்தால், மன் நெறி தந்த இன்று தெய்வம் திருந்த-நிலைபெற்ற இந் நெறியைத் தந்த தெய்வம் இருந்தது; வருந்தல் நெஞ்சே-ஆதலால் நெஞ்சமே நீ வருந்தாதேகொள்; மின் நெறி செஞ்சடை—ஒளி உடைத்தாகிய நெறித்த சிவந்த திருச்சடை

---

தலைவன் கூற்று.

பா-ம். இருந்தன்று.

இருந்தின்றென்பது பாடமாயின், இருந்தின்றோ என ஓகாரம் வருவித்து இருந்ததில்லையோ என உரைக்க. (பே. ரை.).

இதனைத் 'தந்ததெய்வம் தருமெனச் சொற்றற்குச் செய்யுள்' என்பர் இலக். விளக்க ஆசிரியர். (சூ. 503 உரை.)

யினையுடைய, கூத்தப்பிரான்—கூத்தனாகிய சுவாமி, வியன் தில்லை முந்நீர்—இணையில்லாத திருவம்பலத்தைச் சூழ்ந்த கடலிடத்து, பொன் எறிவார் துறைவாய்-பொன் கொழிக்கப்பட்ட நீண்ட துறையுடைத்தாகிய (இடத்தே), சென்று மின்தோய் பொழிலிடத்தே—மின்னை அடைந்த காவிடத்தே சென்று இன்னும் உற்சாயிக்கக் கடவேன்.

உற்சாயித்தால் நிலைபெற்ற இந்நெறியைத் தந்த தெய்வம் இருந்தது ; அது முடித்துத் தரும் என்பது கருத்து.

இடந்தலைப்பாடு முற்றிற்று.

---

## 4. மதியுடம்படுத்தல்.

மதியுடம்படுத்தல் வருமாறு :-(பாங்கற் கூட்டம், இடந்தலைப்பாடு என்ற) இரண்டனுள் ஒன்றாற் சென்றெய்திய பின்னர்த் தெருண்டு வரைதலைத் தெருளானாயின், அவன் கண்ணுற் காட்டப்பட்ட காதற்றோழியை வழிப்பட்டுச் சென்றெய்துதல் முறைமை யென்ப. வழிப்படுமாறு, தெற்றெனத் தன்குறை கூறாது இரந்து வைத்துக் கரந்த மொழியால் தன் கருத்தறிவித்து, அவளை ஐய உணர்வினளாக்கி அது வழியாக நின்று தன் குறை கூறுதல்,

இது பத்துத் துறையுடைத்து. அவை வருமாறு :—

[1]சேறல் [2]துணிதல் [3]வேழம் வினாதல்
[4]கலைமான் [5]வழி [6]பதி [7]பெயர்வினா தல்லே
[8]மொழிபெறா துரைத்தல் [9]கருத்தறி வித்தல்
[10]இடைவினா தலோ டிவையீ ரைந்தும்
மடவரல் தோழிக்கு மதியுடம் படுத்தல்.

(பே-ரை.)

---

## 50. பாங்கியிடைச்சேறல்

கரந்துறைகிளவியிற் காதற்றோழியை
இரந்துகுறையுறுவலென் றேந்தல்சென்றது

(இ-ள்.) கரந்து சொல்லும் வார்த்தையினாலே உயிர்த்தோழியைத் தொழ ஒழுகி, 'என் குறையைச் சொல்லக் கடவே'னென்று நினைந்து நாயகன் போனது.

---

எளிதன் றினிக்கனி வாய்வல்லி புல்ல லெழின்மதிக்கீற்
றொளிசென்ற செஞ்சடைக் கூத்தப் பிரானையுன் னாரினென் [கண்
தெளிசென்ற வேற்கண் வருவித்த செல்லலெல் லாந்தெளிவித்
தளிசென்ற பூங்குழற் றோழிக்கு வாழி யறிவிப்பனே.

(ப-ரை) எளிது அன்று இனி கனி வாய் வல்லி புல்லல்-தொண்டைப் பழத்தை யொத்த வாயினை உடையளாய் வல்லி சாதம்போல்வாளைக் கூடுவது, இனி எளியது அன்று; எழில் மதி கீற்று ஒளி சென்ற செஞ்சடைக் கூத்தப்பிரான்-அழகிய மதியின் பிளவாகிய திரு இளம்பிறையின் பிரகாசம் பரந்து சிவந்த திருச்சடையினையுடைய கூத்தனாகிய சுவாமியை, உன்னாரின்-நினையாதாரைப்போல், என்கண்-என்னிடத்து, தெளி சென்ற வேல் கண்-தெளியக் கடைந்த வேலை ஒத்த கண்கள், வருவித்த செல்லல் எல்லாம்-உண்டாக்கின வருத்தம் எல்லாம், தெளிவித்து அளிசென்ற பூங்குழல் தோழிக்கு அறிவிப்பன்-தாழவொழுகி நறுநாற்றத்தாலே வண்டுகள் சென்றடைந்த பொலிவுடைய கூந்தலையுடைய தோழிக்கு அறிவிக்கக் கடவேன்; (எ-று.) (வாழி, அசைநிலை.)

---

50. தலைவன் கூற்று.

தெளிவித்து—குறிப்பினாலே தெளிவியா நின்று (பே-ரை)

இதனைப் 'பெட்டவாயிற் பெற்றுச் சேறற்குச்' செய்யுளாகவமைப்பர் இலக். விளக். ஆசிரியர். (சூ. 507 உரை).

## 51. குறையுறத் துணிதல்.

ஓரிடத்தவரை யொருங்குகண்டுதன்
பேரிடர்பெருந்தகை பேசத்துணிந்தது.

(இ-ள்.) ஓரிடத்தில் நாயகியையும் பாங்கியையும் உற விருக்கக்கண்டு தன்னுடைய பெரிய கிலேசத்தைப் பெரிய தலைமைப் பாட்டை உடையவன் சொல்லுவதாக அறுதியிட்டது.

---

குவளைக் கருங்கட் கொடியே ரிடையிக் கொடிகடைக்கண்
உவளைத் தனதுயி ரென்றது தன்னோ டுவமையில்லா
தவளைத்தன் பால்வைத்த சிற்றம் பலத்தா னருளிலர்போல்
துவளத் தலைவந்த வின்னலின் னேயினிச் சொல்லுவனே.

(ப-ரை) குவளை கருங்கண்—நீல மலர்களை ஒத்த கரிய கண்களையும், கொடி ஏர் இடை—வல்லிசாதக் கொடியை ஒத்த இடையினையுமுடைய. இ கொடி கடைக்கண்—இந்த வல்லிசாதத்தை ஒப்பாளுடைய கடைக்கண்களானவை, உவளை தனது உயிர் என்றது—தன் பக்கத்திலே இருக்கிறவளைத் தனது உயிரென்றது, தன்னோடு உவமையில்லாதவளை—தனக்கொப்பில்லாத தம்பிராட்டியை, தன்பால் வைத்த—தன்னுடைய பாகத்திலே வைத்த, அம்பலத்தான்—திருச்சிற்றம்பலநாதன், அருளில்லவர்போல்—அவருடைய திருவருளில்லாதவரைப் போலே, துவள தலை வந்த-நான் வாடும்படி விதி வந்து என்னிடத்திலே உண்டான, இன்னல் இன்னே இனிச் சொல்லுவனே—என் கிலேசத்தை இனிச் சொல்லக் கடவேன் (எ-று.)

---

51. தலைவன் கூற்று.

கடைக்கண் உவளை உயிர் யென்றது, எனக்கு இவ்விடர் செய்த கடைக்கண் இடர் நீந்தும் வாயிலும் தானே கூறிற்று என்றவாறு. இன்னே என்பது இவர் கூடிய இப்பொழுது என்றவாறு. இனி என்றது இவள் இவட்கு இன்றியமையாமையறிந்த பின்னென்பது படநின்றது. ஒருங்கு கண்டு-ஒருகாலத்துக் கண்டு (பே-ரை).

இதனை, 'இரவு வலியுறுத்தற்கு'ச் செய்யுளாக அமைப்பர் இலக்-விளக்க ஆசிரியர். (சூ. 507 உரை.)

## 52. வேழம் வினுதல்.

ஏழையரிருவரு மிருந்தசெவ்வியுள்
வேழம்வினுஅய் வெற்பன்சென்றது.

(இ-ள்) நாயகியும் பாங்கியும் இருந்த பக்குவத்தே ஆனையை வினுவி நாயகன் சென்றது.

---

இருங்களி யாயின் றியானிறு மாப்பவின் பம்பணிவோர்
மருங்களி யாவன லாடவல் லோன்றில்லை யான்மலையீங்
கொருங்களி யார்ப்ப வுமிழ்மும் மதத்திரு கோட்டொருநீள்
சுருங்களி யார்மத யானையுண் டோவரக் கண்டதுவே.

(ப-ரை) இரும் களியாய் இன்று யான் இறுமாப்ப-சிவாநந்த மகிமையாகிற பெரிய களிப்பையுடையவனுய் இப்பொழுது நான் செம்மாந்திருக்கும்படி, இன்பம் பணிவோர் மருங்கு—வணங்குவாருடைய பக்கமாகிய இன்பத்தை, அளியா—எனக்குத் தாரார்; அனல் ஆட வல்லோன்—அக்கினியை ஏந்திக் கொண்டு ஆடவல்லோன், தில்லையான்—சிதம்பரத்திலே உள்ளவன், மலை ஈங்கு—அவனுடைய திருமலையாகிய இடத்து, ஒருங்கு அளி ஆர்ப்ப—ஒருவழிப்பட்டு வண்டுகள் ஆரவாரித்துச் செல்ல, உமிழ் மும்மதத்து—சொரியா நின்ற மூன்று மதத்தினையும், இருகோட்டு—இரண்டு கொம்பினையும், [ஒரு என்ற சொல்லை நிறுத்தி] நீள்—உயரத்தினையும், கரு களி ஆர்—கருத்துக் களித்துச் செல்லும், மதயானை உண்டோ வரக் கண்டதுவே—ஒரு யானை உண்டோ வரக் கண்டது? உண்டாகிற் சொல்லுவீராக வேண்டும் (எ-று)

---

52, தலைவன் கூற்று.

உரையை நோக்கும்போது அளியா என்றது அளியார் என்றிருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது. 'பணிவோர் மருங்கு இரும் களியாய் யான் இன்று இறுமாப்ப இன்பம் அளியா அனல் ஆட வல்லோன்' என்று அமைத்துப் பொருள் கூறுவர் பேராசிரியர்.

இருங்களி............ஆடவல்லோன்—இதனில் இறுமாப்புக் கூறியது காண்க. 'தெள்ளுசுவை யமுதங் கனிந்தவா னந்தத் திரைக்கடன் மடுத்துழக்கும், செல்வச் செருக்கர்' என்ற (மீனுக்ஷியம்மை பிள்ளைத் தமிழ் 94) பகுதியையும் காண்க. மனக்களியாயின்றி யான் மகிழ்தூங்க (சிர். 293).

## 53. கலைமான் வினுதல்.

சிலைமா னண்ணல்
கலைமான் வினையது.

(இ-ள்) சிலைத்தொழிலினாலே மாட்சிமைப்பட்ட நாயகன், கலையாகிய மான் வந்ததோ என்று கேட்டது.

---

கருங்கண் ணனையறி யாமைநின் றேன்றில்லைக் கார்ப்
[பொழில்வாய்
வருங்கண் ணனையவண் டாடும் வளரிள வல்லியன்னீர்
இருங்கண் ணனையக ணைபொரு புண்புண ரிப்புனத்தின்
மருங்கண் ணனையதுண் டோவந்த தீங்கொரு வான்கலையே.

(ப-ரை.) கரும் கண்ணனை அறியாமல் நின்றேன்—கரிய நிறத்தையுடைய புருஷோத்தமனையும் அறியாமல் ஒளித்து நின்றேன், தில்லை கார் பொழில்வாய்—அவனுடைய திருவம்பலஞ் சூழ்ந்த இருண்ட சோலையிடத்து, வரும் கள் நனைய—உண்டாகிற மதுவிலே மேனி முழுதும் நனையும்படி, வண்டு ஆடும்—வண்டுகள் வியாபாரிக்கிற, வளர் இள வல்லி அன்னீர்—வளர்கிற இளைய வல்லிசாதம் போல்வீர்! இரும் கண் அனைய—உங்கள் பெரிய கண்களை ஒத்த, கணைபொரு புண் புணர்—அம்பு பட்ட புண் பொருந்தின, இப்புனத்தின் மருங்கு-இந்தப் புனத்தின் பக்கத்து, அனையது — அத்தன்மையது (அப்படி வந்தது என்றுமாம்; அப்படி என்றது தன் தலைமை அழிந்தது) ஒரு வான் கலையே—ஒரு பெருங்கலை. உண்டோ—வந்ததுண்டோ? (உண்டாகிற் சொல்லவேண்டும்) (எ-று.) (அண்ணனைய என்றது அண்ணலை நைந்தது என்றபடி).

---

53. தலைவன் கூற்று.

உண்டாகக் கடவ கள்ளயுடைய அரும்புகளை யுடைமையான் வண்டு காலம் பார்த்து ஆடுமாறுபோல, நும் முள்ளத்து நெகிழ்ச்சியுண்டாமளவும் நுமது பக்கம் விடாது உழல்கின்றேன் என்பது பண்டு காலம் பார்த்து ஆடுமாறுபோல. நும் முள்ளத்து நெகிழ்ச்சியுண்டாமளவும் நுமது பக்கம் விடாது உழல்கின்றது என்பது பயப்ப வருங்கண்ணனையையுடைய என்றுரைப்பினுமமையும்; மருங்கண்ணனையதுண்டோ வென்பதற்கு அண்ணல் நையதென்று, புனத்தின் மருங்கு தலைமை நைதலையுடையதெனினும் அமையும் மருங்கண்: மருங்கு என்பது மருங்கணெனத் திரிந்து நின்றது. (பே-ரை.)

## 54. வழி வினுதல்.

கலைமான்வினுய [1]கருத்துமுற்றிய
மலைமானண்ணல் வழிவினுயது.

(இ-ள்) 'கலையாகிய மான் வந்ததோ?' என்று கேட்ட கருத்து முற்றிய நினைவு வேறுபட்டபடியை அறிய மலையை யொத்த நாயகன் வழி கேட்டது.

---

சிலம்பணி கொண்டசெஞ் சீறடி பங்கன்றன் சீரடியார்
குலம்பணி கொள்ள வெனைக்கொடுத் தோன்கொண்டு தானணியுங்
கலம்பணி கொண்டிட மம்பலங் கொண்டவன் கார்க்கயிலைச்
சிலம்பணி கொண்டநுஞ் சீறூர்க் குரைமின்கள் [2]சென்னெறியே

(ப-ரை) சிலம்பு அணி கொண்ட செம் சீறடி பங்கன்— சிலம்பு தன் அழகுபெற்ற சிற்றடியையுடைய ஈசுவரியை வாம பாகத்திலே உடையவன், தன் சீர் அடியார் குலம் பணி கொள்ள எனைக் கொடுத்தோன்—தன் சீரடியார் திரள என்னை ஏவல் கொள்ளும்படிக்கு அடிமையாக என்னைக் கொடுத்தவன், கொண்டு தான் அணியும் கலம்பணி கொண்டு—தான் கொண்டு அணிகிற ஆபரணமாகப் பாம்பைப் பண்ணிக்கொண்டு, இடம் அம்பலம் கண்டவன்—சிதம்பரம் இடமாகக் கொண்டவன், கார் கயிலை சிலம்பு—தழைந்து இருட்சியுடைய சோலையதனுல் கார் பரந்த ஸ்ரீ கயிலாயத் திருமலையில், அணி கொண்ட நும் சீறூர்க்கு செல்நெறியே உரைமின்கள்—அழகுகொண்ட உங்கள் ஊர்க்குச் செல்லும் வழியைச் சொல்லுவீராக. (எ-று.)

---

**54.** தலைவன் கூற்று.

(பா-ம்) 1. கருத்துவேறறிய 2. சின்னெறியே.

(கு-ரை) தனக்குத் தக்க தையலை இடத்துவைத்தானென்றும், தன் அடியார்க்குத் தகாத என்னை அவர்க்குக் கொடுத்தானென்றும், அணிதற்குத் தகாத பாம்பை அணிந்தானென்றும், தனக்குத் தகும் அம்பலத்தை இடமாகக் கொண்டானென்றும் மாறுபாட்டொழுக்கம் கூறிய வாறும். (பே-ரை).

## 55. பதிவினுதல்.

பதியொடு பிறவினுய்
மொழிபல மொழிந்தது.

(இ-ள்) ஊருடனே பலவற்றையும் வினவி, வார்த்தையைப் பலகாலும் சொன்னது.

---

ஒருங்கட மூவெயி லொற்றைக் கணைகொள்சிற் றம்பலவன்
கருங்கட மூன்றுகு நால்வாய்க் கரியுரித் தோன்கயிலை
இருங்கட மூடும் பொழிலெழிற் கொம்பரன் னீர்களின்னே
வருங்கடம் மூர்பகர்ந் தாற்பழி யோவிங்கு வாழ்பவர்க்கே.

(பொழிப்புரை) :—(எயில் மூன்றினையும்) ஒருக்காலே அழிப்பதாக அம்பை வாங்கின திருச்சிற்றம்பலநாதன்; பெருமதம் மூன்றும் சொரியப்பட்ட நான்ற வாயினையுடைய யானையினை உரித்தவன்; அவனுடைய கயிலாய மலையின் பெருங்காட்டினுல் சூழப்பட்ட பொழிலிலுண்டாகிய கொம்பை ஒப்பீர்காள்! இங்ஙனே வாருங்கள்; (என்று எதிர்முக மாக்கிக்கொண்டபடி) தங்கள் ஊரின் பெயரைச் சொன்னுல் இந்த நிலத்தில் வாழ்ப பவர்க்குக் குற்றமாமோ? —குற்றமாகிற் சொல்லவேண்டுவ தில்லை—, (எ-று)

---

55. தலைவன் கூற்று.

பேராசிரியர் உரையில் கொளு பின்வருமாறு அமைந்திருக்கிறது.

பதியொடு பிறவினுய் மொழிபலமொழிந்து
மதியுடம்படுக்க மன்னன்வலிந்தது.

59-ஆவது செய்யுளைக் காண்க.

## 56. பெயர் வினுதல்.

பேரமைத் தோளியர்
பேர்வி னுயது.

(இ-ள்.) பெருத்த வேயொத்த தோளியர் பெயர் கேட்டது.

---

தாரென்ன வோங்குஞ் சடைமுடி மேற்றனித் திங்கள்வைத்த
காரென்ன வாருங் கரைமிடற் றம்பல வன்கயிலை
ஊரென்ன வென்னவும் [1]வாய்திற வீரொழி வீர்பழியேல்
பேரென்ன வோவுரை யீர்வீரை யீர்ங்குழற் பேதையரே.

(பொ-ரை.) நெற்றிமாலை என்னும்படி உயர்ந்த சடைமுடி மேலே ஒரு கலையாகிய திரு இளம்பிறையை வைத்த, மேகமென்னும்படி நிறைந்த கரிய திருமிடற்றை உடைய திருவம்பல நாதன்; 'அவனுடைய கயிலாயத்தில் உங்கள் ஊர் எத்தன்மையது?' என்று கேட்கவும், வாய் திறவாமல் இருக்கிறீர்களே! உங்கள் ஊரின் பெயர் சொன்னால், அது பழியாமாகிலும், ...... பெயராகிலும் சொல்லுங்கள்; நறு நாற்றத்தையுடைய கூந்தலினையும் பேதைத் தன்மையையும் உடையீர்! (எ-று.)

---

56. தலைவன் கூற்று.

பா-ம். [1]வாய்திறவா தொழிவீர்.

தலைமகளும் தோழியும் ஒரூரல்லர் என்று கருதினன் போல ஊரென்ன எனப் பன்மையாற் கூறினன். ஊருஞ் சொல்லாதாரைப் பெயர் கேட்கவே வேறு கருத்துடையனென்பது விளங்கும். (பே-ரை.)

## 57. மொழிபெறாது கூறல்.

தேமொழியவர் வாய்மொழிபெறாது
மட்டவிழ்தாரோன் கட்டுரைத்தது.

(இ-ள்.) தேனை யொத்த வார்த்தையினையுடையவர்களிடம் ஒரு வார்த்தையும் பெறாதபடியாலே, மதுவிரிகின்ற மாலையினையுடையவன் இயல்பைச் சொன்னது.

---

இரத முடைய நடமாட் டுடையவ [1]ரெம்முடைய
வரத முடைய வணிதில்லை யன்னவ ரிப்புனத்தார்
விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேல்
சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே.

(ப-ரை.) இரதமுடைய நடமாட்டுடையவர்-கண்டார்க்குக் கண்ணுக்கினிதாகிய திருக்கூத்தினையுடையவர், எம்முடைய வரதர்—எம்முடைய மேலானவர், தம்முடைய அணிதில்லை அன்னவர்—அவருடைய திருவம்பலத்தை ஒத்தவர்கள், இப் புனத்தார்-இப்புனத்திடமாக இருக்கும் அவர்கள், விரதமுடையார் விருந்தொடு பேச்சின்மை—விருந்தினராய் வந்தாருடனே பேசாமைக்கு விரதம் பூண்டு ஒழுகினுர்களாக வேண்டும்; மீட்டு அது அன்றேல்—திரியவும் அதுவல்லாமல், சரதமுடையர்—நிசிதமாகவுடையவர்கள், மணிவாய் திறக்கில் சலக்கென்பவே—சலக்கென விழுபவ முத்துமணிகளைச் சாதகமாகவுடையர்; [ஆகையாலே வாய்திறவா(மல் வா)ழ்கிறுர்(கள்.) அல்லது...... வாய் திறந்து வாயு.........குற்றமாமோவென்று.........வாயாது கருத்த......தது] (எ-று.)

---

57. தலைவன் கூற்று.

பாடபேதம் [1] 'ரெம்முடையர்'

செய்யுளில் இரண்டாம் அடியில் இரண்டாம் சீர் விடப்பட்டிருக்கிறது; போாசிரியர் உரைப்பதிப்பிலுள்ளவாறு 'முடைய' என்று அஃது இங்கு நிரப்பப் பெற்றுள்ளது; ஏட்டிலுள்ள உரையின்படி அது 'வரதர் தமுடைய' என்றிருத்தலாமோ என்று தோன்றுகிறது.

உரையின் கடைசிப் பகுதியும் பலவிடங்களில் சிதைந்துள்ளது.

'காரென்ன.........அம்பலவன்:' 'காரார் மணிகண்டத் தெம்மான்' (சிராமலை. 164).

## 58. கருத்தறிவித்தல்.

உரைத்த துரையாது
கருத்த றிவித்தது.

(இ-ள்.) ஒரு (முறை) சொன்ன வார்த்தையைப் பின் ஒருகால் சொல்லாது, தன் கருத்தினை அறிவித்தது.

---

வின்னிற வாணுதல் வேனிறக் கண்மெல் லியலைமல்லல்
தன்னிற மொன்றி லிருத்திநின் றோன்றன தம்பலம்போல்
மின்னிற நுண்ணிடைப் பேரெழில் வெண்ணகைப் பைந்
[தொடியீர்
பொன்னிற வல்குலுக் காமோ மணிநிறப் பூந்தழையே.

(பொ-ரை.) வில்லையொத்த ஒளி சிறந்த நெற்றியினையும், வேலையொத்த திருநயனங்களையும், மதுரவியல்பினையும் (உடைய) தம்பிராட்டியை வளவிய தன்னுடைய திருமேனியில் ஒரு பாகத்தில் வைத்து நின்றோன்; அவனுடைய திருவம்பலத்தை ஒத்த வாக்கினால் உரைக்கவும் அரிதாகிய, நுண்ணிய இடையினையும் கனகத் தனங்களையும், அழகிய வளைகளையுமுடையீர்! பொன்னை யொத்த அல்குலுக்கு மாணிக்கம்போன்ற பூந்தழையாமோ? (எ-று.) (ஆமாகில், வாங்கிக்கொள்ளுங்கள் என்பது கருத்து.)

எனவே, பொன்னுக்கு மாணிக்கம் பொருந்துதலானும் உங்களுடைய அல்குலுக்கும் இந்தத் தழை பொருந்தும் காண் என்றவாறு.

---

58. தலைவன் கூற்று.

பொன்னிற அல்குலென்று அல்குலின் தன்மை கூறியவதனன், முன்னமே புணர்ச்சி நிகழ்ந்தமையும் உண்டென்பது கூறியவாராயிற்று. ஆமோ என்ற ஓகாரம் கொடுப்பாரது உண்மகிழ்ச்சியையும் கொள்வாரது தலைமையையும் விளக்கிநின்றது. (பே-ரை.) 'பொன்னொடு மணிமிடை அல்குன் மடந்தை' (குறுந். 274) என்பதையும் ஒப்புநோக்குக.

மெல்லியலை......நின்றோன். பங்கனக லத்திறைவி வேள்விபழு தாகத் தங்கனக லத்தமர்செய் தாதை (தக்க. 292).

## 59. இடை வினுதல்.

வழிபதி பிறவினுய்
[1]மதியுடன்படுக்க மன்னன்மலிந்தது.

(இ-ள்) வழியையும் பதியையும் பிறவற்றையும் வினுவி, தன் புத்தியை ஒருப்படுத்துவதாக நாயகன் அறுதியிட்டது.

---

கலைக்கீ ழகலல்குற் பாரம தாரங்கண் ணார்ந்திலங்கு
முலைக்கீழ்ச் சிறிதின்றி நிற்றன் முற்ருதன் றிலங்கையர்கோன்
மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம் பலவர்வண் பூங்கயிலைச்
சிலைக்கீழ்க் கணையன்ன கண்ணீ ரெதுநுங்கள் சிற்றிடையே.

(பொ-ரை.) மேகலாபாரத்திடத்து அகன்ற அல்குலின் பாரம் இருந்தபடியது. முத்துவடம் கண்ணுக்கு நிறைந்து விளங்குகிற முலையின் கீழே ஏதேனும் சிறிது இடையில்லாத பொழுது நிற்றல் முற்றுப்பெற மாட்டாது. அன்று இலங்கைக்கு அரசனுகிய இராவணன் மலைக்கீழ் விழும்படி அடர்த்த திருச்சிற்றம்பல நாதனின் வளவிய பொலிவினை யுடைத்தாகிய ஸ்ரீகயிலாயத்தில் வில்லோடே சேர்ந்த அம்புகளை யொத்த கண்களை உடையீர்! உங்களுடைய சிறிய இடை எதுதான்? சொல்லுவீராக வேண்டும் (எ-று.)

---

59. தலைவன் கூற்று.

பாரம் அது என எழுவாயும் பயனிலையுமாக்கி, முலைக்கீழ்ச் சிறிதாயினும் ஒன்றின்றி இவ்வுருவம் நிற்றல் முற்ருதென்றுரைப் பாருமுளர். மேலைப்பாட்டு ஆறனுனும் வம்பமாக்கள் வினுவும் பெற்றியே கதுமெனத் தனது குறைதோன்ருவகை வினுவினுன்; இப்பாட்டிரண்டினுனும் இவன்குறை நம் கண்ணதே என்பது தோழிக்குப் புலப்பட, 'இத்தழை நல்ல கொள்ளீர்?' என்றும், 'நும் இடையாது? என்றும் வினுவினுன் என்பது. (பே-ரை.)

இத்துறைக்குரிய கொளு, பேராசிரியர் உரைப்பதிப்பில் பின்வருமாறு காணப்படுகிறது.

வழிபதி பிறவினுய்
மொழிபல மொழிந்தது.

[1] 55-ஆவது செய்யுளைக் காண்க.

## 5. இருவருமுள்வழி அவன் வரவுணர்தல்.

தலைமகளும் தோழியும் உள்வழிச் சென்று, தலைமகன் கரந்த மொழியால் தன் கருத்து அறிவிக்க, தோழி அவன் நினைவு அறியா நிற்றல்.

[1] ஐய [2] நாடலாங்கவை யிரண்டும்
மையறு தோழி யவன் வரவுணர்தல்.

(பே-ரை.)

---

## 60. ஐயுறுதல்.

அடர்க்கதிர்வேலோன் தொடர்ச்சிநோக்கித்
தையற்பாங்கி யையமுற்றது

(இ-ள்.) வெற்றியினையும் ஒளியையும் உடைத்தாகிய வேலினையுடையவன் இடைவிடாது வருகிற வரவைப் பார்த்து ஒப்பினையுடைய பாங்கி சந்தேகித்தது.

---

பல்லில னாகப் பகலைவென் றோன்றில்லை பாடலர்போல்
எல்லில [1] னாகத் தொடேனம் [2] வினாவிவன் யாவன்கொலாம்
வில்லில னாகத் தழைகையில் வேட்டைகொண் டாட்டமெய்
சொல்லில னாகற் றவாகட வானிச் சுனைப்புனமே. [யோர்

(பொ-ரை.) ஆதித்தனைப் பல்லிழக்கும்படி வெற்றி செய்தவன், அவனுடைய சிதம்பரத்தைப் பாடமாட்டாதாரைப் போல ஒளியிழந்தான்; யானையுடனே கருவாவினையும் வினவி வந்தான்; இவன் யாவன்தான்? கையில் வில்லுடையனுமல்லன்; இவன் கையில் சுரபுன்னைத் தழை இருந்தது; இப்படி இருகையிற்றிலும் கொண்டாட்டம் வேட்டையாயிருந்தது; உண்மையாகச் சொல்லுவதொரு வார்த்தையுமுடைய னல்லன். ஐயோ, இவன் கற்ற மரபென்தான்? இந்தச் சுனைப்புனத்தை விட்டு நீங்குகிறானுமில்லை (எ-று.)

---

60. பாங்கி கூற்று.

பா-ம். [1] ஆகத் தோரேனம் [2] வினாய்.

கருவா—பன்றி. ஏனம்; (ஏனம் வினவியதற்குச் செய்யுளில்லை).

கற்றவா ஆ—இவன் பொய்யுரைக்கற்றவாறு என்! பொய்யுரைத்து வறிதுபோவானுமல்லன் (பே-ரை.)

இச்செய்யுளை 'யாதோவிவர் மனத்தெண்ணம் யாதெனத் தேர்தற்கு' மேற்கோளாகக் காட்டுவர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ. 507 உரை).

## 61. அறிவுநாடல்.

வெற்பன்வினைய சொற்பதநோக்கி
நெறிகுழற்பாங்கி யறிவுநாடியது.

(இ-ள்) நாயகன் கேட்ட சொல்லினது முடிவைப் பார்த்து நெறித்த கூந்தலினையுடைய பாங்கி புத்தியினால் விசாரித்தது.

---

ஆழமன் னேவுடைத் திவ்வையர் வார்த்தை யனங்கனைந்து
வீழமுன் னேக்கிய வம்பலத் தான்வெற்பி னிப்புனத்தே
வேழமுன் னுய்க்கலை யாய்ப்பிற வாய்ப்பின்னு மென்றழை
[யாய்
மாழைமென் னேக்கி யிடையாய்க் கழிந்தது வந்துவந்தே.

(பொ-ரை.) இந்தச் சுவாமிகளுடைய வார்த்தை மிகவும் ஆழமுண்டாயிருந்தது. முற்காலத்துக் காமன் பொடியாய் வீழும்படி பார்த்த திருவம்பலநாதனுடைய திருமலையின் இந்தப் புனத்திடத்தே, முன்பு யானையை வினவி, அதற்குப் பின்பு கலையை வினவி, பின்பு(பிறவற்றைப் பேசி), பின்பு, மெல்லிய தழைகளையும் உடுப்பீர்களோ? என்னும்படியாய், மெல்ல மெல்ல வந்து குளிர்ந்த மெல்லிய நோக்கினை உடையாளுடைய இடையை வினவும்படியாய் விட்டது. இந்தச் சுவாமிகளுடைய வார்த்தை மிகவும் ஆழமுடையதாயிருந்தது. (எ-று.)

---

**61. பாங்கி கூற்று.**

மெல்லிய நோக்கத்தை உடையாள் இடைபோலப் பொய்யாய்விட்டதென்பாருமுளர். பின்னும் என்றது முன்னைவினாவே ஐயந்தாரா நிற்பப் பின்னுமொன்று கூறினான் என்பதுபட நின்றது. (பே-ரை.)

'இதனை எண்ணந் தெளிதற்குச்' செய்யுளாகக் கூறுவர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ. 507 உரை).

இருவருமுள்வழியவன் வரவுணர்தல் முற்றிற்று.

## 6. முன்னுறவுணர்தல்.

தலைமகன் இங்ஙனம் வினையதற்கெல்லாம் தோழி மறுமொழி கொடாளாகத் தலைமகன் வாடினன்; வாடவே தலைமகளும் வாடினள்; ஆதலால் இருவரது வாட்டமும் வினவப்படுதல் முன்னுற்றதனை உணர்தலானே இதற்கு முன்னுறவுணர்தலென்று பெயராயிற்று.

இஃது ஒரு துறையையுடைத்து, அது வருமாறு

**வாட்டம்வினுதல் முன்னுறவுணர்தல்**
**கூட்டியுணருங் குறிப்புரையாகும்.** (பே-ரை.)

---

## 62. வாட்டம் வினுதல்

***மின்னிடைமடந்தை நன்னியனேக்கி***
***வீங்குமென்முலைப் பாங்கிபகர்ந்தது.***

(இ-ள்.) மின்னையொத்த இடையினையுடைய நாயகி தன்னுடைய இயல்பைப் பார்த்துப் போதுக்குப் போது விம்முகிற **மதுரமான** முலையினையுடைய பாங்கி சொன்னது.

---

நிருத்தம் பயின்றவன் சிற்றம் பலத்துநெற் றித்தனிக்கண்
ஒருத்தன் பயிலுங் கயிலை மலையி னுயர்குடுமித்
திருத்தம் பயிலுஞ் சுனைகுடைந் தாடிச் சிலம்பெதிர்கூய்
வருத்தம் பயின்றுகொல் லோவல்லி மெல்லியல் வாடியதே.

(பொ-ரை.) திருச்சிற்றம்பலத்திலே திருநடனமாடுகிறவன்; நெற்றியிலே ஒரு திருநயனத்தையுடைய ஒப்பில்லாதவன்; **அவன்** வாழ்கிற **ஸ்ரீ**கயிலாய மலையில் **உயர்ந்த** உச்சிநின்று நதியாக நீர் **அருமல்** விழுகிற சுனைநீர் **குடைந்து** விளையாடியும், வரையெதிர் நின்று அழைத்தும், இவற்றினலே வருத்தமிக்கோதான், வல்லிசாதத்தை ஒத்து மெல்லிய இயல்பினை உடையாள் வாடியது?

---

***62.*** பாங்கி கூற்று.

(திருத்தம்— தீர்த்தம்; 'திருத்தயாத்திரை பதிகம்' (திருவிளை. எழுகடல். 9.).

## 7. குறையுறவுணர்தல்.

(இ-ள்.) தலைமகன் குறையுறத் தோழி அதனைத் துணிந் துணரா நிற்றல்.

---

இது நான்கு துறையுடைத்து: அவை வருமாறு:—

[1] குறையுற்று நிற்றல், [2] அவன்குறிப் பறிதல்,
[3] அவள்குறிப் பறிதலோ [4] டவர் நினைவெண்ணல்,
கூறிய நான்குங் குறையுற வுணர்வெனத்
தேறிய பொருளிற் றெளிந்திசி னோரே.

(பே-ரை.)

## 63. குறையுற்று நிற்றல்

கறையுற்ற வேலன்
குறை யுற்றது.

(இ-ள்.) இரத்தம் பொருந்தின வேலையுடையவன் தன் குறையைச் சொன்னது.

---

மடுக்கோ கடலின் விடுதிமி லன்றி மறிதிரைமீன்
படுக்கோ பணிலம் பலகுளிக் கோபரன் றில்லைமுன்றிற்
கொடுக்கோ வளைமற்று நும்மையர்க் காயகுற் றேவல் [செய்கோ
தொடுக்கோ பணியீ ரணியீர் மலர்நுஞ் சுரிகுழற்கே.

(பொ-ரை.) விடக்கடவதொரு மரத்தோணியைக் கடலிலே விடுப்பேனோ? அது வன்றாகில், கீழது மேலதுவாக மறுகு திரையிலே புக்கு மீன் படுப்பேனோ? முத்துக்கள் பலவற்றையும் ஒரு குளியிலே எடுப்பேனோ? சிவனுடைய புலியூர் முற்றங்களிலே புகுந்து வளை விற்று வருகேனோ? மற்றும் உங்களுடைய அண்ணன்மார்க்குப் பொருந்தின குற்றேவல் செய்து நிற்பேனோ? அணியத்தக்க தேனிருக்கு மலர்களை உங்களுடைய நெறிந்த கூந்தலுக்குத் தொடுப்பேனோ? இந்த ஊழியங்களிலே ஒன்றேனும் எனக்கு ஏவுங்கள். (எ-று.)

---

**63.** தலைவன் கூற்று.

இது இணைமயக்கம். 'முன்னிரந்து குறையுறுதற்கிடங்காட்டிக் குறையுற வுணர்தற்கு இயைபுபடக்' குறையுறுமாற்றை ஈண்டுக்கூறினான். (பே-ரை.) இதனைத் 'தலைவனுட்கோள் சாற்றற்குச் செய்யுள்' என்பர் இலக்கண விளக்க ஆசிரியர்.

## 64. அவன் குறிப்பறிதல்.

பொற்றொடித் தோளிதன் சிற்றிடைப்பாங்கி
வெறிப் பூஞ்சிலம்பன் குறிப்பறிந்தது.

---

(இ-ள்.) அழகிய வளைகளையுடையாளுடைய சிறிய இடையையுடைய தோழி நறுநாற்றமுடைத்தாகிய பூக்களாற் சிறந்த மாலையையுடையவன் நினைவை அறிந்தது.

அளியமன் னும்மொன் றுடைத்தண்ண லெண்ணரன் [றில்லையன்னாள்
கிளியைமன் னுங்கடி யச்செல்ல நிற்பிற் கிளரளகத்
தளியமர்ந் [1]தேறின் வறிதே யிருப்பிற் பளிங்கடுத்த
ஒளியமர்ந் தாங்கொன்று போன்றொன்று தோன்று [2]மொளி [முகத்தே.

(பொ-ரை.) அளிக்கத் தக்கவனுடைய விசாரமானது நிலைபெற்றதொன்றை உடைத்தாயிருந்தது. அரனுடைய சிதம்பரத்தைப் போன்றவள், புனத்திலே நிலைபெற்று வாழ்கிற கிளிகளை ஓட்டுவதாகச் சிறிதேறச் சென்றாலும், விளங்குகிற கொண்டையிலே வண்டுகள் விரும்பி ஏறினும், இவை இரண்டும் செய்யாதொழுகினும், ஒளி சிறந்த முகத்திலே, அன்பிலாதாரைப் போலே இருக்கையிலும், இவற்றில் இரண்டிலும் அன்பு தோன்றா நின்றது. (எ-று)

எங்ஙனே என்னின், அப்புனத்திலே நிலைபெற்று வாழ்கின்ற கிளிகளை ஓட்டுவதாகச் சிறிதே நீங்கில், 'இவள்வருந்துகின்றாள்' என்று கொண்டும், கொண்டையிலே வண்டுகள் விரும்பி ஏறின், 'இடை ஒடிந்திடும், என்றும், வருந்தா நின்றது. இவை இரண்டும் செய்யாத இனி ஒரு கிலேசமில்லை என்று வாடாநின்றது.

---

**64.** பாங்கி கூற்று.

பா-ம். [1]ஏறிவறிதே [2]ஒளிர்முகமே.

ஒன்றுபோன்றொன்று தோன்றும் என்றது, கிளியைக் கடியச் சிறிது புடை பெயரின் நெட்டிடை கழிந்தாற்போலஆற்றாமைகலானும், வண்டு மூசப் பொறுளென்று வருந்தி வண்டை ஓச்சுவான் போலச் சேறலானும், வாளாவிருப்பிற் கண்டின்புறுதலானும், இவள் கண்ணிகழ்ச்சி இவன் முகத்தே புலப்படா நின்றது என்றவாறு. (பே-ரை.)

பளிங்கடுத்த ஒளி. 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டு முகம்.' (குறள். 706).

## 65. அவள் குறிப்பறிதல்.

ஆங்கவள் குறிப்புப்
பாங்கி பகர்ந்தது.

(இ-ள்.) அவ்விடத்து நாயகியுடைய நினைவைத் தோழி சொன்னது.

பிழைகொண் டொருவிக் கெடாதன்பு செய்யிற் பிறவி [யென்றும்
முழைகொண் டொருவன் செல்லாமைநின் றம்பலத் தாடு [முன்னோன்
உழைகொண் டொருங்கிரு நோக்கம் பயின்றவெம் [மொண்ணுதன் மாந்
தழைகொண் டொருவ னென் னுமுன் னமுள்ளந் தழைத் [திடுமே.

(பொ-ரை.) பிழையான காரியத்தைக்கொண்டு, தன்னை விட்டுக் கெட்டுப் போகாதே அன்பு செய்வானாகில், பிறத்திற் கிடமாய்க் கர்ப்பக் கொள்கையை இடங்கொண்டு செல்லாதபடி திருவம்பலத்தில் நின்றுடியருளுகிற பழையவன் ஸ்ரீ அத்தத்திலே (திருக்கையிலே) ஏந்தின மானின் நோக்கத்தை ஒத்து, ஒருகாலே இருவகைப் பார்வையும் கற்ற எம்முடைய அழகிய நெற்றியினையுடையவள் மாந்தழை கொண்டு வாரா நின்முன் என்று நான் சொல்லுவதற்கு முன்னே தானே கண்டு உள்ளந்தழையா நின்றாள். (எ-று.)

---

**65.** பாங்கி கூற்று.

அடைந்தார் பிழைப்பின், தலையாயினார் பிழையை யுட்கொண்டமைதலும், இடையாயினார் அவரைத் துறத்தலும், கடையாயினார் அவரைக் கெடுத்தலும் உலகத் தன்மையின், அம்மூவகையும் செய்யாதெனினும் அமையும். பிறிதுரைப்பாருமுளர்.

இருநோக்கம் - வெள்ளை நோக்கமும் அவ்வுழைக்கில்லாத கள்ள நோக்கமுமாகிய இருநோக்கத்தையும். (பே-ரை.)

முழை-குகை.

## 66. இருவர் நினைவு மொருவழியுணர்தல்.

அன்புறு நோக்கு காங்கறிந்
தின்புறுதோழி யெண்ணியது.

---

(இ-ள்.) அன்புமிக்க பார்வையை அவ்விடத்திலே அறிந்து இத்தன்மையாலே இன்புற்ற தோழி விசாரித்தது.

மெய்யே யிவற்கில்லை வேட்டையின் மேன்மன மீட்டிவளும்
பொய்யே புனத்தினை காப்ப திறைபுலி யூரனையாள்
மையேற் குவளைக்கண் வண்டினம் வாழுஞ்செங் தாமரை [வாய்
எய்யே மெனினுங் குடைந்தின்பத் தேனுண் டெழிறருமே.

(பொ-ரை.) உண்மையாக இவர்க்கு வேட்டையின்மேல் மனமில்லையாயிருந்தது; மீண்டு இவளும் புனத்தினைக் காப்போம் என்னுமிது வெறும் பொய்பாயிருந்தது; சுவாமியினுடைய பெரும்பற்றப்புலியூரை யொப்பாள் மையெழுதப் பட்ட நீலமலர்களை யொத்த கண்களாகிய வண்டுச் சாதிகள் வாழும் தாமரைப் பூவிடத்தே, நாமொன்றை அறியேமாகிலும், அந்தப் பூவை மலர்க்கதிர் (?) இன்பத்தேனுண்டு அழகினை விளக்கா நின்றது.

---

66. பாங்கி கூற்று.

வண்டினமென்றாள், நோக்கத்தின் பன்மை கருதி. எய்யேமெனினும் என்பதற்கு ஒருவரை ஒருவர் அறியே மென்றிருப்பினும் எனினுமையும். எழில் தருதல் எழிலைப் புலப்படுத்துதல். இன்புறு தோழி - இருவர் காதலையும் கண்டின்புறுதோழி. ஐயநீங்கித் தெளிதலான் இன்புறுமெனினுமமையும். அன்றியும், இவளுடைய நலத்திற்கேற்ற நலத்தையுடைய தலைமகனைக் கண்டின்புறுந்தோழி என்னை. களவொழுக்கத்தில் எழில் நலமுடையானொருவனைக் கண்டு இன்புறக் கடவுளோ என எழினலமேயன்று, பின் அறத்தொடு நிலை நின்று கூட்டுகை அகத்தமிழினிலக்கணமாதலால் தன்குரவர் வினவத்தான் அறத்தொடு நிற்குமிடத்துக் குரவர் தாமே சென்று மகட்கொடுக்கும் குடிப்பிறப்பினால் உயர்ச்சியை யுடையனாதலானும் இன்புற்றாள். (பே-ரை.)

குறையுறவுணர்தல் முற்றிற்று.

## 8. நாணநாட்டம்.

நாணநாட்டம் என்பது இருவர் நினைவும் ஐயமறத் துணிந்த தோழி, அவரது கூட்டமுண்மை அறிவது காரணமாகத் தலைமகளை நாணநாடா நிற்றல்.

இஃது ஐந்து துறையுடையது: புலிமிசை வைத்தல் என்ற ஒன்று நடுங்க நாட்டம், அவை வருமாறு:-

[1] பிறைதொழு கென்றல், பின்னுமவளை
[2] உறவென வேறு படுத்தி யுரைத்தல்,
[3] சுனையாடல் கூறல், [4] தோற்றங் கண்டு
புணர்ச்சி யுரைத்தல், [5] பொதுவெனக் கூறி
மதியுடம் படுதல், வழிநாண னடுங்கல்
[6] புலிமிசை வைத்தல் புகலுங் காலே.

## 67. பிறைதொழுகென்றல்.

பிறைதொழுகென்று பேதைமாதரை
நறுநுதற்பாங்கி நாணநாட்டியது.

(இ-ள்.) 'பிறையைத் தொழுவாயாக' என்று பேதைத் தன்மையையுடைய நாயகியை நல்ல நெற்றியினையுடைய தோழியை நாணும்படி சொன்னது.

மைவார் கருங்கண்ணி செங்கரங் கூப்பு மறந்து [1]மற்றப்
பொய்வா னவரிற் புகாதுதன் பொற்கழற் கேயடியேன்
உய்வான் புகவொளிர் தில்லைநின் றோன்சடை மேலதொத்
செவ்வா னடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே. [துச்

(பொ-ரை.) மையெழுதப்பட்ட கரிய கண்களையுடையாய்! சிவந்த கைகளைக் கூப்பித் தொழுவாயாக. அரிதேயும், மறந்தும் பொய்யான தேவர்களிடத்தே செல்லாது, தன்னுடைய அழகிய திருவடிகளிலே அடியேன் பிழைப்பது காரணமாக ஆட்புக விளங்காநின்ற பெரும்பற்றப்புலியூரிலே எழுந்தருளி நின்றவன்; அவனுடைய திருச்சடை மேலே வைத்த திரு இளம்பிறையை நிகர்த்துச் செக்கர் வானத்திலே சேர்ந்த செவ்விக் கதிர்களையுடைத்தாகிய வெள்ளிய சிறுபிறைக்கு நின்னுடைய சிவந்த கைகளைக் கூப்பித் தொழாய், நாயகியே! (எ-று.)

---

67. பாங்கி கூற்று.

பா - ம் - [1] மற்றை.

மறந்தும் - அறியாதும். பொய்வானவர் - இனமல்லாராயினும் இனமாக உலகத்தாரால் கூறப்படுதலின் அவ்வாறு கூறினார். "மூவ ரென்றேயெம் பிரானோடு மெண்ணி" (திருவாசகம், திருச்சாழல் 4). என்பதூஉம் அக்கருத்தேபற்றி வந்தது. பிறர் கூறும் பெருமை அவர்க்கின்மையிற் பொய்யானவரென்றார். எனக்குப் பொறியுணர் வல்லது இன்மையிற் கண்கவரும் திருமேனிகாட்டி என்னை வசித்தா னென்னும் கருத்தான் உய்வான் புகத்தில்லை நின்றோனென்றார். (பே-ரை.)

செவ்வா னடைந்த பசுங்கதிர் - 'பானி லாவைப் பசுங்கதிர்க் கொத்தொடு' என்பர் ஒட்டக்கூத்தர் (தக்க. 605)

## 68. வேறுபடுத்துக்கூறல்.

வெய்வளைத் தோளியை வேறுபாடுகண்
டாய்வளைத் தோழி யணங்கென்றது.

(இ-ள்.) மூங்கில் போன்று வளைகளை அணிந்த தோள்களையுடையாளை மேனி வேறுபாடானது கண்டு அழகிய வளைகளை யணிந்த தோளினை யுடையவள் தெய்வமென்றது.

---

அக்கின் றவாமணி சேர்கண்ட னம்பல வன்மலயத்
திக்குன் றவாணர் கொழுந்திச் செழுந்தண் புனமுடையாள்
அக்குன் றவா றமர்ந் தாடச்சென் றாளங்க மவ்வவையே
ஒக்கின் றவா றணங் கேயிணங் காகு முனக்கவளே.

(பொ-ரை.) அக்கினது மணிநீங்காது பொருந்தின திருமிடற்றை உடையவன் திருவம்பலநாதன்; அவனுடைய பொதியின் மலையிடத்து இக்குன்றவாணரா நிலையவர் பெற்ற இளைய வல்லி சாதத்தை யொப்பாள்; இந்த அழகிய குளிர்ந்த புனத்தை யுடையவள் அந்த மலையருவியை விரும்பி ஆடுவதாகப் போனால், அவளுடைய அவயவங்கள் தம்மை ஒக்கின்......தெய்வமே! உனக்கவள்......ஆதலால், அவள் நீ நின்று அவளைக் கண்டு போவாயாக.

---

68. பாங்கி கூற்று.

உரையிற் சிதைந்துபோன பகுதிகட்குப் பேராசிரியர் உரை பின்வருமாறு:— 'நின் உறுப்புக்கள் அவளுறுப்புக்களாகிய அவற்றையே யொக்கின்றபடி என்னணங்கே, நினக்கவளிணங்காகும்.'

## 69. சுனையாடல் கூறிநகைத்தல்.

யாணநாட்டிய வார்குழற்பேதையை
நாணநாட்டி நகைசெய்தது.

---

(இ-ள்.) மாட்சிமை உடைத்தாகச் சொல்லப்பட்ட நீண்ட கூந்தலினையுடைய நாயகியை நாணும்படி சொல்லிச் சிரித்தது.

செந்நிற மேனிவெண் ணீறணி வோன்றில்லை யம்பலம்போல்
அந்நிற மேனிநின் கொங்கையி லங்கழி குங்குமமும்
மைந்நிற வார்குழன் மாலையுந் தாதும்வ ளாய்மதஞ்சேர்
இந்நிற மும்பெறின் யானுங் குடைவ னிருஞ்சுனையே.

(பொ-ரை.) சிவந்த திருமேனியிலே வெள்ளிய திருநீற்றைச் சாத்தியருளுகிறவன் பெரும்பற்றப்புலியூரில் திருவம்பலத்தை யொத்த அழகிய மேனியையுடையாய்! நின் கொங்கையிடத்துக் கூட்டமாகிய அவ்விடத்தே யழிந்த குங்குமமும், இருண்ட நிறமுடைய கூந்தலிலே யணிந்த மாலையும், செருகுபூவும் (தாதும்) உன்மேனி முழுதும் சூழ்ந்த கந்தம் சேர்ந்த மணவொளியும், யானும் பெறுவேனாகில், நீ ஆடினேனென்கிற பெரிய சுனையை யானும் ஆடக்கடவேன்.

என்ன, இது சுனையாட்டில் வந்ததன்று காண். (எ-று.)

---

69. பாங்கி கூற்று.

மதம் - காமக்களிப்பாலுண்டாகிய கதிர்ப்பு. கூந்தலிற் சேர்ந்த தாது: "தாதுகொண்டிருந்த தாழிருங் கூந்தலர்". (பெருங். 1-43: 141) "தாது கொண்டளகத்தப்பி" (சிந்தா - 2948)

இதனை, 'நாணநாட்டம்' என்பர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ. 507 உரை.)

---

## 70. புணர்ச்சியுரைத்தல்.

மணக்குறி நோக்கிப்
புணர்ச்சி யுரைத்தது.

(இ-ள்.) மணவொளியைப் பார்த்து, கூட்டம் உண்டென்று சொன்னது.

பருங்கண் கவர்கொலை வேழப் படையோன் படப்படர்தீத்
தருங்கண் ணுதற்றில்லை யம்பலத் தோன்றட மால்வரைவாய்க்
கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக்கண் ணாரளிபின்
வருங்கண் வரைமலர் சூட்டவற் றேமற்றவ் வான்சுனையே.

(ப-ரை.) பருங் கண்கவர் கொலை-பரிய கண்ணினையும் விருப்பத்தாலே கொல்லும் கொலையினையுமுடைய, வேழப் படையோன் - கருப்பு வில்லையுடைய காமன், பட - பட்டு விழும்படி, படர்தீ தருங்கண் - வர்த்திக்கிற அக்கினியைத் தருகிற திருநயனம், நுதல் தில்லை அம்பலத்தோன் - நெற்றியிலேயுடைய பெரும்பற்றப்புலியூரில் திருவம்பலத்தேயுள்ளவன், தடமால் வரைவாய்- மிகவும் பெரிய மலையிடத்து, கருங்கண் சிவப்ப—கரிய கண்கள் சிவப்பவும், கனிவாய் விளர்ப்ப - கனிவாய் வெளுப்பவும், கண் ஆர் அளி - கண்ணுக்கு நிறைந்த வண்டுகள், பின் வரும் கண் வரைமலர் - பின் தொடர்கிற தேனுடைத்தாகிய மலர்களை, சூட்ட அற்றோ மற்று அவ்வான் சுனையே - சூட்டத்தக்கதோ அப்பெரிய சுனை?'' (எ-று.)

---

**70.** பாங்கி கூற்று.

(பா-ம்.) மலைமலர்.

'நீ ஆடிய அப்பெரிய சுனை, கண்சிவப்ப வாய்விளர்ப்ப அளி தொடரும் வரை மலரைச் சூட்டவற்றோ' எனத் தோழி நகையாடி, தலைவியின் புணர்ச்சி உரைத்தாள்.

'வருங்கண்வரை மலர்' என்பது பாடமாயின், அளிதொடரும் இடத்தையுடைய வரை மலர் என்க. இடம் என்பது பூவினது ஏக தேசத்தை. இன்னும் வரைமலர் என்பது ஒரு பூவை முழுதும் சூட்டினுறையின் தலைவி அதனையறிந்து பேணவேண்டி வாங்குதலைக்கூடும். ஆகையால் இவள் இஃதறியாமல் தோழி அறிவது பயனாக ஒரு பூவின் முறித்ததொரு சிறிய இதழைச் சூட்டினன். ஆகையான் வரைந்த மலர் என்றாளாம். இவை நான்கும் நாண நாட்டம்...... (பே-ரை.)

இது 'சுனைவியந்துரைத்தல்' (இலக். விளக். சூ. 507. உரை.)

## 71. மதியுடம்படுதல்.

*அயிற்வேற் கண்ணியோ டாடவன் றனக் குயிரொன்றென*
*மயிலியற்றோழி மதியுடம்பட்டது.*

(இ-ள்.) கூரிய வேல்களை ஒத்த கண்களையுடையாளுடனே நாயகனுக்கும் ஓருயிர் என்னும் படியை மயில் போன்ற சாயலையுடைய பாங்கி அறுதியிட்டது.

காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலங் [1] தாங்கிடுவர்
ஆகத் துளோருயிர் கண்டனம் யாமின் றியாவையுமாம்
மேகத் தொருவ னிரும்பொழி லம்பல வன்மலையில்
தோகைக் குந்தோன் றற்குமொன் றுய்வரு மின்பத்துன்பங்
[களே.

(பொ-ரை.) காக்கையினுடைய இரண்டு நயனத்துக்கும் ஓரொளி கலந்து நின்றாற்போல, இருவருடம்பிற்கும் ஓருயிர் என்கின்றதை இப்பொழுது திட்டமாகக் கண்டோம். அது வன்றியும், எல்லாப் பொருளுமாகிய ஒன்றாகிய பராசக்தியையுடைய ஒப்பில்லாதவன், பெரிய காவினால் சூழப்பட்ட திருவம்பலநாதனுடைய திருமலையில், மயிலையொத்த சாயலையுடையாளுக்கும் நாயகனுக்கும் இன்ப துன்பம் ஒருப்பட்டு வாரா நின்றன;

என்று பொருளாகி, ஒரு காலத்து ஒருவரும் கண்டறியாத இந்தப் புதுமையை இப்பொழுது சிதம்பரநாதன் திருமலையிடத்துக் கண்டோம் என்றுபடும்.

---

**71.** பாங்கி கூற்று.

பா — ம் [1] கலந்தாரிருவர்.

யாவையுமாமேகம் - பராசக்தி. காகத்திரு கண்ணிற்கொன்றே மணி — "இவள்வயிற் செலினே இவற்குடம்பு வறிதே. இவன்வயிற் செலினே இவட்குமற்றே, காக்கையிருகணி னொருமணி போலக், குன்றுகெழு நாடற்குங் கொடிச்சிக்கு. மொன்றுபோன் மன்னிய சென்றுவாழுயிரே (தொல். களவியல் சூ. 114 - மேற்கோள்): 'இன்ப துன்பம் தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய் வருதலின், தன்றுயர் காணுவென்றார்" (சிலப். பக். 410 அடியார்க்.)

ஒருயிராயிருக்க உடம்பு இரண்டாயிருத்தல்: "ஆனந்த வெள்ளத் தழுந்துமோ ராருயி ரீருருக்கொண். டானந்த வெள்ளத்திடைத்திளைத் தாலொக்கும். (சிற். 307): 'பாவைநீ புலவியி னீடல் பாவியேற் காவியொன் றிரண்டுடம் பல்லது". (சீவக. 1017). "காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கு மாவிபோ லாடையுமொன் றானதே". (நள. கலிதொடர் 84) "மருங்கிலா நங்கையும் வசையி லையனு மொருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினார்". (கம்பர். மிதிலைக். 38)

## 9. நடுங்க நாட்டம்.

கூட்டமுண்மை உணர்ந்தனளாயினும், தலைமகள் பெரு நாணினளாகலானும் தான் அவள் குற்றேவன் மகளாகலானும் பின்னும் தான் சொல்லாடாது, அவள் தன்னைக் கொண்டே கேட்பது காரணமாக நெருங்கிநின்று, ஒரு புலி ஒருவனை எதிர்ப்பட்டதெனத் தோழி அவளை நடுங்க நாடா நிற்றல். (பே-ரை.)

### 72. புலிமிசை வைத்தல்.

நுடங்கிடைப் பாங்கி
நடுங்க நாடியது.

(இ-ள்.) தளர்கின்ற இடையினையுடைய பாங்கி, நாயகி நடுங்கும்படி சொல்லியது.

---

ஆவா விருவ ரறியா வடிதில்லை யம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாின்முன்னித்
தீவா யுழுவை கிழித்தந் தோசிறி தேபிழைப்பித்
தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றோ ராண்டகையே

(பொ-ரை.) "ஆவா! ஐயோ! ஐயோ! பிரம விட்டுணுக்கள் அறியாத ஸ்ரீ பாதங்களை, பெரும்பற்றப்புலியூரில் திருவம்பலத்திலே மூவாயிரம் இருடிகள் வணங்கும்படி அளியனாகி நின்றவனை நினையாதாரைப் போல, அவனை எதிர்ப்பட்டுப் புலியானது தன்னுடைய பொல்லாத வாயை அங்காத்து, 'ஐயோ' (என்னுமளவில், நாயகி அறிந்து படும்படி ஆயது.)

(இனி மீளும்படி சொல்லுகின்றாள்:-) 'சிறிது போதிலே, அதனைத் தப்புவித்து"-(ஆவா என்றது கொண்டாட்டம்;-) "இப்பொழுது ஓர் ஆண்மைப்பட்டுத் தக்கவன் மணி பொருந்திய வேலைப் பணிகொண்டபடி!" (என்ன, அவன் புலியை எறிந்தான் என்றுபடும்.)

72. பாங்கி கூற்று.

இதனுள் தலைமகளை நடுங்க நாடியதெவ்வாறெனின், தன் கொடிய வாயைப் புலி அங்காந்தது, உழுவையினது தீ வாயை வேறொன்று கிழித்தது, உழுவையினது தீவாய் பிறிதொன்றனைக் கிழித்தது என இம்மூன்று பொருளும் படுகையான், இது நடுங்க நாட்டமாயிற்று......... ...இங்ஙனம் தோழியுரைப்பத் தலைமகள் நாடி நடுங்கா நிற்கக் கண்டு, ஓராண்டகை வேலைப்பணி கொண்டவா றென்னென நடுக்கம் தீர்த்ததாயிற்று.

'திருத்தம் பயின்றவன்' (62) என்பது தொட்டு 'மெய்யே யிவற் கில்லை' (66) என்பதன்காறும் வர ஐந்துபாட்டினும் முன்னுறவுணர் தலையும், ஐயுறவாக்கி, இருவருமுள்வழி அவன் வரவுணர்வினைத் துணிந்துணர்வாக்கினார். 'மைவார்' (66) என்பது தொட்டு இதன் காறும் வர இவை ஆறினும் முன்னுறவுணர்தல் குறையுறவுணர்தல் இருவருமுள்வழி அவன் வரவுணர்தல் என்னும் மூன்றனையும் துணிந் துணர்வாக்கினார். ஈண்டிவ்விகற்பம் கண்டு கொள்க. (பே-ரை.)

இது நடுங்க நாட்டம். (இலக். விளக். சூ. 507 உரை.)

---

## 10. மடற்றிறம்

தலைமகன் தோழியிடம் சென்று, 'இந்நாளெல்லாம் என்குறை நின்னால் முடியுமென்று வந்திரந்தேன்; இது நின்னால் முடியாமையின் யான் மடலூர்ந்தாயினும் இக்குறை முடித்துக்கொள்வேன்'' எனத் தோழிக்குக் கூறு நிற்றல்.

இஃது ஒன்பது துறையுடைத்து : அவை வருமாறு:—

[1]ஆற்றா துரைத்தல், [2]உலகின்மேல் வைத்தல்,
[3]தன்துணி புரைத்தலொ(டு), [4]வகை யுரைத்தல்,
[5]அருளா லரிதெனல், [6]நடையா லரிதெனல்,
[7]அவயவ மெழுத லரிதென விலக்கல்,
[8]உடம்படாது விலக்கல், [9]உடம்பட்டு விலக்கல்,
திடம்பட வொன்பதுஞ் செப்புங் காலை
வடம்படு முலைமேன் மடலா கும்மே.

(பே-ரை.)

## 73. ஆற்றுதுரைத்தல்.

மல்லற்றிரள் வரைத்தோளவன்
சொல்லாற்றுது சொல்லியது.

(இ-ள்.) வளப்பமுடைத்தாகிய திரண்ட மலையை நிகர்த்த தோள்களை யுடையவன் தன் குறையைச் சொல்லுதற்கு மருமற் சொன்னது.

---

பொருளா வெனைப்புகுந் தாண்டு புரந்தரன் மாலயன்பால்
இருளா யிருக்கு மொளிநின்ற சிற்றம் பலமெனலாஞ்
சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் துடியிடை
அருளா தொழியி னொழியா தழியுமென் னாருயிரே. [யீர்

(பொ-ரை.) ஒரு பொருளல்லாத என்னை மதித்து வந்து அடிமைகொண்டு, தேவேந்திரனிடத்திலும், அரி, அயனிடத்திலும் அவர்களிடத்து இருளாய்த் தோன்றுகின்ற ஒளியாயுள்ளவன் எழுந்தருளி நிற்கின்ற திருச்சிற்றம்பலமென்று சொல்ல (த்தகும்) நெறித்த மிகக் கரிய குழலினையும், வெள்ளிய முறுவலினையும், சிவந்த வாயினையும், துடியொத்த இடையினையும் உடையீர்! நீங்கள் அருளாதேவிடின், என்னுடைய பெறுதற்கரிய உயிர் தப்பாமே அழியும். (எ-று)

---

73. தலைவன் கூற்று.

## 74. உலகின்மேல் வைத்துரைத்தல்.

புலைவே லண்ணல் புனைமடலேற்
றுலகின்மேல்வைத் துய்த்துரைத்தது.

(இ-ள்.) புலாலை நாறும் வேலினையுடைய நாயகன் செய்யப்பட்ட மடலின்மேல் ஏறுகின்றதனை உலகத்தார்மேல் வைத்து உற்சாகத்தினைச் சொன்னது.

---

காய்சின வேலன்ன மின்னியல் [1] கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் றென்புலியூர்
ஈசன சாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனைமடலே.

(பொ-ரை.) கொல்லும் சினத்த வேலையொத்த ஒளியுடைத்தாகிய கண்ணாகிய வலையைக் கலந்து மகளிர் வீசின போது, உள்ளமாகிய மீனை இழந்தவர்கள், பெரிய பெரும் பற்றப் புலியூரையுடைய சிவன் அணியும் சாந்தும் (திருநீறும்) எருக்கமாலையும் இவற்றாலே அலங்கரித்து, ஒரு கிழியும் கையிலே பிடித்து, பாய்ந்து செல்லுகிற சினத்துப் புரவியென்னும்படி சீறூரிடத்தும் பனைமடலேற நிற்பார்கள். (எ-று.)

---

74. தலைவன் கூற்று.

(பா — ம்.) [1] கண்ணெனன்வலை.

கண்வலை - 'நெடுங்கண் வலையா லுயிர்கொல்வை மன்' (சிலப். 7. 18.)

மடலேறுவார் எருக்கங் கண்ணியை அணிதல்: 'மடலே காமந் தந்த தலரே. மிடைபூ வெருக்கி னலர்தந் தன்றே.' (நற். 152): 'எருக்கின் பிணையலங் கண்ணி மிலைந்த மணியார்ப்ப, ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து.' (கலி. 139: 8-10); 'எருக்கங் கண்ணியுஞ்சூடி விருப்புடை இடப்பான் மடந்தை கொடிப்போழ்து தணப்பினும், மடலூர் குறிப்புத் தோன்ற.' (திருவா. நான்மணி. 24: 12-4)

## 75. தன்றுணிபுரைத்தல்.

மானவேலவன் மடன்மாமிசை
யானுமேறுவ னென்னவுரைத்தது.

(இ-ள்.) வீரவேலையுடைவன் பனைமடலாகிய புரவியின் மேலே நானும் ஏறக்கடவேன் என்று சொன்னது.

---

விண்ணை மடங்க விரிநீர் பரந்துவெற் புக்கரப்ப
மண்ணை மடங்க வருமொரு காலத்து மன்னிநிற்கும்
அண்ணன் மடங்க லதளம் பலவ னருளிலர்போல்
பெண்ணை மடல்மிசை யான்வரப் பண்ணிற்றோர் பெண்
[கொடியே.

(பொ-ரை.) தேவலோகமழியவும், விரிநீரான் பரந்து மலைகளழியவும், இந்த மண்ணுலகழியவும், இப்படிக்கு வருகிற ஊழி இறுதியான காலத்தும் (அன்று) நிலைபெற்று நிற்கும் சுவாமி, சிங்கத்தின் தோலைத் திருவுடையாகவுடைய திருவம்பலநாதன் திருவருளில்லாதாரைப் போல, பனைமடற் புரவியினாலே நானும் ஏறுவதாகப் பண்ணுவித்தது, ஒரு பெண் வடிவாகிய வல்லிக்கொடிச் சாதி. (எ-று)

---

75. தலைவன் கூற்று.

ஐ அசை, மடங்குதல் - தத்தம் காரணங்களில் ஒடுங்குதல்.

## 76. மடலேறும் வகையுரைத்தல்.

அடல்வேல வனழிவுற்று
மடலேறும் வகையுரைத்தது.

(இ-ள்) வெற்றிவேலினையுடையவன் நெஞ்சழிந்து மட லேறும் கூறுபாட்டைச் சொன்னது.

---

கழிகின்ற வென்னையு நின்றநின் கார்மயி றன்னையும்யான்
கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டென் பிறவி
றழிகின்ற தாக்கிய தாளம் பலவன் கயிலையந்தேன் [கெட்டின்
பொழிகின்ற சாரனுஞ் [1]சீறூர்த் தெருவிடைப் போதுவனே.

(பொ-ரை) நெஞ்சழிகின்ற என்னையும், இதற்குச் சிறிதும் இரங்காதே நின்ற நின்னுடைய கார்காலத்து மயிலை ஒப்பாளை யும், நான் கிழியிலே பொருந்தும்படி (க்கீடாக), அவருடைய அவயவங்களுக்கு உறுப்பானவற்றை விசாரித்தெழுதி, என் கையிலே பிடித்துக்கொண்டு, என் சனனம் கெட்டழியும்படி செய்த சீபாதங்களையுடைய திருவம்பலநாதனுடைய ஸ்ரீ கயிலா யத்தில் அழகிய தேன் பொழிகின்ற சாரலின் உம்முடைய சிறிய ஊர்த்தெருவுக்கு நடுவே போதக்கடவேன். (எ-று)

---

76. தலைவன் கூற்று.

(பா-ம்) [1] சீரூர்.

கார்மயிலை எழுதுவதன்றித் தன்னையும் எழுதுமோவெனின், மடலெழுதிக் கையிற்கொண்டால் உரையாடுகையன்றி இவனும் ஓவிய மாகலின்; மடலின்றலையிலே தன் ஊரையும் தன் பேரையும், அவ ளூரையும் அவள் பேரையும் எழுதுகையால் என்னையுமென்றான். அழிகின்றதென நிகழ்காலத்தாற் கூறினர். பிறத்தற்குக் காரண மாகிய மலங்கெட்டும் யாக்கைக்குக் காரணமாகிய மலத்துடனே வினை நின்றமையின். (பே-ரை)

மன்றத்து மடலேறுதல்:- "மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை, அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்தியாத்து, மல்லலூர் மருகின்கண் இவட்பாடு" (கலி: 138: 8-10) காண்க.

## 77. அருளாலரிதென விலக்கல்.

அடல்வேலண்ண லருளுடைமையின்
மடலேற்றுனக் கரிதென்றது.

(இ-ள்) வெற்றிவேலை யுடையவனே! நீ அருளுடையை யாகையாலே மடலேறுமது உனக்கு அரிது என்றது.

---

நடனும் வணங்குந்தொல் லோனெல்லை நான்முகன் மாலறியாக்
கடனு முருவத் தரன்றில்லை மல்லற்கண் ணார்ந்த பெண்ணை
உடனும் பெடையொ டொண்சேவலு முட்டையுங் [கட்டழித்து
மடனும் புனைதரின் யார்கண்ண தோமன்ன [1] வின்னருளே.

(பொ-ரை.) திருக்கூட்டத்தாடி அருளுகிறவன், நம் போல்வாரும் வணங்குதற்கெளிய பழையவன், அவனுடைய திருமுடி திருவடியினெல்லையும் அயனும் மாலும் அறியப் படாத அந்தக் கடப்பாட்டாற் சிறந்த தலைவன் – அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் அழகிய இடம் மிக்க பனையில் அதனுடன் ஒன்றப்பட்ட பெடையுடனே அழகிய சேவலையும் முட்டையையும் காவலழித்து, நாமே மடல் பண்ணுவோமாகில், மன்னனே! இனிதாகிய அருள் யாவரிடத்துண்டு? என்று சொல்லியது. (எ-று.)

---

77. பாங்கி கூற்று.

பா-ம். [1] மின்னருளே.

கடன் ஆம் உருவத்து அரன். என்னும் தொடர்க்கு இயல்பாகிய வடிவையுடைய அரன் என்று பொருள் கூறுவர் பேராசிரியர். ஏட்டில் கடைப்பட்டாற் என்றிருந்ததை இங்குக் கடப்பட்டாற் என்று மாற்றியமைக்கப்பட்டது.

நாம்-மடல் விளக்கித் தழீஇக்கொள்கின்றுளாதலின் நாமென உளப்படுத்திக் கூறினள். நாமென்னும் 'படர்க்கையுளப்பாடு' இடவழுவமைதி (கலி. 16 9. நச். உரை) நாம்-முன்னிலை உளப்பாடு – தொல். (கல்லாடர் உரை)

'பாங்கி அருளியல் கிளத்தற்குச் செய்யுளாக இதனைக் காட்டுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ 509 உரை.)

## 78. மொழிநடை யெழுதலரிதென விலக்கல்.

அவயவமரிதி ன்னணறீட்டினும்
இவையிவைதீட்ட லியலாதென்றது.

(இ-ள்.) அவயவங்களை அரிதாக நாயகனே! நீ எழுதி னாய்; ஆகிலும் இவற்றை உன்னாலே எழுத ஒண்ணாது என்றது.

---

அடிச்சந்த மால்கண் டிலாதன காட்டிவந் தாண்டுகொண்
முடிச்சந்த மாமல ராக்குமுன் னோன்புலி யூர்புரையுங் [டென்
கடிச்சந்த யாழ்கற்ற மென்மொழிக் கன்னி யனநடைக்குப்
படிச்சந்த மாக்கும் படமுள வோநும் பரிசகத்தே.

(பொ-ரை) வேதமும் மாலும் கண்டறியாத ஸ்ரீ பாதங்களை எனக்குக் காட்டி என்னை வந்து அடிமைகொண்டு அத்திரு வடிகளை என் தலைக்கே பெரிதாகிய மலர்களாகச் செய்கிற பழையவன். அவனுடைய புலியூரையொத்த சிறந்த நிற முடைத்தாகிய யாழோசையைக் கற்ற மென்மொழிக் கன்னி, அன்னம்போலே நடக்கிற நடைக்கும் (அது வெழுதுவரது) எழுதுகிற சித்திரங்களுமுண்டோ உன்னுடைய சித்திரசாலை யிடத்து? உண்டாமாகில், கடுக மடலேறும்படி கொண்டு வருவாயாக.

78. பாங்கி கூற்று.

சந்தம் - வேதம் நிறம். படிச்சந்தம் என்பது ஒன்றன்வடிவை யுடைத்தாய் அதுவென்றே கருதப்படும் இயல்பையுடையது. பிரதிச் சந்தமென்னும் வடமொழிச் சிதைவு. (பே-ரை.)

## 79. அவயவமெழுதலரிதென விலக்கல்.

அவயவ மானவை
யிவையிவை யென்றது.

(இ-ள்) அவளுக்கு அவயவங்களாவன இன்னதின்ன தென்று குறித்துச் சொன்னது.

யாழு மெழுதி யெழின்முத் தெழுதியிரு ளின்மென்பூச்
சூழு மெழுதியொர் தொண்டையுந் தீட்டியென் றொல்பிறவி
ஏழு மெழுதா வகைசிதைத் தோன்புலி யூரிளமாம்
போழு மெழுதிற்றொர் கொம்பருண் டேற்கொண்டு
[போதுகவே.

(பொ-ரை.) அவர் வார்த்தைக்கு ஒக்க இசை எழுகிற யாழோசையும் எழுதி, முறுவலாக அழகிய முத்து நிரையும் எழுதி, கூந்தலும் மாலையுமாக இருளிடத்தே மெல்லிய பூவாலே தொடுக்கப்பட்ட மாலையும் எழுதி, வாயாக ஒரு வகைக் கோவைக் கனியும் எழுதி, என்னுடைய பழைய பிறவிகள் ஏழையும் கூற்றுவன் கணக்கிலே எழுதாதபடி அழித்தவன், அவனுடைய புலியூரில் இளமாவடுவகிரையும் எழுதினதொரு வஞ்சிக் கொம்புண்டாமாகில், கடுக மடலேறும்படி கொண்டு வருவாயாக. (எ-று)

---

79. பாங்கி கூற்று.

மொழியும் இவளதாகலின், அவயவமென்முள். (பே-ரை.)

## 80. உடம்படாது விலக்கல்.

அடுபடையண்ண லழிதுயரொழிகென
மடநடைத்தோழி மடல்விலக்கியது.

(இ-ள்) 'கொல்லுகின்ற படைகளையுடைய அண்ணலே! உன்னை அழித்தற்குக் காரணமான வருத்தத்தை ஒழிப்பாயாக' என்று மடப்பநடையையுடைய தோழி கூறி மடல் விலக்கியது.

---

ஊர்வா யொழிவா யுயர்பெண்ணைத் திண்மட னின்குறிப்புச்
சீர்வாய் சிலம்ப திருத்த விருந்தில மீசர்தில்லைக்
கார்வாய் குழலிக்குன் ஞதரவோ திக்கற்பித் துக்கண்டால்
ஆர்வாய் தரினறி வார்பின்னைச் செய்க வறிந்தனவே.

(பொ-ரை.) "உயர்ந்த பனையிற் சிக்கென்ற மடலை நீ ஊரினும் ஆம்; ஒழியினும் ஆம் நின்னுடைய நினைவை; சிறப்ப வாய்ந்த மலையினை யுடையவனே! நாங்கள் திருத்தவிருந்தோ மல்லோம்; முதலியாருடைய தில்லையில் கருமை மிகுந்த கூந்தலையுடையாளுக்கு உன் ஆசையைச் சொல்லி, அவள் உடன்படும்படி கற்பித்துப்பார்த்தால், அவள் அதற்கு இடம் தரினும், யாராலே அறியப்படும்? பின்பு நீ அறிந்தனவற்றைச் செய்துகொள்" என்று மடல் விலக்கினது. (எ-று.)

'நான் போய் அவள் நினைவு அறிந்து வருவேன்; அதுவரையில் நீ வருந்தாதொழி' என்றது கருத்து.

---

80. பாங்கி கூற்று.

பாங்கி கொண்டுநிலை கூறற்குச் செய்யுள். (இலக். விளக். சூ. 509 உரை.)

## 81. உடம்பட்டு விலக்கல்.

அரவரு நுண்ணிடைக் குரவருகூந்தலென்
றுள்ளக்கருத்து விள்ளாளென்றது.

(இ-ள்.) பாம்பின் படம் போன்ற அல்குல் சேர்ந்த நுண்ணிய இடையினையும் மணம் பொருந்தின கூந்தலையு முடையவள் எம்மனத்து நினைவை நீங்காள் எனச் சொல்லியது.

---

பைந்நா ணரவன் படுகடல் வாய்ப்படு நஞ்சமுதா
மைந்நாண் மணிகண்டன் மன்னும் புலியூர் மணந்த [பொன்னிம்
மொய்ந்நாண் முதுதிரை வாயா னழுந்தினு மென்னின் [முன்னும்
இந்நா ளிதுமது வார்குழ லாட்கென்க ணின்னருளே.

(பொ-ரை.) படமுடைய பாம்பைத் திருவரை ஞாணு உடையவன்; சத்திக்கிற கடலிடத்தே உண்டாகி நஞ்சமுதாகிற கருமை நாணத்தக்க நீலமணியை யொத்த திருமிடற்றை யுடையவன்; அவன் நிலைபெற்ற பெரும்பற்றப் புலியூரிலே பொருந்தின பொன்னை ஒப்பாள்; நாட்கடலாடுமிடத்தே, இந்தச் செறிந்த முதிர்ந்த திரையுடைத்தாகிய கடலிடத்தே நான் அழுந்தினும், எனக்கு முற்பட்டுத்தான் அழுந்தா நிற்பாள்; இற்றைவரை (தேன் ஒழுகும் கூந்தலையுடையாளுக்கு என்னிடமுள்ள இனிய அருள்) இப்படியிருக்கும்; இனித் தெரியாது. (எ-று.)

---

**81.** பாங்கி கூற்று.

குற்றேவல் செய்வார்கள், பெரியோர் செய்யும் அருள் எக்காலத்தும் ஒரு தன்மைத்தாய் நிகழாது என்னும் கருத்தால் 'இந்நாளிது' என்றாள்; எனவே தலைமகளது பெருமையும் தன் முயற்சியது அருமையும் கூறியவாறாயிற்று. (பே-ரை.)

மொய் - வலி. வரும் - உவமச் சொல்.

### மடற்றிறம் முற்றிற்று.

## 11. குறைநயப்புக் கூறல்.

குறை நயப்புக் கூறலென்பது தலைமகனை மடல் விலக்கிக் குறை நேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பிக்க அவள் குறைகூறா நிற்றல்.

இஃது எட்டுத்துறை யுடைத்து: அவை வருமாறு:—

[1] குறிப்பறிதலோடு, [2] மென்மொழி கூறல்,
[3] விரவிக் கூறல், [4] அறியாள் போறல்,
[5] வஞ்சித் துரைத்தல், [6] புலந்து கூறல்,
[7] வன்மொழி கூறல், [8] மனத்தொடு நேர்தல்,
சொன்ன விருநான்கும் துறைகுறை நயப்பென
மன்னிய பொருளில் வகுத்திசினோரே.

(பே-ரை.)

## 82. குறிப்பறிதல்.

நறைவளர் கோதையைக் குறைநயப்பித்தற்
குள்ளறிகுற்ற ஒள்ளிழையுரைத்தது.

(இ-ள்.) நறு நாற்றம் மிக்க மாலையினையுடையாளை, குறையை, விரும்ப விருப்பது காரணமாக மனத்தின் நினைவை அறிவதாகவுற்ற அழகிய ஆபரணங்களை உடையாள்சொன்னது.

**தாதேய் மலர்க்குஞ்சி யஞ்சிறை வண்டுதண் டேன்பருகித்**
**தேதே யெனுந்தில்லை யோன்சே யெனச்சின வேலொருவர்**
**மாதே புனத்திடை வாளா வருவர்வந் தியாதுஞ்சொல்லார்**
**[1] யாதே செயத்தக் கதுமது வார்குழ லேந்திழையே.**

(பொ-ரை.) பெரும்பற்றப்புலியூரில் வாழ்வாருடைய மயிரிலேயுள்ள அல்லிபொருந்தின பூக்களிலே அழகிய நிறத்தையுடைத்தாகிய வண்டுச் சாதிகள் குளிர்ந்த தேனையுண்டு, 'தே தே' என்று இசையெழுப்புகிற பெரும்பற்றப் புலியூரில் முதலியாருடைய மகனாகிய கந்தச்சுவாமி யென்னும்படி சினத்த வேலையுடையாரொருவர், "மாதே!, நம் புனத்திடத்தே வேட்டை முதலாயின வொன்றும் குறியாதே வருவர்; வந்து ஒரு மாற்றமும் சொல்லார்; அவர் திறத்து நாம் செய்யக் கடவதெது? தேனூர்ந்த கூந்தலினையும் மிக்க ஆபரணங்களையுமுடையாய்!" [வேலினையுடையவர் தளர்ச்சியுறுகின்றமையை அவர் திறத்து நாம் செய்யக்கடவதெது? சொல்வாயாக.] (எ-று.)

---

82. பாங்கி கூற்று.

பி. ம். [1] ஏதே.

அடுத்த செய்யுளில் 'புரிசேர் சடையோன் புதல்வன்கொல்:" என்று வினவுவதையும் காண்க.

அஞ்சிறைவண்டு – 'அகஞ்சிறை என்பது ஏனையவற்றின் சிறை போலப் புறத்தின் கண்ணவன்றி அகத்தின் கண்ணவாகலின். ஏழாம் வேற்றுமைத் தொகை' (நன். மெய்யீற். 19. சங்க. உரை) அஞ் சிறைத்தும்பி (குறுந். 2)

கலைசைக் கோவை 130 ஆம் செய்யுளின் பொருள் இப்பாடலை ஒருவாறு ஒத்துள்ளது.

கல்லாரக் கண்ணி கலசத் தியாகர் கலைசை வெற்பின்
வல்லா ரொருவர் வருவர்வந் தாலொன்றும் வாய்திறந்து
சொல்லாரென் கண்ணெதிர் நிற்பாரப் பாற்புனச் சூழல்விட்டுச்
செல்லார் தழைகளெல் லாந்தரு வாரென் செயத்தக்கதே.

இச்செய்யுளை "இறைவன்றனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கவன் குறையுணர்த்தற்கு" உதாரணமாகக் காட்டுவர் இலக். விளக். ஆசிரியர். (சூ 509 உரை)

## 83. மென்மொழியாற் கூறல்.

ஒளிருறுவேலவன் தளர்வுறுகின்றமை
இன்மொழியவட்கு மென்மொழிமொழிந்தது.

(இ-ள்) விளக்கமிக்க வேலினையுடையவன் தளர்ச்சியுறு கின்றமையை இனிய வார்த்தையுடையவளுக்கு மெல்லிதாகச் சொல்லிக் குறையை நயப்பித்தது.

---

வரிசேர் தடங்கண்ணி மம்மர்கைம் மிக்கென்ன மாயங் [கொலோ
வெரிசேர் தளிரன்ன மேனிய னீர்ந்தழை யன்புலியூர்ப்
புரிசேர் சடையோன் புதல்வன்கொல் பூங்கணை வேள்கொ [லென்னத்
தெரியே முரையான் பிரியா னொருவனித் தேம்புனமே.

(பொ-ரை) வரிபொருந்தின பெரிய கண்களையுடையாய்! மயக்கம் மிகுந்து, இதுவென்ன மாயந்தான்! நெருப்பைச் சேர்ந்த தளிரையொத்த நிறத்தையுடையனாய், குளிர்ந்த தழையையுமுடையனாய், 'பெரும்பற்றப்புலியூரில் செறிந்த திருச்சடையினையுடைய முதலியார் புத்திரனாகிய முருக வேளோ? பூவினை அம்பாகவுடைய காமவேளோ?' என்னத் தெளியேம்; இருவரிலொருவராக நிச்சயித்தறியமாட்டோம்; தன்குறை இன்னதென்று சொல்லான்; இத்தன்மையனான ஒருவன் இத்தேனுடைத்தாகிய புனத்தை விட்டு நீங்குவதும் செய்திலன்; [இது என்ன மாயந்தான்!] (எ-று)

---

83. பாங்கி கூற்று.

'புலியூர்ப் புரிசேர் சடையோன் புதல்வன்கொல்' என்றதனால் நம்மை அழிக்கவந்தானோ என்றும் பூங்கணைவேள் கொலெ'ன்றதனால் நம்மைக் காக்க வந்தானோ என்றும் கூறியவாறாயிற்று. (பே-ரை)

பின்வரும் பாடல்களை இதனுடன் ஒப்பிடுக:—

1. கொடியார் நெடுமதில் கோட்டாற் றரண்கொண்ட கோன்பொதி
கடியார் புனத்தயல் வைகலும் காண்பல் கருத்துரையான் [யில்
அடியார் கழலன் அலங்கலங் கண்ணியன் மண்ணளந்த
நெடியான் சிறுவன்கொல் லோஅறி யேனோர் நெடுந்தகையே.
[இறை. மேற்கோள் 89]

2 இருவர்கண் டால்வரு மேதமென் றெண்ணி யெனக்கெதிரே
வருவர்வந் தாலும்தம் வாய்திற வார்தஞ்சை வாணன்வெற்பி
னொருவர்நஞ் சார லுழையக லார்தழை யுள்ளதெல்லாந்
தருவர்வம் பார்முலை யாயென்கொ லோசெயத் தக்கதுவே.
[தஞ்சை. 117.]

பின்வரும் ஒப்புமைப் பகுதிகளையும் ஓர்க:— கலி: 37: 1—4, குறுந். 298: 2, 346.

---

## 84. விரவிக்கூறல்.

வன்மொழியின்மன மெலிவதஞ்சி
மென்மொழிவிரவி மிகுத்துரைத்தது.

(இ-ள்) வலிதாகச் சொல்லிக் குறைநயப்பிக்குமிடத்து, நாயகியுடைய மனம் வாடுமென்று பயப்பட்டு மென்மையினையும் கலந்து நாயகனுடைய ஆற்றாமையைச் சொன்னது.

---

[1] நீகண்ட னையென்னின் வாழலை நேரிழை யம்பலத்தான்
சேய்கண் டனையன்சென் றாங்கோ ரலவன்றன் சீர்ப்பெடை
வாய்வண் டனையதோர் நாவற் கனிநனி [2] நல்கக்கண்டு [யின்
பேய்கண் டனையதொன் றாகிநின் றானப் பெருந்தகையே.

(பொ-ரை.) நேரிழை! நுண் தொழில்களாற் சிறந்த ஆபரணங்களையுமுடையாய்! நான் முன்பு சொன்ன பெரிய தகைமைப்பாட்டை யுடையவன், திருவம்பலநாதனுடைய பிள்ளையாகிய முருகவேளைக் கண்டாலொப்பன்; அவனுடைய

சன்னதியிலே ஒரு சேவல் நண்டு தன்னுடைய சீரிய பெடை நண்டின் வாயிலே வண்டுபோல் கரியதொரு நாவற்கனியைக் கொடுக்கக்கண்டு, பேயைக்கண்டவர்கள் தங்கள் உணர்வு இழந்து நின்றாற்போல, தன் உணர்வு இழந்து நின்றான்; காண் இத்தன்மையை; நீ கண்டாயாமாகில் உயிர்வாழமாட்டாய் காண். (எ-று.)

சென்று - தான் பழமெடுத்த இடத்தினின்றும் சென்று. நனி, உணர்விழத்தலும் கூடும் (?)

---

84. பாங்கி கூற்று.

பா-ம். [1] நீ கண்டனையென்னில் [2] நல்கல் கண்டு.

நாவற் கனியை நனிநல்கக் கண்டு தன்னுணர்வொழியப் போயினான் இன்று வந்திலன் என்றது பேய்கண்டனைய தொன்றாகி நின்றான் என்று கூறினமையான் மென்மொழியும் பேய்கண்டனையன் என்றதனால் வன்மொழியும் விரவியதாயிற்று.

அலவன்—ஆண் நண்டு:

அலவன் பெடையொடு மகிழ்தல்: 'சீர்ப்பெடையொடு அலவன் பயில்வது கண்டு' (சிற். 155.) 'அகலிலை நாவலுண்டுறை யுதிர்ந்த கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன் தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம் அலவன்'' (அகம். 380. 4-7.)

''அள்ளிலைப் பலவி னளிந்துவீழ் சுளையுங் கனிந்துவீழ் வாழையின் பழனும், புள்ளிவா யலவன் பொறிவரிக் கமஞ்சூன் ஞெண்டினுக் குய்த்துநோய் தணிப்பான் (சிந்தா. 2109). 'கானலுறை துணையோ டாடு மலவன்' (இறை-மேற்-78.)

இது 'மறுத்தற் கருமை மாட்டற்குச் செய்யுள்' என்பர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 509 உரை.)

## 85. அறியாள் போறல்.

அறியாள் போன்று
குறியாள் கூறியது.

(இ-ள்.) பாங்கி சொன்ன வார்த்தையை அறியாதாள் போன்று தன்னெஞ்சில் நினையாதொன்றைச் சொல்லியது.

---

சங்கந் தருமுத் தியாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவுந்
துங்க மலிதலை யேந்தலி னேந்திழை தொல்லைப்பன்மா
வங்க மலிகலி நீர்தில்லை வானவ னேர்வருமே.

(பொ-ரை) ஏந்திழை - மிக்க ஆபரணங்களையுடையாய்! தொல்லை பல் மா வங்கம் கலிமலி நீர் — பழையதாய், பலவாய மிக்க மரக்கலங்களால் சிறந்த கடல், தில்லை வானவர் நேர் வருமே - பெரும்பற்றப்புலியூரில், தேவனாகிய முதலியாரை ஒக்கும் காண்.

அதற்குக் காரணம் என் என்னில், சிலேடையினாலே ஒக்கும்.

சங்கம் தருமுத்தி - அன்பு தருகிற முத்தியை, யாம்பெற- அன்பிலாத நாமும் பெறும்படி, வான் கழிதான் - ஆகாயத்தை யும் கழிந்ததுள்ளதான, கெழுமி - ஒரு திருவடியிலே பொருந்தி, பொங்கும் புனற் கங்கை - மிக்க நீருடைத்தாகிய கங்கையையும், தாங்கி - திருச்சடையிலே தரித்து, பொலிகலி பாறு உலவு - பொலிந்தவர் வார்த்தையுடைத்தாகிய பற்றென் னும் புட்கள் உலாவப்பட்ட, துங்கம் மலி தலை ஏந்தலின் - பெருமைமிக்க தலையோட்டைத் தரித்தலானும்;

சங்கு தருமுத்தியாம் பெற - சங்கு தரும் முத்துக்களை முத்துக்கொழிப்பாரேயன்றி ஏமும்பெறும்படி, வான் கழி தான்கெழுமி - மிக்க கழிகளைத் தான் பொருந்தி, பொங்கும்

புனற் கங்கை தாங்கி - மிக்க நன்னீரை உடைத்தாகிய கங்கை முதலாகிய ஆறுகளையும் தரித்து, பொலி கலி பாறுலவு - மிக்க வர் வார்த்தை உடைத்தாகியவாறு படகுகள் உலவப்பட்ட, துங்க மலிதலை ஏந்தலில் - பெருமை மிகுதலையும் தரித்தலாலே.

தில்லை வானவனை ஒக்கும்.

---

85. பாங்கி கூற்று.

சங்கம் தருமுத்து - புணர்ச்சியால் தரப்பெற்ற வாய் முத்தம் என்பது மற்றொரு பொருள்.

சங்கந் தருமுத்தந் தந்திடுமேல் (கோடீச் 72)

முன்னர் நீ புரிசேர் சடையோன் புதல்வனென்றும் பூங்கணை வேளென்றும் உயர்த்துக் கூறியவெல்லாம் அவனுக்குரிய; அங்ஙனம் பெரியவன் தன்மாட்டுண்டான புணர்ச்சியான பேரின்பத்தை நாம் பெறுகை காரணமாக இங்ஙனம் எளிவந்து உன்னை வந்து சேர்ந் தான்; அஃதென்போலவெனின் பெறுதற்கரிய சங்கு தருகிற முத்தை நாம் பெறுவான் எளிதாகக் கடல் பெரிய கழியை வந்து பொருந்தி ஞற்போல; இனி உனக்கு வேண்டியது செய்வாயாக வென மறு மொழியாயிற்று. (பே-ரை)

---

## 86. வஞ்சித்துரைத்தல்.

நெஞ்ச நெகிழ்வகை வஞ்சித்திவையிவை
செஞ்சடையோன்புகழ் வஞ்சிக்குரைத்தது.

(இ-ள்) நெஞ்சத்தில் நிகழ்கிறபடியைக் கரந்து, செஞ் சடையோன் புகழாகியவற்றைத் தோழிக்குச் சொன்னது.

---

புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாயென் றிரப்பத்தன் னீரடிக் கென்னிரண்டு
கரங்கடந் தானொன்று காட்டமற் றாங்கதுங் காட்டிடென்று
வரங்கிடந் தான்றில்லை யம்பல முன்றிலம் மாயவனே.

(பொ-ரை.) முப்புரங்களையும் செயித்தவனுடைய திருவடிகளைக் காணவேண்டி, பூமியை இடந்து புகுந்து, அகங்காரமுகத்தினால் அறியப்படாமையாலே, திருவம்பலத்திலே புகுந்து, 'நீயே இரங்கவேண்டும், எந்தாய்!' என்று வேண்டிக்கொள்ள, தன்னுடைய இரண்டு திருவடிகளையும் (தொழுவதற்கு எனக்கு இரண்டு கைகளையும் கொடுத்தவன்) அவனுக்குச் சிறிதிரங்கி ஒரு திருவடியைக் காட்டியருள, மற்றத் திருவடியையும் காட்டியருளவேண்டுமென்று அங்ஙனே அகங்கரித்த மாயவன் தில்லை அம்பல முன்றில் புகுந்து வரங்கிடந்தான். (எ-று.)

86. தலைவி கூற்று.

விண்டு - பிளந்து (சிற். 24-107.) கரங்கள் தந்தான் - கரங்கடந்தான்.

'புரங்கடந்தானடிகளைக் காணுமாறு வழிபட்டுக் காண்கையாவது'. அன்னத்திற்குத் தாமரையும். பன்றிக்குக் காடுமாதலால். இவரிங்ஙனம் தத்தமிலே பரிசே தேடுதல். இவ்வாறு தேடாது. தமதகங்காரத்தினான் மாறுப்பட்டுப் பன்றி தாமரையும் அன்னம் காடுமாகப் படர்ந்து தேடுதலாற் கண்டிலர். இது நெறியல்லா நெறியாயினவாறு. இனி இது தோழிக்குத் தலைவி மறுமொழியாகக் கூறியவாறு. என்னை ? ஒன்று காட்டவென்றது முன்னர்ப் பாங்கற் கூட்டம் பெற்றான்; அதன்பின் நின்னினுயை கூட்டம் பெறுகை காரணமாக நின்னிடத்து வந்திரந்து குறையுறு நின்றான். அஃதென்போலவெனின். மற்றதுங் காட்டிடென்று மால் வரக்கிடந்தாற்போல என்றவாறு. வஞ்சித்தல் மறுமொழியை வெளிப்படையாகக் கொடாது பிறிதொன்றாகக் கூறுதல்.

இதனைத் தோழி கூற்றாக உரைப்பாருமுளர். (பே-ரை.)

## 87. புலந்துகூறல்.

திருந்திய சொல்லிற் செவ்விபெருது
வருந்திய [1]சொல்லின் வகுத்துரைத்தது.

(இ-ள்.) திருந்திய சொற்களால் இடம் பெருது, வலிதாகச் சொல்லுகிற சொற்களினலே கூறுபடுத்துச் சொன்னது.

---

உள்ளப் படுவன வுள்ளி யுரைத்தக் கவர்க்குரைத்து
மெள்ளப் படிறு துணிதுணி யேலிது வேண்டுவல்யான்
கள்ளப் படிறர்க் கருளா வரன்றில்லை காணலர்போற்
கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே.

(பொ-ரை.) என்னைக் கரந்துபோகிற காரியத்துக்கு விசாரிக்கத் தகுவனவற்றையும் விசாரித்து, உரைக்கத்தக்க போக்குரைத்து சொல்லத்தக்க நின் காதற்றோழியார்க்கும் சொல்லி, எனக்கு வஞ்சித்துப்போகிற இதனை மெல்லத் துணிவாய்; (அல்லது துணியாது) ஒழிவாய்;

வஞ்சகராய் வஞ்சகந் தன்னை ஒளிப்பார்க்கு ஒரு நாளும் அருளாத கர்த்தர், அவனுடைய திருவம்பலத்தைத் தெரியாதாரைப் போல, அறிவில்லாது என்னுடைய வார்த்தைகளை மனத்திற் கொள்ளாதே மறப்பாயாக; இத்தனையும் உன்னை வேண்டிக்கொள்கின்றேன் யான். (எ-று)

---

87. பாங்கி கூற்று.

(பா-ம்) 1 சொல்லி.

தோழி தலைமகளோடு புலந்து, 'நீ வஞ்சித்துப் பேசுகின்றாய்; இனி உன் தோழிமாரோடு நீ ஆராய்ந்து செய்யத்தக்கனவற்றைச் செய்வாய். நான் கூறியதை மறந்துவிடு' என்றனள்.

## 88. வன்மொழியாற் கூறல்.

கடலுலகறியக் கமழலங்துறைவன்
மடலேறும்மென வன்மொழிமொழிந்தது.

(இ-ள்) கடல் சூழ்ந்த உலகத்திலுள்ள (மக்கள் அறிய) நறுநாற்றம் கமழ்தலை உடைத்தாகிய அழகினையுடைய துறைவன் மடலேறப் புகாநின்முன் என்று வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தது.

---

மேவியந் தோலுடுக் குந்தில்லை யான்பொடி மெய்யிற்கையில்
ஓவியந் தோன்றுங் கிழிநின் னெழிலென் றுரையுளதால்
தூவியந் தோகையன் னாயென்ன பாவஞ்சொல் லாடல்செய்
பாவியந் தோபனை மாமட லேறக்கொல் பாவித்ததே. [யான்

(பொ-ரை) விரும்பி, அழகிய தோலை யுடுக்கிற திருவம்பலநாதனுடைய திருநீற்றை மெய்ம்முழுதும் பூசிக் கையிற் பிடிக்கிற சித்திரம் விளங்குகிற படம் உன் வடிவாயிருந்ததென்று வார்த்தை உண்டாகியிருந்தது; ஆதலால், தூவியாற் சிறந்த அழகினையுடைய மயிலை ஒப்பாய்; தன் குறை சொல்வதும் செய்யானாய், தான் என்னை வந்து குறைவேண்டவும் நான் மறுக்கும் பாவத்தைப் பண்ணினவன்; பனைத்துண்டாகிய மிக்க மடலேறுவதாகவோ நினைந்து நின்றது. ஐயோ! பாவி!. (எ-று)

---

88. பாங்கி கூற்று.

இது தோழி தலைமகள் குறிப்பு வேறாக நெறிப்படக் கூறற்குச் செய்யுள்' என்பர் இலக். விளக். ஆசிரியர். (சூ. 509 உரை)

## 89. மனத்தொடுநேர்தல்.

அடல்வேலவ னாற்றானெனக்
கடலமிழ் தன்னவள் காணலுற்றது.

(இ-ள்) கொலைத் தொழிலால் சிறந்த வேலினை உடையவன் ஆற்றான் என்று சொல்லக் கேட்டுக் கடலிற் பிறந்த அமுதத்தை யொப்பாள் காண நினைந்தது.

---

பொன்னார் சடையோன் புலியூர் புகழா ரெனப்புரிநோய்
என்னா லறிவில்லை யானென் றுரைக்கிலன் வந்தயலார்
சொன்னா ரெனுமித் துரிசுதுன் னாமைத் துணைமனனே
என்னாழ் துயர்வல்லை யேற்சொல்லு நீர்மை யினியவர்க்கே.

(பொ-ரை) பொன்னை யொத்த திருச்சடையினை யுடையவன்; அவனுடைய புலியூரை வாழ்த்தாதாரைப் போலே, வருந்தும்படி வந்த நோயானது என்னால் அறியப்பட்டதில்லையாகிலும், (இதற்கு நான் அல்லன் என்று) யான் மறுமாற்றம் சொல்லேன். அயலார்கள் வந்து சொன்னார்கள் என்ற இக் குற்றம் என்னிடத்துச் சேராதபடி, துணையாகிய மனமே, குணங்களாலே நல்லவற்கு, நான் அழுந்த நின்ற கிலேசத்தை நீயே அறிவிப்பாய் (எ-று)

---

89. தலைவி கூற்று.

அயலார் - தோழி. இதனால் தன் துயரம் வெளிப்படக் கூறி மடலால் வரும் குற்றமும் தன்னிடத்து வாராமல் விலக்கச் சொன்னாள். (பே-ரை.)

**குறைநயப்பித்தல் முற்றிற்று.**

## 12. சேட்படை.

சேட்படை யென்பது தலைமகனைக் குறை நயப்பித்துத் தன்னிறைய கூட்டங் கூட்டலுறும் தோழி தலைமகளது பெருமையும் தனது முயற்சியதருமையும் தோன்றுதல் காரணமாகவும், இத்துணை அருமையுடையாள் இனி நமக்கெய்துதற் கருமையுடையளென இதுவே புணர்ச்சியாக நீட்டியாது விரைய வந்து கோடல் காரணமாகவும், தலைமகனுக்கியைய மறுத்துக் கூறுநிற்றல்.

இஃது இருபத்தாறு துறையுடைத்து. அவை வருமாறு.

[1] தழைகொண்டு சேறல், [2] தகாதென்று மறுத்தல்,
[3] நிலத்தின்மை கூறல், [4] நினைவறிவு கூறல்,
[5] படைத்து மொழிதலொடு பனிமதி நுதலியை,
[6] எடுத்துநா னுரைத்தல், [7] இசையாமை கூறல்,
[8] செவ்வியில ளென்றல், [9] சேட்பட நிறுத்தல்,
[10] அவ்வினிய மொழிநீ அவட்குரை யென்றல்,
[11] குலமுறை கிளத்தல், [12] கோதண்டத் தொழில்
வலிசொல்லி மறுத்தல், [13] மற்றவற் கிரங்கல்,
[14] சிறப்பின்மை கூறல், [15] சிறியளென் றுரைத்தல்,
[16] மறைத்தமை கூறி நகைத்துரை செய்தல்,
[17] நகைகண்டு மகிழ்தல், [18] நானவள் தன்னை,
அறியே னென்றல், [19] அவயவங் கூறல்,
[20] கண்ணயந் துரைத்தல், [21] கையுறை எதிர்தல்,
[22] முகம்புக உரைத்தல், [23] முகங்கண்டு கூறல்,
[24] வகுத்து ரைத்தலொடு, [25] வண்டமை யவட்கு
மிகுத்துரை செய்து விரும்பிக் கொடுத்தல்,
[26] தழைவிருப் புரைத்தல், தானிரு பத்தா
றிழைவளர் முலையா யிவைசேட் படையே.

(பே-ரை.)

## 90. தழைகொண்டு சேறல்.

கொய்ம்மலர்க்குழலி குறைநயந்தபின்
கையுறையோடு காளைசென்றது.

(இ-ள்.) பறித்த பூவை அணிந்த அளகத்தினையுடைய வள் இறைக்கு உடன்பட்டபின், கையுறை ஏந்திக்கொண்டு காளையாகிய நாயகன் எதிர்சென்றது.

**தேமென் கிளவிதன் பங்கத் [1] துறையுறை தில்லையன்னீர்**
**பூமென் றழையுமம் போதுங்கொள் ளீர்தமி யேன்புலம்ப**
**வாமென் றருங்கொடும் பாடுகள் செய்துநுங் கண்மலராங்**
**காமன் கணைகொண் டலைகொள்ள வோமுற்றக் கற்றதுவே.**

(பொ-ரை.) தேனை ஒத்து மெத்தென்ற திருவார்த்தை களையுடைய பரமேசுவரியைப் பாகத்திலேயுள்ள சுவாமி; அவன் வாழ்கின்ற புலியூரையொப்பீர்! பூவுடைத்தாகிய மெல்லிய தழையையும் அழகிய பூவையும் வாங்கிக்கொள்ளு கிறீரில்லை; அஃதிருக்க, இழிந்து தனித்து நான் வருந்த, 'இதுபெறும்' என்று பொறுத்தற்கரிய கொடுமைப் பாட்டினைச் செய்து, உங்களுடைய நயன (மலர்களாகிய) காமபாணத்தைக் கொண்டு வருத்தும் அதுவேயோ முழுதும் கற்றது? (எ-று)

---

பா - ம். 1 திறையுறை. (சிற். 93.)

தலைவன் கூற்று.

பங்கத்துறையுறை என்பதூஉம் பாடம். (பே-ரை)

கொடும்பாடு: கொடுமை; வழக்கழிவு; கொடும்பா டறியற்க வெம்மறி வெனவே' (பரி 2: 76) மன்றக்கொடும்பா டுரையாத மாண்பினிதே. (இனியது 31) இன்னா. கொடும்பா டுடையார் வாய்ச்சொல். (இன்னா. 7)

## 91. சந்தனத் தழை தகாதென்று மறுத்தல்.

பிறை நுதற்பேதையைக் குறைநயப்பித்தது
[1] உள்ளறிகுற்ற மொள்ளிழை யுரைத்தது

(இ-ள்) பிறையைப் போன்ற நெற்றியினையுடைய நாயகியைக் குறையை விரும்புவிப்பது காரணமாக, மனத்து நினைவை அறிவதாக உற்று அழகிய ஆபரணங்களை யுடையாள் சொன்னது.

---

ஆரத் தழையராப் பூண்டம் பலத்தன லாடியன்பர்க்
காரத் தழையன் பருளிநின் றோன்சென்ற மாமலயத்
தாரத் தழையண்ண றந்தா லிவையவ ளல்குற்கண்டால்
ஆரத் [2] தழைகொடு வந்தா ரெனவரு மையுறவே.

(பொ-ரை) ஆரமாகிய தழைந்த அரவைப் பூண்டு திருவம்பலத்திலே அனலை அங்கையிலே ஏந்தி ஆடியருளித் தனக்கன்பு செய்வார்க்கு மிகுதியாகத் தழைத்த அன்பைக் கொடுத்து அவருடைய இருதயத்திலே நிலைத்து நின்றவன்; அவனுடைய திருவுள்ளம் சென்றிருக்கின்ற பொதியின் மலையிடத்துச் சந்தனத் தழையை, நாயகனே!, நீ தந்தாயாமாகில், இந்தத் தழையை அவள் அல்குலிலே கண்டகாலத்து, 'யார்தான் அப்பொதியின் மலையில்(உள்ள) தழை(களை) இங்கே கொண்டு வந்து கொடுத்தவர்கள்?' என்று பலர்க்கும் ஐயம் தோன்றும். (ஆதலால் இத்தழை தகாது.) (எ-று)

---

91. பாங்கி கூற்று.

(பா-ம்)

1. பேராசிரியர் உரைப்பதிப்பில் கொளுவின் இரண்டாமடி வாட்படையண்ணலைச் சேட்படுத்தது என்றிருக்கிறது.

2 தழைகொண்டு.

அன்பான் வருங்காரியமேயன்றி அன்புதானும் ஓரின்பமாகலின் நுகர்ச்சியாயிற்று. (பே-ரை) சென்ற-சேர்ந்த.

இச்செய்யுளுடன். பெரிய புராணம் 1: 196 ஆம் செய்யுளை ஒப்பிடுக:—

பெருமையாற் றம்மை யொப்பார் பேணலா லெம்மைப் பெற்றா
ரொருமையா லுலகை வெல்வா ரூனமே லொன்று மில்லா
ரருமையா நிலையி னின்றா ரன்பினா லின்ப மார்வா
ரிருமையுங் கடந்து நின்றா ரிவரைநீ யடைவா யென்று.

---

## 92. நிலத்தின்மைகூறி மறுத்தல்.

கொங்கலர் தாரோய் கொணர்ந்த கொய்தழை
எங்குலத் தாருக் கேலாதென்றது.

(இ-ள்) அல்லி விரிகின்ற மாலையையுடையவனே! நீ கொண்டுவந்த கொய்யப்பட்ட தழை எம்குடியிலுள்ளார்க்குப் பொருந்தாது என்றது.

---

முன்றகத் தெல்லா விமையோரை யும்பின்னைத் தக்கன் [முத்தீச்
சென்றகத் தில்லா வகைசிதைத் தோன்றிருந் தம்பலவன்
குன்றகத் தில்லாத் தழையண்ண றந்தாற் கொடிச்சியருக்
கின்றகத் தில்லாப் பழிவந்து மூடுமென் றெள்குதுமே.

(பொ-ரை.) எல்லாத் தேவர்களையும் முற்பாடு இல்லா வகைச் சங்கரித்து, பின்பு சென்று தக்கனுடைய மூன்றக்னிகளையும் குண்டத்திலே இராதபடி அழித்தவன்; அழகிய திருவம்பலநாதன்; அவனுடைய திருமலையிலே இல்லாத தழை, நாயகனே!, நீ தந்தால், குறத்தியராகிய எங்களுக்கு இப்பொழுது எங்கள் குடியிலில்லாத பழிவந்து சூழ்ந்து கொள்ளும் என்று பயப்படாநின்றோம்; அல்லது தழை யேற்கக் குற்றமில்லை. (எ-று)

இல்லா வென்பது பாடமாயின் இல்லையாம் வண்ணம் முன்றகர்த்தென்றுரைக்க.

**92.** பாங்கி கூற்று.

எள்குதும்-பயப்படுவோம்; கூசுதும். எண்டிசையோரும் எள்கக் குஞ்சரம் இரியப்பாயும் (சீவக. 1749 நச். மேற்கோள்)
இதனுடன்,

வந்தார் எதிர்சென்று நின்றேற் கொளிரும்வண் டார்தழைகள்
தந்தா ரவையொன்று மாற்றகில் லேன்தக்கன் வேள்விசெற்ற
செந்தா மரைவண்ணன் தீர்த்தச் சடையன் சிராமலைவாய்க்
கொந்தார் பொழிலணி நந்தா வனஞ்சூழ் குளிர்புனத்தே.

என்ற பதினோராந் திருமுறை (280) ஆவது செய்யுளை ஒப்பிடுக.

---

## 93. நினைவறிவுகூறி மறுத்தல்.

மைதழைக்கண்ணி மனமறிந்தல்லது
கொய்தழை தந்தாற் கொள்ளேமென்றது.

(இ-ள்.) கருமைமிக்க கண்களையுடையாள் மனமறிந்தல்லது கொய்யப்பட்ட தழையைத் தந்தாலும் வாங்கிக்கொள்ளோம்.

---

யாழார் மொழிமங்கை பங்கத் திறைவ னெறிதிரைநீர்
ஏழா யெழுபொழி லாயிருந் தோனின்ற தில்லையன்ன
சூழார் குழலெழிற் றொண்டைச்செவ் வாய்நவ்வி சொல்லறிந்
தாழா தெதிர்வந்து கோடுஞ் சிலம்ப தருந்தழையே. [தால்

(பொ-ரை.) யாழிசை போன்ற வார்த்தையுள்ள பரமேசுவரியைப் பாகத்திலேயுடைய சுவாமி; கரையை மோதப்பட்ட திரையினையுள்ள கடலேழுமாய்ப் பூமிகளேழுமாய் இருந்தோன்; அவன் எழுந்தருளியிருந்த சிதம்பரம்போன்ற மாலையணிந்து, சுருண்டு நீண்ட குழலினையும், கொவ்வைக் கனி போன்று அழகும் சிவப்புமுடைய வாயினையும், மானின்

[நயனம்போன்ற நயனத்தையும் பெற்ற], அவளுடனே பேசிக் கொண்டு வந்தபின்(பல்லது) சற்றும் தாழாது எதிரே வந்து வாங்கிக்கொள்ளக் கடவோம்; (அல்லோம்) நாயகனே, நீ தருகின்ற தழையை. (எ—று.)

---

93. பாங்கி கூற்று.

பா-ம். [1]கொண்டும்.

சிற். 79. ஐ ஒப்பிடுக.

---

## 94. படைத்துமொழியான் மறுத்தல்.

அருந்தழைமேன்மேற் பெருந்தகை கொணரப்
படைத்துமொழிகிளவியிற் றடுத்தவண் மொழிந்தது.

(இ-ள்.) அரிய தழையை மேன்மேலும் பெரிய தகைமைப் பாட்டையுடையவன் கொண்டுவரச் சிவட்டித்து(சிருட்டித்து) சொல்லும் வார்த்தையாலே அத்தழையை வாங்காது விலக்கிப் பாங்கி சொல்லியது.

---

எழில்வா யிளவஞ்சி யும்விரும் பும்மற் றிறைகுறை
அழல்வா யவிரொளி யம்பலத் தாடுமஞ் சோதியந்தீங் [யுண்டு
குழல்வாய் மொழிமங்கை பங்கன்குற் றாலத்துக் கோலப்
[பிண்டிப்
பொழில்வாய் தடவரை வாயல்லதில்லையிப் பூந்தழையே.

(பொ-ரை.) அழகினால் வாய்ந்த இளைய வஞ்சிக்கொம்பினை யொப்பாளும் விரும்புவாள்; சுவாமி! மற்றோர் குறையுண்டு; அழலிடத்தே வாய்ந்த பாடஞ் செய்கிற பிரகாசத்தினை நேரானவன்; திருவம்பலத்திலே ஆடியருளுகிற அழகிய ஒளியாயுள்ளவன்; அழகினையும் இனிமையையும் உடைய குழலினோசையை நிகர்த்த சங்கரிபங்கன்; அவனுடைய திருக்

குற்றாலத்துண்டாகிய அழகிய அசோகின் பொழில் வாய்ந்த பெரிய மலைச்சாரலிலல்லது, இல்லைகாண், இந்தப் பொலிவுடைத்தாகிய தழை. (எ-று)

94. பாங்கி கூற்று.

'இத்தழை இவர்க்கு வந்தவாறு என்னென்று ஆராயப்படும், ஆதலான் இவை கொள்ளேம்' என்றவாறு (பே-ரை.)

---

## 95. நாணுரைத்து மறுத்தல்.

வாணுதற் பேதையை
நாணுத லுரைத்தது.

(இ-ள்) ஒளி சிறந்த நெற்றியையுடைய நாயகி மிகவும் நாணுவளென்று சொன்னது.

---

உறுங்கண்ணி வந்தகணையுர வோன்பொடி யாயொடுங்கத்
தெறுங்கண்ணி வந்தசிற் றம்பல வன்மலைச் சிற்றிலின்வாய்
நறுங்கண்ணி சூட்டினுநாணுமென் வாணுத லுகைத்தொண்பூங்
குறுங்கண்ணி வேய்ந்திள மந்திக ளுணுமிக் குன்றிடத்தே.

(பொ-ரை.) மிக்க தேனுள்ள புஷ்ப (புஷ்ப) பாணத்தாலே அதிகமான காமன் நீறாகி வீழ்ந்தொடுங்க, சுடுகிற திருநயனம் நின்று விளங்குகிற திருச்சிற்றம்பலநாதன்; அவனுடைய மலையிலே நாங்கள் சிற்றிலிழைத்து விளையாடுகிறவிடத்துச் செவிலித்தாய்மார் சூட்டின மாலையொழிய நாங்கள் நறுநாற்றமுடையதொரு மாலையைச் சூட்டினோமாகிலும், எம்முடைய ஒளி சிறந்த நெற்றியினையுடையாள், 'இது புதுமை' என்று அதற்கு நாண நிற்கும். இவள் நாணுவதற்குக் கேட்க வேண்டுமோ? இம்மலையின் இயல்புதானிப்படியிருக்கும்; (எ-று.)

சுரபுன்னையில் அழகிய பூவினாலே தொடுத்த நெற்றி மாலையைச் சூட்டினபொழுது இளைய மந்திக் குரங்குகள் முதலாக இலச்சியா நிற்கும். (இலஜ்ஜையடையும் இம்மலையிடத்து, என்றால், இவள் நாணுவதற்குக் கேட்கவேண்டுமோ? (எ-று)

95. பாங்கி கூற்று.

திருநயனம் நின்று விளங்குகின்ற - மற்றையவற்றிற்கு மேலாய் நின்று விளங்குகின்ற. (பே-ரை)

---

## 96. இசையாமைகூறி மறுத்தல்.

வசைதீர் குலத்திற்
கிசையா தென்றது.

(இ-ள்) குற்றமற்ற எங்கள் குலத்துக்கு இது பொருந்தாது என்றல்.

---

நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி
மறமனை வேங்கை யெனநனி யஞ்சுமஞ் சார்சிலப்பா
குறமனை வேங்கைச் சுணங்கொ டணங்கலர் சூட்டுபவோ
நிறமனை வேங்கை யதளம் பலவ னெடுவரையே.

(பொ-ரை) தேனுக்கிடமாகிய வேங்கைப்பூ நெருங்குதலுள்ள பாறையை யானையானது குறுகித் தறுகண்மைக் கிடமாகிய கொடுவரியையுடைய புலியென்று மிகவும் பயப்படுகின்ற மேகங்கெட வளர்ந்த வரையினையுடையவனே! குறவரிடமனையிடத்து நிற்கிற வேங்கையில் சுணங்கையொத்த பூவோடே தெய்வத்துக்குரிய செங்கழுநீர் மலரைச் சூட்டப் பெறுமோ? நிறம் நிலைபெற்ற புலித்தோலுடைய திருவம்பல நாதனுடைய நீண்டு பெருத்த வெற்பிடத்து. (இங்ஙனே செய்யாது செய்யத்தகுமோ என்பது கருத்து).

நாலாம் அடியில் ஐகாரம் அசைநிலை.

**96.** பாங்கி கூற்று.

வேங்கைப் பூவிற்குச் சுணங்கணிந்திருத்தல் குணமாதலால் சுணங்கணியப் பட்டதனைச் சுணங்கென்றே கூறினான். (பே-ரை.)

'ஓதி. ஒளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக். களிச்சுரும்ப ரற்றுஞ் சுணங்கிற் சுணங்கு பிதிர்ந்து. (சிறுபாண். 22-25). சுணங் கலர் வேங்கைத் துணர்மலை நாட. (அம்பிகா. 335) வேங்கை வென்ற சுணங்கின் (ஐங். 324): வேங்கைவீ முற்றெருழில் கொண்ட சுணங்கு (கலி: 64: 26).

நறமனை.........யஞ்சும் என்ற பகுதியோடு பின்னுள்ளவற்றை யும் ஒப்பிடுக:- "கருங்கால் வேங்கை வீயுக துறுக, லிரும்புலிக் குருளை வேங்கையிற் றோன்றும்" (குறுந். 47) "மாத்தகட் பொன்வீதாய துறுக, லிரும் புலி வரிப்புறங் கெடுக்கும்", 'கருங்கா லினவேங்கை கான்றபூக்கன்மே. லிருங்கால் வயவேங்கை யேய்க்கும்" (திணைமா. 26). "உறுபுலி உருவேய்ப்ப பூத்த வேங்கை" (கலி. 38. 6.)

---

## 97. செவ்வியிலளென்று மறுத்தல்.

நவ்வி நோக்கி
செவ்வியில ளென்றது.

(இ-ள்) மானினது நோக்கம் போன்ற பார்வையினை யுடையவள் பக்குவியல்லள் என்றது.

---

கற்றில கண்டன்ன மென்னடை கண்மலர் நோக்கருளப்
பெற்றில மென்பிணை பேச்சுப் பெருகிள்ளை பிள்ளையின்றென்
றுற்றில ளூற்ற தறிந்தில ளாகத் தொளிர்மிளிரும்
புற்றில வாளர வன்புலி யூரன்ன பூங்கொடியே.

(பொ-ரை.) இவள் புறம்போந்து விளையாடாதபடியாலே இவள் நடையைக் கண்டு இப்படி நடக்கக் கற்றனவில்லை அன்னங்களும்; கண்ணாகிய மலர்கள் பார்வையைக் கொடுக்க இப்படிப் பார்க்கக் கற்றனவில்லை மானினமும்; இவள் வார்த்தையைக் கேட்டு அப்படியே பேசக்கற்றனவில்லை கிளிகளும்; இளையவளாகையாலே இன்னொரு விளையாட்டினு முயன்றிலள்; நீ குறையுற்றாயாகவும் யானதற்கு மறுத்தேனாகவும் இப்படிப் புகுந்தவனை அறிந்திலள்; திருமார்பிலே கிடந்து ஒளிமிளிரும் புற்றிலிருக்கப்பட்ட பெரிய பாம்பை ஆபரணமாகவுடையவனுடைய புலியூரை நிகர்த்துப் பூத்த வல்லிசாதமொத்த மின்னிளையாள். (எ-று.)

---

**97.** பாங்கி கூற்று.

புற்றில என்பதற்கு வேள்வித் தீயிற் பிறந்து திருமேனிக்கண் வாழ்தலால் புற்றையுடையவல்லாத அரவு என்றுரைப்பினும் அமையும். (பே-ரை.)

இதனுடன், திருவாரூர்க் கோவை 132-ஆம் செய்யுளையும் ஒப்பிடுக.

மன்மதன் றோற்ற திலைவிழி யான்முழு வானமதி
தன்மதன் தோற்ற திலைமுகத் தாற்செஞ் சடாடவிமேல்
மென்மதி தோற்றிய வாரூரர் வீதிவிடங்கர் வெற்பா
உன்மதி தோற்றதென் னோவெங்கள் பேதை யொருகொடிக்கே.

(திருவா. 132).

சிற். 224 ஆம் செய்யுளோடும் ஒப்பிடுக.

---

## 98. காப்புடைத்தென்று மறுத்தல்.

காப்புடைத் தென்று
சேட் படுத்தது.

(இ-ள்.) இவ்விடம் காவலுடையதென்று நீளம் பார்த்துச் சொன்னது.

முனிதரு மன்னையு மென்னையர் சாலவு மூர்க்கரின்னே
தனிதரு [1]மிந்நிலத் தன்றைய குன்றமுந் தாழ்சடைமேல்
பனிதரு திங்க ளணியம் பலவர் பகைசெகுக்குங்
குனிதரு திண்சிலைக் கோடுசென் றுன்சுடர்க் கொற்றவனே.

(பொ-ரை.) சுவாமியே! நீ இவ்விடத்தில் தாழ்க்க, தாயாரானவரும் குரோதம் பண்ணுவார்கள்; எங்கள் ஐயன்மார்கள் மிகவும் மூர்க்கராய் இருப்பார்கள். இவ்விடந்தான் இயங்குவாரில்லாத இடமாகையாலே இப்பொழுதே தனிக்கும்; சுவாமி, உன்னுடைய மலையும் இந்நிலத்திலுள்ள தொன்றன்று; நீண்டு தாழ்ந்த திருச்சடாபாரத்தின் மேலே குளிர்ந்த திருவிளம்பிறையைச் சாத்தியருளுகிற திருவம்பலநாதர் நமக்குப் பகையாகிய முப்புரங்களையும் அழித்த, வளைந்து சிக்கென்ற சிலையாகிய மேருவிற் சிகரமிடமாகச் சென்றடைந்தான், சுடர்களின் தலைவனாகிய சூரியன்; ஆதலால், இவ்விடத்தில் நிற்கவொண்ணாது. (எ-று.)

---

98. பாங்கி கூற்று.

(பா-ம்.) 1 மிந்நிலத்த.

'இவ்விடம் மிக்க காவலையுடைத்து; இங்கு வாரன்மின்' என்றனள, இவ்விடத்தருமையை மறையாது எனக்குரைப்பாளாயது என்கண் கிடந்த பரிவினானன்றே, இத்துணையும் பரிவுடையாள் எனது ஆற்றாமைக் கிரங்கி முடிக்கும் என, ஆற்றுமென்பது. (பே-ரை.)

---

## 99. நீயே கூறென்று மறுத்தல்.

அஞ்சுதும் பெரும பஞ்சின்மெல்லடியைக்
கூறுவநீயே கூறுகென்றது.

(இ-ள்.) பெரியோனே! நாங்கள் அஞ்சா நின்றேம்; பஞ்சுபோன்ற மெல்லிய அடியினையுடையாளுக்குச் சொல்லக் கடவன வெல்லாம் நீயே சொல்வாயாக என்றது.

அந்தியின் வாயெழி லம்பலத் தெம்பர னம்பொன்வெற்பிற்
பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னுெடுங்கடுவன்
மந்தியின் வாய்க்கொடுத் தோம்புஞ் சிலம்ப [1]மனங்கனிய
[2]முந்தியின் வாய்மொழி நீயே மொழிசென் றம் மொய்
[குழற்கே.

(பொ-ரை.) அந்திச் செக்கரின் எழிலையொத்த திருவம்பலத்தே உளனாகிய எம்முடைய சுவாமி! அவனுடைய அழகிய பொதியின் மலையில் குரக்கு நிரையிடத்துப் பலாப்பழத்தின் இனிய சுளைகளைச் செவ்வித் தேனிலே தோய்த்துக் கடுவன் குரங்கானது பெண்குரங்கின் வாயிலே கொடுத்துப் பரிகரிக்கின்ற மலையினையுடைய நாயகனே! மனம் நெகிழும்படி அவளை எதிர்ப்பட்டு உன்னுடைய இனிய வார்த்தைகளை, அந்தச் செறிந்த கூந்தலினையுடையாளுக்கு நீ தானே சென்று சொல்லுவாயாக.

---

99. பாங்கி கூற்று.

(பா - ம்) [1]மனங்கனியும் [2]முந்திநின் வாய்மொழி.

சிலம்பு - வெற்பின் ஒரு பக்கத்துளதாகிய சிறு குவடு.

மந்தி உயிர் வாழ்வதற்குக் காரணமாகியவற்றைக் கடுவன் தானே கொடுத்து மனமகிழ்வித்தாற்போல. அவள் உயிர் வாழ்வதற்குக் காரணமாகிய நின்வார்த்தைகளை நீயே கூறி அவளை மனமகிழ்விப்பாயாக என உள்ளுறையுவமம் கண்டு கொள்க. (பே-ரை.)

---

## 100. குலமுறைகூறி மறுத்தல்.

தொழுகுலத்தீர் சொற்காகேம்
இழிகுலத்தே மெனவுரைத்தது.

(இ-ள்) "தொழத்தக்க உயர்ந்த குலத்துள்ளீர்! நீர் சொல்லுகிற சொற்களுக்கு நாங்கள் போதோம்; நாங்கள் இழிகுலத்தவர்" என்று சொன்னது.

தெங்கம் பழங்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக்
கொங்கம் பழனத் தொளிர்குளிர் நாட்டினை நீயுமைகூர்
பங்கம் பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாபதைப்பச்
சிங்கந் திரிதரு சீறூர்ச் சிறுமியெந் தேமொழியே.

(பொ—ரை.) தென்னம் பழமானது கமுகந்தாறுகளை மோதி, வாழைக் குலைகளை முறித்து, பூந்தாதுகளையுடைத்தாகிய தடாகங்களிலே கிடந்து விளங்குகிற குளிர்ந்த மருதநிலத்தினையுடையன் ஒருத்தனாக விருந்தனை நீ; பரமேசுவரி சிறந்த பாகத்தினையுடைய திருவம்பலநாதன் திருப்பரங்குன்றின் மலையொத்த யானைகள் நடுங்கச் சிங்கங்கள் வேட்டமாக உலாவுகிற சிறுமலையிடத்து இருந்தாள் எம்முடைய தேனை நிகர்த்த வசனத்தையுடையவள்.

என்றாக, இறப்ப உயர்ந்தார்க்கு இறப்ப இழிந்தாருடனே என்ன பொருத்தமுண்டு என்றுபடும்.

---

**100.** பாங்கி கூற்று.

இச்செய்யுளில் அமைந்துள்ள சில வருணனையோடு பின்வருவனவற்றை ஒப்பிடுக:— கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின், இறுவரை வேங்கையி னொள்வீ சிதறி, ஆசினிமென்பழ மளிந்தவை யுதிராத் தேன்செ யிறாஅ றுளைபடப் போகிநறுவடி மாவின் பைந்துணருழக்கிக், குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப், பலவின் பழத்துட் டங்கு மலைகெழு வெற்பன்" (கலி 41: 10-16): "காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப், பூமாண்ட தீந்தேன் றொடை கீறி வருக்கை போழ்ந்து, தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்து, மேமாங் கதமென் றிசையாற் றிசைபோய துண்டே" (சீவக. 31.)

---

## 101. நகையாடி மறுத்தல்.

வாட்டமையெதிராது சேட்படுத்தற்கு
மென்னகைத்தோழி யின்னகைசெய்தது.

(இ-ள்.) ஒளி சிறந்த தழையைப் பெற்றுக்கொள்ளாதே தூரத்தனுக்குவதாகப் புன்முறுவலையுடைய பாங்கி இனிமை தோன்றச் சிரித்தது.

---

சிலையொன்று வாணுதல் பங்கன் சிற்றம்பல வன்கயிலை
மலையொன்று மாமுகத் தெம்மைய ரெய்கணை மண்குளிக்குங்
கலையொன்று வெங்கணை யோடு கடுகிட்ட தென்னிற்
[கெட்டேன்
கொலையொன்று திண்ணிய வாறையர் கையிற் [1]கொடுஞ்
சிலையே.

(பொ-ரை) வில்போன்று ஒளி சிறந்த நெற்றியினை யுடைய உமாதேவியைப் பாகத்திலே யுடையவன், திருச்சிற்றம்பலநாதன், கயிலாய வரையிடத்து, திரண்ட யானை அணியிலே எங்கள் அண்ணன்மார் எய்த அம்பு யானை அணியில் பட்டுருவி மண்ணிலே மூழ்கும்; கலைதான் ஒன்(று) இருந்தது; அதுதான் எய்தபொழுதே விழுகையற்று, எய்த அம்பையும் கொண்டு கடுக ஓடிற்றாயிருந்தது; என்றால், இந்தச் சுவாமியினுடைய கையில் வளைந்த வில்லானது கொலைத் தொழிலான ஒன்றுக்குத் திண்ணியபடி! (எனத்தான் கொண்டாடுகின்றாள்). (எ-று)

கயிலைமலையொக்கும் யானைமுகத் தென்றுமாம்.

---

101. பாங்கி கூற்று.

(பா-ம்) 1 கொடுஞ்சரமே.

'எம் ஐயர் கையம்பு யானைமுகத் தெய்யப்பெற்று மண் குளிக்கும் இவர் கையம்போ கலைமானைக் கொன்றே தீரும்' என்று கூறி நகையாடினாள்.

மலையொன்றுமா - மலையை ஒக்கும் யானை என்பர் பேராசிரியர். மா - யானை.

கணைமண் குளித்தல்: "சொற்றிற லன்றி மன்னீர் தொக்குநீர் காண்மினெங்கள். விற்றிறலென்று வில்லாய் வெங்கணை தொடுத்து வாங்கிக் கற்றிரள் கழிந்து மண்ணுட் கரந்தது குளிப்பவெய்திட் டிற் றெமர் கல்வி யென்று விடியுரு மேற்றேறெடொப்பான்" (சீவக. 756). 'விடுகணை விடலை வில்லின் விலக்கி, வதிபயின் றடைந்த மறவரை யதிரக் கைவயிற் கடுங்கணை யொவ்வொன்று கொண்டவர் மெய்வயிற் கழிந்து வியனிலத் தியங்க' (பெருங். 1: 55: 141-3). 'மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி (கம்ப. குலமுறை. 26)

கடுகிட்டது - விரைந்தோடிற்று. கெட்டேன் வியப்புமொழி.

---

## 102. இரக்கத்தொடு மறுத்தல்.

கையுறை யெதிராது காதற்றோழி
ஐயநீபெரிதயர்த் தனையென்றது.

(இ-ள்) கையுறையை ஏற்றுக்கொள்ளாதே, 'சுவாமி மிகவும் மயங்கினையோ?' என்றது.

---

மைத்தழை யாநின்ற மாமிடற் றம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாநின்ற வன்பினர் போல விதிர்விதிர்த்துக்
கைத்தழை யேந்திக் கடமா வினுய்க்கையில் வில்லின்றியே
பித்தழை யாநிற்ப ராலென்ன பாவம் பெரியவரே.

(பொ-ரை) இருள் தழைத்துச் செல்லாநின்ற காளகண் டத்தையுடைய திருவம்பலநாதன் அவனுடைய சீர்பாதங் களிலே சத்தியம் தழைத்துச் செல்லுகிற அன்பரைப் போல மிகவும் நடுநடுங்கிக் கையிலே தழையையும் ஏந்திக்கொண்டு, அதற்கு மறுதலையாக மதம்பட்ட யானையையும் வினவி, கையில் வில்லுமின்றியே இப்பெரியவர் பித்தான வார்த்தைகளைச் சொல்லாநின்றார். இப்பாவத்திற்குக் காரணமென்ன (என்று படும்).

பெரியோரிடத்துத் தீவினை வந்தால், அதற்குக் காரணம் ஆராயப்படுதலால், இதற்குக் காரணம் என் என்றது.

---

**102.** பாங்கி கூற்று.

மா-கருமை. 'மாமயில் (சிற். 38). மெய்த்தழையாநின்ற வன்பு' என்பதற்கு 'மெய்யால் தழையாநின்ற அன்பு எனினும் அமையும்' என்பர் பேராசிரியர். விதிர்விதிர்த்து - மிகநடுங்குவித்து.

இதனைத் 'தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தற்குச் செய்யுள்' என்பர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ 509 உரை)

---

## 103. சிறப்பின்மை கூறி மறுத்தல்.

மாந்தளிரும் மலர்நிலமும்
ஏந்தலிம்மலை யில்லையென்றது.

(இக்கொளுவுக்கு உரை காணப்படவில்லை.)

---

அக்கு மரவு மணிமணிக் கூத்தன்சிற் றம்பலமே
ஒக்கு மிவளை தொளிருரு வஞ்சிமஞ் சார்சிலம்பா
கொக்குஞ் சுனையுங் குளிர்தளி ருங்கொழும் போதுகளும்
இக்குன் றிலென்று மலர்ந்தறி யாத வியல்பினவே.

(பொ-ரை) அக்குவடத்தையும் பாம்பையும் சாத்தியருளுகிற மாணிக்கம்போலும் அழகிய திருக்கூத்தினையுடையவன்; அவனுடைய திருவம்பலத்தை ஒக்கின்ற இவளுடைய விளங்காநின்ற மேனிக்கு நிகர் வருமோவென்று,

மேகங்களார்ந்த மலையினையுடையவனே! மாமரங்களும் சுனையும் குளிர்ந்த தளிரும் அழகிய புட்பங்களும், இந்த மலையிடத்து இவள் தோன்றின நாளே தொடங்கி எந்தக் காலத்திலும் தளிர்த்து அலராத இயல்பின; (இவள் மேனிக்குப் பயந்து மரங்களும் தளிரீன்றறியா; ஆதலால் இந்நிலத்தில்லாததொன்றை நாங்கள் ஏற்றால் பலர்க்கும் வினவுவதற்கிடமாகும்) (எ-று)

---

103. பாங்கி கூற்று.

கொக்கு-மாமரம்.

---

## 104. இளமைகூறி மறுத்தல்.

முளையெயிற் றரிவை
விளைவில ளென்றது.

(இ-ள்.) முளைக்கின்ற பல்லுடைய நாயகி விளைவையறியாள் என்றது.

---

உருகு தலைச்சென்ற வுள்ளத்து மம்பலத் தும்மொளியே
பெருகு தலைச்சென்று நின்றோன் பெருந்துறைப் பிள்ளை [கள்ளார்
முருகு தலைச்சென்ற கூழை முடியா முலைபொடியா
ஒருகு தலைச்சின் மழலைக்கென் னோவைய வோதுவதே.

(பொ-ரை) உருகுதலைச்செய்து தன்னை நினைந்தவர்களின் நெஞ்சினும் அம்பலத்தினும் ஒளிபெருகும் தன்மையினையுடையனாய் எழுந்தருளி நின்றவன்; அவனுடைய திருப்பெருந்துறையிலே உள்ள இளையவளுடைய தேனிடத்தே உண்டாகிய நிறைந்த நாற்றம் உண்டாய மயிரும் கடைமுடிய எழுந்ததில்லை; முலைகள் இன்னும் புறப்படவில்லை; எப்போது

பேசினாலும் ஒரு சொற்போல இருக்கிறது....... (ஒருகுதலை) மழலைச் சொல்லையுடையாளுக்குச் சுவாமி சொல்லுகிறது ஏதோதான்? (எ-று)

---

104. பாங்கி கூற்று.

குதலைமை - விளங்காமை; மழலை-இளஞ்சொல். (பே-ரை.) 'இனிமை மிகுதிபற்றி மழலைச் சொல்லைச் சிறப்புவகையானும் கூறிய வாறு. (குறள். 66 பரி. உரை)

முலைபொடியா; பொடித்தல் - முளைத்தல். ' பொடித்த செங் கதிர்போல்" (பாகவதம் 339).

---

## 105. மறைத்தமைகூறி நகைத்துரைத்தல்.

என்னைமறைத்தபி னெண்ணியதரிதென
நன்னுதற்றோழி நகைசெய்தது.

(இ-ள்.) எனக்குக் கரந்தவிடத்து நீ நினைத்த காரியம் முடிக்கை அரிதென்று நல்ல நெற்றியினையுடைய பாங்கி சிரித்தது.

---

பண்டா லியலு மிலைவளர் பாலகன் பார்கிழித்துத்
தொண்டா லியலுஞ் சுடர்க்கழ லோன்றொல்லைத் [தில்லையின்வாய்
வண்டா லியலும் வளர்பூந் துறைவ மறைக்கினென்னைக்
கண்டா லியலுங் கடனில்லை கொல்லோ கருதியதே.

(பொ-ரை.) முற்காலத்து வட (விருக்ஷ) த்தினின்றும் புறப்படுகிற தளிரிலே கண் வளர்ந்த புருஷோத்தமன் பூமியை யிடந்துகொண்டு புக்கு, அங்ஙனம் அகங்கார முகத்தா னறியப் படாமையாலே அவன் தொண்டுசெய்து காண்கைக்கு

முயல்கிற கடார்க்கழலோன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரிடத்து வண்டுகள் ஆலித்தலைச் செய்கிற மிக்க பூவுடைத்தாகிய துறையினையுடையவனே! எனக்கு மறைத்தவிடத்து, விசாரித்துப் பார்த்தால், நீ நினைத்த காரியம் முடித்துப் போகை அரிதுபோலே இருந்தது. (எ-று.)

என்றதால் எனக்கு மறைப்பதேன் என்றுபடும்.

---

**105.** பாங்கி கூற்று.

இவள் நகுதலான் என்குறை யின்னதென உணர்ந்த ஞான்று தானே முடிக்குமென நினைந்து ஆற்றுவானுவது பயன். (பே-ரை.)

---

## 106. நகைகண்டு மகிழ்தல்.

இன்னகைத்தோழி மென்னகைகண்டு
வண்ணக்கதிர்வே லண்ணலுரைத்தது.

(இ-ள்.) பெரிய மூங்கிலை நிகர்த்த தோளினையுடைய பாங்கி(யின்) மெல்லிய சிரிப்பைப் பார்த்து, அழகினையும் ஒளியினையும் உடைத்தாகிய வேலினையுள்ள நாயகன் சொன்னது.

---

மத்தகஞ் சேர்தனி நோக்கினன் வாக்கிறந் தூறமுதே
ஒத்தகஞ் சேர்ந்தென்னை யுய்யநின் றோன்றில்லை யொத்திலங்கு
முத்தகஞ் சேர்மென் னகைப்பெருந் தோளி முகமதியின்
வித்தகஞ் சேர்மெல்லெ னகைகமன் றேவென் விழுத்
[துணையே.

(பொ-ரை.) திருநெற்றியிலே சேர்ந்ததொரு திருநயனத்தையுடையவன்; சொல்லளவைக் கடந்துவந்து ஊறு நின்ற அமுதத்தை யொத்து என் நெஞ்சிலே பொருந்தி

யென்னைப் பிழைக்கும்படிக்கு ஈடாக நின்றேன்; அவனுடைய சிதம்பரத்தை ஒத்து விளங்கும், முத்து நிரையை ஒத்து உள்ளடங்கின வெள்ளிய முறுவலினையுடைய பெரிய தோள்களை யுடையாய்! உன் முகமாகிய சந்திரனில் சதுரப்பாடு பொருந்தின மெத்தென்ற பார்வையல்லவோ, எனக்குரிய துணையாவது?

என்றால், உனக்கு நான் மறைப்பேனா? என்றது.

உள்ளக்கருத்து நுண்ணிதின் விளக்கலின் வித்தகஞ்சேர் மெல்லிய நோக்கமென்றார்.

---

**106.** தலைவன் கூற்று.

'முன்னர்ச் சின்மழலைக் கென்னுரைப்பேனோதுவ தென்று இளையளென மறுத்தவிடத்து, இந்நாளெல்லாம் இயைய மறுத்து இப்பொழுது இவள் இளையளென்று இயையாமை மறுத்தாள், இவ்வொழுக்கம் இனி இவளையொழிய ஒழுகக் கடவேனென்று தலைமகன் தன் மனத்திற் குறித்தான்; அக்குறிப்பைத் தோழி அறிந்து கூறினமையின் வித்தகஞ்சேர் மெல்லெனோக்க மன்றோ எனக்குச் சிறந்ததுணை பிறிதில்லையெனத் தனதாற்றாமை தோன்றக் கூறினான். (பே-ரை.)

இதனை, 'அங்ஙகை பொருது அவன் புலம்பற்குச் செய்யுள் என்பர் இலக்கண விளக்க ஆசிரியர் (சூ 509. உரை).

---

## 107. அறியாள்போன்று நினைவுகேட்டல்.

வேந்தன் சொன்ன மாந்தளிர்மேனியை
வெறியார் கோதை யறியேனென்றது.

(இ-ள்.) நாயகன் சொன்ன மாந்தளிர் போன்ற சரீரத்தையுடையாளை நறுநாற்ற மிக்க மாலையினை யுடையவள் அறியேனென்றது.

---

விண்ணிறந் தார்நிலம் விண்டவ ரென்றுமிக் காரிருவர்
கண்ணிறந் தார்தில்லை யம்பலத் தார்கழுக் குன்றினின்று
தண்ணறுந் தாதிவர் சந்தனச் சோலைப்பந் தாடுகின்றார்
[1]எண்ணிறந் தாரிவர் யார்கண்ண தோமன்ன நின்னருளே.

(பொ-ரை) அன்னமாய் ஆகாசம் கடந்தாரும், வராகமாய்ப் பூமியை இடந்தாரும் என்று (சொல்லப்பட்ட) அயனும் மாலுமாகிய இவ்விருவரிடத்தையும் கடந்துநின்ற திருவம்பலத்திலே யுள்ளவர்; அவருடைய திருக்கழுக்குன்றம் நின்று தட்பமும் நறு நாற்றமுமுடைத்தாகிய பூப்பரந்த சந்தனச் சோலையில் பந்தாடுகிறவர்கள் - இவர்கள் - எண்ணிறந்த பேராயிருந்தார்கள்; இவர்களில், மன்னனே! நின்னுடைய அருள் யாரிடத்தே என்று சொல்வாயாக. (எ-று.)

---

107. பாங்கி வினா.

பா-ம். எண்ணிறந்தாரவர்; எண்ணிறந்தார் பலர்.

நிலம் விண்டவர் வரலாறு சிற் 86 பார்க்க.

'நும்மாற் கருதப்படுவாளை அறியேனென்றுளாக, 'என்குறை இன்னாள் கண்ணதென அறிவித்தால் இவள் முடிக்குமெ'ன நினைந்து ஆற்றுவானும் என்பது பயன். (பே-ரை.)

---

## 108. அவயவங் கூறல்.

அவயவ மவளுக்
கிவையிவை யென்றது.

(இ-ள்.) என்னாற் காதலிக்கப்பட்டவளுக்கு அவயவங்கள் இப்படியே யிருக்குமென்றது.

---

குவவின கொங்கை குரும்பை குழல்கொன்றை கொவ்வை
[செவ்வாய்
கவவின் வாணகை வெண்முத்தங் கண்மலர் செங்கழுநீர்
தவவினை தீர்ப்பவன் [1]சூழ்பொழிற் சிற்றம் பலமனையாட்
குவவின நாண்மதி போன்றொளிர் கின்ற தொளிமுகமே.

(பொ-ரை.) குவிந்த முலைகள் குரும்பையை ஒக்கும்; மயிர் கொன்றைப் பழநெற்றுத்தானாயிருக்கும்; சிவந்த வாயானது கொவ்வைப்பழம் போன்றிருக்கும்; உள்ளடங்க ஒளி சிறந்த முறுவல் வெள்ளிய முத்துப்போன்றிருக்கும்; கண்ணானது செங்கழுநீர் மலரையொக்கும்; தவத் தொழிலை முடிவு செய்கிறவன், அன்பர் விரதங்களினால் வருந்தாமல் இன்புற்று நெறியை அருளுகிறவன்; அவனுடைய நீண்ட பொழில் சூழப்பட்ட திருச்சிற்றம்பலத்தை ஒப்பாளுக்கு, உவா நாளின் மதியையொத்து விளங்கா நின்றது ஒளி சிறந்த முகமானது. (எ-று.)

இப்படிக்கு, அவயவங்களை உடையாளையும் அல்லாதாரையும் தெரியாதோ? என்றுபடும்.

---

108. தலைவன் கூற்று.

பா-ம். 1. தாழ்பொழில்

தவவினை தீர்ப்பவன் என்பதற்கு 'தவத் தொழிலை நீக்கி அன்பர்க்கு இன்புறு நெறியருளினவன்' என்று உரைகூறி. மிகவும் வினைகளைத் தீர்ப்பவன் எனினும் அமையும்' என்பர் பேராசிரியர்.

'உவவின மதி பலகலைகள்கூடி நிறைந்த தன்மையையுடைய மதி; நாண்மதி உவாவான நாளின் மதி. (பே-ரை)

குழல் கொன்றை: 'கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றை (குறுந். 21.) 'குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட (திருவாரூர் மும்மணிக் 1. 8)

## 109. கண்ணயந்துரைத்தல்.

கண்ணிணை பிறழ்வன
வண்ண முரைத்தது.

(இ-ள்.) கண்ணிணைகள் உலவுகிற வடிவைச் சொன்னது.

ஈசற் கியான்வைத்த வன்பி னகன்றவன் வாங்கிய [1]வெம்
பாசத் திற்கா ரென்றவன் றில்லையின்ஒளி போன்றவன்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம் [றோள்
பேசத் திருவார்த் தையிற்பெரு நீளம் பெருங்கண்களே.

(பொ-ரை.) சிவனிடத்திலே யான் வைத்த நேசம்போலே விரிந்து, அவனாலே வாங்கப்பட்ட வெய்ய பாசம்போலே கருமையுடைத்தாய், அவனுடைய தில்லையின் ஒளிபோன்று ஒளிபெற்று, அவனுடைய திருப்புயங்களிலே சாத்துகிற திருநீறுபோலே வெள்ளிதாய், அவனுடைய பொலிவுடைத்தாகிய சீபாதங்களை நாம் சொல்லுகிற திருவார்த்தையைப் போலே பெரிய நீளமுடைத்தாய், இருந்தன பெரிய கண்களும். (எ-று.)

கண்ணினாற் பெரிதிடர்ப்பட்டானாதலின், கண்மலர் செங்கழுநீரென்று அமையாதாதலின், இவ்வாறு கூறினார்.

---

**109.** தலைவன் கூற்று.

பா-ம். 1. வெண்பாசம்.

'கண்களாற் பெரிது மிடர்ப்பட்டானாகலானும்' தோழியைத் தனக்குக் காட்டின பேருதவியையுடையனவாகலானும். முன்னர்க் கண்மலர் செங்கழுநீ ரென்றும் அமையாது இவ்வாறு கூறினான். கண்ணிற்குப் பிறிது வகையான் உவமங்கூறாது இங்ஙனம் அகலம் முதலாயின கூறவேண்டியது எற்றிற்கெனின், அவை கண்ணிற்கிலக்கணமுங் காட்டியவாறும். என்னை இலக்கணமாமாறு: "கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின், வெண்மை கருமை செம்மை யகலம் - நீள மொளியென நிகழ்த்துவர் புலவர்" ஆயின் இதனிற் செம்மை கண்டிலே மென்பார்க்குச் செம்மையுங் கூறிற்று. அவன்றோளிற் பூசத் திருநீறென்றமையால் சிவப்பும் சொல்லியதாயிற்று. அது செம்மையாற் றோன்றும் வரியெனவறிக. (பே-ரை.)

## 110. தழையெதிர்தல்.

அகன்றவிடத் தாற்றாமைகண்டு
கவன்றதோழி கையுறையெதிர்ந்தது.

(இ-ள்.) நாயகன் குறைக்கு உடன்படாமல் அகன்ற விடத்து, தான் ஆற்றாமையைக் கண்டு, அத்தன்மையாலே துன்பமுற்ற தோழி கையுறை எதிர்ந்தது.

---

தோலாக் கரிவென் றதற்குந் துவள்விற்கு மில்லின்றொன்
கேலாப் [1]பரிசுள வேயன்றி யேலே மிருஞ்சிலம்ப [மைக்
மாலார்க் கரிய மலர்க்கழ லம்பல வன்மலையிற்
[2]கோலாப் பிரசமன் னட்கைய நீதந்த கொய்தழையே.

(பொ-ரை.) ஒருவருக்குந் தோலாத கரியை நீ வென்ற படிக்கும், நாங்கள் குறைமறுக்கவும் நீ போகாது துவண்டதற்கும், எம்குடியாயின் பழைமைக்கும் ஏலாத் தன்மையுண்டோ? பெரிய மலையை யுடையவனே! நாங்கள், புருஷோத்தமனார்க்கரிய மலரையொத்த சீபாதங்களையுடைய திருவம்பலநாதன், அவனுடைய திருமலையில் ஈ முதலானவற்றாற் கொல்லப்படாத தேனையொப்பாளுக்கு, சுவாமி! நீ தந்த கொய்யப்பட்ட தழையை இவற்றாலே ஏற்கிறோம்; இதனையல்லது தழையேற்பார் சிலரல்லோம் காண். (என்றுபடும்.)

---

110. பாங்கி கூற்று.

பா-ம். [1] உளவேலன்றியேலேம்: [2] கோலாற் பிரசம்.

கோலாப் பிரசம் என்பதற்கு வைக்கப்படாத தேன் என்று பொருள் கூறி. கோலாற்பிரசம் என்பது பாடமாயின். கோலிடத்துப் பிரசம்; என்றது கோற்றேன்; இது சுவைமிகுதியுடைமை கூறியவாறென உரைக்க என்பர் பேராசிரியர்.

---

## 111. குறிப்பறித்ல்.

தழையெதிரா தொழிதம்சோர்
சொல்லறியேனெனப் பலவளைக்குரைத்தது.

(இ-ள்.) தழையேற்றுக்கொள்ளா தொழிவதற்கு ஒரு வார்த்தையும் அறியேனென்று பலவளைகளையுமுடையாளுக்குச் சொன்னது.

---

கழைகாண்ட லுஞ்சுளி யுங்களி யானையன் ஞன்கரத்திற்
றழைகாண்ட லும்பொய் தழைப்பமுன் காண்பனின் [றம்பலத்தான்
உழைகாண்ட லுநினைப் பாகுமென் னேக்கிமன் னேக்கங் [கண்டால்
இழைகாண் பணைமுலை யாயறி யேன்சொல்லு மீடவற்கே.

(பொ-ை.) பரிக்கோலைக் காணுமளவில் விரிகின்ற மத யானையை யொத்த நாயகனுடைய கையில் அத்தழையைக் காணுமளவில், அத்தழை ஏலாமைக்குச் சொல்லும் பொய் யான வார்த்தைகளை முன்பு மிகவும் காண்பேன். இப்பொழுது, திருவம்பலநாதனுடைய அத்தத்திலே ஏந்தின மானின் நோக்கத்தைக் காணுமளவில், நினைப்பாகிற மெத்தென்ற பார்வையினையுடையாய்! நாயகனுடைய புன்னேக்கத்தைப் பார்த்தால், ஆபரணங்களை விரும்பிக் காணத்தக்க பெரிய முலைகளையுடையாய்! அத்தழை ஏலாமைக்குச் சொல்லும் பெரிய வார்த்தைகளை ஒன்றுமறிந்திலேன் காண்; (எ-று.)

எனத் தழையேற்க வேண்டிற் றென்றுபடும்.

---

111. பாங்கி கூற்று.

'குத்துக்கோல் வரைத்தன்றி யானை களிவரைத்தாயினாற் போலக் கழறுவார் சொல்வயத்தனன்றி வேட்கை வயத்தனாயினா னென்பது போதரக் கழை காண்டலும் சுளியும் களியானையனா னென்றான்' (பே-ரை)

'தாறு அடுகளிற்றின் வீறுபெற ஓச்சி' என்ற குறிஞ்சிப்பாட்டு (150) அடிக்கு நச்சினார்க்கினியர், 'தன்னைச் செலுத்துகின்ற பரிக் கோலைக் கைகடந்த மதக்களிறு வெற்றியுண்டாக ஓட்டி' என்று பொருள் கூறுவர்.

---

## 112. குறிப்பறிந்து கூறல்.

ஏழைக் கிருந்தழை
தோழிகொண் டுரைத்தது.

(இ-ள்.) நாயகிக்கு மிக்க தழையைப் பாங்கி கொண்டு சென்றது.

---

தவளத்த நீறணியுந் தடந்தோ ளண்ண றன்னொருபால்
அவளத்த னுமகனுந் தில்லையா னன்று ரித்ததன்ன
கவளத்த யானை கடிந்தார் கரத்த கண்ணார்தழையுந்
துவளத் தகுவன வோகரும் பார்குழற் றூமொழியே.

(பொ-ரை.) வெள்ளிய திருநீற்றைச் சாத்தியருளுகிற பெரிய திருப்புயங்களையுடைய சுவாமி, தனக்கொரு பாகமாகிய தன் தேவிக்குத் தகப்பனும் மகனுமான திருவம்பலநாதன் முற்காலத்திலே உரித்த யானையை யொத்ததான வேண்டிய கவளங்களைக் கொள்ளுகிற யானை நம்மைக் கொல்லாமை(மல்) வென்றவர்; அவர் கையிலுள்ளனவாகிய கண்ணுக்கு நிறைந்த தழையும் வாட.........வனவோ? (வாடவிடப்படுவனவோ?) வண்டு நிறைந்த கூந்தலினையும் தூய வார்த்தையினையு முடையாய்!

---

112. பாங்கி கூற்று.

'இவர் முன் யானையைவென்று அதனின்றும் நம்மைக்காத்தார்; அவர் கையிலுள்ள தழையை நாம் ஏலாமலிருத்தல் ஆமோ?" என்று கூறினாள். அவளத்தனும் மகனும்: 'சிவதத்துவத்தினின்றும் சதா

சிவதத்துவந் தோன்றலின் மகளுமென்றும் கூறினர். ‡ இமவான் மகட்குத் தன்னுடைய கேள்வன் மகன்றகப்பன் (திருவாசகம். திருப்பொற்சுண்ணம் 13) என்பதூஉம் அப்பொருள்மேல் வந்தது. (பே-ரை.)

"கனகமார் கவின்செய் மன்றில் அனக நாடகற்கெம் மன்னை. மனைவி தாய் தங்கை மகள் (சிதம்பரச் செய்யுட் கோவை: 33). "சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தையீன்றும்" (சிவஞானசித்தியார்). "சத்தியீன்ற சதாசிவம்" (திருமந்திரமாலை). "அம்மனை யாயவர் தம்மனை யானவள் (மீனாட்சி. பிள்ளைத். அம்மானை 9).

---

## 113. வருத்துரைத்தல்.

கடித்தழை கொணர்ந்த காதற்றோழி
மடக்கொடி மாதர்க்கு வருத்துரைத்தது.

(இ-ள்.) நறுநாற்றமுடை (யதழையை) ஏற்றுக்கொண்டு வந்த உயிர்த்தோழி மடப்பத்தால் தக்க நாயகிக்குக் கூறுபடுத்திச் சொன்னது.

---

ஏறும் பழிதழை யேற்பின்மற் றேலாவிடின் மடன்மா
வேறு மவனிட பங்கொடி யேற்றிவந் தம்பலத்துள்
ஏறு மரன்மன்னு மீங்கோய் மலைநம் மிரும்புனங்காய்ந்
தேறு மலைதொலைத் தாற்கென்னை யாஞ்செய்வ தேந்திழையே

(பொ-ரை.) தழை ஏற்போமாகிற் பழி ஏறுகிற்கும்; மற்று, நாம் தழை ஏற்காதபோது, மடலாகிய புரவியை (அவன்) ஏறுகிற்பன்; இடபத்தைக் கொடியிலே எழுதிப் பிடித்து வந்து, 'பிறவித் துன்பம் தீர்க்கக் கடவேன்' என்று திருவம்பலத்தே ஏறி நின்ற தலைவன் மன்னும் நிலைபெற்ற திரு ஈங்கோய் மலையில் நம் பெரும்புனத்தையும் அழித்து நம்மையும்

கொல்வதாக வந்தேறுகின்ற மலையை நிகர்த்த யானையைத் தோற்பித்தவர்க்கு, மிகுந்த ஆபரணங்களையுடையாய்! நாம் என் செய்வோம்? (எ-று.)

என்ன, தழையேற் (காமலிருப்பது) சில பழியாம்; தழையேலாதபொழுது அவன் மடலேறுதலாலே; உலகெலாம் அறிந்து பெரும் பழியாகுமாதலால், உபகாரம் செய்தாரொருவற்கு, உபகார குன்னியம் செய்து பெரும்பழிபெறுவதின், பிரதியுபகாரஞ்செய்து சிறுபழிபெற வமையாதோ என்றுபடும்.

---

**113.** பாங்கி கூற்று.

மடன்மா ஏறுமவனென்று தழையேலாவிடினும் பழியேறுமென்பதுபடக் கூறினமையானும், ஏறுமலை தொலைத்தாற்கென அவன் செய்த உதவி கூறினமையானும், தழையேற்பதே கருமமென்பது படக்கூறினாளாம். அன்றியும் தழையேற்றால் நமக்கேறும் பழியை அறத்தொடு நிலைமுதலாயினகொண்டு தீர்க்கலாமென்றும் ஏலாவிடின் அவன் மடன்மாவை யேறுதலான் வரும்பழி ஒன்றானும் தீர்க்கமுடியாதென்றும், கூறியவாறாயிற்று. (பே-ரை,)

---

## 114. தழையேற்பித்தல்.

கருங்குழன் மடந்தைக் கரும்பெறற்றோழி
இருந்தழை கொள்கென விரும்பிக்கொடுத்தது.

(இதற்கு உரை இல்லை.)

---

தெவ்வரை மெய்யெரி காய்சிலை [1]யாண்டென்னை யாண்டு கொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் செழுங்கயிலை
அவ்வரை மேலன்றி யில்லைகண் டாயுள்ள வாறருளால்
இவ்வரை மேற்சிலம் பன்னொளி திற்றந்த வீர்ந்தழையே.

(பொ-ரை.) வடமேருவை வில்லாக வளைத்துத் தனக்கு மாறுபாடானவர்கள் புரங்களுடனே அவர்கள் சரீரமும் எரியச் செய்தும் என் நெஞ்சக்கல்லை உருக்கியும் இவ்விரு சிலையையும் தன் வசத்திலே வரப்பண்ணிக்கொண்ட பவளமலை போன்ற திருமேனியையுடையவன்; (என்றது, வசமாக்கவொண்ணாத மலை முதலானவற்றை வசப்படுத்தின சீலிப்பாலே, என் நெஞ்சக்கல்லைக் கரைத்து வசமாக்கினான் என்பது கருத்து) திருச்சிற்றம்பலநாதன் ஸ்ரீ கயிலாயமலையாகிய வரையின்மேலன்றி வேறோரிடத்தும் கிடையாது காண்; இவ்வார்த்தை உள்ளதுகாண்; நாயகன் தன்னுடைய அன்பினாலே, இம்மலையிடத்தே நமக்கெளிதாகக் கொண்டுவந்து தந்த குளிர்ந்த தழை அந்த வரையிடத்தன்றி வேறொரு மலைக்கும் (மலையிலும்) கண்டதில்லை காண். (எ-று.)

---

**114.** பாங்கி கூற்று.

பா-ம். [1]யாக்கிவந்தாண்டு கொண்ட (இப்பாடமே ஏட்டிலுள்ளது.)

வலியனவற்றை வயமாக்கிப் பயின்று பின் என்னை யாண்டுகொண்டான் என்பது போதர, காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்டவென்றார். என்னைத் தனக்கடிமை கொள்ளுதல் காரணமாகப் பிறிதொன்றின் மேலிட்டுக் கல்லை வளைத்தான் என்னெஞ்சை வளைத்தல் காரணமாக அல்லது தனக்கொரு பகையுண்டாய்ச் செய்ததன்று போலும் என்பது கருத்து. "கல்லை மென்கனியாக்கும் விச்சைகொண் டென்னை நின்கழற் கன்பனாக்கினாய்" (திருவாசகம், திருச்சதகம் 94.) (பே-ரை.)

---

## 115. தழைவிருப்புரைத்தல்.

விருப்பவ டோழி
பொருப்பற் குரைத்தது.

(இ-ள்.) நாயகியுடைய விருப்பத்தை அவளுடைய உயிர்த் தோழியானவள் நாயகனுக்குச் சொல்லியது.

பாசத் தளையறுத் தாண்டுகொண் டோன்றில்லை யம்பலஞ்
[சூழ்
தேசத் தனசெம்ம லீதந் தனசென் றியான் கொடுத்தேன்
பேசிற் பெருகுஞ் சுருங்கு மருங்குல் [1]பெயர்ந்தரைத்துப்
[2]பூசிற் றிலளன் றிச் செய்யா தனவில்லை பூந்தழையே.

(பொ-ரை.) பிறவிச் சாகரமாகிய பாசத்தளையாகிய விலங்கை வெட்டி என்னையும் தன் வசமாக்கிக் கொண்டவன்; அவனுடைய திருவம்பலத்தைச் சூழ்ந்தவிடத்திலுள்ளன; பெரியவனே! உன்னாலே தரப்பட்டன; அதிலே கொண்டு சென்று யான் கொடுத்தேனாயிருந்தது; (அதனை நான் எடுத்துக்கொண்டு சென்று கொடுத்தேன்.) அவள் தழையைக்கொண்டு செய்தனவற்றைச் சொல்லிற் பெருகா நிற்கும்; சிறிய இடையினையுள்ளவள், அத்தழையை அரைத்துப் பூசிற்றிலள்; தன்னை அல்லது பொலிவுடைத்தாகிய தழையைக்கொண்டு பெயர்த்துச் செய்யாத பாவகமெல்லாஞ் செய்தாள் காண். (எ-று.)

---

**115.** பாங்கி கூற்று.

பா-ம். பெயர்ந்துரைத்து. பிசைந்தரைத்து. 2. பூசித்திலள்.

என்றது, இவைவாடுமென்று கருதாது அரைத்துப் பூசினாற் போலத் தன்மேனி முழுதும் படுத்தாள் என்றவாறு. (பே-ரை)

கனையாழிகண்ட சீதாப்பிராட்டியின் செயல்களைக் கம்பர் வருணித்தவற்றை இங்கு ஒப்பிடலாம்.

## சேட்படை முற்றிற்று.

## 13. பகற்குறி.

பகற்குறியென்பது தலைமகளைத் தமையேற்பித்துத் தோழி தலைமகனுடன் அவளைப் பகற்குறிக்கட் டலைப்பெய்வியாநிற்றல். இது முப்பத்திரண்டு துறையுடைத்து. அவை வருமாறு:-

[1]குறியிடங் கூறல், [2]ஆடிடம் படர்தல்,
[3]குறியிடைச் சேறல், [4]இடத்துய்த்து நீங்கல்,
[5]உவந்துரைத் தலொடு, [6]மருங்கணை தல்லே,
[7]அறிவறி வித்தல், [8]அவனுண் மகிழ்தல்,
[9]ஆயத் துய்த்தல், [10]தோழிவந்து கூடல்,
[11]ஆடிடம் புகுதல், [12]தனிகண் டுரைத்தல்,
[13]தடமென் முலையாள் பருவங் கூறி,
வரவு விலக்கல், [14]வரைவுடம் படாது
மிகுத்துரைத் தலொடு, [15]மெய்ம்மை யுரைத்தல்,
[16]வருத்தங் கூறல், [17]தாயச்சங் கூறல்,
[18]இற்செறி வறிவித்தல், [19]தமர்நினை வுரைத்தல்,
[20]எதிர்கோள் கூறல், [21]ஏறுகோள் கூறல்,
[22]ஏதிலார் தம்முரை கூறல், [23]அவளொடு
கூறுவாள் போன்று, நிணமுதிர் வுரைத்தல்,
[24]பகல்வரல் விலக்கல், [25]பையு ளெய்தித்
தினையொடு வெறுத்தல், [26]சிறைப்புற மாக
வேங்கையொடு வெறுத்தல், [27]வெற்பமர் நாடற்குக்
கழுமலுற் றிரங்கல், [28]கடிப்புனங் கையறக்
கொய்தமை கூறல், [29]பிரிவருமை கூறல்,
[30]மயிலொடு கூறல், [31]வறும்புனங் காண்டல்,
[32]பயில்பதி நோக்கிப் பதிமிக வாடல்,
சொன்னநா லெட்டுந் தோன்று மியற்கை
மன்னிய பகற்குறி வகையா கும்மே.

(பே-ரை.)

## 116. குறியிடங் கூறல்.

வாடிடத்தண்ணல் வண்டழையெதிர்த்தவள்
ஆடிடத்தின்னியல் பறியவுரைத்தது.

(இ-ள்.) நாயகன் வாடினவிடத்து அழகிய தழையைப் பெற்றுக்கொண்டவள் விளையாடுகிற இடத்தின் இயல்பை அறியும்படி சொல்லியது.

---

வானுழை வாளம் பலத்தரன் குன்றென்று வட்கிவெய் [யோன்
தானுழை யாவிரு ளாய்ப்புற நாப்பண் வண்டாரகைபோல்
தேனுழை நாக மலர்ந்து திகழ்பளிங் கான்மதியோன்
கானுழை வாழ்வுபெற் றுங்கெழில் காட்டுமோர் கார்ப் [பொழிலே.

(பொ-ரை.) ஆகாயத்தினிடத்திலே உண்டாகிய ஒளியாயுள்ளவன்; திருவம்பலத்தேயுளனாகிய தலைவன்; (அவனுடைய) திருமலையென்று கூசிப் புறச்சோலையெல்லாம், ஆதித்தன் புகுந்து நுழையாத இருளாய், வண்மையுடைய நக்கத்திரங்கள் போல.........சுரபுன்னைகள் மலர்ந்து விளங்காநின்ற பளிக்குப் பாறைகளான சந்திரனானவன் வானிடத்துவாழ்வை யொழித்துக் கானிடத்து வாழ்வு பெற்றாற்போலத் தன்னழகை விட்டு விளங்கா நின்றது கரிய பொழிலானது; என்ன, 'அவ்விடத்தேற வா' என்றது. (எ-று.)

---

116. பாங்கி கூற்று.

தேன் நுழை நாகம் - வண்டுகள் புகும் சுரபுன்னை மலர்கள்; இப்பகுதிக்குப் பொருள் ஏட்டில் சிதைந்துள்ளது.

வட்கி - கூசி. நாகம் - சுரபுன்னை; ஒருமரம்.

"வான் உழைவாள்......அரன்" என்ற பகுதிக்கு இருட்கு அப்பாலாகிய வானிடத்துண்டாகிய ஒளி; இவ்வண்ணம் சேயனாயினும் அணி

யனும் அம்பலத்தின்கணுளனாகிய அரன்' என்று பேராசிரியர் பொருள் கூறுவர். இன்னும் அவர், "அண்ட மாரிருளூடு கடந்தும்ப - ருண்டு போலுமோரொண் சுடர்" (திருநா. தேவாரம். சித்தத்தொகைக் குறுந்தொகை 2) என்பதூஉம் அப்பொருண்மேல் வந்தது. வட்கி யென்பதனால் முன் பற்பறியுண்டானாதல் விளங்கும். வானுழை வாளென்பதற்குக் கற்பகவிறுதிக்கண் தோன்றிய முறையானே வான் சென்றொடுங்கும் ஒளியென்றுரைப்பாருமுளர்" என்றும் கூறுவர்.

வெய்யோன் தானுழையாப் பொழில்:— 'கோடையுங் கொண்டலும் கண்டறியாத குளிர்பொழில். (அம்பிகா. 150)

---

## 117. ஆடிடம்படர்தல்.

வண்டமைழயெதிர்ந்த வொண்டொடிப்பாங்கி
நீடமைத்தோளியொ டாடிடம்படர்ந்தது.

(இ-ள்) அழகிய தழையைப் பெற்றுக்கொண்ட அழகிய வளையணிந்த பாங்கி நீண்ட வேயை ஒத்த தோள்களையுடையாருடனே விளையாடுகிற விடத்திற் சென்றது.

---

புயல்வள ருசன்முன் னுடிப்பொன் னேபின்னைப் போய்ப் [பொலியும்
அயல்வளர் குன்றினின் றேற்று மருவி திருவுருவிற்
கயல்வளர் வாட்கண்ணி போதரு காதரந் தீர்த்தருளுந்
தயல்வளர் மேனிய னம்பலத் தான்வரைத் தண்புனத்தே.

(பொ-ரை.) பொன்னே ஒப்பாய்! கயலையொத்த ஒளி சிறந்த கண்களையுடையாய்! போதுவாயாக. பிறவியினாலே வருகின்ற அச்சத்தைத் தீர்த்தருளுகிற சங்கரி தங்குகிற திருமேனியையுடையவன்; திருவம்பலநாதன். அவனுடைய திருமலையிற் குளிர்ந்த புனத்திடத்தே, முன்பு மேகங்கள் தங்குகிற

ஊசலே யாடி, பின்பு அருவிநீரை யேற்று விளையாடக் கடவோம்; போதுவாயாக. (எ-று.)

---

**117.** பாங்கி கூற்று.

ஏற்றுமருவி என்பதனை அருவி ஏற்றும் எனமாற்றி, அருவியை ஏற்போம் எனப் பொருள் கூறுவர் பேராசிரியர்.

காதரம் - பிறவி காரணமாகவரும் அச்சம்; போதரு - பேரது வாயாக.

'திருவுருவில்' என்றதற்கும். பொலியும் அயல்வளர் என்றதற்கும் பொருள் கூறப்படவில்லை. 'திருப்போலும் உருவினையும்' என்றும் அயலே வளர்ந்து 'விளங்கும்' என்றும் இவற்றிற்குப் பொருள் உரைத்துக் கொள்க.

உயர்ந்த வாழை மரத்தில் தொடுத்தலால், புயல்வளர் ஊசலென்றாள். (பே-ரை)

---

## 118. குறியிடத்துக் கொண்டுசேறல்.

அணிவள ராடிடத் தாயவெள்ள
மணிவளர்கொங்கை மருங்ககன்றது.

(இ-ள்) அழகுமிக்க விளையாட்டிடத்தே ஆயக்கூட்டத்தாரிடத்தினின்று, முத்துமணி அணியப்பட்ட ஆபரணங்களையுடையாளுடனே ஒரு பக்கத்திலே சேர்ந்தது.

---

தினைவளங் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச்சிற்றின் [முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழுதெழுவார்
வினைவளர் நீறெழ நீறணி யம்பலவன் றன்வெற்பிற்
புனைவளர் கொம்பரன் னாயன்ன காண்டும் புனமயிலே.

(பொ-ரை.) "தினையாகிய வளத்தையும் காவலாகியிருந்து, சிலம்பிற் கெதிரழைத்து, சிறு வீடுகளை நெடும்போதெல்லாம் எடுத்து விளையாடி, சுனைக்கு வளமாகிய நீரையும் குடைந்து, இணையொத்த புட்பங்களையும் பறித்துத் தன்னைத் தொழுது செல்வாருடைய இருவினைகளும் நுண்பொடியாம்படி திரு நீறணி அம்பலவன் திருமலையில் கைசெய்து வளர்க்கப்பட்ட வஞ்சிக்கொடியை ஒப்பாய்! அத்தன்மையாகிய புனத்தின் மயில்களையும் காணக்கடவோம்" என்று அங்கு ஏறப்போனது.

---

**118.** பாங்கி கூற்று,

வளம் - மிகுதி; மொய் வளம் பூத்த முயக்கம் (பரி. 18 18) என்பதற்குப் பரிமேலழகர் 'இறுகல் மிகுதியையுடைய முயக்கம்' என்று பொருள் கூறுவர்.

மகளிர் விளையாடல்கள் இங்குக் கூறப்பெற்றன. முற்றிழைத்து- மிகவும் இழைத்து என்றும் கூறலாம்.

தொழுதெழுதல்:— "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" (குறள். 55)

'தொழுதெழுவார் - தொழா நின்று துயிலெழுவாருடைய. தொழுதெழுவாரென்றது துயிலெழுங் காலத்தல்லது முன்னுணர் வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் என்றவாறு. நீறணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும் எழிலுடைமையான். அக் கோலம் தொழுதெழுவாருள்ளத்து நீங்காது நிற்றலான், ஆண்டுள்ள வினை நீறுமென்னுங் கருத்தான். வினைவள நீறெழ நீறணியம்பலவ னென்றார். புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாலொற்போலத் தொழுதெழுவார் வினைக்குத் தான் நீறணிந்தானென்பாருமுளர். (பே-ரை.)

புதல்வன் பிணிக்குத் தாய் மருந்துண்டல்:— "பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென, நோயுண் மருந்து தாயுண்டாங்கு" (சிதம்பர மும்மணி 14-15) "நீற்றினை யணிந்தது வெனின்னிறைவ னென்றே. சாற்றினை யுயிர்க்கிடர் தணிப்பதென வெண்ணுய். தோற்றியுள தம் புதல்வர் துன்பமுறு மந்நோய். மாற்றும்வகை யன்னைய ருருந்திய

மருந்தாம் (திருவாதவூர்ப் புத்தரை வாதில் வென்ற. 76) "இளங் குழவிப் பிணிக்கீன்ற தாய் மருந்து நுகர்வதுபோல்" (திருவானைக்காப் புராணம்; கடவுள் 7)

---

## 119. இடத்துய்த்து நீங்கல்.

மடத்தகை மாதரை யிடத்தகத்துய்த்து
நீங்கலுற்ற பாங்கி பகர்ந்தது.

(இ-ள்) மடப்பத்தால் தகுதியுடைய நாயகியைத் தன் குறியிடத்து, (செலுத்தித் தான் நீங்கிய) பூத்த வல்லிசாதம் போன்ற தோழி சொன்னது.

---

நரல்வே யினநின தோட்குடைந் துக்கநன் முத்தஞ்சிந்திப்
பரல்வே யறையுறைக் கும்பஞ் சடிப்பரன் றில்லையன்னாய்
வரல்வேய் தருவனிங் கேநி லுங்கேசென் றுன்வார்குழற்கீங்
குரல்வே யளிமுரல் கொங்கார் தடமலர் கொண்டுவந்தே.

(பொ-ரை.) நாதம் பண்ணுகிற மூங்கிலினம் உன்னுடைய தோளுக்குத் தோற்று உகுத்த நன் முத்தானது பரந்து, அந்தப் பரலாலே மூடப்பட்ட கற்பாறையானது உன் காலுக்கு உறுத்தா நிற்கும் அடியும் பஞ்சுதானாக விருந்தது. சிவனுடைய புலியூரை யொப்பாய்! வாராதேகொள்; நான் சூட்டக் கடவேன்; இங்கே நில்; அவ்விடத்திலே போய் யான் உன்னுடைய நீண்ட கூந்தலுக்கு ஈரபாரமுடைத்தாகிய பூங் கொத்துக்களை மூடி, வண்டுச் சாதிகள் ஆரவாரிக்கிற வாசனை நிறைந்த பெரிய புட்பங்களைப் பறித்துக்கொண்டு வந்து நான் சூட்டக்கடவேன்; அவ்வளவும், நீ இங்கு நிற்பாயாக. (எ-று.)

---

**119.** பாங்கி கூற்று.

நரல் வேய் – காற்றுனது ஒன்றோடொன்று தேய்ந்து நரலும் வேய் (பே-ரை) பரல் வேய் அறை – பரல்கள் மூடிய பாறை. பஞ்சி

அடி உறைக்கும் என்று மாற்றிப் பஞ்சடிக்கண் உறைக்கும் என்பர் பேராசிரியர். உங்கே சென்று உவ்விடத்தே (அவ்விடத்தே) சென்று 'உந்திடம் - உவ்விடம் - (சிற். 223). குரல் - பூங்கொத்து. தடமலர் - பெரியமலர், தடத்துமலரென்றுரைப்பாருமுளர்.

'பரல்வேயபறை யுறைக்கும் வரல்; வேய் தருவன்; இங்கேகில்' என்று தோழி கூறி அகன்றாள்.

---

## 120. உவந்துரைத்தல்.

களிமயிற்சாயலை யொருசிறைக்கண்ட
ஒளிமலர்த்தாரோன் உவந்துரைத்தது.

(இ-ள்.) கர்ச்சிதமான மயில்போன்ற சாயலையுடையாளை ஒருபுறமாக நிற்கக் கண்ட பிரகாசமுடைய மாலையை யணிந்த நாயகன் சந்தோஷித்துச் சொன்னது.

---

படமா சுணப்பள்ளி யிக்குவ டாக்கியப் பங்கயக்கண்
நெடுமா லெனவென்னை நீநினைந் தோநெஞ்சத் தாமரையே
இடமா விருக்கலுற் றோதில்லை நின்றவ னீர்ங்கயிலை
வடமார் முலைமட வாய்வந்து வைகிற்றிவ் [1]வார்பொழிற்கே.

(இ-ள்.) இந்த மலையைப் படமுடைத்தாகிய அராவணை யாக நியமித்துச் செந்தாமரைக் கண்ணாகிய நெடிய மாலாக என்னை நிச்சயித்தோ? என் இருதய தாமரைப் பூவை(யே) இடமாகக் கொண்டிருப்பதாக எண்ணித் துணிந்தோ? புலி யூரிலே எழுந்தருளி நின்றவனுடைய கயிலைமலையில், முத்து வடமார்ந்த முலையினையுடைய பெண்ணே! நீண்ட கா(வகத்தே) வந்து அவதரித்தது. (எ-று.)

---

120. தலைவன் கூற்று.

பா - ம். [1]வான்பொழிற்கே.

வந்துமிவற்றிலார் பொழிற்கே என்று ஏட்டிற் காணப்பெறுகின்றது. இப்பகுதிக்குரிய பொருளும் சிதைந்திருப்பதால் திட்டமாக அறுதியிட முடியவில்லை.

மாசுணம் - பாம்பு.

நெடுமாலென வென்னை நீ நினைந்தோ:- "நீயோ திருமகள் நின்னைமுன் னுள்வா நேர்ந்துபெற்ற. தாயோ அமுதம் தருந் திருப்பாற் கடல் கார்க்கடல்போல், தீயோ டழல்விழிச் சேக்கையின் மேற்றிருக் கண்வளர்ந்த மாயோன் என நினைந்தோ என்னை வாழ்விக்க வந்ததுவே (அம்பிகா. 154.)

இதனை 'இறையோனிடத் தெதிர்ப்படுத்தற்குச்' செய்யுளாகக் கூறுவர் இலக்கண விளக்கவாசிரியர் (சூ. 509-உரை.)

---

## 121. மருங்கணைதல்.

[1]வாணுதலரிவை நாணுதல்கண்டு
கோதை வேலவன் ஆதரவுரைத்தது.

(இ-ள்.) ஒளி சிறந்த நெற்றியினையுடைய நாயகியை நாணினபடியைக் கண்டு மாலையணிந்த வேலினையுடையவன் ஆதரவினாலே சொல்லியது.

---

தொத்தீன் மலர்ப்பொழிற் றில்லைத்தொல் லோனரு
[ளென்னமுன்னி
முத்தீன் குவளைமென் காந்தளின் மூடித்தன் னேரளப்பாள்
[2]ஒத்தீர்ங் கொடியி னொதுங்குகின் றுண்மருங் குன்னெருங்கப்
[3]பித்தீர் பணைமுலைகா ளென்னுக் கின்னும் பெருக்கின்றதே.

(பொ-ரை.) கொத்துப் பூவாக வனையப்பட்ட(?) அழகிய பொழில் சூழப்பட்ட தில்லையிற் பழையவனாகிய முதலியாருடைய அருளென வந்து, சேர்ப்பட்டு, முத்துப்போன்ற

கணணின் நீர்த்துளித்தாரை விடுகிற நீலப்பூவை யொத்த கண்களை மதுரமாகிய காந்தட் பூவொத்த கரங்களாலே மறைத்துத் தன் அழகை ஒப்பிட்டுப் பார்ப்பாரை யொத்து, குளிர்ந்த வல்லி சாதக்கொடியிலே மறைந்து நின்றவள் இடை, ஒதுங்க? (நெருங்க) பித்தை யுடையீராகிய பெரிய முலைகாள்! இவ்விடை இத்தன்மை ஆகியபடி கண்டும் இன்னமும் நீங்கள் பெருக்கின்றதென்ன காரணத்தான்? (என்றுபடும்).

---

121. தலைவன் கூற்று.

பா-ம். [1]வாணுதலரிவையை. [2]ஈன்கொடி [3]ஈன்பணைமுலை.

'இவ்வாறு தான் ஆதரவுரைத்து இருமருங்குல் தாங்குவனைச் சென்று சாருமென்பது. (பே-ரை.)

குவளைமென் காந்தளின் மூடி:— 'தாமரை தண்மதி சேர்ந்தது மணிபோலக் காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றி (மணிமே. 3. 12-13) என்பதனோடு ஒப்பிடுக.

தன்னேரளப்பா ளொத்து:— 'நலங்கொள் மைந்தனைத் தழுவின னென்ப தென்னளிநீர். நிலங்கடாங்குறு நிலையினை நிலையிட நினைத்தான், விலங்கலன்ன திண்டோளையு மெய்த்திருவிருக்கும் அலங்கன் மார்பையுந் தனது தோண் மார்புகொண் டளந்தான். என்ற கம்பர் வாக்கை (அயோத்தியா: மந்திரம். 60 )யும் ஒப்பிடுக.

---

## 122. பாங்கியறிவுரைத்தல்.

[1]நெறிகுழற் பாங்கி
அறிவறி வித்தது.

(இ-ள்.) தாழ்ச்சியினையுடைய கூந்தலையுடைய பாங்கி இக்கூட்டத்தை அறிந்தபடியை அறிவித்தது.

---

அளிநீ டளகத்தி னட்டிய தாது [2]மணியணியும்
ஒளிநீள் சுரிகுழற் சூழ்ந்தவொண் மாலையுந் தண்ணறவுண்
களிநீ யெனச்செய்த வன்கடற் றில்லையன் னாய்கலங்கல்
தெளிநீ யனையபொன் னே[3]பன்னு கோலந் திருநுதலே.

(பொ-ரை.) வண்டுகள் மிக்க கூந்தலிலே இட்ட செருகு பூவும், ஆபரணங்க ளணிந்தபடியும், ஒளிமிக்க நீண்ட கூந்தலிலே சுற்றின அழகிய மாலையும், மதுரமான தேனையுண்டு களிக்கும்படி செய்தவன்; கடல் சூழ்ந்த பெரும்பற்றப் புலியூரனையாய்! கலங்காதே! தெளிந்துவிடு. நீ உனக்கு உன்னையொத்த பாங்கியாலே ஆராய்ந்தணியப்பட்ட கோலந்தானே காண். ஆதலால் நானணிந்த கோலம் வேறுபட்டதென்று கலங்காதே தெளிந்துவிடுக. (எ-று.)

---

தலைவன் கூற்று.

(பா-ம்) [1]செறிகுழல். [2]அணிமணியும். [3]மன்னு.

'பாங்கியறிவுரைத்தலென்பது, மருங்கணை விறுதிக்கண் தலைமகளை தையந்தீர, அவளைக் கோலஞ்செய்து, 'இது நின்றோழி செய்த கோலமே; நீ கலங்காதொழி' யெனத் தலைமகன் தான் தோழியோடு தலைப்பெய்தமை தோன்றக் கூறுநிற்றல்' என்பது பேராசிரியருரை.

திருநுதலே என்பதற்கு உரை இல்லை. திருநுதலாய் என்பது பொருள்:

நீ 'குளிர்ந்த நறவையுண்ணுங் களிமகனென்று பிறர் சொல்லும் வண்ணம் ஓரின்பத்தை யெனக்குச் செய்தவனது கடலையுடைய தில்லையை ஒப்பாய்' என்று பொருளெழுதி 'இதற்குப் பிறிதுரைப் பாருமுளர்' என்பர் பேராசிரியர்.

தண்நறவு உண்டல்:— "தண்கமழ் தேறல்" (புறம். 24-32). நறுந்தேற லுண்பவன் முகம்போல" (கலி. 73: 4).

'பாங்கியறிவு - பாங்கியவ்வொழுக்கத்தை அறிந்தவறிவு.

தலைவிக்குத் தலைவன் கோலஞ்செய்தலைப் பெருங்கதையில் பரக்கக் காணலாம்.

அளகத்தின் அட்டியதாது (சிற். 69); பெருங்கதை(1-33.16-20).

## 123. உண்மகிழ்ந்துரைத்தல்.

தண்மலர்க் கோதையை
உண்மகிழ்ந் துரைத்தது.

(இ-ள்.) குளிர்ந்த பூமாலையுடையாளை உள்மகிழ்ந் துரைத்தது.

---

செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம் பலவன் றிருக்கழலே
கெழுநீர் மையிற்சென்று கிண்கிணி வாய்க்கொள்ளுங் [கள்ளகத்த
கழுநீர் மலரிவள் யானதன் கண்மருவிப் பிரியாக்
கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை யளிகுலமே.

(பொ-ரை.) அழகிய நீர்மையுடைத்தாகிய மதியைத் திருநெற்றிமாலையாகவுடைய திருவம்பலநாதன் சீபாதங்களை ஒக்க வேண்டுமென்கின்ற தன்மையினாலே, போதாகிய தன்மையை விட்டுப் பூவாகிய தன்மையாலே சென்றடைந்து சிறிதே மலரத் தொடங்கும் தேனை உள்ளடக்கின கழுநீர் மலரை ஒப்பாள் இவள்; நான் செங்கழுநீர் மலரிடத்தே எப்பொழுதும் பழகி அதைவிட்டு நீங்காத அழகிய நீர்மையுடைத்தாகிய தேனை உண்கிற வண்டினை ஒப்பன். (எ-று.)

செங்கழுநீர் மலரை ஒப்பதென்றதனால் இவளும் பேதைப் பருவங் கடந்து இளமைப் (இன்பப்) பருவத்தளானவள் என்றது. கள்ளகத்த கழுநீர் என்றதனால், இவளும் உள்ளடக்கின காதலையுடையவள்; அது வெளிப்படுவதற்கு முன்னே வரைந்துகொள்ள வேண்டுமென்னும் நினைவுடையள் என்று படும்; அச்செங்கழுநீர் மலரிடத்தே பழகி அதைவிட்டு நீங்காத வண்டிச் சாதியை ஒப்பனென்றதனால், வரைந்துகொள்ள வேண்டுமென்கின்ற நினைவொழிய வேறொரு நினைவுடையேனல்லன் என்றுபடும்; பெரு நீர்மையளிகுலம்; பெரு

நீர்மை என்றது, ஒருவருக்குப் பெருந்தன்மையாவது; அது தம்மாற் பாதுகாக்கப்படுவாரைப் பாதுகாக்கை.

---

**123.** தலைமகன் கூற்று.

இதனுடன் பின்வரும் செய்யுளை ஒப்பிடுக:—

மானேயிக் காவோர் தடநீ கமல மலர்மலர்வண்
தேனே வளருகின் பேரின்பம் வந்துனைச் சேர்ந்ததுற்ற
கானேயத் தேனையுண் வண்டுகண் டாய்நன் னதியுடனே
வானோர் மதியணி கோடிச் சுரமித்தர் மால்வரைக்கே.

(கோடீ. 22)

பெருநீர்மை யளிகுலம் என்றான். கழுநீர்மலரல்லது ஊதாமை யின்: அதனால் பிறிதோரிடத்துந் தன்னுள்ளஞ் செல்லாமை விளங்கும். (பே-ரை.)

கிண்கிணிவாய்க் கொள்ளும் கிண்கிணி - சிறிதுமலர்தல்.

---

## 124. ஆயத்துய்த்தல்.

கனைகடலன்ன கார்மயிற்கணத்துப்
புனைமடமானைப் புகவிட்டது.

(இ-ள்.) ஆரவாரிக்கிற கடலையொத்த கார்காலத்து மயிலையொத்த ஆயக்கூட்டத்தாரின் திரளிலே ஒப்பினையுடைய பார்வையால் மான்போல்வாளைப் புகவிடுத்தது.

---

கொழுந்தா ரகைமுகை கொண்டலம் பாசடை விண்மடுவில்
எழுந்தார் மதிக்கம லம்மெழி றந்தென விப்பிறப்பில்
அழுந்தா வகையெனை யாண்டவன் சிற்றம் பலமனையாய்
செழுந்தா தவிழ்பொழி லாயத்துச் சேர்க திருத்தகவே.

(பொ-ரை.) அழகிய தாரகைகளாகிய முகை விரியா அரும்புகளையும், மேகங்களாகிய அழகிய பச்சென்ற இலைகளையு

முடைய ஆகாயமாகிய மடிவில் எழுந்து நிறைந்த சந்திரனாகிய வெண்டாமரைப்பூ அத்தாரகைகளுக்கு அழகளித்தாற்போல, இப்பிறப்பிலே வருந்தாதபடி அடிமை கொண்டவன் திருச்சிற்றம்பலத்தை ஒப்பாய்; அழகிய தாதுவிரிகின்ற சோலையிடத்தே ஆயக் கூட்டத்தாரிடத்தே சேர்வாயாக, திருத்தகவே. (எ-று.)

அந்த ஆயக்கூட்டம் அழகு பெறும்படி செய்வாயாக; அது எங்ஙனமெனில், சந்திரன் அன்றி (யிருக்கும்போது) பொலிவழிந்து கிடக்கிற நக்ஷத்திரங்களுக்கு அழகளிக்கச் சந்திரன் உதயமானாற்போல உன்னையன்றி......வெ......பொலிவழிந்து கிடக்கிற ஆயக்கூட்டம் பொலிவு பெறும்படி சென்று சேர்வாயாக என்ற பொருளாய், வெண்டாமரையை யொத்த தாரகைகளென்றும், தாரகைகளைப்போன்ற பாங்கிமாரென்றும், வெண்டாமரைப் பூவையொத்த மதியென்றும் சொன்னால் உவமைக்கு உவமையாகாதோவெனின், ஒத்த பண்பு வேறுபடுகையாலே உவமையாகாது; வேறுபட்டபடி என்னெனின், வெண்டாமரை முகையுடன் தாரகைக்கு உவமை வெண்மையும் வடிவும்; தாரகையுடன் பாங்கிமார்க்கு உவமைப் பன்மையும், ஒன்றுக்குச் சுற்றமாய் அதில் தாழ்ந்து நிற்கையும்; வெண்தாமரைப் பூவுடன் மதிக்கு உவமை வடிவும் பொலிவும்; சந்திரனுடன் நாயகிக்குவமை, கண்ணுக்கு இனிமையும் சுற்றத்திடை மேலாய்த் தோன்றுகையும்; ஆகையாலே உவமைக்குவமையாகாது; உவமைக்குவமை இல்லென மொழிப.

---

**124.** தலைவன் கூற்று.

உவமைக்குவமையாகாமையை இவ்வாறே பேராசிரியருங்கூறுவர். தலைமகளுக்கு மதி.

> நாண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
> பேணி நிறுத்தா ரணி.

என்ற கலி. 104: 27-28 அடிகளும் அவற்றிற்கு, 'மீனும் மதியும் ஆயத்திற்கும் மகளிர்க்கும் உவமை என்று நச்சினார்க்கினியர் கூறிய உரையும் நோக்கத்தக்கன.

---

## 125. தோழிவந்து கூடல்.

*நெறியுறுகுழலியை நின்றிடத்துய்த்துப்*
*பிறைநுதற்பாங்கி [1]பெயர்ந்தவட்குரைத்தது.*

(இ-ள்) நெறித்தலுடைய அளகத்தினையுடைய நாயகியைத் தன் குறியிடத்தே நிறுத்தி, நீங்குகின்ற பிறைபோன்ற நெற்றியையுடைய பாங்கி மீண்டுவந்து நாயகிக்குச் சொன்னது.

---

பொன்னனை யான்றில்லைப் பொங்கர வம்புன் சடைமிடைந்த
மின்னனை யானருண் மேவலர் போன்மென் விரல்வருந்த
மென்னனை யாய்மறி யேபறி யேல்வெறி யார்மலர்கள்
இன்னன யான்கொணர்ந் தேன்மணந் தாழ்குழற் கேய்
[வனவே.

(பொ-ரை.) பொன்னை யொப்பவன்; புலியூரில் மிக்க பாம்பையும் கங்கையையும் சிவந்த திருச்சடையிலே நெருங்கும்படி வைத்த மின்னை நிகர்ப்பான்; அவன் திருவருளைப் பொருந்தாதவரைப் போலே மெல்லிய விரல்கள் வருந்த மெல்லிய அரும்புகள் வருந்த (?), பார்வையினால் மான்கன்றை நிகர்ப்பாய்! பறியாதேகொள், நறுநாற்ற மிக்க புட்பங்களை; இத்தன்மையன யான் கொண்டுவந்தேன் காண், மிகுந்த வாசனையுள்ள கூந்தலுக்குப் பொருந்துவன என்றுபடும்.

---

125. பாங்கி கூற்று.

(பி-ம்.) [1]பெயர்ந்திவட்குரைத்தது.

[2] என்னனையாய்.

'ஆய்மறியே - அசைந்த மான்மறி போல்வாய்' என்பர் பேராசிரியர். இன்னும், 'இவள் மலரைப் - பறியாமல் மொட்டைப் பறிப்பானேன் என்பது கடா. அதற்கு விடை; இவள் தலைமகனைப்

பிரிந்து அப்பிரிவாற்ருமையானும். தலைமகன் புணர்ச்சி நீக்கத்துக் கண் தன்னைக் கோலஞ் செய்த அக்கோலத்தைத் தோழி காணு நின்ருளென்னும் பெருநாணினுனும் ஆற்ருளாய், மலரைப் பறிக்கின்ற வள் மயங்கி மொட்டைப் பறித்தாளென வறிக. மெல்லிய மொட் டுக்களைப் பறியாதொழி. இத்தன்மைய நறுமலரை நின் குழற்கணி தற்கு யான் கொணர்ந்தேனென்பதனுன் இவ்வொழுக்கம் யானறியப் பட்டது காணென்றுடம்பாடு கூறியவாருயிற்று' என்றும் அவர் கூறுவர்.

இதனை, 'பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டற்கு'ச் செய்யுளாகக் கூறுவர் இலக்கண விளக்கவாசிரியர். (சூ. 509. உரை.]

---

## 126. ஆடிடம் புகுதல்.

தனிவிளையாடிய [1]தாழ்குழற்றேழி
பனிமதி நுதலியொ டாடிடம்படர்ந்தது.

(இ-ள்.) தனியே விளையாடிய நீண்ட கூந்தலினையுடைய தோழி குளிர்ச்சி பொருந்தின பிறைபோன்ற நெற்றியினை யுடையாளுடனே விளையாடுகிற விடத்தேறப்போனது.

---

அறுகா னிறைமல ரைம்பா னிறையணிந் தேனணியார்
துறுகான் மலர்த்தொத் துத்தோகை தொல்லாய மெல்லப்
சிறுகான் மருங்குல் வருந்தா வகைமிக வென்சிரத்தின் [புகுக
உறுகால் பிறர்க்கரி யோன்புலி யூரன்ன வொண் ணுதலே.

(பொ-ரை.) (முன் சொன்ன மொழியை மாற்றி) அழ கார்ந்த நறுநாற்றம் நெருங்கின பூக்கொத்துக்களை வண்டுகள் நிறைந்த பூவையுடைய ஐம்பால் வகுத்த கூந்தலிலே நிறைய வணிந்தேன்; தோகை நல்லாய்! சிறிய தென்றல்வரின் இடை தளர்ந்து வருந்தாதபடி, பழைய ஆயக்கூட்டத்தாரிடத்தேற

மெல்லச் சென்று புகுவாயாக; மிக என்னுடைய சிரத்திலே பொருந்தின சீபாதங்களைப் பிறர் மிகவும் பெறுதற்கரியவன்; அவனது பெரும்பற்றப் புலியூரினை யொத்த நுதலினையுடையாய்; (எ-று.)

---

126. பாங்கி கூற்று.

(1) (பி-ம்.) தார்குழல்.

'அறுகானிறை மலரை யணிந்தேனென்றும், மலர்க் கொத்துக் களையுடைய தோகாயென்றும் உரைப்பாருளர். (பே-ரை.)

## 127. தனிகண்டுரைத்தல்.

வேயொத்த தோளியை யாயத்துய்த்துக்
குனிசிலையண்ணலைத் தனிகண்டுரைத்தது.

(இ-ள்.) மூங்கிலை நிகர்த்த தோளினையுடைய நாயகியை ஆயக்கூட்டத்தாரிடத்திலே விட்டு வளைந்த வில்லினையுடைய நாயகனைத் தனியே நிற்கக் கண்டு சொல்லியது.

தழங்கு மருவியெஞ் சீறூர் பெரும விதுமதுவுங்
கிழங்கு மருந்தி யிருந்தெம்மொ டின்று கிளர்ந்துகுன்றர்
முழங்குங் குரவை யிரவிற்கண் டேகுக முத்தன்முத்தி
வழங்கும் பிரானெரி யாடி தென்றில்லை மணிநகர்க்கே.

(பொ-ரை.) பெரியோனே! முழங்கப்படாநின்ற அருவிகளையுடைய எங்கள் சிறிய ஊர் இதுதானாயிருக்கும். தேனும் கிழங்குமாக நுகர்ந்து இன்றைக்கு எங்களோடும் கூடவிருந்து குன்றவரானவர்.........எழுந்து ஆரவாரிக்கின்ற குரவைக் கூத்தையும் கண்டு போவாயாக; அழிவில்லாதவன்; அழியாத சுகத்தை நம்பின அடியார்க்கும் மற்றுள்ளவரான மக்களுக்கும்

கொடுக்கிற சுவாமி, ஊழித்தீயிடத்தாடி, தக்ஷிணத்துக்குப் பெரிய திருப்பதியாகிய அழகிய (தில்லை) நகருக்குள், இற்றைக்கு எங்களுடன் அவதரித்து, உதய காலமே போவாய். (என்பது கருத்து.)

---

**127.** பாங்கி கூற்று.

ஏற்பார்மாட்டொன்றும் கருதாது கொடுத்தலின் வழங்குமென்றார். உலகியல் கூறுவாள்போன்று ஒருகானீவந்து போந்துணையாலிவளாற்றும் தன்மையல்லளென்பது பயப்பக்கூறி. வரைவு கடாயவாறு. (பே-ரை.)

முத்தன் - முத்தராவார் மகாதேவர். (தக்க. 610. உரை.)

இதனை 'விருந்து விலக்கற்குச் செய்யுள்' என்பர் இலக்கண விளக்கவாசிரியர். (சூ. 509. உரை.)

---

## 128. பருவங்கூறி வரவுவிலக்கல்.

மாந்தளிர் மேனியை வரைந்தெய்தா
தேந்தலிவ்வா றியங்கலென்றது.

(இ-ள்.) மாந்தளிர் போன்ற மேனியையுடைய நாயகியை வரைந்து கொள்வதன்றி நாயகனே, இவ்வழியில் வாராதே கொள் என்றது.

---

தள்ளி மணிசந்த முந்தித் தறுகட் கரிமருப்புத்
தெள்ளி நறவந் திசைதிசை பாயு மலைச்சிலம்பா
வெள்ளி மலையன்ன மால்விடை யோன்புலி யூர்விளங்கும்
வள்ளி மருங்குல் வருத்துவ போன்ற வனமுலையே.

(பொ-ரை.) மாணிக்கங்களைத் தள்ளிச் சந்தன மரங்களைத் தூக்கித் தறுகண்மையுடைய கரியின் கோடுகளைக் கொழித்துத்

தேனானது திசைதிசை தோறும் பெருக்கெடுக்கிற மலை......
பக்கமுண்டையவனே. வெள்ளிமலை போன்ற பெரிய இடபத்தை
யுடையவன்; அவனது புலியூரினை யொத்து விளங்குகின்ற
கொடிச்சி இடையை வருத்துவன போன்றிருந்தன அழகிய
முலைகளானவை; ஆதலினாற் கடுக வரைந்து கொள்வாயாக.
(எ-று)

---

128. பாங்கி கூற்று.

பா - ம். புலியூர் புரையும்.

யாவரும் அறியா இவ்வரைக்கண் வைத்த தேன் முதிர்ந்துக்கு
அருவி போன்றெல்லாருங் காணத் திசைதிசை பரந்தாற்போல, கரந்த
காமம் இவள் கதிர்ப்பு வேறுபாட்டாற் புறத்தார்க்குப் புலனாய்
வெளிப்படா நின்றதென உள்ளுறையுவமையாயினவாறு அறிக.
(பே-ரை.)

திசைதிசை 'திசை திசை தேனார்க்கும் திருமருத முன்றுறை'
(கலி. 26: 13:) 'சிந்தினன் சரமாரி திசைத்திசை (கம்ப. நாக
பாசம். 135)

---

## 129. வரைவுடம்படாது மிகுத்துக்கூறல்.

வரைவுகடாய வாணுதற்றோழிக்கு
[1] அருவரைநாடன் ஆற்றாதுரைத்தது.

(இ-ள்.) வரைவை உயர்த்திச் சொன்ன ஒளியையுடைய்
நுதலையுடைய பாங்கிக்கு அரிய மலைமேலுண்டாகிய நாட்டுக்
கதிபதியானவன் ஆற்றாது சொன்னது.

---

[2]மாடஞ்செய் பொன்னக ரில்லையிம் மாதருக் கென்னமன்னும்
பீடஞ்செய் தாமரையோன் பெற்ற பிள்ளையை யுள்ள
[லரைக்
கீடஞ்செய் தென்பிறப் புக்கெடத் தில்லைநின் றோன்கயிலைக்
கூடஞ்செய் சாரற் கொடிச்சியென் றோநின்று கூறுவதே.

(பொ-ரை.) தெய்வலோகத்திலுள்ள பெண்களும் இந்த மாதர்க்கொப்பலல ரென்னும்படி, தாமரைப் பூவை நிலைபெற்ற பீடமாகக் கொண்டிருக்கிற பிரமனாலே பெறப்பட்ட இவளை, — தன்னை நினையாதவரான மாக்களைப் புழுக்கள் மாத்திரந்தானே (என்பதற்காகமம்?) செய்து வைத்து, என்பிறவியானது கெடும்படி பெரும்பற்றப் புலியூரிலே எழுந்தருளி நின்றவன் கயிலைமலையில் - கூடமாகச் செய்யப்பட்ட சாரல் குறத்தி யென்றோ நின்று சொல்லுவதுதான்?

கூடமென்றது மன்றாகச் செய்யப்பட்ட தெய்வக்கோட்டத்தை. மரத்திரளாற் கூடம் செய்தாற்போலும் முழைகளை யுடைய சாரலென்றுமாம். வரைவுடன்படாமை மிகுத்துச் சொன்னது.

---

129. தலைவி கூற்று.

பா - ம்.

1. 'விரைமலர்த்தாரோன் மிகுத்துரைத்தது' என்பதும்

2. 'மாடஞ்செய் பொன்னகருங் கிரில்லை யிம்மா தர்க் கென்னப்' என்பதும் பேராசிரியர் பதிப்ிற் காணப்பெறும் பாடங்கள்.

3. இதன் பொருள் விளங்கவில்லை.

---

## 130. உண்மைகூறி வரைவுகடாதல்.

கல்வரைநாட னில்லதுரைப்ப
ஆங்கவளுண்மை பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) மலையின்மேலுண்டாகிய நாட்டினையுடையவன் இல்லாத ஒன்றைச் சொல்ல, அவ்விடத்து அவள் உண்மை பாங்கி பகர்ந்தது.

---

வேய்தந்த வெண்முத்தஞ் சிந்துபைங் கார்வரை மீன்பரப்பிச்
சேய்தந்த வானக மானுஞ் சிலம்பதன் சேவடிக்கே
ஆய்தந்த வன்புதந் தாட்கொண்ட வம்பல வன்மலையில்
தாய்தந்தை கானவ ரேனலெங் காவலித் தாழ்வரையே.

(பொ-ரை.) வேயீன்ற முத்துக்கள் பரந்த சோலைகளாற் பச்சென்ற கரிய மலையானது நக்ஷத்திரங்களைப் பரப்பி, அந்தி நேரத்திலே விளங்கித் தோன்றுகிற ஆகாயப்பரப்பை யொத்த மலையினையுடையவனே! தன் சிவந்த சீபாதங்களிலே அன்பு தந்து ஆட்கொண்ட அம்பலவன், மாதாவுக்குப் பிள்ளையிடத்தே உண்டான அன்பை எனக்குத் தன்னுடைய சீபாதங்களிலே உண்டாக்கி அடிமைகொண்ட திருவம்பலவன் திருமலையில் எங்களுக்கு மாதாவும் பிதாவும் குறவராக இருந்தார்கள்; நீண்ட மலையிடத்து நாங்கள் காப்பது தினையாயிருந்தது.

என்று, பேராக இருத்தற்குச் செற்றியுமிதுவானால் வசவப்படாது? மாதாவாலும் பிதாவாலும் செய்தொழிலாலும் செற்றியாலும் கண்டு எங்களைப் புகழ்ந்தாய் என்றது.

---

## 130. பாங்கி கூற்று.

"கயிலைக் கூடம் செய்சாரற் கொடிச்சி என்றே நின்று கூறுவது:" (சிற். 129) என்று மிகுத்து சொல்லிய தலைவனுக்குத் தோழி தாம் கானவரே என்று உண்மைகூறி வரைவு கடாவினாள்.

முத்துச்சிந்திய தாழ்வரைக்குச் செவ்வானம் உவமை. 'மழையினை யாடுங் குன்றுசேர் சிறுகுடிக், கன்று கன்றுவயிற் படரப் புறவிற், பாசிலை முல்லையாசில் வான்பூச் செவ்வான் செவ்வி கொண்டன் றுய்யேன் போல்வ ரேழு யானே" (குறுந். 108.)

---

## 131. வருத்தங்கூறி வரைவுகடாதல்.

கனங்குழை முகத்தவள் மனங்குழைவுணர்த்தி
நிரைவளைத்தோளி வரைவுகடாயது.

(இ-ள்.) கனத்த மகரக் குழைக்கிசைந்த முகத்தை யுள்ளவள் (உடையவள்) மனம் வாடுகிறபடியை அறிவித்து நிறைந்த வளைகளையணிந்த தோளினை யுடையவள் வரவை வற்புறுத்திச் சொன்னது.

---

மன்னுந் திருவருந்தும் வரையா விடினீர் வரைவென்
றுன்னு மதற்குத் தளர்ந்தொளி வாடுதி ரும்பரெலாம்
பன்னும் புகழ்ப்பர மன்பரஞ் சோதிசிற் றம்பலத்தான்
பொன்னங் கழல்வழுத் தார்புல னென்னப் புலம்புவனே.

(பொ-ரை.) நீ வரைந்துகொள்ளாதபொழுது அம்புயம் நிலைபெறும் சீதாதேவியை யொப்பாளும் வருந்தாநிற்பள்; நீ, (நீர்) வரைவு என்று நினைக்கும் அளவில் உள்ளந் தளர்ந்து மேனியொளி வாடாநின் (றீர்)றுய்; தேவர்களெல்லாம் இறைமையளவும் ஆராயும்வண்ணம் நின்ற புகழையுடைய மேலானவன்; சுயம்பிரகாசமானவன்; திருச்சிற்றம்பலநாதன்; அவனுடைய பொற்புமிக்க பாதமலர்களை வாழ்த்தமாட்டாதவருடைய அறிவுபோலே, வருந்தா நின்றேன். (எ-று.)

---

131. பாங்கி கூற்று.

"நிலைபெறும் திரு என்று உரைப்பாருமுளர்". முன்னர் (சிற். 2.) இவட்குத் திருவை உவமங் கூறுதல் தக்கதன்றென்று, ஈண்டு உவமித்தது என்னையெனின், ஆண்டுத் தெளியாமையிற் கூறலாகாமை கூறி. மக்களுள்ளாளென்று தெளிந்த பின்னர்க் கூறலாமென்பதனுற் கூறியதெனவுணர்க, புலனென்ன என்பதற்குச் சுவை முதலாகிய தம் பொருள்பெறுது வழுத்தாதார் ஐம்பொறியும் புலம்புமாறுபோல எனினுமமையும். (பே-ரை.)

புலன்-அறிவு.

---

## 132. தாயச்சங்கூறி வரைவுகடாதல்.

மடத்தகைமாதர்க் கடுப்பனவறியா
வேற்கட்பாங்கி யேற்கவுரைத்தது.

(இ-ள்.) மடப்பத்தாலே தகுதியையுடைய நாயகிக்கு வந்து பொருந்துவதறியாதே வேலினை நிகர்த்த விழியுடைய பாங்கி பொருந்தும்படி சொன்னது.

---

பனித்துண் டஞ்சூடும் படர்சடை யம்பல வன்னுலகம்
தனித்துண் டவன்றொழுந் தாளோன் கயிலைப் பயில்சிலம்பா
கனித்தொண்டை வாய்ச்சி கதிர்முலைப் பாரிப்புக் கண்டழிவுற்
றினிக்கண் டிலம்பற்றுச் சிற்றிடைக் கென்றஞ்சு மெம்
[மனையே.

(பொ-ரை.) குளிர்ந்த பிறையைச் சாத்தியருளுகிற விரிந்த திரு(ச்சடையையுடைய) திருவம்பலநாதன்; பதினாலுலகையும் ஒருகாலே அமுதுசெய்த விட்டுணு வந்து வணங்குகின்ற நாயகன்; (அவனுடைய கயிலைப்பதியிலுள்ள சிலம்பனே!) கொவ்வைக் கனியை நிகர்த்த வாயினையுடையவள்; ஒளியுடைத்தாகிய தனங்களின் ஒருமைப்பாட்டைக் கண்டு நெஞ்சழிந்து, இப்பொழுது சிறிய இடைக்கொரு ஆகாரம் கண்டிலோம் என்று பயப்படாநின்றாள், எங்களுடைய தாயானவள்.

ஆதலாற் கடுக வரைந்துகொள்வாயாக. என்றது. இளமைப் பருவம் புகுந்தமையான் மகட் கூறுவார்க்கு அன்னை மாறாது கொடுக்கும்; நீ அதற்கு முற்பட வரைந்துகொள்ள (வேண்டும்) என்றது.

---

132. பாங்கி கூற்று.

(பி-ம்.) எம்மனைக்கே.

பாரிப்பு - ஒருப்பட்டமை; அடியிட்டமை. 'முலை பாரித்த' (சிந்தா. 2134)

---

## 133. இற்செறிவறிவித்து வரைவுகடாதல்.

விற்செறி நுதலியை
[1] இற்செறி வித்தது.

(இ-ள்.) வில்போன்ற நெற்றியினையுடையாளை இல்லிலே செறிவித்தது.

---

ஈவிளை யாட நறவினை யோர்ந்தெமர் மால்பியற்றும்
வேய்விளை யாடும்வெற் பாவுற்று நோக்கியெம் மெல்லியலைப்
[2] போய்விளை யாடலென் றாளன்னை யம்பலத் தான்புரத்தில்
தீவிளை யாடநின் றேவிளை யாடி திருமலைக்கே.

(பொ-ரை.) (தேனை யொத்தபடியாலே) ஈக்கள் புறப்பட்டு விளையாட, நறவினை யோர்ந்து விசாரித்து, எங்கள் உறவின் முறையானவர்கள் கண்ணேணியை இயற்றுகிற மூங்கில் விளையாடும் மலையினையுடையவனே! உற்றுப்பார்த்து, எம்முடைய மெல்லிய இயல்பினையுடையாளைப் புறம்பே போய் விளையாட வேண்டாவென்றாள். — திருவம்பலநாதன், புரத்தில் தீப்புக்கு விளையாடும்படி, எத்தொழில்களையும் கண்டு நின்று விளையாடினவன்; (அவனுடைய) திருமலையிடத்துப் புறம்போய் விளையாட வேண்டா என்றாள்; — அன்னையானவள்.

*எங்கள் அண்ணன்மார் ஈக்கள் ஒழுக்கத்தை அறிவார்கள்; ஈக்கள் புறப்பட்டு விளையாடத் தேன் நெய்த்தபடியை அறிந்து சிலர் கண்ணேணியை ஏற்றுவார்கள். அதற்கு முன்னே கடிகவரைந்து கொள்வாயாக வேண்டும் என்றவாறு.

விளையாடல் என்றாளதனால் நாளை யிற்செறிவிப்பாள் போலுமென்க.

---

133. பாங்கி கூற்று.

பா-ம். 1. இற்செறிவுரைத்தது.

இற்செறிவித்தது என்பது பாடமாயின், இன்னூர் கூற்றென்னாது துறை கூறிற்றாக வுரைக்க (பே-ரை.)

2. போய்விளையாடுகென்றாள்.

"ஈவிளையாட்டாற் றேன் விளைவை ஓர்ந்து எமர் மால்பியற்று மாறு போல. கதிர்ப்புவேறுபாட்டால் இவளுள்ளத்துக் கரந்த காம முணர்ந்து மேற்செய்வன செய்யக் கருதா நின்றாள் என உள்ளுறை காண்க" (பே-ரை.)

* இப்பகுதி முன்பின் ஏட்டில் தடுமாறிக் கிடந்தது இங்கு மாற்றி எழுதப்பெற்றது.

மால்பு - கண்ணேணி: மால்பிலேறித் தேனெடுத்தல்:-- "கலைகையற்ற காண்பி னெடுவரை, நிலைபெய் திட்ட மால்பு நெறியாகப் பெரும்பயன் றொகுத்த தேங்கொள் கொள்ளை". (மலைபடு 315-7.) "அவ்வரைத் தேனி னிருலென வேணி யிழைத்திருக்கும் கானக நாடன் மகன்" (கலி. 39 8-10) பெருந்தேன் கண்படுவரையின், முடமூல், பறியா தேறிய மடவோன் போல" (குறுந். 273: 5-6)

---

## 134. தமர்நினைவுரைத்து வரைவுகடாதல்.

விற்செறிநுதலியை இற்செறிப்பரென்
றொளிவேலவற்கு வெளியேயுரைத்தது.

(இ-ள்.) (வில்போன்ற நெற்றியுடையாளை) நிபத்தியாக (நிச்சயமாக) நாளை இல்லிலே செறிவிப்பார்கள் என்கிறவதனை ஒளிவேலவற்கு வெளியே உரைத்தது.

சுற்றுஞ் சடைக்கற் றைச்சிற் றம்பலவற் றொழாதுதொல்சீர்
கற்று மறியல ரிற்சிலம் பாவிடை நைவதுகண்
டெற்றுந் திரையின் னமிர்தை யினித்தம ரிற்செறிப்பார்
மற்றுஞ் சிலபல [1]சீறார் பகர்பெரு வார்த்தைகளே.

(பொ-ரை.) சுற்றிக் கட்டப்பட்ட சடைத்திரளையுடைய திருச்சிற்றம்பலநாதனை முற்பிறப்பில் தொழாதபடியினாலே, எல்லா நூல்களையும் கற்றிருந்தும் அவனுடைய பழைய சீரை யறியாதாரைப்போலே, நாயகனே! இடை கிலேசிக்கிற அதனைக் கண்டு, கரையோடே மோதுகிற திரையை யுடைத்தாகிய கடலிலே பிறந்த அமுதத்தை ஒப்பாளை இப்பொழுதே உற வானபேர் (உறவினர்) இல்லிலே செறிப்பார்களாயிருந்தது. சிறிய ஊரிடத்துச் சொல்லுகிற பெரிய வார்த்தைகள் மற்றும் சிலவும் பலவுமாயிருந்தன. (சிலவென்பது தாங்கள், இன்ன வார்த்தையென்றறியாமையான்; பலவென்பது எல்லாம் சொல்லுதலான்; பெருவார்த்தையென்றது வெளிப்பட்ட காலத்துப் பெரும் பழியைத் தருவதுபோலே; என்றது). (எ-று.)

---

**134.** பாங்கி கூற்று.

பா-ம். சீறூர்ப்பகர்.

"இடை நைவது கண்டு - முலைதாங்ககில்லாது இடைவருந்துவதனைக்கண்டு. சிலபல வென்பது பத்தெட்டுள வென்பது போலத் துணிவின்மைக் கண்வந்தது" (பே-ரை.)

இதனை அலரறிவுறுத்தற்குச் செய்யுளாகக் காட்டுவர் இலக்கண விளக்க வாசிரியர் (சூ. 523. உரை.)

---

## 135. எதிர்கோள்கூறி வரைவுகடாதல்.

ஏந்திழைப்பாங்கி யேந்தலைமுன்னிக்
[1]கடியாமாறு [2]நொடிதேயென்றது.

(இ-ள்.) மிக்க ஆபரணங்களையுடைய தோழி நாயகனை எதிர்ப்பட்டுக் கலியாணத்திற்காம்படி விரை(வா)யாக வென்று சொல்லியது.

---

வழியு மதுவன்னை யென்னின் மகிழுமவந் தெந்தையுநின்
மொழியின் வழிநிற்குஞ் சுற்றமுன் னேவய மம்பலத்துக்
குழியும்ப ரேத்துமெங் கூத்தன்குற் றாலமுற் றும்மறியக்
கெழியும் மவேபணைத் தோள்பல வென்னோ கிளக்கின்றதே.

(ப—ரை) அன்னை என்னின் மகிழும் - தாயானவள் என்னைப்போலே விரும்புவாள்; (எனவே தன் விருப்பம் சொல்லாதே விளங்குகிறது.) வந்து எந்தையும் நின்மொழியின் வழிநிற்கும் - (உலகியல்பான் மறுத்து நின்றானேயாகில்) வந்து என் பிதாவானவன் நீ சொன்ன வழியிலே நிற்பன்; சுற்று முன்னே வயம் — சுற்றத்திலுள்ளாதார்(க்கு) முன்னே வசப்படுவார்கள். அம்பலத்துக் குழி உம்பரேத்தும் எம் கூத்தன் - திரண்டு தேவர்கள் ஏத்துகிற அம்பலக் கூத்தனை யுள்ளவன், குற்றாலம் முற்றும் அறிய - அவனுடைய திருக் குற்றாலத்திலுள்ளவர்கள் அறிய, கெழியும்மவே பணைத் தோள் - வேயையொத்த தோளிணையும் பொருந்துமதே காரியம் (பலரறியப் பொருந்துகையாவது - கலியாணஞ் செய்து கூடுகை); பலவென்னோ கிளக்கின்றதே - இனிப் பலபடச் சொல்வது என் தான்? வழியும் அது - உலகத்தின்வழி அதுவேயல்லவோ? (எ-று.)

---

**135.** பாங்கி கூற்று.

பா - ம். 1. ஏந்திழைத் தோழி.

(பி - ம்) 2. கொடிகென்றது.

'சுற்றத்திலுள்ளாதார்க்கு முன்னே வசப்படுவார்கள்' என்ற பொருளுக்குச் சுற்றத்தார்கள் சம்மதிக்கப் பெற்றோர்களும் அவர்களுக்கு இணங்குவார்கள் என்ற பொருளும் தொனிப்பது காண்க. 'குற்றாலம் முற்றும் அறியக்கெழி உம்மவே பணைத்தோள்' என்பதற்குக் 'குற்றாலம் முழுதும் அறியப் பொருந்திய உம்மனவே பணைத்தோள்கள்; ஐயுறவேண்டா' என்று பொருள் கூறுவர் பேராசிரியர்.

"நலமுங் குலமும்முதலாயினவற்றுன் நேராராயினும் வடிவஞ்சி நேர்வரென்பது பயப்ப, குற்றாலமுற்று மறியக்கெழீஇய வென்றுள். கெழீஇய வென்பது கெழ்யெனக் குறைந்து நின்றது. நின்மொழி யென்று உம்மவே என்றது பன்மையும் ஒருமையும் மயங்கி நின்றன. குற்றால முற்றுமறியக்கெழி யென்பதற்கு மறைந்தொழுகாதார் எல்லாருமறிய வரைவொடு வருவாயாக என்றுரைப்பாருமுளர். இப் பொருட்குக் கெழுமுவென்பது விகாரவகையாற் கெழியென நின்றது.

தழங்கு மருவி (127) யென்னும் பாட்டுத்தொட்டு இதன்காறும் வர, இப்பாட்டொன்பதும் செறிப்பறி வுறுத்து வரைவுகடாயின என்பது. இவையெல்லாம் தோழியிற் கூட்டமும் தோழியிற் கூட்டத் தின் விகற்பமுமென வறிக." (பே-ரை.)

---

## 136. ஏறுகோள்கூறி வரைவுகடாதல்.

என்னையர் துணி
வின்ன தென்றது.

(இ-ள்.) எங்கள் அண்ணன்மார் அறுதியிட்ட காரியம் இக்காரியம் என்றபடி.

---

படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமுநுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்களிர்முல்லை வேலியெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட் டார்வியன் றென்புலியூர்
உடையார் கடவி வருவது போலு [1]முருவினதே.

(பொ-ரை.) வேலையொத்த கருங்கண்ணை யுடையாளி(ன்) அழகிய முலைகளின் பெருமையையும் நுண்ணிய இடையி னுடைய மிக்க மெலிவையும் பார்த்து, இடையராகிய எங்கள் அண்ணன்மார், குளிர்ந்த முல்லை வேலியையுடைய எங்களூ ரிலே, இடபத்தினுடைய நிரம்ப மருப்பைச் சீவிவிட்டார்கள்.

(அதன் வடிவாவது - பெரும்பற்றப் புலியூருடையவர் ஏறிச் செல்லும் இடபத்தை யொக்கும்.)

ஆதலால் இனி என் நிகழுமென்று தெரியாது; ஏறு கோள் நிகழ்வதன்முன்னே வரைந்தெய்துவாய் என்பது கருத்து.

---

136. பாங்கி கூற்று.

1. (பி-ம்.) உருவினவே.

"ஈண்டுக் கூறுவான் றொடங்குகின்றது முல்லைத் திணையாகலின்' அந்த முல்லைத்திணைக்கு மரபாவது. ஓரிடத்தொரு பெண்பிறந்தால் அப்பெண்ணைப் பெற்றவர் தம் தொழுவில் அன்று பிறந்த சேங்கன் றுள்ளன வெல்லாம் தன்னுரட்டியாக விட்டு வளர்த்து அப்பரிசினால் வளர்ந்த ஏற்றைத் தழுவினானொருவனுக்கு அப்பெண்ணைக் கொடுத்தல் மரபென்ப.

ஏறுதழுவிக் கோடல் தங்குலத்திற்கு மரபாகலானும், தமக்குப் பொதுவர் பொதுவியர் என்று பெயராகலானும், அவ்வேற்றைத் தன்னின் முற்பட்டானொருவன் தழுவவும் தகும் என்று உள்ளம் வாடினான். அதனைத் தோழிகண்டு அவ்வேறு புலியூருடையார் கடவி வருவதுபோலும் உருவினதென்றாள்; என்றது அதன் வெம்மை சொன்னவாறன்று இவ்வொழுக்கம் புலியூருடையாரருளான் வந்த தாகலின். அவ்வேறு நினக்கே வயப்படுவதன்றி மற்றொருத்தரால் அணுகுதற்கரிது நீ கடிது விரைந்து செய், அஞ்சவேண்டா - என்றா ளாயிற்று." (பே-ரை.)

---

## 137. அயலுரையுரைத்து வரைவுகடாதல்.

கயல்புரை கண்ணியை
அயலுரை யுரைத்தது.

(இ-ள்) கயலையொத்த கண்களையுடையாளை அவளுக் கப்பாலான் வந்து வரைவுணர் என்று சொன்னது.

---

உருப்பனை யன்னகைக் குன்றொன் றுரித்துர வூரெரித்த
நெருப்பனை யம்பலத் தாதியை யும்பர்சென் றேத்திநிற்கும்
திருப்பனை யூரனை யாளைப் பொன்னாளைப் புனைதல்செப்பிப்
பொருப்பனை முன்னின்றென் னோவினை யேன்யான்
[புகல்வதுவே.

(பொ-ரை.) பனையை யொத்த வடிவினையுடைய கையினை யுள்ள மலையை யொத்த யானையை உரித்து, வலியுடைத்தாகிய ஊரான முப்புரங்களை எரித்த நெருப்பையுடையவனை, திருவம்பலத்திற் பழையவனை, அவனைத் தேவர்கள் சென்று வாழ்த்தி நிற்கைக்கிடமாகிய திருப்பனையூரை யொப்பாளை, நாளைப் பொன்னணிவார்களென்று சொல்லித் தீவினையைச் செய்த நான், நாயகனே! உன்னை எதிர்ப்பட்டு என்ன வார்த்தையைச் சொல்லுவேன். (எ-று.)

---

137. பாங்கி கூற்று.

அயலுரை - தலைமகட்கியாதும் இயைபில்லாத வுரை. அயலாரொருப்பட்ட வுரையெனினுமமையும்.

பொன்புனைதல் - திருமங்கலியம் பூட்டி மணத்தல். 'நுங்கேண் முன்னர் நீ பொன் புனைந்ததுவே' (தஞ்சை 359.)

---

## 138. தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதல்.

ஏனல்விளையாட் [1]டினியில்லையென்று
மானற்றோழி மடந்தைக்குரைத்தது.

(இ-ள்.) தினைகாத்து விளையாடும் விளையாட்டு இனியில்லையென்று கொண்டு, கொண்டாட்டத்தினையுடைய தோழி நாயகிக்குச் சொன்னது.

---

மாதிடங் கொண்டம் பலத்துநின் றோன்வட வான்கயிலைப்
போதிடங் கொண்டபொன் வேங்கை தினைப்புனங் கொய்க [வென்று
தாதிடங் கொண்டுபொன் வீசித்தன் கள்வாய் சொரியநின்று
சோதிடங் கொண்டிதெம் மைக் [1]கெடுவித்தது தூமொழியே.

(பொ-ரை.) தேவியை இடப்பாகத்தே கொண்டு அம்பலத்தே நின்றவன், அவனுடைய வடக்கின்கண் உண்டாகிய பெருங் கயிலாயத்தில் பக்கமலையை இடங்கொண்ட, பொன் போன்ற மலரையுடைய வேங்கை, 'புனத்தில் தினையைக் கொய்யுங்க' ளென்று, அல்லியிடங்கொண்டு பொன்னையொத்த மலர்களைச் சிதறித் தன்னுடைய தேனைது இடமெலாம் சொரிய நின்று சோதிடத்தைச் சொல்லிற்று. ஆதலால், தூய வார்த்தையினையுடையாய்! எம்மைக் கெடுவித்தது.

என்று, பொருளாகிய சிலேடையாலே, பொன்னையுடைய வேங்கை தாதிடங்கொண்டு பிறர்க்கடிமைப்படுத்தலைச் செய்து, பொன்னையும் பிறர்க்குக் கொடுத்து தன் வாயாலே கள் போக நின்று இன்னாளைக் கெடுக்கலாமென்று அறிவு சொல்லி எம்மைக் கெடுத்ததன்றோ, தனியாக தம்முடைய குலத்திற்கு ஏற்க.

---

138. பாங்கி கூற்று.

(பா - ம்) 1. கெடக்கொண்டது.

'பொன்னைக் கொடுத்துப் பிறர்க்கடிமையாதலைப் பொருந்தித் தான் இழிந்த சாதியாதலால் தனக்குரிய கள்ளை வாய்சொரிய நின்றெனச் சிலேடை வகையான் இழித்துக் கூறினளாகவுமுரைக்க. (பே-ரை)

ஊரெரித்த நெருப்பன். (சிற். 143).

## 139. பகல்வால் விலக்கி வரைவுகடாதல்.

அகல்வரை நாடனைப்
பகல்வர லென்றது.

(இ-ள்.) அகன்ற மலைமேலுண்டாகிய நாட்டையுடைய வனைப் பகற்குறி வாராதொழிக என்றது.

---

வடிவார் வயற்றில்லை யோன்மல யத்துநின் றும்வருந்தேன்
கடிவார் களிவண்டு நின்றலர் தூற்றப் பெருங்கணியார்
நொடிவார் நமக்கினி நோதக யானுமக் கென்றுரைக்கேன்
தடிவார் தினையெமர் காவேம் பெருமவித் தண்புனமே.

(பொ-ரை.) அழகார்ந்த வயல் சூழ்ந்த பெரும்பற்றப் புலியூரிலுள்ளவன்; அவனுடைய பொதியின் மலையிடத்தே இவர் நின்றுவைத்தும், வருகிற தேன்சாதிகளும் நறுநாற் றத்தை விரும்புகிற ஒழுங்குபட்ட களிப்புடைத்தாகிய வண்டுச் சாதிகளும் நின்று பூவை மலர்த்த, வேங்கையாராகிய இப் பெரிய கணியார் சொல்லுவாராக விருந்தார், இப்பொழுது நமக்கு நோவத்தக்க காரியங்களை; இதுகேட்டு எங்கள் உறவின் முறையாா தினையைக் கொய்வதாக விருந்தார்கள்; இவ் வார்த்தையை நானுமக்கென்னென்று சொல்லுகேன்!

[மேற்சொல்லாவது] பெரியவனே! நாங்கள் இந்தக் குளிர்ந்த புனத்தைக் காவேம்.

* சொல்லத் தகாதபடி இப்பெருந்தன்மையை அடையா ராய் கணிசொல்லுதற்குரியவர் வந்தார். எல்லாரும் தம்மை அலர் தூற்றப் பொதியின் மலையிலே நின்ற எம்முடைய மேம் பாட்டையும் கருதாது, தம்மை அடைந்த நமக்குக் கேடு சொல்ல, இது கேட்பாருமே மாறுதலினும் உமக்கென்ன வார்த்தையைச் சொல்லுக என்றுபடும்.

---

139. பாங்கி கூற்று.

* இப்பகுதி ஏட்டில் பிழைபடக் காணப்பட்டது, ஒருவாறு திருத்தியமைக்கப்பட்டுள்ளது. பொருள் தெளிவாயில்லை.

'அலர் ஆற்ற என்பதற்குத் தன்னோடு பயின்றோரைக் கண்ணோட்டமின்றி வருந்தா நின்றதென்று புறங்கூற என்றும் கூறுக' (பே-ரை)

---

## 140. தினையொடுவெறுத்து வரைவுகடாதல்.

தண்புனத்தொடு தளர்வுற்றுப்
பண்புனைமொழிப் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) தளர்ச்சியுற்றுக் குளிர்ந்த புனத்துடனே பண் பொருந்தின சொல்லையுடைய பாங்கி சொல்லியது.

---

**நினைவித்துத் தன்னையென் னெஞ்சத் திருந்தம் பலத்துநின்று**
**புனைவித்த வீசன் பொதியின் மலைப்பொருப் பன்விருப்பில்**
**தினைவித்திக் காத்துச் சிறந்துநின் றேமுக்குச் சென்றுசென்று**
**வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே.**

(பொ-ரை.) தானே புகுந்து திருத்த வேண்டுதலாலே என் நெஞ்சிலே வந்திருந்து தன்னை யான் எப்பொழுதும் நினையும்படி பண்ணித் திருவம்பலத்திலே நின்று என்னைக்கொண்டு, தன்னை புகழ்வித்துக்கொண்ட பரமேசுவரன்; அவனுடைய பொதியமலையிடத்தே நாயகனைக் காணலாமெனும் விருப்பினாலே, தினையை வித்தியதில் ஒரு சேத(மும்) படாமல் பரிகரித்து, சிறந்து நின்றோம்; * தன்னுடைய தண்ணளி எம்பால் நின்ற எமக்கு, தினையை வித்தியதில் ஒன்றும் சேதப் படாமல் பரிகரித்து, அது விளைந்தவாறு எய்த, தினையனுபவித் தாற்போல விளைந்தது இன்றே. (எ-று.)

---

140. பாங்கி கூற்று.

* இது முதல் ஏட்டில் சொற்கள் பின்வருமாறு அமைந்துள்ளன. அவை "நின்றேமுக்கு - தன்னுடைய தண்ணளியெம்பால் நின்ற

நமக்கு; சென்று சென்று - போய்ப்போய், வினைவித்திக் காத்து விளைவுண்டதாகி விளைந்ததுவே - தீவினைகை வித்தியதிலொன்று சேதப்படாமற் பரித்து அது விளைந்தவாறெய்த தீவினையனுபவித்தாற் போலே விளைந்ததனின்றே''

"தினைவித்துத் தன்னை யென்னெஞ்சத்திருந்தென்பதற்கு ஒருகாற்றன்னை நினைவேனாகவுஞ் செய்து அந்நினைவே பற்றுக்கோடாகத்தான் புகுந்திருந்தெனினுமமையும். பொருப்பன் விருப்பென்பதனை நீர் வேட்கைபோலக் கொள்க. தினைவித்திய ஞான்று இத்தினைக்காவல் தலைக்கீடாக அவனை யெதிர்ப்படலாமென்று மகிழ்ந்து அதற்குடம்பட்டாராகலிற்றும்வித்தினார்போலக் கூறினாள். (பே-ரை)

பொருப்பன் விருப்பு - பொருப்பன் மேல் வைத்த காதல். 'நும் மகள் விருப்பு' (ஐங்குறு 313) என்றதற்கு நும்மகள்மேல் வைத்த குறிப்பு என்ற பதிப்பாசிரியரின் உரையையும் காண்க.

தானே நினைவித்து என் நெஞ்சத்திருந்து - 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி (திருவாசகம் சிவ 18) என்பதனோடு ஒப்பிடுக.

---

## 141. வேங்கையொடுவெறுத்து வரைவுகடாதல்.

நீங்குகவினி நெடுந்தகையென
வேங்கைமேல் வைத்துவிளம்பியது.

(இ-ள்) பெரியதகைமைப் பாட்டையுடையவனே! நீங்குவாயாக வென்று வேங்கை மரத்தைச் சொல்லுவாராகச் சொல்லியது.

---

கனைகடற் செய்தநஞ் சுண்டுகண் டார்க்கம் [1]பலத்தமுதாய்
வினைகெடச் செய்தவன் விண்டோய் கயிலை மயிலனையாய்
நனைகெடச் செய்தன மாயி னமைக்கெடச் செய்திடுவான்
தினைகெடச் செய்திடு மாறுமுண் டோவித் திருக்கணியே.

(பொ-ரை) ஆரவாரிக்கப்பட்ட கடலிலே உண்டாக்கப்பட்ட நஞ்சை அமுதுசெய்து வந்து, தரிசித்தார்க்கு அம்பலத்தினுண்டாய அமுதாய், இருவினையும் கெடும்படி கரணங்களை ஒடுக்கினவன்; (என்றது, கடலிலே நஞ்செனவே பெருமை விளங்கிற்று; செய்த நஞ்செனவே கொடுமை விளங்கிற்று. இந்த நஞ்சை யுண்டுவைத்து அமுதமானானென்பது கருத்து. அமுதானது அருமையற்று அம்பலத்தமுதாயிருந்தது. இங்ஙனமே எளிதாய் வைத்தும் உண்டால் பலிக்கை ஒழிந்து, காணுமளவில் பலிக்கும்படியாயிருந்தது. பலிக்கும்பொழுதும் யாக்கைத் துன்பமொழிய, அந்தக்கரணங்களையும் சுத்தமாக்குவதாயிருந்தது). அவனுடைய விசும்புதோய்ந்த கயிலையில் மயிலை நிகர்ப்பாய்! அரும்புகிற நாளிலே அரும்பினைப் பறித்துப்போட்டோமாகில் நம்மைக் கெடும்படியாகத் தினைகெடச் செய்திடுமாறு முண்டோ இத்திருக்கணியே! (எ-று.)

இத்திருக்கணியே தினைகெடும்படி சோதிடஞ் சொல்லுமாறு உண்டோ? (என இயைக்க). இந்தத் திருவாகிய கணி. திரு என்பது சாதிப்பெயர்; கணி என்பது தொழிற் பெயர். அந்தச் சோதிடம் சொல்லும் சாதியிலே பிறந்து அந்தச் சோதிடம் தப்பாமே சொல்லிவருகிறவர் என்று அதற்கு இழிவு சொன்னபடி.

---

**141.** பாங்கி கூற்று.

(பா-ம்.) அம்பலத் தமிழ்தாய்.

பேராசிரியர் இப்பாடலுக்குக் கூறிய உரைக்குறிப்பு மேலேயுள்ள உரையை யொட்டியிருப்பதைக் காண்க:-

"கனைகடற் செய்த வென்றதனான் நஞ்சின்பெருமை கூறினார். செய்யாத நஞ்சிற்செய்த நஞ்சுகொடிதாகலின், அதன் கொடுமை விளங்க, செய்த நஞ்சென்றார். அமிழ்தாதல் அமிழ்தின் காரியத்தைச் செய்தல். கண்டார்க் கென்றதனான், அல்லாதவமிழ்தோடு இவ்வமிழ்திற்கு வேற்றுமை கூறியவாறும்........திரு, சாதிப்பெயர்

கணி தொழிற் பெயர். நல்ல கணியென்று இழித்துக் கூறினாளாக உரைப்பாருமுளர்." (பே-ரை.)

இவ்வேங்கை அரும்பும்போதே அவ்வரும்புகளைக் கிள்ளி எறிந்திருப்போமாகில் இதன் பூக்களைக் கண்டு எம்மவர் தினைகொய்ய வந்திருப்பரோ என்று வேங்கையொடு வெறுத்துக் கூறினாள்.

---

## 142. இரக்கமுற்று வரைவுகடாதல்.

கெழுமலை நாடற்குக்
கழுமலுற் றிரங்கியது.

(இ-ள்) அழகிய மலைமேலுண்டாகிய நாட்டினை யுடையவற்குக் கழுமலுற்றிரங்கியது.

---

வழுவா வியலெம் மலையர் விதைப்பமற் றியாம்வளர்த்த
[1]கொழுவார் தினையின் குழாங்க ளெல்லாமெங் குழாம் [வணங்கும்
செழுவார் கழற்றில்லைச் சிற்றம் பலவரைச் சென்றுநின்று
தொழுவார் வினைநிற்கி லேநிற்ப தாவதித் தொல்புனத்தே.

(பொ-ரை) விதைக்கிற் பருவமும் அறுக்கிற் பருவமும் வழுவாத இல்லையுடைய மலையராகிய எங்கள் அண்ணன்மார் விதைப்ப, அதனை மற்றெங்களாலே வளர்க்கப்பட்ட வளவிதாய நீண்ட தினையின் திரளெல்லாம், வந்து வணங்குகிற அழகியதாய சீபாதங்களையுடைய பெரும்பற்றப்புலியூரில் திருச்சிற்றம்பலத்தே உள்ளவரைச்சென்று,-நின்று கருமகாண்டத்தினின்றும் ஞானகாண்டத்திலே சென்று நின்று - தொழுவாருடைய இருவினையும் (அவர்கண்) நிற்கிலே, இத்தினையின் திரள் நிற்பது. (எ-று.)

---

142. பாங்கி கூற்று.

(பா - ம்) 1. குழுவார்தினை.

தொழுவார் வினை நில்லாமைபோல, தினைத்திரளும் நில்லா என்பது கருத்து.

---

## 143. கொய்தமைகூறி வரைவுகடாதல்.

*நீடிரும்புனத்தினி யாடேமென்று*
*வரைவுதோன்ற வுரைசெய்தது.*

(இ-ள்.) மிகவும் பெரிய புனத்தில் வியாபரியேமென்று (விளையாடேமென்று) வரைந்து கொள்வாயாக என்னும் இடந் தோன்றச் சொன்னது.

---

பொருப்பர்க் கியாமொன்று மாட்டேம் புகலப் புகலெமக்காம்
விருப்பர்க் கியாவர்க்கு மேலர்க்கு மேல்வரு மூரெரித்த
நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்
கருப்பற்று [1]விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே.

(பொ-ரை.) நாயகனுக்கு இனி ஒரு வார்த்தையும் சொல்ல மாட்டோம்; எமக்குப் புகலிடமா (னவர்க்கு); விரும்பின வர்க்கு; மேல் இயங்குகின்ற முப்புரங்களை எரித்த அக்கி னியை உடையவர்க்கு; மிக்க திருவம்பலத்தே உள்ளவர்க்கு; அவர்க்கு அன்பு செய்தவருடைய திரள் பூமியில் கருப்பற்று விட்டாற்போலே, இந்தக் காவலையுடைத்தாகிய புனமானது கொய்யப்பட்டுவிட்டது. (எ-று.)

யாம் ஒரு குணமிலேமாயினும் தமது விருப்பினாலே புக லிடமாயினான். வீடென்பதூஉம் பாடம்.

---

**143.** பாங்கி கூற்று.

(பா-ம்) வீடென.

புகல் விருப்பர்; மேலர்; நெருப்பர்; அம்பலவர் என்பன சிவ பிரானுக்குரியவை. அன்பர் கருப்பற்று விட்டென, புனம் கொய் தற்றது எனக் கூட்டுக.

கருப்பற்று விட்டென-பிறவிக்காரணத்தைப் பற்றுவிட்டகன்றாற் போல: இவ்வுவமையை வழங்கும் பிற இடங்கள்:-

"அஞ்செழுத் தெங்குரு நாதன் றனதடியார்க் கொழித்த, சஞ் சிதம் போலத் தினைமுற்று மாள" (திருவாவடுதுறைக் கோவை 179). புண்ணியர்தம், தீவினை யற்றது போலற்ற வாவித் தினைப்புனமே. (கலைசைக் கோவை 173).

ஊரெரித்த நெருப்பர். (சிற். 137).

---

## 144. பிரிவருமைகூறி வரைவுகடாதல்.

[1] மறைப்புறு கிளவியிற்
[2] சிறைப்புறத் துரைத்தது.

(இ-ள்.) மறைத்துப் பிறிதொன்றைச் சொல்லுகிற வார்த்தையாலே பட்சியின் மிகுதி புனத்திலே உண்டாகிவிடும் என்று சொன்னது.

---

பரிவுசெய் தாண்டம் பலத்துப் பயில்வோன் பரங்குன்றின்வாய்
அருவிசெய் தாழ்புனத் தைவனங் கொய்யவு மிவ்வனத்தே
பிரிவுசெய் தாலரி தேகொள்க பேயொடு மென்னும்பெற்றி
இருவிசெய் தாளி னிருந்தின்று காட்டு மிளங்கிளியே.

(பொ-ரை.) என்னைப் பரிவுற்றடிமை கொண்டு திருவம்பலத்தே ஆடியருளுகிறவன் திருப்பரங்குன்றிடத்து அருவி நீராலே வளர்க்கப்பட்ட நீண்ட புனத்தினிடத்துத் தினையைக் கொய்யவும், இந்தப் புனத்திடத்தே பேயோடேயாயினும் பிரிதலாற்றுதல் அரிதென்னும்படியை இருவிசெய்தாளிலிருந்து இப்பொழுது காட்டாநின்றன இளைய கிளிகளானவை. (எ-று.)

தினை பயன்படாத காலத்தும் கிளிகள் விடாதே நின்றன என்பது கருத்து.

---

144. பாங்கி கூற்று.

(பா-ம்.) 1. மறைப்புறக் கிளவி. 2. சிறைப்பட வுரைத்தது.

"இருவி - கதிர்கொய்த தட்டை. தாள் என்பது கதிர் கொய்யாத முன்னும் சொல்வதோர் பெயர். இப்புனத்துப் பயின்ற கிளிகள் தமக்குத் துப்பாகாக் காலத்தும் இதனை விடாதிராநின்றன; இனி நங்காதலர் நம்மாட்டென் செய்வரென்னுங் கருத்தான், மறைப்புறமாயிற்று" (பே-ரை.)

பேயோடாயினும் பிரிவு அரிது:– 'இன்னாதே, பேயோ டாயினும் பிரிவு (பழ. 122) பேயோ டேனும் பிரிவொன் றின்னா தென்பர் பிறரெல்லாம்" (தே. சுந்தரர்.) "பேய்வயினும் மரிதாகும் பிரிவு' (சிற். 243)

---

## 145. மயிலொடுகூறி வரைவுகடாதல்.

நீங்கரும்புனம்விடு நீள்பெருந்துயரம்
[1]பாங்கிநினைந்து பருவரலுற்றது.

(இ-ள்.) விட்டு நீங்குதற்கரிய புனத்தை விட்டு நீங்குகிற மிகவும் பெரிய கிலேசத்தைத் தோழியானவள் நினைந்து துயரமுற்றது.

---

கணியார் கருத்தின்று முற்றிற்றியாஞ் சென்றுங் கார்ப் [புனமே
அணியார்கயிலை பொழில்காண் மறத்திர்கண் டீர்மன்னு [மம்பலத்தோன்
அணியார் கயிலை மயில்கா ளயில்வே லொருவர்வந்தால்
துணியா தனதுணிந் தாரென்னு நீர்மைகள் சொல்லுமினே

(பொ-ரை.) இந்த வேங்கையாருடைய நினைவுகளெல்லாம் முடிந்தன; நாங்கள் போகநின்றேம்; சோலையாற் பச

சென்ற கரிய புனமே! முத்துமணியாற் சிறந்த பொழில்காள்! உங்களுக்குச் சொன்னாலும் இந்த வேங்கையாருடைய செற்றியினால் மறந்துவிடுவீர்கள்; நிலைபெற்ற திருவம்பலநாதனுடைய அழகார்ந்த ஸ்ரீ கயிலாயத்தினின்றும் வந்த மயில்காள்! கூரிய வேலை உடையாரொருவர் வந்தால், அன்புடையார் அறுதியிடாத பொருளாகிய பிரிவையும், பிரிந்தாலும் மாற்றுதலை அறுதியிட்டுப் போனார்களென்னும் தன்மையையும் சொல்லுவீர்களாக வேண்டும்'' (எ-று.)

கயிலையிடத்து மயில்காளென்றது கண்ணோட்டமுடையீரென்ற கருத்து.

---

**145.** பாங்கி கூற்று.

(பா-ம்.) பாங்கி பகர்ந்து.

'' நீரெம்மை மறப்பீராயினும் மறவாது சொல்லுமினென்றுரைப் பாருமுளர்'' (பே-ரை.)

---

## 146. வறும்புனங்கண்டு வருந்தல்.

மென்புனம்விடுத்து மெல்லியல் செல்ல
மின்பொலிவேலோன் மெலிவுற்றது.

(இ-ள்) மெத்தென்ற புனத்தைவிட்டு மெல்லிய இயல்பினையுடையாள் போக, மின்னை நிகர்த்த வேலினையுடையவன் வாடியது.

---

பொதுவினிற் றீர்த்தென்னை யாண்டோன் புலியூரான்
[பொருப்பே
இதுவெனி லென்னின் றிருக்கின்ற வாறெம் மிரும்பொழிலே
எதுநுமக் கெய்திய தென்னுற் றனிரறை யீண்டருவி
மதுவினிற் கைப்புவைத் தாலொத்த வாமற் றிவ்வான்புனமே.

(பொ-ரை.) ஏதோ சமயமென்று பொதுவே நின்று தடுமாறுகின்ற என்னைப் பொதுமையினின்று நீக்கி அடிமை கொண்டவன்; பெரும்பற்றப் புலியூரிலேயுள்ள தலைவன்; அவனுடைய திருமலை இதுவாமாகில், ['ஏந்தா நீ இருக்கின்ற படியென (?)] எம்முடைய பெரிய பொழிலே! உங்களுக்கு வந்துற்ற வருத்தம் எது? அவ்வருத்தத்தாலுற்ற கிலேசம் எது? ஆரவாரம் மிக்க அருவி, மதுவிலே அதன் இனிய சுவையை மாற்றிக் கைப்பாகிய சுவையை வைத்திருந்தாலொத்திருந்தது, மற்றிந்தப் பெரியபுனம். (எ-று.)

---

**146.** தலைவன் கூற்று.

'எனில் இது இருக்கின்றவாறு என்' என்று கூட்டிப் பொருள் கொள்வர் பேராசிரியர். உரையில் பகர வளைவுகளுக்குள் உள்ள பகுதி 'ஏன்தான் நீ இருக்கின்றபடி' என விருந்திருத்தல் கூடும்.

தலைவன் 'இப்பொழில் யாம் முன் பயின்றதன்றோ? இஃது இன்று இருக்கின்றவாறு என்னோ?' என்று வருந்திக் கூறினான்.

பொதுவினிற் றீர்த்தென்னை யாண்டோன்:— 'பொதுவற வடிமை செய்திடும்' (மீனாட்சியம்மை பிள்ளைத். முத். 10) என்ற பகுதியையும், அதன் பதிப்பாசிரியரான மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள், 'வேறு ஒருவர்க்கும் அடிமை செய்யாது அம்பிகைக்கே அடிமைத் திறம்பூணும்' என்று குறித்திருக்கிற உரையையும்,

உள்ளப் படாத திருவுருவை உள்ளுதலும்
கள்ளப்படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரானெம் பிரானென்னை வேறேயாட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ

என்ற திருவாசக (திருக்கோத்தும்பி 16) த்தையும் காண்க.

---

## 147. பதிநோக்கி வருந்தல்.

மதிநுதலரிவை பதிபுகலரிதென
மதிநனிகலங்கிப் பதிமிகவாடியது.

(இ-ள்) பிறைபோன்ற நெற்றியினை யுடையவள் பதியிற் சென்று புகுதல் அரிதென்று புத்தி மிகவும் கிலேசித்து நாயகன் வாடியது.

---

ஆனந்த மாக்கட லாடுசிற் றம்பல மன்னபொன்னின்
தேனுந்து மாமலைச் சீறூ ரிதுசெய்ய லாவதில்லை
வானுந்து மாமதி வேண்டி யழுமழப் போலுமன்னோ
நானுந் தளர்ந்தன னீயுந் தளர்ந்தனை நன்னெஞ்சமே.

(பொ-ரை.) மகிழ்ச்சியாகிய பெரு நீராலே நிறைந்த பெரிய கடலாயுள்ளவன்; அவன் ஆடியருளுகிற திருச் சிற்றம்பலத்தை யொத்த பொன்னை யொப்பாளுடைய தேன் ததிப்பாய்கிற பெரிய மலையிற் சீறூர் இதுகாண்; செயலாவதொரு பொருளுமில்லை காண்; ஆகாயத்திலே திரிகிற மதியைப் பிடித்துத்தரவேண்டி அழுகிற பிள்ளைகளைப்போல, நல்ல நெஞ்சமே! அரிய பொருள்களை விரும்புதலாலே நீயும் தளர்ந்தாய்; அது முடித்துத்தர மாட்டாமையாலே நானும் தளர்ந்தேன். (எ-று.)

மன்னும் ஓவும் அசைநிலை.

---

147. தலைவன் கூற்று.

மதிவேண்டியழும் மழவு: 'விசும்புற்ற திங்கட் கழுமழப் போன்று. (சிற். 198)

**பகற்குறி முற்றிற்று.**

## 14. இரவுக்குறி.

பகற்குறி யுணர்ந்து விலக்கப்பட்ட தலைமகன் தெருண்டு வரைதல் தலை. தெருளானாயின் பின்னையும் தோழியைத் தலைப்பட்டு இரவுக்குறி வேண்டிச் சென்று எய்துதல் முறைமை யென்ப.

இது முப்பத்துமூன்று துறையுடைத்து. அவைவருமாறு:-

[1]இரவுக்குறி வேண்டல்; [2]ஆற்றருமை கூறல்;
[3]நின்றுநெஞ் சுடைதல்; [4]நிலைகண்டு நேர்தல்;
[5]உட்கோள் வினுதல்; [6]உட்கொண்டு வினுதல்;
[7]குறியிடங் கூறல்; [8]குறியேற் பித்தல்;
[9]இரவர வுரைத்தல்; [10]ஏதங் கூறல்;
[11]குறைநேர்த லொடு, [12]குறைநயப் புரைத்தல்;
[13]மயின்மே லிசைத்து வரவுணர்ந் துரைத்தல்;
[14]தாய்துயி லறிதல்; [15]தலைவி துயி லெடுத்தல்;
[16]இடத்துய்த்து நீங்கல்; [17]தளர்வகன் றுரைத்தல்;
[18]மருங்கணைத லோடு [19]முகங்கண்டு மகிழ்தல்;
[20]பள்ளியிடத் துய்த்தல்; [21]பள்ளியிடத் துய்த்து
வரைவு கடாவி வரவு விலக்கல்;
[22]வரைவு டம்படா தாற்று துரைத்தல்;
[23]அதரிடைச் செலவிற் கிரக்கங் கூறல்;
[24]இருளற நிலவு வெளிப்பட வருந்தல்;
[25]வேற்றுக் குறிகூறல்; [26]கடலிடை வைத்துத்
துயரறி வித்தல்; [27]தோழியு மின்றித்
தானே கிடந்து தனிமையுற் றுற்றுங்
காம மிக்க கழிபடர் கிளவி;
[28]காப்புச் சிறைமிக்க கையறு கிளவி;
[29]ஆறுபார்த் துற்ற வச்சக் கிளவி;
[30]தன்னுட் கையா றெய்திடு கிளவி;
[31]நிலைகண் டுரைத்தல்; [32]நெடுங்கடற் சேர்த்தல்;
[33]அலரறி வித்தலோ டாறைம் மூன்றும்
இரவுக் குறியிவை யென்றிசி னோரே. (பே-ரை.)

---

## 148. இரவுக்குறி வேண்டல்.

நள்ளிருட்குறியை வள்ளனினைந்து
வீங்குமென்முலைப் பாங்கிக்குரைத்தது.

(இ-ள்.) செறிந்த இருளினது குறியை நாயகன் நினைத்துப் பொழுதுக்குப் பொழுது விம்மாநின்ற முலையினையுடைய பாங்கிக்குச் சொன்னது.

---

மருந்துநம் மல்லற் பிறவிப் பிணிக்கம் பலத்தமிர்தாய்
இருந்தனர் குன்றினின் றேங்கு மருவிசென் றேர்திகழப்
பொருந்தின மேகம் புதைந்தி ருடூங்கும் புனையிறும்பின்
விருந்தினன் யானுங்கள் சீறூ ரதனுக்கு வெள்வளையே.

(பொ-ரை.) நம்முடைய தனுகரணமிடமாகப் பொசிக்கின்ற (பிறக்கின்ற) அல்லற் பிறவியாகிற வியாதிக்குத் திருவம்பலத்தே மருந்தையொத்து எழுந்தருளியிருந்தவர்; அவருடைய திருமலையில் இடைவிடாது ஆரவாரிக்கிற அருவியானதுசென்று எதிர் திகழ, அழகு விளங்கும்படி பொருந்தின (மேகங்களானவை பொருந்துதலாலே) மேகங்களாலே மூடப்பட்டு இருள் தூங்கும் இருளே செறிகின்ற, கைசெய்து வளர்க்கப்பட்ட காடுடைத்தாகிய உங்கள் சிற்றூர் தனக்கு விருந்தாகினேன் யான்; காண்; வெள்ளிய வளைகளையுடையாய்!

என்று பொருளாய், மழைக்காலத்து மாலையம்பொழுது வந்த விருந்ினரை யாவர் சிலரும் (எவரும்) மறூர்களாதலால், நீங்களும் எம்மை எதிரேற்றுக்கொள்ளவேண்டும் என்றுபடும். கைசெய்து வளர்க்கப்பட்ட காடு என்றதால், உங்களுக்கு எதிர்ப்பட்டாலும் ஆம் (?) என்றது.

---

148. தலைவன் கூற்று.

புனை இறும்பு – செய்காடு.

'மேகம் வந்து பொருந்தின வென்றதனால், தன்னூர்க்குப் போதலருமை கூறுவான்போன்று இரவுக்குறி மாட்சிமைப்படுமென் றுநும். இருடேங்கும் புனையிறம்பு என்றதனால் யாவருங் காணாராக லின் ஆண்டுவந்து நிற்கின்றேனென்றுநும். மாலை விருந்தினரை மாற்றுதலறனன்றென்பது தோன்ற விருந்தினனென்றான். குன்றி னின்றேங்கு மருவியேர் திகழச்சென்று பொருந்தின மேகமென்க. அருவியேர்பெற மேகம்பொருந்தினவூர் நின்னூராகலான் என்னைப் பெற்று யானுமேர்பெற நின்னை வந்து சேர்ந்தேன் என்பதுபோதரும் (பே-ரை.)

---

## 149. வழியருமைகூறி மறுத்தல்.

இரவரலேந்தல் கருதியுரைப்பப்
பருவரற்பாங்கி யருமையுரைத்தது.

(இ-ள்.) இரவு வருதலை நாயகன் குறித்துச் சொல்ல அத் தன்மையாலே துன்பமுற்ற பாங்கி வழியினதருமையைச் சொன்னது.

---

விசும்பினுக் கேணி நெறியன்ன சின்னெறி மேன்மழைதூங்
கசும்பினிற் றுன்னி யளைநுழைந் தாலொக்கு மையமெய்யே
இசும்பினிற் சிந்தைக்கு மேறற் கரிதெழி லம்பலத்துப்
பசும்பனிக் கோடு மிலைந்தான் மலயத்தெம் வாழ்பதியே.

(பொ-ரை.) ஆகாயத்துக் கேறுவதாக விட்ட ஏணி வழியை யொத்த சிறிய வழியுமாய், மெத்தென்ற மழை விடாதே பொய்கையாலே, நீரூறு (திவலைகளைச்) சேர்ந்து, முழைபிலே நுழைந்தாலொக்கும்; சுவாமி! உண்மையாக, வழுக்குதலாலே, மனத்தாலும் ஏறற்கரிது; அழகிய திருவம்ப லத்தேயுளன்; செவ்விக்கதிர்களை உடைத்தாகிய திருவிளம்

பிறையைச் சூடினவன்; அவனுடைய பொதியின் மலையில் நாங்கள் வாழும் இடம் இப்படியிருக்கும். (எ-று.)

---

**149.** *பாங்கி கூற்று.*

விசும்பு - வானம. சின்னெறி - சிறியவழி. அசும்பு - சிறு திவலை. அளை - முழை: பொந்து. இசும்பு - வழுக்கு.

'எம் வாழ்பதி ஏறற்கரிது; மழைபெய்யும்போது முற்றிலும் அரிது' என்று பாங்கி கூறினள்.

இசும்பினிற் சிந்தைக்கு மேறற்கரிதென்றவதனான், எமது வாழ்பதி இவ்வொழுக்கத்தைச் சிறிதறியுமாயிற் சிந்தையாலு நினைத்தற்கரிய துயரத்தைத் தருமாதலால், தாஞ்செத்துலகாள்வாரில்லை; அதுபோல இவ்வொழுக்க மொழுகற்பாலரல்லீர் என்று மறுத்துக்கூறிய வாறாயிற்று" (பே-ரை.)

மலைவழியருமை:— 'எடுத்துநிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி (மலைபடு. 16) 'செல்வர் மனத்தி னோங்கித் திருவின் மாந்தர் நெஞ்சின். எல்லை யிருளிற்றூகிப் பூந்தா தினிதி னொழுகிக். கொல்லு மரவின் மயங்கிச் சிறியார் கொண்ட தொடர்பிற், செல்லச் செல்ல வஃகு நெறிசேர் சிலம்பு சேர்ந்தான். (சீவக. 1416)

---

## 150. நின்று நெஞ்சுடைதல்.

பாங்கி விலங்கப் பருவரை நாடன்
நீங்கிவிலங்காது நெஞ்சுடைந்தது.

(இ-ள்.) பாங்கியானவள் இரவுக் குறிக்கு விலக்குதல் சொல்ல, பெரிய மலைமேலுண்டாகிய நாட்டினையுடையவன் இரவுக்குறியினின்றும் நீங்காதே தன் நெஞ்சுடனே நொந்து சொல்லியது.

---

மாற்றே னெனவந்த காலனை யோல மிடவடர்த்த
கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றி னீள்குடுமி
மேற்றேன் விரும்பு முடவனைப்போல மெலியுநெஞ்சே
ஆற்றே னரிய வரிவைக்கு நீவைத்த வன்பினுக்கே.

(பொ-ரை.) ஒருவராலும் மாற்றப்படேனென்று அகங்கரித்து வந்த கூற்றுவனைக் கூப்பிடும்படி நெருக்கின, அன்பருக்குக் கொம்பிடை யிருந்த தேனைப்போன்றவன்; மதுரமாகிய பெரும்பற்றப்புலியூரில் திருநடனமாடியருளுகிறவன்; அவனுடைய திருக்கொடுங் குன்றின் நீண்ட உச்சியிலே மேல் வைத்த தேனை உண்கைக்கு இச்சித்த முடவனைப் போலே வாடுகிற நெஞ்சமே! அரியளாயிருக்கிற அரிவைக்கு நீ வைத்த அன்புதான் ஆற்றவொண்ணாது காண். (எ-று)

என்று நெஞ்சுடன் அழுங்கியது.

---

150. தலைவன் கூற்று.

மாற்றேன் - 'மாற்றேனென்பது செயப்படு பொருட்கண் வந்தது; மாறேனென்பது விகாரவகையான் மாற்றேனென நின்றதெனினும் அமையும். (பே-ரை.) கோற்றேன் - கொம்புத்தேன். 'சுவை மிகுதியுடைமையின் கோற்றேன் என்றார். (பே-ரை.) 'கோற்றேனெனக் கென்கோ குரை கடல்வாயமு தென்கோ. (திருவாச. உயிருண்ணி: 8) குளிர் - தங்குதல்; 'மழுப்படையோன் குளிர்தில்லையன்னாய்' (சிற். 387); 'குளிர், நிசைச்சொல் குளிருமென்னும் வினைச் சொல் குளிரெனத் தொழின்மேனின்றது; இருப்பென்றவாறு' (சிவக. 494. நச். உரை.)

தேன்விரும்பு முடவன்:— குறுந்தாட் கூதளியாடிய நெடுவரைப், பெருந்தேன் கண்ட விருக்கை முடவன், உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து. சுட்டுபு நக்கி யாங்குக் காதலர். நல்கார் நயவாராயினும் பற்காற் காண்டலு முள்ளத்துக் கினிதே. (குறுந். 60)

' நீ வன்கண்மையையாதலின் இவ்வாறு மெலிந்தும் உயிர்வாழ்தி; யானத்தன்மையனல்லேன் இறந்துபடுவேனென்னுங் கருத்தான், மெலியுநெஞ்சே யானாற்றே னென்றான்'' (பே-ரை.)

## 151. இரவுக்குறி நேர்தல்.

தடவரைநாடன் றளர்வுதீர
மடநடைப்பாங்கி வகுத்துரைத்தது.

(இ-ள்.) பெரிய மலைமேலுண்டாகிய நாட்டினையுடையான் தளர்ச்சி நீங்க மடப்பத்தையுடைய நடையாற் சிறந்த பாங்கி கூறுபாடுசொன்னது.

---

கூளி நிரைக்கநின் றம்பலத் தாடி குரைகழற்கீழ்த்
தூளிநிறைத்த சுடர்முடி யோயிவ டோணசையால்
ஆளி நிரைத்தட லானைக டேரு மிரவில்வந்து
மீளி யுரைத்தி விணயே னுரைப்பதென் மெல்லியற்கே.

(பொ-ரை.) கண்ணுக்கு இனிமையாலே பேய்களும் விட்டு நீங்காதபடி திருவம்பலத்தே நின்றாடியருளுகிறவன்; அவனுடைய வீரக்கழல் ஆரவாரிக்கிற சீபாதங்களில் தூளியாலே நிரைக்கப்பட்ட ஒளியையுடைய (முடியையுடைய)வனே! இவள் தோளிடத்தே வைத்த விருப்பத்தாலே சிங்கங்களானவை நிரைத்து வெற்றியுடைய யானைகளைத் தேடுகிற இரவிடத்தே வந்து மீள்வதாகச் சொல்லா நின்றாய். மெல்லிய இயல்பினையுடையாளுக்குத் தீவினையைச் செய்த நான் எதைச் சொல்லுவேன்? (எ-று.)

---

151. பாங்கி கூற்று.

கூளி - பேய்கள். மீளி - மீளுதல். மருடல், வெகுடல் என்பன மருளி வெகுளி என்று நின்றாற்போல மீடலென்றது மீளியென நின்றது. (பே-ரை.) ஆளி - அத்தியாளி.

அம்பலத்தாடி யென்பது ஒரு திருநாமம்; 'ஆளியில் அம்பலத் தாடி' (கோடீச். 139)

இரவுக்குறி யுடன்பட்டாளாகலின், தூளிநிறைத்த சுடர்முடியோய் என்றதனால் வரும் ஏதத்தை அத்தூளி காக்குமென்று கூறினாளாம். உடம்படவும் மறுக்கவும் மாட்டாது இடைநின்று வருந்துதலின், வினையேனென்றாள். ஆளி நிரைக்குமாற்றின்கண் நீ வருதற்கு உடம்படுதல் தகாதாயினும் தோள்நசையால் கூறுகின்ற இதனை மறுப்பின் நீ ஆற்றாய் என்பதனால் உடம்படா நின்றேன் என்பது படக் கூறினமையால், வகுத்துரைத்தலாயிற்று' (பே-ரை.)

---

## 152. உட்கோள் வினுதல்.

நெறிவிலக்குற்றவ னுறுதுயர்நோக்கி
ஆங்கொருசூழல் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) இந்த வழியிலே வரவேண்டாவென்று விலக்கப்பட்டவன் உற்ற கிலேசத்தைப் பார்த்து அவ்விடத்தே ஒரு சூழ்ச்சியைத் தோழி சொன்னது.

---

வரையென் றொருகா லிருகால் வளைய நிமிர்த்துவட்கார்
நிரை[1]யன் றழலெழ வெய்துநின் றோன்றில்லை யன்னநின்னூர்
விரையென்ன மென்னிழ லென்ன வெறியுறு தாதிவர்போ
துரையென்ன வோசிலம் பாநலம் பாவியொளிர்வனவே.

(பொ-ரை.) மகாமேருவை முன்னொரு காலத்து இரண்டு காலும்வளையும்படி பண்ண, மார்பையும் தோளையும் நிமிர்த்து, சத்துருக்களுடைய நிரையை அன்று அழல் எழ எய்து நின்றோன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரை ஒத்தவனுடைய ஊரில் நறுநாற்றங்கள் எத்தன்மையன? மென்னிழல் எத்தன்மையன? நறுநாற்றம் மிக்க அல்லி பரந்த பூக்கள் எத்தன்மையன? சொல்லுவாயாக, நாயகனே! நன்மை பரந்து விளங்குவன எத்தன்மையன? சொல்லுவாயாக.

---

152. பாங்கி கூற்று.

(பா-ம்.) 1. வன்றழல்.

'நின்னூரின் நலம் பரந்து விளங்குவனவாகிய ஆண்டையார் பூசும் விரை எத்தன்மைய? அவர் விளையாடும் மெல்லிய நிழல் எத் தன்மைய? அவர் சூடும் நறுநாற்றம் பொருந்திய தாதுபரந்த போதுகள் எத்தன்மைய?" என்று விரித்துப் பொருள் கூறுவர் பேராசிரியர்.

வட்கார் - பகைவர்.

பயன் - தலைமகற்குக் குறியிடமுணர்த்தும் தோழி அவனால் தன்னை வினவுவித்தல். (பே-ரை.)

இதனைப் பாங்கி அவனுட்டணி யியல்வினுதற்குச் செய்யுளாகக் காட்டுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 517)

---

## 153. உட்கொண்டு வினுதல்.

தன்னைவினவத் தானவள்குறிப் பறிந்
தென்னைநின்னாட் டியவணியென்றது.

(இ-ள்.) பாங்கியானவள் தன்னை வினவத் தான் அவளுடைய நினைவை யறிந்து, 'உங்களுடைய நாட்டியல்பு இருக்கும்படி என்ன?' என்று கேட்டது.

---

செம்மல ராயிரந் தூய்[1]க்கரு மாறிருக் கண்ணணியும்
மொய்ம்மல ரீர்ங்கழ லம்பலத் தோன்மன்னு தென்மலயத்
தெம்மலர் சூடிநின் றெச்சாந் தணிந்தென்ன நன்னிழல்வாய்
அம்மலர் வாட்க ணல்லா யெல்லிவாய் நுமராடுவதே.

(பொ-ரை.) ஆயிரம் செந்தாமரைப் பூவையிட்டுப் புருடோத்தமன் அதிலொருபுட்பம் குறைதலாலே அழகியகண்ணை இடந்து அப்பிப் பூசிக்கிற பெரிய மலரையொத்துக் குளிர்ந்த சீபாதங்களையுடைய திருவம்பலநாதன் நிலைபெற்ற பொதியின் மலையிடத்து, அழகிய மலரையொத்து, ஒளி சிறந்த கண்களை யுடைய நல்லவளே! இரவிடத்தே எங்கள் உறவின்முறையார்

விளையாடுவது எந்த மலரைச் சூடிநின்று, எந்தச் சந்தனத்தை அணிந்து, எந்த நல்ல நிழலிடத்தேதான்? சொல்லுவாயாக வேண்டும். (எ-று.)

---

**153.** தலைவன் கூற்று.

(பா - ம்) [1] திருமால்.

தலைவன் அவனுட்டணியியல் விருதற்குச் செய்யுளாகக் கூறுவர் இலக். விளக். ஆசிரியர். (சூ. 517).

---

## 154. குறியிடங் கூறல்.

இரவுக்குறி யிவ ணென்றுபாங்கி
அரவக்கழலவற் கறியவுரைத்தது.

(இ-ள்.) இரவுக்குறி இத்தன்மையதென்று தோழியானவள் ஆரவாரிக்கிற வீரக்கழலையுடைய நாயகனுக்கு அறியும்படி சொன்னது.

---

பனைவளர் கைம்மாப் படாத்தம் பலத்தரன் பாதம்விண்ணோர்
புனைவளர் சாரற் பொதியின் மலைப்பொலி சாந்தணிந்து
சுனைவளர் காவிகள் சூடிப் பைந்தோகை துயில்பயிலுஞ்
சினைவளர் வேங்கைகள் யாங்கணின் றாடுஞ் செழும்பொழிலே.

(உரை) பனையை ஒத்த கையினையுடைய யானையின் தோலைப் படாமாக உடையவன்; திருவம்பலத்தே உளனாகிய தலைவன்; அவனுடைய சீபாதங்களைச் சூடுதற்கிடமாகிய தேவர்கள், மிக்க சாரலையுடைய பொதியின்மலைப் பொலிவு பெற்ற சந்தனத்தை யணிந்து, நீலப்பூவைச் சூடி, வேங்கை நிழலிலே நின்று, மயிலை யெழுப்புவாயாக வேண்டும். (எ-று.)

---

**154.** பாங்கி கூற்று.

உரையில் சில சொற்கள் விடப்பட்டுள்ளன. விண்ணோர் புனை வளர் சாரல் - விண்ணோர் பரவுதற் கிடமாகிய வளரும் சாரல். சுனைவளர் காவிகள் - சுனைகளிலே வளரும் நீலப் பூக்கள். பைந் தோகை துயில் பயிலும் சினைவளர் வேங்கைகள் - பசிய மயில்கள் துயில் செய்யும் கோடுவளரும் வேங்கைப்பொழில். (பே-ரை.)

வேங்கையின் கீழிரவுக்குறி:— 'நமக்கொன் றுரையா ராயினுந் தமக்கொன் றின்னா விரவி னின்றுணையாகிய படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ. துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே' (குறுந். 266)

---

## 155. இரவுக்குறி யேற்பித்தல்.

அரவக்கழலவ னாற்றானென
[1]விரவிநிற்குங் குறையிசைவித்தது.

(இ-ள்) அரவஞ் செய்கிற வீரக்கழலை யுடையவன் ஆற்றானென்று கொண்டு இரவினிற் குறையை இசைவித்தது.

---

மலவன் குரம்பையை மாற்றியம் மான்முதல்வா னர்க்கப்
[பாற்
[2]செலவன் பரிக்கொக்குஞ் சிவன்றில்லைக் கானலிற் சீர்ப்
[பெடையோ
டலவன் பயில்வது கண்டழு ரார்கூர்ந்துயில் [3]வேலுடையோன்
செலவந் திவாய்க்கண் டனனென்ன தாங்கொல் மன்சேர்
[துயிலே.

(பொ-ரை.) மும்மலங்களை உடைத்தாகிய உடம்பான இக்குடிலை மாற்றி அப்புருடோத்தமன் முதலாகிய தேவர் களுக்கு அப்பாற் செல்லுகிற தனக்கு அன்பு செய்வார்க்கு ஒக்கிற சிவனென்னும் திருநாமத்தினையுடையவன்; அவனு டைய பெரும்பற்றப் புலியூரைச் சூழ்ந்த கடற்சோலையில், சீரிய

பேடையுடனே சேவல் நண்டானது உறவு செய்கிறபடியைக் கண்டு வருத்தமுற்றுக் கூறிய வேலினையுடைய நாயகன் செல்ல, அந்திக்காலத்திடத்தே கண்டேன்; மன்னனுலான பொருந்தின உறக்கமானது என் செயத்தான் ?

---

155. பாங்கி கூற்று.

(பா-ம்.) 1. இரவுக்குறி யேற்பித்தது. 2. அன்பர்க் கோக்கும். 3. வேலுரவோன்.

குரம்பை - உடல். கானல் - கடற்சோலை

அலவன் பெடையோடு பயிலக்கண்டு அஞர் கூர்ந்து சென்றவன் உறங்கினதை நான் காணவில்லையெனப் பாங்கி தோழிக்கு இரவுக்குறி அறிவித்தாள். அலவன்பெடையோடு பயில்வது. சிற். 84.

'அன்பர்க்கோக்கும் சிவன்' என்ற பாடத்தைப் பேராசிரியர் கொண்டு பொருள் கூறுவர்.

'பெடையோடும் பயிலு மலவனைக் கண்டும் உயிர் தாங்கிச்சென்றானாதலின் உரவோனென்றாள்'. (பே-ரை.)

---

## 156. இரவரவுரைத்தல்.

குரவரு குழலிக்
கிரவர வுரைத்தது.

(இ-ள்.) குரவம் பூவை யொக்க நாறுகின்ற கூந்தலினை யுடையவட்கு இரவு வருதலைச் சொன்னது.

---

மோட்டங் கதிர்முலைப் பங்குடைத் தில்லைமுன் னோன்கழற்கே
கோட்டந் தருநங் குருமுடி வெற்பன் மழைகுழுமி
நாட்டம் புதைத்தன்ன நள்ளிரு ளுகை நடுங்கச்சிங்கம்
வேட்டந் திரிசரி வாய்வரு வான்சொல்லு மெல்லியலே.

(பொ-ரை.) பெரிய பெருமையையும் அழகையும் கதிர்ப்பையும் உடைத்தாகிய முலையாற் சிறந்த பாகத்தையுடைய பெரும்பற்றப் புலியூரிற் பழையவன்; அவனுடைய சீபாதங்களை வணங்குகிற நம்முடைய நிறமுடைத்தாகிய முடியையுடைய நாயகன்; மேகங்கள் திரண்டு கண்புதைத்தாலொத்த செறிந்த இருளிடத்து யானைகள் நடுங்க, சிங்கங்கள் வேட்டமாக உலவு வழியிடத்து, மெல்லிய இயல்பினையுடையாய், வருவானாகச் சொன்னான். (எ-று.)

---

**156.** பாங்கி கூற்று.

குரு - நிறம். நாகம் - யானை.

இதனைப் பாங்கி இறைவிக்கிறைபோன் குறையறிவுறுத்தற்குச் செய்யுளாகக் காட்டுவர் இலக். விளக் ஆசிரியர். (சூ. 517)

---

## 157. ஏதங்கூறி மறுத்தல்.

இழுக்கம்பெரி திரவரினென
அழுக்கமெய்தி யரிவையுரைத்தது.

(இ-ள்) இரவு வரிற் குற்றம் பெரிதென்று வருத்தமுற்று நாயகி சொன்னது.

---

செழுங்கார் முழுவதிர் சிற்றம்பலத்துப் பெருந்திருமால்
கொழுங்கான் மலரிடக் கூத்தயர் வோன்கழ லேத்தலர்போன்
முழங்கா ரரிமுரன் வாரண வேட்டைசெய் மொய்யிருள்வாய்
வழங்கா வதரின் வழங்கென்று மோவின் றெம்[1] வள்ளலையே.

(பொ-ரை.) அழகிய காரை யொத்த குடமுழாக்கள் முழங்குகிற திருச்சிற்றம்பலத்திலே, பெரியமாலானவன் அழகிய நறுநாற்றத்தையுடைய புட்பத்தையிட்டு அஞ்சலி செய்ய, திருக்கூத்தாடியருளுகிறவனுடைய சீபாதங்களை வாழ்த்தாரைப்போலே, முழங்குதலால் கிட்டவொண்ணாத சிங்கம் பாட்டையுடைய(?) யானைகளை வேட்டம் செய்கிற செறிந்த இருளிடத்து மனிதர் நடந்தறியாத வழியிலே வருவாயாக, என்று * (எம்முடைய நாயகனை இப்பொழுது சொல்லல் தகுமோ?) (எ-று.)

---

**157.** தலைவி கூற்று.

(பா-ம்.) மைந்தனையே.

'ஏத்தலர்போல் வழங்கேன்றமோ' என்று கூட்டியுரைப்பாருமுளர்; முழங்காரி யென்பதற்கு முழங்குதலார்ந்த அரியென்பாருமுளர். (பே-ரை)

* இப்பகுதி ஏட்டில் 'சொல்லுமுச்சிப்பொழுது எம்முடைய நாயகனை' என்று காணப்படுகிறது.

இச்செய்யுளோடு 'பொருமாறு கொண்டு புகர்முக மாவும் புலியுமச்சம் தருமா றருமுறும் கானம் கடந்து தமியள்முன்னே, உருமாறி வந்துவெஞ் சூரரமாதர் உலவுங்கங்குல் வருமா றிசைந்தன மோமன மேஅந்த வள்ளலையே' என்ற அம்பிகாபதிக் கோவை (196)ச் செய்யுளை ஒப்பிடுக.

---

## 158. குறைநேர்தல்.

அலைவேலண்ண னிலைமைகேட்டுக்
கொலைவேற்கண் ணிகுறை [1]நயந்தது.

(இ-ள்.) சத்துருக்களை வருத்துகிற வேலினையுடைய நாயகனது நிலைமை கேட்டுக் கொலைத் தொழிலாற் சிறந்த நிகர்த்த கண்களையுடையாள் குறையை விரும்பினது.

---

ஓங்கு மொருவிட முண்டம் [1]பலத்தும்ப ருய்யவன்று
தாங்கு மொருவன் றடவரை வாய்த்தழங் கும்மருவி
வீங்குஞ் சுனைப்புனல் வீழ்ந்தன் றழுங்கப் பிடித்தெடுத்து
வாங்கு மவர்க்கறி யேன்சிறி யேன்சொல்லும் வாசகமே.

(பொ-ரை.) பொழுதைக்குப் பொழுது மிகுந்து சதிப்பதான விடத்தைப் பானம் பண்ணித் தேவர்கள் பிழைக்கும்படி அன்று பரிகரிக்கின்ற திருவம்பலத்தில் உளனாகிய ஒப்பிலாதவன்; அவனுடைய மிகவும் பெரிய மலையிடத்து ஆரவாரிக்கிற அருவிப் பெருக்கிலே அகப்பட்ட சுனைநீரிலே அன்று நாம் விழுந்து இறந்துபடப் புகச் சுனையினின்றும் பற்றிக் கரையிலேறவிட்ட * பெருங்கவியாளர்க்குச் (?) சிறியளாகிய நான் சொல்லும் ஒரு வார்த்தையும் அறியேன்.

என்ற பொருளாய், நம் உறவின் முறையாராற் பரிகரிக்கிற காலத்திலும் நம்முடைய வருத்தமறிந்து தீர்ப்பாரொருவர் தாம் இரவுக்குறியிலே வருகிற இதற்கு நாம் கிலேசிக்கிற கிலேசமும் தாமே அறிந்து தீர்ப்பர். (எ-று)

---

158. பாங்கி கூற்று.

* ஏட்டில் பெருக வியாளற்குச்' என்றிருக்கிறது.

'சுனைப் புனல்வாய் வீழ்ந்தழுங்க அன்று தாமே வந்தெடுத்துய்வித்தாற் போல வழங்காதவரிற் றும் வருதலான் எனக்கு வருமிடுக்கணையும் தாமே நீக்கினல்லது யானறிவ தொன்றில்லை யென்னுங் கருத்தால் சுனைப்புனல் வீழ்ந்தன்றமுங்கப் பிடித்தெடுத்து வாங்குமவர்க்கென்றாள். ஆற்றின்கண் ஏதம் நினைந்திரவுக்குறி மறுத்த தலைமகள் அவன் செய்த உதவி நினைந்து பின்னுடம்பட்டாளாதல் பொருந்தாமை யறிந்துகொள்க. இக்கருத்தேபற்றி உதவி நினைந்து குறைநயந்த தென்றது அவளதாற்றாமை நிலைமை கேட்டுக் குறைநயந்ததென்றார். அவன் செய்த பேருதவி சொல்லுகையால் அவன் செய்த உதவிக்குக் கைம்மாறுவது நான் அவனுழைச் சேறலே யென்றுடம்பாடாயிற்று. பிறவிக் குட்டத்து யான் விழுந்து கெடப்புகத்

தாமே வந்து பிடித்தெடுத்து அதனினின்றும் வாங்கிய பேருதவி யார்க்குச் சிறியேனாகிய யான் சொல்வதறியேனென்று வேறுமொரு பொருடோன்றியவாறு கண்டு கொள்க'. (பே-ரை.)

---

## 159. குறைநேர்ந்தமை கூறல்.

குறைநயந்தன ணெறிகுழலியென
எறிவேலண்ணற் கறியவுரைத்தது.

(இ-ள்.) நெறித்த கூந்தலினையுடையாள் குறை நயந்து விரும்பினாளென்று மாலையால் நறுநாற்றத்தைப் பொருந்தின வேலுடைய நாயகற்கு அறியும்படி சொன்னது.

---

ஏனற் பசுங்கதி ரென்றூழ்க் கழிய வெழிலியுன்னிக்
கானக் குறவர்கள் கம்பலை செய்யும் வம்பார்சிலம்பா
யானிற் றை[1] யாமத்து நின்னருண் மேனிற்க லுற்றுச்
[சென்றேன்
தேனக்க கொன்றையன் றில்லை யுறாரிற்செல்லுஞ் செல்லல்
[களே.

(பொ-ரை.) ............தினைக்கதிரானது கோடையாலே வாட, மழை பெய்விப்பதாக நினைந்து காட்டிலே வாழும் குறவர்கள் தெய்வத்திற்குப் பலிகொடுத்து ஆரவாரிக்கிற புதுமை ஆர்(ந்த மலையின்) த(லை)மையினையுடையனே! இற்றை இடையாமத்திலே யான் உன்னுடைய திருவருளின் வழியே நிற்க வேண்டி யடைந்தோர் காண, தேன்மலருகின்ற கொன்றை மாலையையுடையவனது பெரும்பற்றப் புலியூரை யடையாதார் அனுபவிக்கும் கிலேசத்தை அறிந்தனன் காண். (என்ன, இப்படி வருந்தி உடன்படுவித்தேன் காண். (எ-று.)

---

159. பாங்கி கூற்று.

(பா-ம்.) 1. யாமும். யாமமு நின்னருளே.

'ஏனற் பசுங்கதிர்' என்றதற்குத் 'தினையினது பசிய கதிர்' என்பது பேராசிரியர் உரை. இப்பகுதிக்கு ஏட்டிலுள்ள உரை சிதைந்துள்ளது. 'ப்பூ......ன்ற' என்ற எழுத்துக்களே அங்கு எஞ்சியுள்ளன.

வம்பு - காலமல்லாத காலத்து மழை. 'வம்பார் குன்றம்' (தேவா. ஞான. திருக்குற்றாலம். 1)

'கானக்குறவர்கள் தமக்குணவாகிய தினைக்கதிர் கோடையாலழியத் தெய்வத்தைப் பராவி மழைபெய்விக்க முயல்கின்றாற்போல, நினக்குத் துப்பாகிய இவணலம், அலர் முதலாயினவற்றால் தொலையும்வழி அது தொலையாமல் முயன்று பாதுகாப்பாயென உள்ளுறையாமாறு காண்க'. (பே-ரை)

கானக்குறவர்கள் கம்பலை செய்யும் சிலம்பா - 'வாடிய பைந்தினைக் காமுரு கோனை வணங்கியநமர் கூடியக் கார்த்திடக் கொண்மூச் சொரிந்தனகொண்டல். (கலைசை. 289)

---

## 160. வரவுணர்ந்துரைத்தல்.

வளமயிலெடுப்ப விளமயிற்பாங்கி
செருவேலண்ணல் வரவுரைத்தது.

(இ-ள்.) அழகிய மயிலெடுப்ப சாயலால் இளைய மயிலையொத்த பாங்கி செருத் தொழிலுக்குச் சிறந்த வேலினையுடைய நாயகன் வந்தபடியைச் சொன்னது.

---

முன்னு மொருவ ரிரும்பொழின் மூன்றற்கு முற்றுமிற்றாற்
பின்னு மொருவர் சிற்றம்பலத் தார்தரும் பேரருள்போல்
துன்னு மொரின்பமென் [1]றேகை[2] தன் றேகைக்குச் சொல்லுவபோல்
மன்னு மரவத்த வாய்த்துயில் பேரு மயிலினமே.

(பொ-ரை.) பெரிய பூமிகள் மூன்றுந் தோன்றுவதற்கு முன்னும் ஒருவராயுள்ளவர்; எல்லாப் பொருளும் இறந்துபட்டாலும் ஒருவராயுள்ளவர்; திருச்சிற்றம்பலத்திலேயுள்ளவர்; அவர் தருகிற பெரிய கிருபைபோல நமக்கு வந்து சேர் நின்ற தோரின்பத்தை மென்மயிலான தன் மயிலுடனே சொல்லுவ போல் நிலைபெற்ற ஆரவாரத்தையுடையவாய், உறக்கமானது ஒழிய நின்றன மயிற்சாதிகள். (இஃதென்னே?)

ஓசை என்பது பாடமாயின், பிரியம் சொல்லுவாரைப் போலவென்றுமாம்.

நிலைபெற்ற ஆரவாரம் என்றது மயில் வெருவி எழுதல். வெற்றுப் புளவாவெழுதல் (?) செல்லுமவை எழுந்தாலும் அப்பொழுதே துயில்வதியும். இது நிலைபெற்ற ஆரவாரமாகையால் நாயகர் செய்தகுறி என்றுபடும்.

---

160. பாங்கி கூற்று.

(பா-ம்.) 1. ஓகை. 2. தந்தோகைக்கு.

• தன்றோகைக்கு என்பது பாடமாயின் பன்மை ஒருமை மயக்கமெனக் கொள்க. (பே-ரை.) பின் இரண்டடிகட்கும் பேராசிரியர் கூறும் உரை:- 'இவ்வில்லின்கண் ஓரின்பம் வந்து பொருந்துமென்று தம்முடைய தோகைக்கட்கு ஓகை சொல்லுவனபோல, இடைவிடாது நிகழும் ஆரவாரத்தையுடையவாய் மயிலினம் துயில் பெயராநின்றன; இஃதென்னே?

முன்னுமவரிரும்............பின்னுமோருவர்: 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' (திருவாச, திருவெம். 9).

## 161. தாய் துயிலறிதல்

ஊசன்மிசைவைத் தொள்ளமளியில்
தாயதுதுயி ருனறிந்தது

(இ-ள்.) ஊசலைச் சொல்லும் வார்த்தையின்மேல் வைத்து அழகிய சயனத்திலே கிடக்கிற தாய் உறக்கத்தைத் தான் அறிந்தது.

---

கூடா ரரணெரி கூடக் கொடுஞ்சிலை கொண்டவண்டன்
சேடார் மதின்மல்லற் றில்லையன் னாய்சிறு கட்பெருவெண்
கோடார் கரிகுரு மாமணி யூசலைக் கோப்பழித்துத்
தோடார் மதுமலர் நாகத்தை நூக்குநஞ் [1] சூழ்பொழிற்கே.

(பொ-ரை.) சத்துருக்களது அரணம் நெருப்புக்கு இரையாம்படி, கல்லை வில்லாக வளைய வாங்கின தேவன், உயரமிக்க மதிதோய்ந்த விரிசடைத்தாகிய (?) பெரும்பற்றப்புலியூரை யொப்பாய்! சிறுகண்களையும் பெரிய வெள்ளிய கொம்பினையும் (பெற்ற) யானையானது, நிறமுடைத்தாகிய மிக்க மணியழுத்தப் பட்ட ஊசலின் கோவையைக் குலைத்து, இதழ்நிறைந்த தேனுடைத்தாகிய மலரால் சிறந்த புன்னையையும் தள்ள நின்றது நம்முடைய சூழ்ந்த சோலை (யிலே) (எ-று)

என, 'அதற்குப் பொருள் எது?' என்று தாய் துயி லெழுந்தாளாகில், 'விளையாடினேன் காண்' என், (பாள்); இது கேட்டுத் துயின்றாளாகில் குறியிடத்துச் செல்வாள்; (இவை ஆய) பயன்.

---

161. பாங்கி கூற்று.

(பா-ம்) சூழ்பொழிலே.

இதனோடு, 'சீதஞ்செய் திங்கள் திருமுகத்தாய் நம் செழுஞ் சிலம்பின், மாதங்கம் ஒன்று மழைமதம்பட்டு நம் மல்லிகைவெண்

போதொன்று பந்தரும் கற்பக ஊசலும் பொற்பழித்துச், சூதஞ் சுர புன்னை சூழ்நறுங் காவும் தொலைக்கின்றதே' என்ற அம்பிகாபதிக் கோவைச் (200) செய்யுளை ஒப்பிடுக.

---

## 162. துயிலெடுத்துச் சேறல்

தாய்துயிலறிந் தாய்தருகின்ற
மேதகுதோழி மெல்லியற்கிசைத்தது.

(இ-ள்.) தாயினுடைய உறக்கத்தை யறிந்து புறப்படும் உபாயம் விசாரிக்கிறவள் மெல்லிய இயல்பினையுடைய நாயகிக்குச் சொன்னது.

---

விண்ணுக்கு மேல்வியன் பாதலக் கீழ்விரி நீருடுத்த
மண்ணுக்கு நாப்பண் ணயந்துதென் றில்லைநின் றோன்மிடற்றின்
வண்ணக்கு வளைமலர் கின்றன சினவாண் மிளிர்நின்
கண்ணுக்கு மேற்கண்டு காண்வண்டு வாழுங் கருங்குழலே

(பொ-ரை.) ஆகாயத்துக்கு மேலாயுள்ளவன்; அகன்ற பாதலத்துங் கீழாயுள்ளவன்; விரிந்த நீரால் சூழப்பட்ட பூமிக்கு நடுவாயுள்ளவன்; விரும்பி, தெற்குத் திசைக்குத் திருப்பதியாயுள்ள பெரும்பற்றப்புலியூரிலே நின்றவன்; அவனுடைய திருமிடற்றை யொத்த நிறமுடைத்தாகிய நீலம் மலராய் நின்ற, (ன;) சினத்த வாள்போல் உலாவுகின்ற உன் கண்ணையொக்குமாகில் பார்த்துக்காண்; வண்டுகள் வாழ்கிற கரிய கூந்தலையுடையாய்! உன் கண்ணை ஒக்குமாகில் பார்த்துக் காண் (எ-று.)

---

162. பாங்கி கூற்று.

(பா-ம்.)[1] தாய்துயிலறிந் தாய்தருபவள் மெல்லியற்குச் சொல்லியது.

மண்ணினுள்ளு முளனாதலின், மண்ணுக்கு நாப்பண் என்றார்; மண்முழுதுக்கும் இடைத் தில்லையை நயந்து அதன்கண் நின்றோ னென்று உரைப்பாருமுளர். சினவாண்மிளிர் நின் கண்ணொக்குமேல் என்புழி ஒத்தபண்பு வேறுபட்டமையான் உவமைக்குவமையுன் றென்க. கண்டுகாண் என்பது ஒருசொல். (பே-ரை)

'நீலம் உன் கண்ணை ஒக்குமாயிற் காண்பாய்' என்று பாங்கி தலைவிக்குக் கூறி அவளை இரவுக்குறியிடம் சேர்த்தாள் என்பது கருத்து.

இச்செய்யுளிலுள்ள 'விண்ணுக்குமேல்' என்பதனைச் செய்யுட்கண் உகரம் பெறற்கு உதாரணமாகக் காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல். எழுத். 405. உரை).

'பாங்கி தலைவியைக் குறியிடத்துக்கொண்டு சேறற்குச் செய்யு ளாகக் காட்டுவர் இலக். விளக்க ஆசிரியர். (சூ. 517 உரை).

---

## 163. இடத்துய்த்து நீங்கல்

மைத்தடங்கண்ணியை யுய்த்திடத்தொருபால்
நீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) மையெழுதப்பட்ட பெரிய கண்களையுடையாளைக் குறியிடத்துய்த்து, ஒரு பக்கத்திலே நீங்குவதாக நினைந்து தோழி சொன்னது.

---

நந்தீ வரமென்னு நாரண னுண்மலர்க் கண்ணிற்கெணகந்
தந்தீ வரன்புலி யூரனை யாய்தடங் கண்கடந்த
விந்தீ வரமிவை காணின் னிருள்சேர் குழற்கெழில்சேர்
சந்தீ வரமுறி யும்வெறி வீயுந் தருகுவனே.

(பொ-ரை) 'நந்தீசுவரனே! 'வரம் தரவேண்டு'மென்னும் புருடோத்தமனுடைய செவ்வித்தாமரைப் பூவை யொத்த

கண்ணுக்குச் சக்ராயுதத்தைப் படைத்துக்கொடுத்த மேலானவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரை யொப்பாய்! உன்னுடைய பெரிய கண்களை யொத்த நீலப்பூக்கள் இவை காண்; உன்னுடைய இருள்சேர்ந்த கூந்தலுக்குச் சந்தனம் புறப்படவிட வருகிற (எழில் சேர்ந்த நல்ல முறிகளையும்) நறு நாற்றமுடைய பூவையுங் கொண்டுவந்து நான் தரக்கடவேன்; (எ-று)

'அவ்வளவு, நீ இந்நீலப்பூக்களைப் பறிப்பாயாக' என்று குறியிடத்தே நிறுத்தி நீங்கினது.

---

163. பாங்கி கூற்று.

எஃகம்—சக்கரம்.

'நந்தி என்பது ஒரு திருநாமம்; (பே-ரை). திருமால் வழிபட்டது(சிற். 86).

---

## 164. தளர்வகன்றுரைத்தல்

வடுவகிரனைய வரிநெடுங்கண்ணியைத்
தடுவரியன்பொடு தளர்வகன்றுரைத்தது.

(இ-ள்.) மாவின் வடுவகிரை யொத்த வரியையுடைத்தாகிய நெடியகண்ணியைத் தடுத்தற்கரிய அன்புடனே தளர்ச்சி நீங்கிச் சொன்னது.

---

1

காமரை வென்றகண் ணோன்றில்லைப் பல்கதி ரோனடைத்த
தாமரை யில்லி னிதழ்க்கத வந்திறந் தோதமியே
பாமரை மேகலை பற்றிச் சிலம்பொது க்கிப்பையவே
நாமரை யாமத்தென் னோவந்து வைகி நயந்ததுவே

(பொ-ரை.) இறைவனையும் தன் வசமாக்க வந்த காமனை வெற்றி செய்த திருநயனத்தையுடையவன்; பெரும்

பற்றப்புலியூரிடத்துப் பல கிரணங்களையுமுடைய ஆதித்தனாலே அடைக்கப்பட்ட தாமரைப்பூவாகிய உம்முடைய கோயில் இதழாகிய கதவை நாமே (நீரே) திறந்துகொண்டோ நடந்தது? ஒரு துணையுமின்றியே பரந்த வரையின் மேகலையைச் சத்தப்படாமற் பிடித்துச் சிலம்பை ஒக்கக் கடுக்கி, மெத்தனுகி(?) அர்த்தராத்திரியில் வந்து அவதரித்த விருப்பினது எதுதான்? (எ-று.)

என்ன, சீதேவியானால் எல்லாரும் தம் குறை முடிப்ப, நம் பக்கலிலே வரு......த்தலையல்லது நாம் நடந்தகாரணம் என்? என்றபடி.

---

164. தலைவன் கூற்று.

பின் இரண்டடிகட்குப் பேராசிரியர் கூறும் உரை வருமாறு:- பரந்தவரையின் மேகலையை ஒலியாமற் பிடித்து, சிலம்புகளை மேலேறக் கடுக்கி, தனியே பைய அரையாமத்தின்கண் நாம் ஈண்டுவந்து தங்கி விரும்பியதென்னோ? பல்கதிரோனடைத்த.........திறந்தோ என்பதற்கு அவர் கூறும் விசேட உரை. "எல்லாராலும் திருமகள் நயக்கப்படினல்லது, திருமகள் தன்னால் நயக்கப்படுவதொன்றில்லையென்னுங் கருத்தான் 'நாம் நயந்ததென்னோ?' என்றான்" என்பது.

காமர் ரகரவீறு இகழ்ச்சிக்கண் வந்தது: காமருயிர் செருக்குங் கண்ணென்றே; (குமரகுரு. 498) நாமென்னும் முன்னிலையுளப்பாட்டுத் தன்மை உயர்வுதோன்ற முன்னிலைக்கண் வந்தது. (பே-ரை.) 'நாமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியினென்றாள் (சிந்தா. 210). இங்கும் நாம் முன்னிலை உளப்பாட்டுத்தன்மை.

இதனைத் தலைவன் தலைவியைக் குறியிடத்தெதிர்ப்படுதற்குச் செய்யுளாக உரைப்பர் இலக். விளக்க ஆசிரியர். (சூ. 517. உரை).

## 165. மருங்கணைதல்

அன்புமிகுதியி னளவளாயவளைப்
பொன்புனைவேலோன் புகழ்ந்துரைத்தது.

(இ-ள்) தன்னுடைய அன்பினது மிகுதியினாலே மிகவும் கலந்தவளை, அழகிதாகிய பொன்புனையப்பட்ட வேலினையுடையவன் மகிழ்ந்து சொன்னது.

---

அகிலின் புகைவிம்மி யாய்மலர் [1]வேய்ந்தஞ் சனமெழுதத்
தகிலுந் தனிவடம் பூட்டத் தகாள் சங்கரன்புலியூர்
இகலு மவரிற் றளருமித் தேம்ப லிடைஞெமியப்
[2]புகலு மிகவிங்ங னேயிறு மாக்கும் புணர்முலையே.

(பொ-ரை.) அகிற்புகையை நிறையவூட்டி அழகிய மலர்களைச்சூடிக் கண்ணுக்கு அஞ்சனமெழுத இம்மாத்திரம் பொறுத்தாளாயினும் ஏகரவல்லி(?) வடம் பூட்டவும் இடை பொறுக்கும் தகுதியுடையாளல்லள். சிவனுடைய பெரும்பற்றப்புலியூருடனே மாறுபடுவார் மெலிவதுபோலத் தளராநின்ற தேம்புதலையுடைய இடை ஒடியப் புகினும் ஒடியாதிருக்கினும் தம்மிற் புணர்ந்த சோடு சேர்ந்த தனங்கள் மிகவும் இங்ஙனே இறுமாப்புடைத்தானவை. (எ-று.)

என்று இடையைத் தாங்குவாரைப் போலே சென்று சேர்ந்தது.

---

165. தலைவன் கூற்று.

(பா-ம்.) [1]ஆராய்ந்து [2]புகினும்

தகிலும்-பொறுத்தாளாயினும்; தருவளாயினும் (பே-ரை.)

ஏகரவல்லிவடம்-ஒரு தனிவடத்தின் பெயர்போலும். ஞெமிய-(நெரிந்து) ஒடிய. இறுமாக்கும்-விம்மாநின்றன. தேம்பலிடை-தேய்தலையுடைய இடை (பே-ரை) (சிற். 11, 21.).

[1]புகலும் என்பது பாடமாயின் புகுதலுமெனவுரைக்க (பே-ரை)

## 166. முகங்கண்டு மகிழ்தல்

முகையவிழ் குழலி முகமதி கண்டு
திகழ்வே லண்ணன் மகிழ்வுற் றது

(இ-ள்.) அரு(ம்பு) அவிழ்கிற கூந்தலையுடையவள் முகமாகிய மதியினைக்கண்டு பிரகாசத்தினையுடைய வேலையுள்ள நாயகன் விரும்பிச் சொன்னது.

---

அழுந்தே னகரத் தியானென் றிருப்பவந் [1]தாண்டுகொண்டு
[2]செழுந்தே றிகழ்பொழிற் றில்லைப் புறவிற் செறுவகத்த
கொழுந்தேன் மலர்வாய்க் குமுத மிவள்யான் குரூஉச்சுடர் [கொண்
டெழுந்தாங் கதுமலர்த் தும்முயர் வானத் திளமதியே.

(பொ-ரை.) யான் இனி ஒருநாளும் நரகிற்புக்கழுந்தேனென்று செம்மாந்திருக்கும்படி என்னைத் தானே வந்து அடிமைகொண்ட அழகிய தேனையொத்த இனியவன்; அவனுடைய சிறந்த பொழில் சூழப்பட்ட பெரும்பற்றப்புலியூரில் புறச்சோலையிற் செய்யிடத்தே நிற்கிற அழகிய தேன்மலருகின்ற வாயினையுடைய ஆம்பற்பூவையொப்பாளிவள்; நான் நிறமுடைத்தாகிய கிரணங்களைக்கொண்டு உதித்து அவ்வாம்பற் பூத்தன்னையும் மலரப்பண்ணும் உயர்ந்த ஆகாயத்தின் இளைய மாமதி ஒப்பேன். (எ-று.)

என்று பொருளாய், அத்தேன்மலர்கின்ற ஆம்பலென்றபடியாலே, நாயகிக்கு அதைத் தானறியாதபடி தோன்றும் நாண்மதியை ஒப்பென்றபடியாலே, நாளுக்கு நாளும் இவ்வன்பு வளருமென்றும், அவ்வாம்பற்பூத் தன்னையே மலர்த்தும் மதியென்றபடியாலே, இவளை வரைந்துகொண்டு மகிழ்விக்க வேண்டும் என்னும் நினைவொழிய வேறு நினைவுடையேனல்லன் என்றும்படும்.

---

166. தலைவன் கூற்று.

(பா-ம்) 1. ஆண்டுகொண்டான். 2. செழுந்தேனுமிழ்.

நரகமென்றது ஈண்டுப் பிறவியை. வீடுபேற்றின்பத்தோடு சார்ந்த நரகமும் சுவர்க்கமும் ஒரு நிகரானவாகலின் நரகமென்றார். செறு--நீர்நிலையுமாம். வாய்--முகம். மலர்வாய்க்குமுதமென்றது கிண்கிணிவாய்க்கொள்ளும் நிலைமையை. அதனுலிவளது பருவம் விளங்கும்...... தலைப்பெய்தமையானன்றிக் கண்டதுணையான் அவண் மகிழ்தலையுங் கூறினுன்ம். இவ்வின்பம் வழிமுறையாற் பெருகு மென்பது போதர. இளமதியென்றான். (பேரை).

இதனைப் 'புகழ்தற்குச் செய்யுள்' என்பர் இலக். விளக். ஆசிரியர். (சூ. 517. உரை)

---

## 167. பள்ளியிடத் துய்த்தல்

பிரிவது கருதிய பெருவரைநாடன்
ஒள்ளிழைப்பாங்கியொடு பள்ளிகொள்கென்றது.

(இ-ள்.) பிரிவதாக நினைத்த பெரிய மலைமேலுண்டாகிய நாட்டினையுடையவன் அழகிய ஆபரணங்களையுடைய பாங்கியுடனே நித்திரை கொள்கென்று சொன்னது.

---

சுரும்புறு நீலங் கொய்யற் றமிநின்று துயில்பயின்மோ
வரும்பெறற் றோழியொ டாயத்து நாப்ப ணம்மரரொன்னார்
இரும்புறு மாமதில் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர்
துரும்புறுச் செற்ற கொற்றத்தெம் பிரான்றில்லைச் சூழ்
[பொழிற்கே.

(பொ-ரை) தேவர்களுக்குப் பகைவராகிய அசுரருடைய இரும்பால்(ஆகிய) மிகப்பெரிய மதிலும், பொன்மதிலும், வெள்ளிமதிலும், அன்று ஓர் துரும்பின் தன்மையாயுறும்படி அழித்த வெற்றியினையுடைய எம்முடைய சுவாமியுடைய

பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்த பொழிலிடத்தே, வண்டுகள் பொருந்தின நீலப்பூக்களைத் தனியே நின்று கொய்யாதொழிவாயாக; பெறுதற்கரிய தோழியுடனே ஆயக்கூட்டத்து நடுவே உறங்குவாயாக. (எ-று.)

மோ-அசைநிலை.

---

**167.** தலைவன் கூற்று.

(பா-ம்) பொழிலே.

சுரும்புறுநீலம் - சுரும்புவந்து பொருந்துநீலமலர்.

---

## 168. வரவுவிலக்கல்

தெய்வமன்னாளைத் திருந்தமளிசேர்த்தி
மைவரைநாடனை வரவுவிலக்கியது

(இ-ள்.) [தெய்வம் போன்றவளைத் திருத்தமான படுக்கையிற் கிடத்திவிட்டுப் பாங்கி, கரிய மலைநாடனை இனி வருதலாகாதென்று வரைவு விரும்பித் தடுத்தது].

---

நற்பகற் சோமனெரிதரு நாட்டத்தன் றில்லையன்ன
விற்பகைத் தோங்கும் புருவத் திவளின்மெய் யேயெளிதே
வெற்பகச் சோலையின் வேய்வளர் தீச்சென்று விண்ணினின்ற
கற்பகச் சோலை கதுவுங்கன் னாடவிக் கல்லதரே.

(பொ-ரை.) நல்ல ஆதித்தனும் சந்திரனும் அக்கினியும் இவை மூன்றின் குணங்களையும் தருகின்ற நயனங்களையுடையவனைப் பெரும்பற்றப்புலியூரை யொத்த வில்லுடனே மாறுகொண்ட மேலாகிற புருவங்களையுடையவள் காரணமாக, மலையிடத்து மேலுண்டாகி(ய) மூங்கிற் சோலையிலே பட்ட

நெருப்புச் சென்று தெய்வலோகத்திலே நின்ற கற்பகக்காவைப் பற்றுகின்ற மலைநாடனே! இக்கல்லுடைத்தாகிய வழி உண்மையாக எளிதே (எ-று)

எனவே, இப்படி அரிய வழிவாராதொழிக என்றவாறு. என்று பொருளாய், மூங்கிலிற் பிறந்த நெருப்பு மூங்கில் நின்ற வனத்தையும் சுட்டுப் பரந்த தெய்வலோகத்திலே நின்ற கற்பக மரத்தையும் சென்று பற்றுகின்ற நாடன் என்கையாலே, இவளிடத்தே உண்டாகிய களவொழுக்கம் இவள் பிறந்த குடியுமழிந்து உன் பெருமை தனக்கும் அழிவாகப் புகா நின்ற தென்றபடி.

---

168. பாங்கி கூற்று.

இதன் கொளுவிற்குரை ஏட்டிற் காணப்படவில்லை.

நற்பகற் சோமன்...... நாட்டத்தன்: 'இமையாத முக்கண் மூவரிற் பெற்றவர் (சிற் 14)

எளிதே என்பதற்கு எளிதோ என்னும் பொருள் கொள்ளலாம். புருவங்கள் உடையவள் காரணமாக எளிதாயிற்றேயன்றி உண்மையில் அரிது என்பது பொருள்.

பெருமை-இவன் வழியிற் பிதிர்கள் கொண்டாட்டம்; அழிவு, இகலோக பரலோக மிரண்டையும் சிந்தத்தல் (பே-ரை.)

---

## 169. ஆற்றுத்துரைத்தல்.

வரைவுகட்டாய வாணுதற்றோழிக்
கருவரைநாட னாற்றுத்துரைத்தது.

(இ-ள்) [வரைவினை முருக்கின ஒளிசிறந்த நெற்றியினை யுடைய தோழிக்கு நல்ல அழகிய மலைநாடன் தன் ஆற்றுமையைக் கூறியது.

---

பைவா யரவரை யம்பலத் தெம்பரன் பைங்கயிலைச்
செவ்வாய்க் கருங்கட் பெரும்பணைத் தோட்சிற் றிடைக்
[கொடியை
மொய்வார் கமலத்து முற்றிழை யின்றென் முன்னைத்
[தவத்தால்
இவ்வா றிருக்குமென் றேநிற்ப தென்றுமென் னின்னுயிரே.

(பொ-ரை.) படத்தையும் வாயையுமுடைய அரவத்தைத் திருவரை ஞாணாகவுடைய திருவம்பலத்தில் எம்முடைய மேலானவன் சோலையாற் பச்சென்ற அவனுடைய கயிலையில், சிவந்த வாயினையும் கரிய கண்ணினையும் பெரிய வேயொத்த தோள்களையும் சிறிய இடையினையுமுடைய வல்லிசாதத்தை யொப்பாளை, பெருத்து நீண்ட தாமரைப்பூவிலே யிருக்கிற தொழில் முற்றுப்பெற்ற ஆபரணங்களையுமுடைய சீதேவியை, நான் முன்பு செய்த புண்ணியத்தால், இப்படியே குறவர் மகளாய் இராநின்றாள் என்றல்லவோ என் உயிர் என்றும் நிலைபெறுகின்றது? (எ-று.)

ஆதலால், நான் வரைந்துகொள்ளாதிருப்பனோ வென்றது. இத்தன்மையாளை வரைந்துகொள்ள எளிதாகக் கூறுகின்றது என்? என்றுமாம்.

---

169. தலைவன் கூற்று;

கொளுவுக்கு ஏட்டில் காணப்பெற்ற உரை பொருந்தாமையால் வேறு உரை எழுதப்பெற்றது. அது பின்வருமாறு: விரைவின் மூறக்கின வொளிசிறந்த நெற்றியினையுடைய தோழிக்கு நறுநாற்றமுடைத்தாகிய பூமாலையினையுடையவன் அவர்......பார்த்துச் சொன்னது."

என் உயிர் என்றும் நிற்பதே எனக்கூட்டுக.

## 170. இரக்கங்கூறி வரைவுகடாதல்

அதிர்கழலவ னகுன்றவழி
யெதிர்வதறியா திரங்கியுரைத்தது.

(இ-ள்.) ஆரவாரிக்கிற வீரக்கழலினையுடையவன் பிரிந்த விடத்து, அவனுக்குறும் கிலேசத்தை யறியாதே வருந்திச் சொன்னது.

---

பைவா யரவு மறியு மழுவும் பயின்மலர்க்கை
மொய்வார் சடைமுடி முன்னவன் றில்லையின் முன்னினக்காற்
செவ்வாய் கருவயிர்ச் சேர்த்திச் சிறியாள் பெருமலர்க்கண்
மைவார் குவளை விடுமன்ன நீண்முத்த மாலைகளே.

(பொ-ரை.) படத்தையும் பெரியவாயையுமுடைய பாம்பும், மான்மறியும், மழுவும், (வாளும்) வாழ்கிற மலரையொத்த கைகளையுடைய, செறிந்து நீண்ட சடாமகுடத்தையுமுடைய, எல்லாப் பொருள்களுக்கும் முதல்வனானவனுடைய பெரும்பற்றப்புலியூரில், நீ போனவிடத்து, உன்னுடைய சிவந்த வாயிலே கரிய கொம்பை வைப்பாயாகவேண்டும்; (என்ன, சிறிது ஊதுவாயாக, என்றது). இந்த இளையவளுடைய பெரிய மலரையொத்த கண்களாகிய நீண்ட நீலப்பூக்கள், மன்னனே!, நீண்ட முத்துமாலைகளாகிய கண்ணின் நீர்த்தாரை விடாநிற்கும். (எ-று.)

நீ வழியிலே வரும் ஏதத்துக்குப் பயப்படும். ஆதலால், நீ பெரும்பற்றப்புலியூரிலே சென்றமை யறியும்படி கரிய கொம்பைச் சிவந்த வாயிலே வைத்து ஊதுவாயாக வேண்டும்.

---

170. பாங்கி கூற்று.

முன்னினக்கால்-சென்றுகிட்டினால். 'குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கள் கோலத்தனாய் வருமாதலின், வயிர் கூறப்பட்டது (பே-ரை.)

## 171. நிலவுவெளிப்பட வருந்தல்

தனிவேல்வர்க்குத் தந்தளர்வறியப்
பனிமதிவிளக்கம் பாங்கிபகர்ந்தது

(இ-ள்.) இணையிலாத வேலினையுடையவர்க்குத் தங்களுடைய தளர்ச்சியை அறியக் குளிர்ந்த மதியினுடைய விளக்கத்தைத் தோழி சொன்னது

---

நாகந் தொழவெழி லம்பல நண்ணி நடநவில்வோன்
ஆக மிதுமதி யேமதி யேநவில் வேற்கையெங்கண்
நாகம் வரவெதிர் நாங்கொள்ளு நள்ளிருள் வாய்நறவார்
நாக மலிபொழில் வாயெழில் வாய்த்த[1] நின் னுயகமே

(பொ-ரை.) நாகமாகிய பதஞ்சலி மாமுனி தொழ அழகிய திருச்சிற்றம்பலத்தே பொருந்தித் திருக்கூத்தாடியருளுகிறவனிடம் காண் இது. சந்திரனே,! சந்திரனே! இது ஒரு புத்தி; தான் சிவித்த(?) வேலைக் கையிலேயுடைய யானையைப் போன்ற எங்கள் நாயகர் வர, நாங்கள் புறப்பட்டு எதிர்கொள்ளுகிற செறிந்த இருளிடத்தே, தேனார்ந்த சுரபுன்னைகள் மிக்க பொழிலிடத்து, அழகுவாய்த்த உன்னுடைய முதன்மை. (சந்திரனே, சந்திரனே இது ஒரு புத்தி காண்.) (எ-று.)

என்று பொருளாய், உன்னை வருத்துகிற பாம்பாலும் தொழப்படுவான் ஒருவன் மலையானால், இந்த ஒளியெல்லாம் பொறுது சற்றுக்கண் கூசி நடக்கவேண்டும் என்றது.

---

171. பாங்கி கூற்று.

(பா-ம்.) [1] தனிநாயகமே.

நவில் வேல்-பயிலப்பட்ட வேல். நாகத்தான் விழுங்கப்பட்டு நீ நாகந்தொழவம்பலத்து நடம்பயில்வோனது மலைக்கட்புகுந்து விளங்கி வீற்றிருத்தல் நினக்கு நன்றி பயவாது என்பது கருத்து (பே-ரை.)

## 172. அல்லகுறி யறிவித்தல்.

வல்லியன்னவ ளல்லகுறிப்பா
டறைப்புனற்றுறைவற்குச் சிறைப்புறத்துரைத்தது

(இ-ள்.) வல்லிசாதம் போன்றவள் அல்லகுறிப்பிட்டபடியை, ஆரவாரிக்கிற நீரையுடைத்தாகிய துறையையுற்றவற்குச் சிறைப் புறமாகச் சொன்னது.

---

மின்னங் கலருஞ் சடைமுடி யோன்வியன் றில்லையன்னாய்
என்னங் கலமர வெய்திய தோவெழின் முத்தந்தொத்திப்
பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம் புற்று
[முற்றும்
அன்னம் புலரு மளவுந் துயிலா தழுங்கினவே.

(பொ-ரை.) மின் அவ்விடத்தே பெருமை பெற்ற சடைமுடியையுடையவனுடைய பெரிய பெரும்பற்றப்புலியூரை யொப்பாய்! அவ்விடத்து என்ன அலமாப்பை உற்றது காண்; அழகிய முத்துப்போல வரும்படி அவ்விடத்துப் பொன்போல் வளர்கின்ற புன்னையில் தன் சேக்கையிடத்துத் தனிமையுற்றும், அன்னங் களெல்லாம் விடியுமளவும் உறங்காதே கிலேசித்தன; (அவை என்ன அலமாப்பை உற்றன காண்) (எ-று.)

பிற்றை ஞான்று பகற்குறி வந்து நிற்கக் கூறினாளெனவும் அமையும்.

---

172. பாங்கி கூற்று.

அல்லகுறி-குறியல்லாத குறி.

அன்னம் துயிலாது அழுங்கினவே-மலர்ந்த புன்னை, சேரும் குருகினம் சேக்கைகொள்ளாது சிலம்பினவே. (அம்பிகா. 219.)

## 173. கடலிடைவைத்துத் துயரறிவித்தல்

எறிகடல்மேல்வைத் திரவருதுயரம்
அறைகழலவற் கறியவுரைத்தது.

(இ-ள்.) கரையுடனே மோதுகிற கடலைச் சொல்லும் வார்த்தையின்மேல் வைத்து இரவிடத்துண்டாகிய கிலேசத்தை ஆரவாரிக்கிற வீரக்கழலிணையுடையவற்கு அறியும்படி சொன்னது.

---

[1]சோத்துன் [2]னடிய மென்றோரைக் [3]குழுமித்தொல் வானவர்சூழ்ந்
தேத்தும் படிநிற்ப வன்றில்லை யன்னா ளிவடுவள
வார்த்துன் னமிழ்துந் திருவு மதியு மிழந்தவநீ
பேர்த்து மிரைப்பொழி யாய்பழி நோக்காய் பெருங்கடலே.

(உரை) சோத்தும் என்பது இழிந்தார் சொல்லும் அஞ்சலி வாய்பாடு. அது சோத்தென்று கடைகுறைந்து நின்றது.

அதனைச் சொல்லி 'உன் அடியோம்' என்னின், பழைய தேவர்களெல்லாம் திரண்டு அவர்களுக்குப் பரிவாரமாகச் சூழ்ந்து தன்னைப் புகழும்படி திருவம்பலத்தே நிற்கின்றவன். அவனுடைய பெரும்பற்றப்புலியூரை ஒப்பாளாகிய இவள் வாட முன்பும் பயனின்றியே ஆரவாரித்து, உன்னிடத்துண்டான அமுதத்தினையும், மதியையும், சிதேவியையும் பிறர் பறித்துக்கொள்ள நீ அழிந்து ஒரு காரணமுமின்றியே பின்னையும் உன்னுடைய ஆரவாரம் அடங்குவதில்லை. பிறரை வருத்துவது பழியென விசாரிக்கிறாயில்லை. பெரிய கடலே! உன் பெருமையெல்லாம் கண்டேமன்றே."

என்றது, ஒருவருடைய உண்மையையும் செல்வத்தையும் புத்தியையும் ஒருவர் பறித்துக்கொண்டாற் பின்னை அடங்குவார்கள்; அது உனக்கில்லையானதின்றே

---

173. தோழி கூற்று.

(பா - ம்.) [1]சோத்தம்மடியம். [2]அடியமெனிற்குழுமித் தொல்லை வானவர். [3]குழீஇத்தொல்லை வானவர் சூழ்ந்தேத்தும்படி வைப்பவன்.

'சோத்துன்னடியம்.........இவள். என்ற பகுதிக்குப் பேராசிரியர் கூறும் உரை பின்வருமாறு:- 'சோத்தம் உன்அடியம்' என்று ஒருகாற் சொன்னாரைப் பழையராகிய வானவர் குழுமிப் பரிவாரமாய்ச் சூழ்ந்து நின்றேத்தும் வண்ணம் நிற்குமவனது தில்லையன்னளாகிய இவளெனக் கூட்டுக''

திருவுமதியுமென்பது செல்வமும் அறிவுமென வேறுமொரு பொருடோன்ற நின்றதென்பாருமுளர். (பே - ரை,)

---

## 174. காமமிக்க கழிபடர்கிளவி.

தாமமிக்க தாழ்குழலேழை
காமமிக்க கழிபடர்கிளவி.

(இ-ள்.) மாலைமிக்க நீண்ட கூந்தலையுடைய நாயகி அன்பு மிக்கு மிகவும் சொன்னது.

---

மாதுற்ற மேனி வரையுற்ற வில்லிதில் லைநகர்சூழ்
போதுற்ற பூம்பொழில் காள்கழி காளெழிற் புள்ளினங்காள்
ஏதுற் [1] றழிதியென் னீர்மன்னு மீர்ந்துறை வர்க்கிவளோர்
தீதுற்ற தென்னுக்கென் னீரிது வோநன்மை செப்புமினே.

(பொ-ரை.) சங்கரி பொருந்தின திருமேனியையுடையவன்; மலையாகிய மிக்க வில்லையுடையவன்; (மென்மையால் ஒருமிசை ஈந்திருப்பவன்; தன்மையால் வரையாகிய வில்லுக்கிசைந்திருப்பவன்) அவனுடைய பெரும்பற்றப் புலியூராகிய நகரியைச் சூழ்ந்த செவ்விய அரும்பு பொருந்திப் பூத்த

பொழில்காள்! அப்பொழிலாற் சூழப்பட்ட கழிகாள்! அக் கழியிடமாக வாழ்கிற புட்சாதிகாள்! 'என்ன, கிலேசமுற்று அழுகிறாய்?' என்று என்னைக் கேளீர். நிலைபெற்ற குளிர்ந்த துறையை உடையவர்க்கு 'இவள் மிகவும் தீங்குற்றது எது காரணம் என்று அவர்க்குச் சொல்லீர். பெரும்பற்றப் புலியூரைச் சேர்ந்தும் நீங்கள் பெற்ற நன்மையைச் சொல்லுங்கள் (எ—று)

---

174. தோழி கூற்று.

(பா - ம்) அழுதி.

'வரையுற்ற வில்லி என்பதற்கு வரைத் தன்மையைப் பொருந்திய வில்லையுடையானெனினும் அமையும். வரைத்தன்மையைப் பொருந்துதல் வரையாயிருத்தல். போது-பேரரும்பு. இதுவோ நன்மையென்பதற்குத் தில்லையைச் சூழ்ந்தவிடத்துள்ளீராகலின் உமக்குண்டாகிய சிறப் புடைமை இதுவோ வெனினுமமையும். மன்னும் தீதுற்றதெனக் கூட்டி மிகுதிக்கண் வந்ததென்பாருமுளர். (பே-ரை.)

---

## 175. காப்புச் சிறைமிக்க கையறுகிளவி.

மெய்யுறு காவலிற்
கையறு கிளவி.

(இ—ள்.) தப்பாதே காவலாலே செயலற்றுச் சொன்னது.

---

இன்னற வார்பொழிற் றில்லை நகரிறை சீர்விழவிற்
பன்னிற மாலைத் தொகைபக லாம்பல் விளக்கிருளின்
துன்னற வுய்க்குமில் லோருந் துயிலுற் றுறைவர்மிக்க
கொன்னிற வேலொடு வந்திடின் ஞாளி குரைதருமே.

(பொ-ரை.) செவ்வித் தேனார்ந்த பொழில் சூழப்பட்ட பெரும்பற்றப்புலியூரிறைவனுடைய சீரிய திருநாளில் பல நிற முடைத்தாகிய நவரத்தினமாலையின் திரள்களாலே இரவு பகலாகா நிற்கும். பல விளக்குகளும் இருளினுடைய ஓங்கலைத் துரக்கும்; இல்லுள்ளாரும் உறங்குதலுற்றிருப்பார்கள்; துறையையுடைய வனே! மிக்க அச்சத்தைச் செய்கிற நிறத்த வேலோடே வரில் நாயானது கத்தாநிற்கும்; (எ-று.)

இவ்விடையீடெல்லாம் கழித்தாலல்லவோ அவர்க்கு வரலாவது என்று செயலற்றுச் சொன்னது. மாலைத்தொகை இராப் பகலாம் விளக்கைத் துரக்குமெனினுமமையும். இல்லோரும் துயிலுற்றுறைவர் என்ன, அவர்களும் உறங்காமை தோன்றும்.

---

175. தலைவி கூற்று.

இவற்றைத் தலைமகன் கேட்பின் வரைவானும்; தோழி கேட்பின் வரைவு கடாவுவாளாம்; யாருங் கேட்பாரில்லையாயின் அயர்வுயிர்த்து தானே ஆற்றுதல் பயன். (பே - ரை.)

---

## 176. ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

நாறுவார்குழ லவ்விநோக்கி
யாறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

(இ-ள்.) நறுநாற்றங் கமழ்கிற நீண்ட கூந்தலினையுடைய இளமான் நோக்கத்தையுடைய பாங்கியானவள் வழியில் வரும் கிலேசத்தை விசாரித்துப் பயப்பட்டுச் சொன்னது.

---

[1]தாருறு கொன்றையன் றில்லைச் சடைமுடி யோன்கயிலை
நீருறு கான்யா றளவில நீந்திவந் தாலினது
போருறு வேல்வயப் பொங்குரு மஞ்சுக மஞ்சிவ நஞ்
சூருறு சோலையின் வாய்வரற் பாற்றன்று தூங்கிருளே.

(பொ-ரை) மாலையாகிய மிக்க திருக்கொன்றை மாலையினை யுடையான்; பெரும்பற்றப்புலியூரிற் சடைமுடியையுடையவன்; அவனது ஸ்ரீ கயிலாயத்தில் நீர்மிக்க காட்டாறுகள் அளவிலாத வற்றை நீந்திவந்தால் உன்னுடைய போரிலே மி(க்க) வேலுக்கு, வீரத்தையுடைத்தாய்க் கோபிக்கிற உருமேறு பயப்படுவனவாக; மேகங்கள் பரக்கிற தெய்வங்கள் மிக்க சோலையிடத்துச் செறிந்த இருளிடத்தே வருதல் (முறையன்று). சோலையிடத்துத் தெய்வங்களை அஞ்சுதும். (எ-று.)

---

176. பாங்கி கூற்று.

(பா-ம்.) தாருறை.

---

## 177. தன்னுட் கையாறெய் திடுகிளவி.

மின்னுப்புரையு மந்நுண்மருங்குல்
தன்னுட்கையா றெய்திடுகிளவி.

(இ-ள்.) மின்னினை யொத்த அழகிய நுண்ணிய இடையினை யுடையாள் தன்னிடத்துண்டாகிய செயலற்ற ஒழுக்கத்தைக் கேட்கைக் கல்லாதொன்றின் மேலிட்டுச் சொன்னது.

---

விண்டலை யாவர்க்கும் வேந்தர்வண் டில்லை மெல்லங்கழிசூழ்
கண்டலை யேகரி யாகன்னிப் புன்னைக் கலந்த[1]கள்வர்
கண்டிலை யேவரக் கங்குலெல் லாமங்குல் வாய்விளக்கு
மண்டல மேபணி யாய்தமி யேற்கொரு வாசகமே.

(பொ—ரை.) தெய்வலோகத்திடத்து எல்லார்க்கும் தலைவராயுள்ளவர்; அவருடைய தெற்கின்கண் உண்டாகிய பெரும்பற்றப் புலியூரிலே மெத்தென்ற அழகிய கழி சூழப்பட்ட தாழையே சான்றாக, இளைய புன்னை நிழலிலே கலந்த கள்வர்...........வரக் கண்டிலையே தான். (ஏகாரம் எதிர்மறையாய் கண்டுவைத்துச் சொல்லுகின்றலை என்பது கருத்து). இராப்பொழுதெல்லாம் ஆகாயத்திடத்தே நின்று விளக்குகின்ற சந்திரமண்டலமே! உணர் விழந்து தனித்த எனக்குக் கண்டுவைத்தும் 'கண்டேன்' என்று ஒருவார்த்தையும் சொல்லுகிலை. (எ-று.)

---

177. தலைவி கூற்று.

(பா-ம்.) கள்வர்க் கண்டிலையே.

தலைவி மதியை நோக்கி, 'என்தலைவனைக் கண்டிலையோ? தனியாகிய எனக்கு ஒருசொல் அருள்வாய்' எனக்கேட்டது.

உரையில் கள்வர் என்ற சொல்லுக்கும் வர என்கிற சொல்லுக்கும் இடையே 'போய்ச்சேரலாரை' என்று எழுதப்பட்டுள்ளது. இதற்கேற்ற சொல் செய்யுளில் இல்லை.

---

## 178. நிலைகண்டுரைத்தல்.

நின்னினழிந்தனள் மின்னிடைமாதென
வரைவுதோன்ற வுரைசெய்தது.

(இ—ள்.) மின்னை யொத்த இடையினையுடைய நாயகி உன் காரணமாக அழிந்தாள் என்று வரைந்துகொள்ளும் இடந் தோன்றச் சொன்னது.

---

பற்றொன் றிலார்பற்றுந் தில்லைப் பரன்பரங் குன்றினின்று
புற்றொன் றரவன் புதல்வ னெனநீ புகுந்துநின்றால்
மற்றொன்று மாம லரிட்டுன்னை வாழ்த்திவந் தித்தலன்றி
மற்றொன்று சிந்திப்ப ரேல்வல்ல ளோமங்கை வாழ்வகையே.

(பொ-ரை.) ஒரு பற்றுமில்லாதார் பற்றுகின்ற தில்லையின் மேலானவன்; ஊரிலே (புற்றிலே) பொருந்துகின்ற பாம்பாபரணன்; திருப்பரங்குன்றிலே நின்றவன்; அவனது பிள்ளையாகிய முருகவேளென்னும்படி நீ இவ்வரைவைப்பிலே புகுந்து நின்றால், உன்னைக் கண்டாருண்டாகில், வளமுடைய தூய்ய மலர்களை யிட்டு உன் பாதத்திலே முருகவேளென்னும்படி கருதிப் புகழ்ந்து வணங்குதலல்லது, நீ இவள் காரணமாக இரவுக்குறியிலே வந்த ஒருவனெனக் கருதி 'ஏதஞ் செய்வார்களாகில், நாயகியுடைய (வாழுந்தன்மையை அவள் செய்ய) வல்லளோ? (எ-று)

நீ இரவுக்குறி வந்து புறம்புகுந்து நின்றால், இம்மலை உறை தெய்வம் முருகவேளாகக் கருதும்.........தோழி இவளை உள்ளவாறறிவாரில்லை யென.........(இறந்து) படாதிருக்கின்றாள்; அல்லது அவளை உள்ளவாறு அறிவார்களென்றும் இவள் கருதில், மானிலத்திறந்துபடாளோ என்பது கருத்து.

---

178. பாங்கி கூற்று.

இச் செய்யுளின் உரைப்பகுதி சில விடங்களில் சிதைந்துள்ளது.

ஏதஞ் செய்யக் கருதுதல் என்பாருமுளர். (பே-ரை.)

இதனை ஆறுபார்த்துற்றவச்சங் கூறற்கு'ச் செய்யுளாக அமைப்பர் இலக். விளக். ஆசிரியர். (சூ 523 உரை.)

## 179. இரவுறுதுயரங்கடலொடுசேர்த்தல்.

எறிவேற்கண்ணி யிரவருதுயரஞ்
செறிகடலிடைச் சேர்த்தியுரைத்தது.

(இ-ள்) குத்திப்பறித்த வேலையொத்த கண்களையுடைய வள் இரவிடத்தே யுண்டாகிய கிலேசத்தைச் செறிந்த கடலிடத்திலுமுண்டாக்கிச் சொன்னது.

---

பூங்கணை வேளைப் பொடியாய் விழவிழித் தோன்புலியூர்
ஓங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத்
தீங்கணைந் தோரல்லுந் தேறுய் கலங்கிச் செறிகடலே
ஆங்கணந் தார்நின்னை யும்முன ரோசென் றகன்றவரே.

(உரை.) பூவை அம்பாகவுடைய காமவேள் நீருய் விழும் படி பார்த்தவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரில், உயர்ந்த கரையைப் பொருந்தித் திரை புரட்சி யுண்டாகி விழுந்து (எழுந்து), மிகவும் ஆரவாரித்து பொல்லாச் சுவையை அளைந்து, கலங்குதலுற்று, இரா முழுதும் தெளியார் அவர் களும்; அக்குணங்கள் உன்னிடத்து உண்டாயிருந்தன.

எல்லை கடவாத கடலென்றமையால் நீ எங்ஙனே பட்டும் உன் எல்லை கடக்கின்றுயில்லை; அவர்களும் எங்ஙனே வருந்தி யும் மனையிடமாக இருக்குமது ஒழிந்து பிரிந்தாருழைச் செல்லமாட்டாரென்பது கருத்து.

---

**179.** தலைவி கூற்று.

இச் செய்யுளுக்குப் பேராசிரியர் கூறும் பொழிப்பு பின்வருமாறு:—

"பூவாகிய கணையையுடைய வேளைப்பொடியாய் விழும்வண்ணம் விழித்தவனது புலியூர் வரைப்பிற் செறிந்த கடலே! நீ ஓங்கியணைந்த கரையைப் பொருந்திப் புரண்டு விழுந்தெழுந்து கூப்பிட்டுத் துன்பமுற்று

ஓரிரவுங் கலங்கித் தெளிகின்றிலே; அதனால், அணைந்தவர் நின்னையிமகன்று சென்றார் அவ்விடத்துளரோ? உரைப்பாயாக''

கடலின் செயல்:— யாரணங் குற்றனை கடலே......நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே (குறுந். 163) "பாய்திரை பாடோவாய் பரப்புநீர்ப் பனிக்கடல், தூவறத் துறந்தனன் துறைவனென் றவன்றிறம், நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ எம்போலக், காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ (கலி. 129: 8-11). மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்பன், அணிநல முண்டகன்றா னென்றுகொ லெம்பாற், றிணிமண லெக்கர்மேலோதம் பெயரத், துணிமுந்நீர் துஞ்சாதது (ஐங். எழு. 60) "உன்னையு நீத்தகன்றா ருண்டோ வுடல்கருகிப், புன்னை கமழும் பொருகடலே என்னைப்போல், நெஞ்சாகுலம் பெருகி நீயுமிரவெல்லாம், துஞ்சாத தென்கொலோ சொல் (கிளவித் தெளிவு).

---

## 180. அலரறிவுறுத்தல்.

அலைவேலண் ணான் மனமகிழருள்
பலராலறியப் பட்டதென்றது.

(இ-ள்.) பகையை வருத்துகிற வேலினையுடைய நாயகனே! உன்னுடைய மனம் விரும்ப அருள் பலரும் அறியும்படி வெளிப்பட்டது என்றது.

---

அலரா யிரந்தந்து வந்தித்து மாலா யிரங்கரத்தால்
அலரார் கழல்வழி பாடுசெய் தாற்கள வில்லொளிகள்
அலரா விருக்கும் படைகொடுத் தோன்றில்லை யானருள்
[போன்
றலராய் விளைகின்ற தம்பல்கைம் மிக்கைய மெய்யருளே.

(பொ-ரை) (தன். ஆயிரம் கைகளினாலே) ஆயிரம் செந்தாமரைப் பூவைப்பிட்டு வணங்கிப் புருடோத்தமன் செவ்வித் தாமரைப் பூவையொத்த சீபாதங்களிலே வழிபாடுசெய்ய அவற்கு,

அளவிலாத ஒளிகளை விரியாநின்ற சக்கரத்தைக் கொடுத்தருளி னான். அவனுடைய பெரும்பற்றப்புலியூரிலேயுள்ளவன். அவ னுடைய திருவருளையொத்து, சுவாமி! உன்னுடைய மெய்யான அருள் முகிழ்த்தலினின்று மிக்குப் பலருமறிய விரியாநின்றது. (எ-று)

---

180. பாங்கி கூற்று.

'அலராவிருக்குமென்பது ஓர் நிகழ்காலச் சொல். தில்லையா னருள் பெற்றார் உலகியல்பினராய் நில்லாமையின், அவ்வருளுலகத் தார்க் கலராமென்பது கருத்து. 'காடவர் நந்தம்மை யார்ப்ப வார்ப்ப (திருவாசகம். திருப்பொற்சுண்ணம் எ.) என்பதூஉம் அக்கருத்தே பற்றி வந்தது. அம்பல்-பரவாத களவு. (பே-ரை.)

அலராய் விளைகின்றது..... மெய்யருளே- 'ஒவாத் தேர்வழங்கு தெருவினன்ன, கௌவையாகின்றதையநின் னருளே (நற். 227:8-10)

அம்பல் பெருகி யலரான தல்லிதொறும்
தும்பி முரலுஞ் சுரிகூந்தற்- கொம்பனைய
பண்ணாரு மென்சொல்லி மால்வந்து பல்காலும்
அண்ணாள் செய்யு மருள்

கிளவித்தெளிவு

நிலவோ ரன்ன வெண்மணற் பாக்கத்து
மலரேர் கூந்தன் மடந்தைக்
கலரா கின்றா லண்ணனின் னருளே (களவியல் மேற்.)

---

## 15. ஒருவழித்தணத்தல்

இவ்வாறு இரவுக்குறி புணர்ந்து, அலரெழுந்ததென்று விலக் கப்பட்ட பின்னர்த் தெருண்டு வரைதல் தலை. தெருளானாயின், அவ்வலர் அடங்கச் சிலநாள் ஒருவழித்தணந்துறைதல், உடன் கொண்டுபோதல், தோழியான் வரைவு முடுக்கப்பட்டே அருங்கலம்

விடுத்து வரைந்து கோடல் இம்மூன்றினுள் ஒன்று முறைமை யென்ப

அவற்றுள் ஒருவழித்தணத்தல் பதின்மூன்று துறையுடைத்து. அவை வருமாறு:-

[1] அகன்றணைவு கூறல், [2] ஆழியொடு கேட்டல்,
[3] ஆழியொடு புலத்தல், [4] அன்னமோ டாய்தல்,
[5] ஆழிக் குரைத்தல், [6] ஆழியிழைத்தல்,
[7] சுடரொடு புலம்பல், [8] பொழுதுகண்டு மயங்கல்,
[9] பையு ளெய்தல், [10] பரிவுற்று ரைத்தல்,
[11] அன்னமோ டழிதல், [12] வரவுணர்ந் துரைத்தல்,
[13] வருத்தங் கூறல் வருபதின் மூன்றுந்
திருத்திய வொருவழித் திறனு கும்மே. (பே-ரை.)

---

## 181. அகன்றணைவு கூறல்.

*வழிவேறு படமன்னும்
பழிவேறு படுமென்றது.

(இ-ள்.) இரவுக்குறியாகிய நிலைபெற்ற பழியும் வேறுபடு மென்றது.

---

புகழும் பழியும் பெருக்கிற் பெருகும் பெருகின்று
நிகழு நிகழா நிகழ்த்தினல் லாலிது நீங்கிணைப்பின்
அகழு மதிலு மணிதில்லை யோனடிப் போதுசென்னித்
திகழு மவர்செல்லல் போலில்லை யாம்பழி சின்மொழிக்கே.

(பொ-ரை.) புகழேயாகப் பழியேயாகப் பெருகச் செய்யிற் பெருகாநிற்கும்; பெருகாநின்றவைதாம், நடத்துவனாகில் நடவா நிற்கும்; அல்லாதபொழுது அவ்வளவிலே ஒழியும்; இப்படியே

யுக்தி பண்ணுவாயாமாகில், அகழும் மதியிலும் சூழப்பட்ட பெரும்பற்றப்புலியூரினுள்ளவனுடைய திருவடிகளாகிய பூக்களை முடியிலே விளங்கவுடையவர்களுடைய பிறவித்துன்பம் போனாற் போல, மெத்தென்ற வார்த்தையினையுடையாளுக்குப் பழியில்லை யாய்விடும். (எ-று.)

---

181. பாங்கி கூற்று.

முதலிரண்டடிகட்கும் பேராசிரியர் கூறும் உரை:-காரணவசத்தாற் பிறந்த புகழும் பழியும் அக்காரணங்களை மிகச் செய்து ஒருவன் வளர்க்கு மாயின் தாம்வளரும். அக்காரணங்களை இடையறுமற்செய்து நிகழ்த்து வனுயின் அவ்வாறு வளர்ந்து நின்று மாயாது உளவாய்ச்செல்லும். இவ்வாறல்லது அவைதாமாக நிகழா.

* வழிவேறுபடுதல்-இவளை எய்தும் உபாயம் களவன்றி வரைவாய் வேறுபடுதல். பழிவேறுபடுதல்-பழித்தன்மை திரிந்து கெடுதல்.

---

## 182. கடலொடு வரவு கேட்டல்.

மணிந்தவரொருவழித் தணந்ததற்கிரங்கி
மறிதிரைசேரு மெறிகடற்கியம்பியது.

(இ-ள்.) கூடினவர் ஒருவழிப் பிரிந்ததற்குக் கிலேசித்து ஆரவாரித்து வந்து மீளும் திரைபொருந்தின கடலுக்குச் சொன்னது.

---

ஆரம் பரந்து திரைபொரு நீர்முகின் மீன்பரப்பிச்
சீரம் பரத்திற் றிகழ்ந்தொளி தோன்றுந் துறைவர்சென்றார்
பேரும் பரிசு புகன்றன ரோபுலி யூர்ப்புனிதன்
சீரம் பர்சுற்றி யெற்றிச் சிறந்தார்க்குஞ் செறிகடலே.

(பொ-ரை.) முத்துக்களானவை பரந்து திரை பொருகிற கடலானது முகிலினையும் மின்னையும் பரப்பிக்கொண்டு சிறப்பை யுடைத்தாகிய ஆகாசம்போல் விளங்கி ஒளி தோன்றுகிற துறைவர், நம்மைவிட்டுப் பிரிந்தவர் வந்து மீளும்படி சொன்னாரோ தான்? பெரும்பற்றப்புலியூரிலுள்ளனாகிய தூயவன், அவனுடைய சிறப் புடைத்தாகிய திருஅம்பரைச் சுற்றிக் கரையோடே மோதி சிறப் புடைத்தாய் ஆரவாரிக்கிற செறிந்த கடலே [மீளும்படி சொன்ன ரோ தான்?] (எ-று.)

---

182. தலைமகள் கூற்று.

மீன் பரப்பி (திருக். 130.) போதரும் என்பது போருமென இடைக்குறைந்து நின்றது (பே-ரை.)

இதனைச் சென்றோனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவிக்குச் செய்யுளாகக் கூறுவர் இலக். விளக். ஆசிரியர்.

---

## 183. கடலொடுபுலத்தல்.

செறிவளைச் சின்மொழி
எறிகடற் கியம்பியது

(இ-ள்.) திரள் வளையினையும் மெத்தென்ற வார்த்தையினையும் உடையவள் கரையுடன் மோதும் கடலுக்குச் சொன்னது.

---

பாணிகர் வண்டினம் பாடப் பைம்பொன் றரு வெண்கிழிதஞ்
சேணிகர் காவின் வழங்கும் புன்னைத் துறைச் சேர்ப்பர்திங்கள்
வாணிகர் வெள்வளை கொண்டகன் றார்திறம் வாய்திறவாய்
பூணிகர் வாளர வன்புலி யூர்சுற்றும் போர்க்கடலே

(பொ-ரை.) பாண்சாதியை யொக்கும் வண்டுகள் இசை யைப் பாடத் தாதாகிய செம்பொன்னைத் தருகிற போதாகிய கிழிச் சீலையைத் தம்முடைய அதி தூரத்தே விளங்கித் தோன்றுகிற தாவிடத்தே நின்று கொடுக்கிற புன்னைத்துறையினுடைய நாயகர் சந்திரன் ஒளியினையுடைய வெள்ளிய வளைகளைக்கொண்டு பிரிந்தார்; அவருடைய திறத்து ஒரு வார்த்தையும் சொல்லு கின்றிலை; பூஞெத்த ஒளியினையுடைய பாம்பை ஆபரணமாகவுடை யவன் அவனுடைய பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்து கரைபொரு கடலே! அவர் திறத்து ஒருவார்த்தையும் சொல்லுகின்றிலை (எ-று.)

கிழிதம் என்று கிழிக்கும் பெயராக உரைப்பினும் அமையும். வாய்திறவாய் என்று, சொல்லுவாய் என்றுமாம்.

---

183. தலைமகள் கூற்று.

கிழிதமென்று கிழிக்குப்பெயராக உரைப்பாருமுளர் (பே-ரை.)

---

## 184. அன்னமோடாய்தல்.

மின்னிடை மடந்தை
யன்னமோ டாய்ந்தது.

(இ-ள்.) மின்னை ஒத்த இடையினையுடைய நாயகி அன் னத்துடனே ஆராய்ந்தது.

---

பகன்று மரைக்கண் கெடக்கடந் தோன்புலி யூர்ப்பழனத்
தகன்று மரையன்ன மேவண்டு நீல மணியணிந்து
முகன்றுழ் குழைச்செம்பொன் முத்தணி புன்னையின் [னும்முரையா
தகன்று ரகன்றே யொழிவர்கொல் லோநம் மகன்றுறையே.

(பொ-ரை.) பகனென்னும் பெயரையுடைய ஆதித்தனது தாமரைப் பூவை யொத்த கண் கெடும்படி செயித்தவன்; அவனுடைய பெரும்பற்றப் புலியூரைச் சூழ்ந்த தடாகத்திலே அகன்ற தாமரைப் பூவிலே வாழ்கின்ற அன்னமே! வண்டாகிய நீலமணியுமணிந்து, [1]முகத்தை மிக்க அழகினையும் இணையினையுமுடைத்தாய தாதாகிய செம்பொன்னையும், அரும்பாகிய முத்துக்களையும் அணிந்திருக்கிற புன்னையானது நான் இத் தன்மையேனாகக் கண்டு வைத்து இன்னமும் சொல்லுகிறதில்லை; நம்முடைய அகன்ற துறையை விட்டுப் பிரிந்தவர் பிரிந்துபோம் இத்தனையோதான்?

பொன்னையும் மணியையும் அணிந்த முகங்குழைந்திருக்கின்ற புன்னை[2] ......புலியூரில் தடாகத்தில் வாழ்கின்ற அன்னமே நீ சொல்வாயாக. (எ-று.)

---

184. தலைவி கூற்று.

1. முகந்தாழ குழை என்பதற்கு 'முகத்துத் தாழ்ந்த குழையை யுடைய' என்பது பேராசிரியர் உரை. மேலே எழுதப்பெற்றது உரை ஏட்டில் கண்டது.

2. இங்கு 'யுரைக்கு' என்பது ஏட்டில் காணப்பெற்றது.

முகன்றாள்குழை யென்பது இருபொருட்பட நின்றது. யானித் தன்மையேனாகவும் மணியணிந்தின்புற்று நிற்கின்ற புன்னை எனக்கொன்று சொல்லுமோ? அன்னமே. எனக்கு நீ கூறென்பது கருத்து. ஈண்டு நம்மோடு தாம் விளையாடும் விளையாட்டை மறந்தே விடுவரோ வென்னுங் கருததான், நம்மகன்றுறையை யகன்றே யொழிவர் கொல்லோ வென்றாள். (பே-ரை.)

பகன் கண் கெட-தக்கன் வேள்வியை அழிக்கச்சென்ற வீரபத்திர நாயனாரால் ஒறுக்கப்பட்ட தேவர்களில் ஆதித்தர் வகையின்கண் அரியமா. பூடா, பகனென்னும் மூவருள், பகனென்பவன் கண்ணிழந்தான் என்பது வரலாறு.

பகன் கண் கொண்டார் (தேவாரம்), விண்ணிற் பகனுர் தாங் தூரக்கு மெல்லாவிருளு மீண்டுந்தங் கண்ணிற் புகுந்த கதை' என்ற தக்கயாகப்பரணிக் கண்ணியின் உரையில் இப்பாட்டின் கருத்து, 'தட்சயக்கிய விநாசத்து வந்த ஆதித்தனுடைய கண்ணை ஈசுவரன் பறித்தருளின கதை; 'பகாட்சஹரः' என்பது மகாகாளஸ்தவம் என்ற உரையிற் காணக்கிடக்கின்றது. (தக்க. யா. 490.உரை.) 'இவன் பெயர் பகவனென்றும் பக்வானென்றும் வழங்கும் என்றும் எழுதப் பெற்றுள்ளது.

---

## 185. தேர்வழிநோக்கிக் கடலொடுகூறல்

மீன்றோய் துறைவர் மீளுமளவு
மான்றேர்வழியை யழியேலென்றது.

(இ-ள்) மீனைத் தேய்ந்த துறையையுடையவர் மீண்டு வருமளவும் புரவிபூட்டப்பட்ட வழியை அழியாதேகொள் என்றது.

---

உள்ளு முருகியு ரோமஞ் சிலிர்ப்ப வுடையவனுட்
கொள்ளு மவரிலொர் [1]கூட்டந்தந் தான்குனிக் கும்புலியூர்
விள்ளும் பரிசுசென் றூர்வியன் றேர்வழி தூரல்கண்டாய்
புள்ளுந் திரையும் பொரச்சங்க மார்க்கும் பொருகடலே

(உரை) நெஞ்சம் உருகி மெய்ம்மயிரும் பொடிப்ப, இப்படிக்கு அடியாரையுடையவன் தானடிமை கொள்ளும் அடியாருடனே என்னையும் அடிமையாகக் கூட்டிக்கொண்டவன். அவன் ஆடியருளுகிற பெரும்பற்றப்புலியூரைவிட்டு நீங்கும்படி சென்றவன், பெரிய தேர் போனவழியை அழியாதே கொள்வாயாக வேண்டும். (எ-று)

---

185. தலைவி கூற்று.

(பா-ம்) [1] கூட்டந்தந்தார்.

கடைசி அடிக்கு ஏட்டில் உரையில்லை

'உள்ளும் என்ற உம்மையால் புறத்துக் கண்ணீர் தழுவப்பட்டது. ஆட்கொள்ளுமவர் பெருமை தோன்ற உடையவனென அவன் பெருமை விளக்கும் பெயர் ஆண்டுக் கூறினார். குனிக்கும் புலியூர் நுகர்ச்சியை நினையாது நீங்கிய வன்கண்மையார் இனி வருவரெனும் நசையிலம். அவர் தேர்ச்சுவடாயினும் யாம் காண நீ அதனை அழியா தொழி என்பது கருத்து. விள்ளும்பரிசு சென்றார் என்பதற்குப் புலியூரை நீங்கினாற்போல யான் துன்புறும் வண்ணமெனினும் அமையும். விள்ளுதல்-வாய்திறத்தலென்று அவர்கூறி நகும் வண்ணம் சென்றவரெனினுமமையும். கூட்டந்தந்தாரென்று பாடமோதி ஆட்கொள்ளுமவரைப்போல் இன்புற எமக்கோர் புணர்ச்சியைத் தந்தாரெனத் தலைமகள் மேலேற உரைப்பாருமுளர். (பே-ரை)

---

## 186. கூடலிழைத்தல்.

நீடலந் துறையிற்
கூட லிழைத்தது.

(இ-ள்) நீண்ட அழகிய துறையில் கூடல் செய்தது.

---

ஆழி திருத்தும் புலியூ ருடையா னருளினளித்
தாழி திருத்து மணற்குன் றி னீத்தகன் றூர்வருகென்
றூழி திருத்திச் சுழிக்கணக் கோதி னையாமலைய
வாழி திருத்தித் தரக்கிற் றியோவுள்ளம் வள்ளலையே.

(போ-ரை.) பூமியைத் திருத்திச் செய்கிற பெரும்பற்றப் புலியூரையுடையவன். அவனுடைய திருவருள் போலே தலையளி செய்து கடற்றிரை வந்து தூய்மை செய்கிற மணல்திடரே (திடரில்) விட்டுப்பிரிந்தவர் வரவேண்டுமென்று வட்டமாகச்செய்து சுழிகளில் எண்ணைச் சொல்லியது,கூடாமையால் கிலேசியாதபடி, ஐய!

கூடல் தெய்வமாகிய பெரியவனே! வருணராசனே! நீ வாழ்விப் பாயாக; உள்ளத்தைத் திருத்தி வள்ளலைத் தரவல்லையாகில் கூட்டு வாயாக. (எ-று.)

---

186. தலைவி கூற்று.

ஆழிதிருத்தும் புலியூர். ஆழிசூழ்ந்த மண்முழுதையும் திருத்தும் புலியூர். இதற்குப் பிறவுமுரைப்ப (பே-ரை.)

நீடலர்துறை, கழலர்துறைவன் (88) ஒப்பிடுக.

ஆழிதிருத்தி-கூடலிழைத்து.

கூடலிழைத்தல்- 'கூடலாவது-வட்டமாகக் கோட்டைக்கீறி அதுக் குள்ளே சுழிசுழியாகச் சுற்றுஞ் சுழித்து இவ்விரண்டு சுழியாகக்கூட்டினல் இரட்டைப்பட்டால்கூடுகை; ஒற்றைப்பட்டால் கூடாமை'. (நாச்சியார்திரு மொழி: பெரிய. வியாக்கியானம் அரும்பதம்). கண்ணைமூடிக்கொண்டு நிலத்தில் வட்டமாக ஒரு கோட்டைக் கீறிப் பின்பு கண்திறந்து பார்த்து, அக்கோடு தொடங்கிய விடத்திலேயே வந்து சேர்ந்திருப்பின் தலைவன் வந்து சேருவானென்றும், விலக்கியிருப்பின் தலைவனும் விலகியேயிருப்பா னென்றும் கொள்வதும் உண்டு. தலைவன் வரவை அறிதற்கு அவனைப் பிரிந்த தலைவி இதனைச் செய்வதாகக் கூறல் பண்டைவழக்கு. "மாட நீண் மருகற் பெருமான்வரிற் கூடுநீயென்று கூடலிழைக்கு மே(தேவாரம் திருநாவு. மருகல்). 'சென்றார் வரைய கருமஞ் செரு வோன், பொன்றாங் கணியகலம் புல்லப்பொருந்துமேற், குன்றாது கூடு கெனக் கூறிமுத்த வார்மணன்மே, லன்றாங் கணியிழையா ளாழி யிழைத் தாளே (சிந்தா. 1037.) இன்னும், கம்ப. உண்டாட்டுப் 33. விபீடண. 28: அம்பிகா. 322. அகநா.351. ஆகியவற்றையும் காண்க. இதற்குக் கூடல் தெய்வத்தை வழிபடலுண்டென்பது 'கூடற்பெருமானைக் கூடலார் கோமானைக் கூடப்பெறுவேனேற் கூடென்று-கூடலிழைப்பாள்போற் காட்டி யிழையா திருக்கும், பிழைப்பிற் பிழைப்பாக் கறிந்து(முத்தொள்) என்ற செய்யுளும், 'கூடற்றெய்வத்தை வாழ்த்திக் கூடலிழைத்தல் (பேரா. உரை. சிற். 186.) என்ற பகுதியாலும் தெரியவருகின்றது. 'ஐய என்றது கூடற்றெய்வத்தை (பே-ரை.)

## 187. சுடரொடு புலம்பல்.

குணகடலெழுசுடர் குடகடற்குளிப்ப
மணமலிகுழலி மணம்புலம்பியது.

(இ-ள்) கீழ்க்கடலிலே எழுந்த ஆதித்தன் மேல்கடலிலே மூழ்க நறுநாற்ற மிக்க கூந்தலினையுடையாள் மனம் வாடியது.

---

கார்த்தரங் கந்திரை தோணி சுறுக்கடன்மீ னெறிவோர்
போர்த்தரங் கந்துறை மானுந் துறைவர்தம் போக்குமிக்க
தீர்த்தரங் கன்றில்லைப் பல்பூம் பொழிற்செப்பும் வஞ்சினமும்
ஆர்த்தரங் கஞ்செய்யு மாலுய்யு மாறென்கொ லாழ்சுடரே.

(பொ-ரை.) கருந்திரையும் அத்திரைகளை ஓதுக்குகிற தோணிகளும் சுறுமீன்களும் கடல்தானும் மீன்வெட்டுகிறவர்களும், போரைத்தருகிற சதுரங்கங்களும் போர்க்களத்தினை ஒக்கிற துறையினையுடையவர் (இவை ஒத்தபடி, திரைகள் குதிரைகளை யொத்தன; அவற்றை ஓதுக்குகிற தோணிகள் குதிரைத் திரள்களைக் கெடுக்கிற தேர்களை யொத்தன; சுறுமீன்கள் யானைகளை ஒத்தன; கடல்தானும் யுத்தகளத்தை ஒத்தது; மீன் வெட்டுகிறவர்கள் யானைகளைக் கையுங் காலுமற வெட்டுகருவிக் காலாட்களை ஒத்தார்கள். ஒரு பொருள் வேறொரு பொருளாகத் தோன்றி நடாத்தலால் நமக்கின்பஞ் செய்யப் பிரிந்த பிரிவும் துன்பம் செய்வதொன்று போலத் தோன்றுகின்றபடி.) அவர் நம்மை வரைந்துகொள்வதாகப் பிரிந்தபிரிவு, மிக்க தூயோராகிய பிரம விட்டுணுக்களின் எலும்புகளைப் பூண்டவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் பல பூக்களையுடைத்தாகிய பொழிலிலே அவர் சொன்ன வார்த்தையும் (என்னை)வியாதியாளர் உடம்பு போலே பண்ணுகின்றது; அழுந்தாநின்ற ஆதித்தனே! இனிநான் பிழைக்கும் வழி ஏது? (எ-று.)

அத்தில்லை வரைப்பிற் சூளுரையும் என்னும் என்றும் அச்சத்தளாய், ஆர்த்தரங்கம் செய்யுமாலென்றார்.

---

187. தலைவி கூற்று.

திரை முதலியன போரைத்தரும் அங்கங்களேயும் அக்களத்தையும் ஒக்கும் துறைவர் என்று பொருள் கூறி, தரங்கம்முதலாயினவற்றால் போரைத்தருமங்கத்தையுடைய போர்க்களத்தை ஒக்குந்துறையெனப் பொருள்கூறுவாருமுளர் எனபர் பேராசிரியர்.

---

## 188. பொழுதுகண்டு மயங்கல்.

மயற்றருமாலே வருவதுகண்டு
கயற்றுகண்ணி கவலையுற்றது

(இ-ள்) மயலேத்தருகின்ற மாலேப்பொழுது வருகிறபடியைக் கண்டு கயலேப்பொருத கண்களேயுடையாள் வருந்தினது.

---

பகலோன் கரந்தனன் காப்பவர் சேயர்பற் றற்றவர்க்குப்
புகலோன் புகுநகர்க்குப் போக்கரி யோனெவ ரும்புகலத்
தகலோன் பயிறில்லைப் பைம்பொழிற் சேக்கைக ணோக்கின [வால்
அகலோங் கிருங்கழி வாய்க்கொழு மீனுண்ட வன்னங்களே.

(உரை) ஆதித்தன் ஒளித்தான்; நம்மைக் காவல் செய்பவர் தூரியாக இருந்தார். புலன்களின் பற்று விட்டவர்க்குப் புகலிடமாயுள்ளவன்; புகுந்தார்க்கு மீண்டு போம் தன்மை அரிதாயுள்ளவன்; எல்லாரும் எல்லாம் சொல்லுவதற்கு எல்லாம் ஒத்திருக்கிறவன்; அவன் வாழ்கிற புலியூரில் அழகிய பொழிலில் தம் சேக்கையை நோக்கிச் செல்லாநின்றன (அன்னங்கள்). [என்றது,...... இரைவேண்டி உண்ணவேண்டும் பரவசத்தாலே நம்மை வினவிற்றில......வினவாதே தம் சேக்கையிடத்து ஏறச் செல்லாநின்றன; இனி ஆற்றுதல் அரிதுபோலேயிருந்தது. (எ-று.)

கொழுமீனென்பது மீனிலொரு சாதி.

---

188. தலைவி கூற்று.

கடைசி அடிக்கு உரை சிதைந்துவிட்டது. அதன்பொருள் 'அகன்று ஓங்கியிருக்கும் பெருங் கழியிடத்துக் கொழுமீனுண்ட அன்னங்கள் தாமும்' என்பது.

'கூற்றங் கரந்து கொடியபுன் மாலை வடிவுகொண்டு, தோற்றும் சிறு பிறையே எயிறாகத் துறையிருந்து, தேற்றம் தரும்பெடை அன்னமும் சேவலும் சேக்கைபுகும், ஆற்றும் திறமறி யேன்அவ ரோசென் றகன் றனரே' என்பது அம்பிகாபதிச் செய்யுள். (164.)

---

## 189. பறவையொடு வருந்தல்.

செறிபிணிகைம்மிகச் சிற்றிடைப்பேதை
பறவைமேல்வைத்துப் பையுளெய்தியது.

(இ-ள்.) புத்திக்கு வெறுப்பைச் செய்கிற காமநோய்க் கைசார்ந்து செல்லச் சிறிய இடையினையுடைய நாயகி பறவை களைச் சொல்லும் வார்த்தைகளின் மேலே வைத்துச் சொல்லி வருத்தமுற்றது.

---

பொன்னு மணியும் பவளமும் போன்று பொலிந்திலங்கி
மின்னுஞ் சடையோன் புலியூர் விரவா தவரினுண்ணோய்
இன்னு மறிகில வாலென்னை பாவ மிருங்கழிவாய்
மன்னும் பகலே மகிழ்ந்திரை தேரும்வண் டானங்களே.

(பொ-ரை) பொன்னையும் மாணிக்கத்தையும் பவளத்தை யும் ஒத்துச் சிறந்து விளங்கி மின்னும் திருச்சடையையுடைய வன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரை நினைக்கும் நினைவை மற்றுள்ள நினைவுகளுடனே கலவாதவரைப்போல் (என்றது, மற்றுள்ள நினைவை இந்நினைவு மாற்றுமென்பது கருத்து) உண் டாகிய வியாதியை பெரிய கழியிடத்தே நிலைபெற்ற பகற் பொழுதே விரும்பி இரைதேடியுண்ட நீர்க்கோழிகள் தாங்கள்

இரைதேடியுண்டும், நான் இத்தன்மையேனுகக் கண்டு வைத்தும் இன்னமும் அறிகின்றனவில்லை. இஃதென்ன பாவமோ? (எ-று.)

பெரும்பற்றப்புலியூரை நினையாதவருக்கு உவமை, பிறர் இடுக்கண் கண்டும் வினவாதிருக்கை.

---

189. தலைவி கூற்று.

'என் உள்நோயை வண்டினங்கள் இன்னும் அறிகில' என்று கூட்டுக.

பொன்போலப் பொலிந்து. மாணிக்கம்போல விட்டு விளங்கி பவளம்போல மின்னும் சடை. புலியூரை விரவாதார் கண்ணோட்டமிலராகலிற் புலியூரை விரவாதவரினின்னுமறிகில என்றியைத்துரைப்பினுமமையும். நிரனிறையாகக் கொள்ளாது எல்லா மெல்லவற்றின் மேலு மேறவுரைப்பினும் அமையும். (பே-ரை.)

'என்னை பாவம்' (திருவா)

---

## 190. பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தல்.

முருகவிழ் கான
லொடுபரி வுற்றது.

(இ-ள்) நறுநாற்றம் விரிகிற கடற்சோலையுடனே வருத்தமுற்றது.

---

கருங்கழி காதற்பைங் கானலிற் றில்லையெங் கண்டர் [விண்டார்
ஒருங்கழி காதர மூவெயில் செற்றவொற் றைச்சிலைசூழ்ந்
தருங்கழி காத மகலுமென் றாமென் [1] றலர்ந்துகண்ணீர்
வருங்கழி காதல் வனசங்கள் கூப்புமலர்க்கைகளே.

(ப-ரை.) கருங்கழி காதல் பைங்கானலில்-கரிய கழியினைச் சூழ்ந்த பசசென்ற கடற்சோலையில்(உள்ள) அலர்ந்து கண்ணீர் வரும் கழிகாதல் வனசங்கள்-அலர்ந்து கண்ணீர்வாராநின்று மிகுந்த காதலையுடைய தாமரைகள்,

தில்லை எம் கண்டர்-பெரும்பற்றப்புலியூரினுளவாகிய எம் முடைய வீரர், விண்டார் ஒருங்கு அழிய-தம்முடைய பகைவர் ஒருங்கே அழிய, காதர மூ எயில் செற்ற-அச்சத்தைச் செய்கிற முப்புரங்களையும் அழித்த, ஒற்றைச்சிலை சூழ்ந்து-தனிச்சிலையா கிய மகாமேருவைச் சூழ்ந்து, என்றாழ் அருங்கழி காதம் அகலும் என்று-ஆதித்தன் கடத்தற்கரிய காதங்களைக் கடவாநின்றான் என்று,

கூப்பும் மலர்க்கைகளே-இவள் வருந்தாமல் இரவியைக் கடுக வரவேண்டுமென்று தம் மலர்களாகிய கைகளைக் கூப்பித்தொழா நின்றன. (எ-று)

வனசங்கள் நம்மேல் காதலுடையன போலேயிருந்தன. கடற் சோலை-கடற்சோலைமேலுள்ள பொய்கை மேற்படும். அலர்ந்து கண்ணீர் வந்து கைகூப்புதல்-அலருதலும் கள்ளாகிய நீர் வருத லும் சிலேடை வகையாற் கொள்ளப்படும். வனசங்கள் தம் மலர் களாகிய கைகளைக் கூப்பி இரவாநின்றன. இவை என்மாட்டு அன்புடையன போலும் என்றவாறு.

---

190. தலைவி கூற்று.

[1](பா-ம்.) அலந்து.

கதிரோன் தம்மைப் பிரியவாற்றாது கடிது வரவேண்டுமென வனசங் கள் கைகூப்பா நின்றனவென்று அவற்றிற்கிரங்கினளாக உரைப்பினுமமை யும். (பே-ரை.)

'கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப', (அக. 40.) 'வெய்யவன் செழுங்கரங்களை விழைவொடுந்தமது, கையினுலுறப்பிடித்தெனக் குவிந் தன கமலம். (நைடதம்.)

## 191. அன்னமோடழிதல்.

இன்னகையவ ளிரவருதுய்ர
மன்னத்தோ டழிந்துரைத்தது.

(இ-ள்) அழகிய முறுவலையுடையவள் இராவிடத்துண் டாகிய கிலேசத்தை அன்னத்துடனே அறிவுற்றுச் சொன்னது.

---

மூவ ரழியத் திருமுத லோன்றில்லைச் செல்வன்முந்நீர்
நாவ றழியவிந் நாநிலந் துஞ்சு நயந்தவின்பச்
சேவ றழிச்சென்று தாஞ்துஞ்சு யான்றுயி லாச்செயிரெங்
காவ றழியவற் கோதா தளியக் களியன்னமே.

(உரை.) மூவராகியவர் முப்புரங்களை யழித்துவிட்ட திருமுறுவலைப் பொருந்தின வேதநாயகன், பெரும்பற்றப்புலியூரிலுளனாகிய செல்வனுடைய, நாவறழிய விந்நாநிலந்துஞ்சும்-நாவலைப் பொருந்தின நால்வகைப்பட்ட பூமியும் உறங்காநின்றன. யான்துயிலாச் செயிர் - நானுறங்காத விக்குற்றத்தை, எங்காவறழியவற்கோதாது-எம்மைக் காதலைப் பொருந்தினவற்கோதாதே, அளிய களியன்னமே - அளிக்கத்தக்க களிப்புடைத்தாகிய அன்னம், நயந்தவின்பச்சேவறழிய-தான் விரும்பின இன்பத்தைச் செய்கிற சேவலைத் தழீக்கொண்டு, சென்று தான் துஞ்சும் - போய்த்தான் உறங்காநின்றது.

பாலைக்கு நிலமில்லாமையால் நால்வகைப்பட்ட நிலமென்முர். களியன்னமே யென்றபடி தன்களிப்பாலே இது சொல்லாதிருந்தது. இது சொல்லிற் காப்பாரென்பது கருத்து.

---

191. தலைவி கூற்று.

செய்யுளும் உரையும் ஏட்டிலுள்ளபடி எழுதப்பெற்றன. ஆறுமுகநாவலர் பதிப்பில் செய்யுள் பின்வருமாறு காணப்படுகிறது.

மூவ றழீஇய வருண்முத லோன் றில்லைச் செல்வன்முந்நீர்
நாவ றழீஇயவிர் நானிலந் துஞ்சு நயந்தவின்பச்
சேவ றழீஇச் சென்றுதான் றுஞ்சும் பான்றுயி லாச்செயிரங்
காவ றழீஇயவர்க் கோதா தளிய களியன்னமே.

இச்செய்யுளுக்கு அப்பதிப்பிற் காணப்பெறும் விருத்தியுரை விசேடப் பகுதி பின்வருமாறு:—

மூவவென்பது ஒரு திருப்பதி.........செய்தற்றிணை கூறுவார் 'சோத்துன்னடியம்'(173) என்பதுதொட்டுப் 'புகழும் பழியு' மென்னுங் காறும் (181) வரப் பாட்டொன்பதும் இரங்கனிமித்தமாகக் கூறி, ஒருவழித்தணத்தற்றுறையிடத்து, 'ஆரம்பரந்தென்பது(182) தொட்டு இதன்காறும்வர இப்பாட்டுப் பத்தும் இரங்கலே கூறுதலான் றிணை செய்தல்: என்னை? வாட்டம் உரிப்பொருளாதலின்.

---

## 192. வரவுணர்ந்துரைத்தல்.

சென்றவர்வரவுணர்ந்து நின்றவணிலைமை
சிறப்புடைப்பாங்கி சிறைப்புறத்துரைத்தது.

(இ-ள்) பிரிந்தவர் வந்து நின்றபடியை அறிந்து நின்று நாயகியுடைய நிலையைச் சிறப்புடைய தோழி சிறைப் புறமாகச் சொன்னது.

---

நில்லா வணிநெஞ்ச நெக்குரு குங்கெடுங் கண்டுயிலக்
கல்லா கதிர்[1]முத்தங் காற்று மெனக்கட் டுரைக்கதில்லைத்
தொல்லோ னருள்க ளில்லாரிற் சென்றார்சென்ற செல்லல் [கண்டாய்
[2]எல்லார் மதியே யிதுநின்னை யானின் றிரக்கின்றதே.

(பொ - ரை.) ஒளியார்ந்த சந்திரனே! திருவம்பலத்திற் பழையவனுடைய அருளில்லாதாரைப் போலே பிரிந்தவர், பிரிந்த

துயரமெல்லாம் நீயே கண்டாய்; 'ஆதலால், வளைகளும் தம்முடைய நிலைகளில் நின்றனவல்ல; நெஞ்சமானது நெகிழ்ந்து உருகாநின்றது; நெடுங்கண்கள் உறங்காவாய் ஒளியுடைத்தாகிய முத்துமாலைகளை இடாநின்றன' என்று சொல்லுவாயாக வேண்டும்; இது நான் இப்பொழுது உன்னை வேண்டிக்கொள்ளுகிறது.

---

192. தோழி கூற்று.

(பா-ம்) [1]முத்தங்காலும். [2]எல்லாமதியே.

---

## 193. வருத்தமிகுதிகூறல்.

நீங்கி யணைந்தவற்குப்
பாங்கி பகர்ந்தது.

(இ-ள்.) ஒருவழிப் பிரிந்து கூடினவற்குத் தோழி சொன்னது.

---

வளருங் கறியறி யாமந்தி தின்றுமம் மர்க்கிடமாய்த்
தளருந் தடவரைத் தண்சிலம் பாதன தங்கமெங்கும்
விளரும் விழுமெழும் விம்மு மெலியும் வெண்மாமதிநின்
றெளிருஞ் சடைமுடி யோன்புலி யூரன்ன வொண்ணுதலே

(பொ-ரை) இளைய மிளகுக் கொடியை விளைவறியா மந்திக் குரங்கு தின்று மயக்கத்துக்கு ஒரு கொள்கலமாய்த் தளர்ச்சியை உறுகிற பெரிய மலையிற் குளிர்ச்சியுடைய பக்கமலையை யுடையவனே! தன் மேனிமுழுதும் வெளுக்கும்; சயனத்திலே விழுந்தும் எழுந்தும் பொருமியும் வாடாநிற்கும். வெள்ளிதாய் மிக்க திரு இளம்பிறை நின்று விளங்காநின்ற சடாபாரத்தை யுடையவனுடைய பெரும்பற்றப்புலியூரை யொத்த ஒண்ணுதல் இப்படியிப்படிச் செய்யாநின்றாள். (எ-று.)

மிளகுக்கொடி இன்பம் செய்யாதாயினும், கண்ணுக்கு அழகியதாகத் தோன்றினாற் போல நீயும் இவளை வரைந்து கொண்டு இன்புறுத்தாயாயினும், கண்மகிழ் உருவினையாய்த்

தோன்ற விளைவை அறியாமையின்லே அம்மிள்குக்கொடியை (மந்தி) தின்று வருந்தினாற்போல, இவளும் தன் பேதமையினலே உன்னுடனே புணர்ந்து வருத்தமாகினிட்டனள் என்றபடும்.

193. தோழி கூற்று.

இவ்வாறு ஒருவழித் தணந்து வந்து வரைவு மாட்சிமைப் படவும் பெறும்; அன்றியும் உடன்போக்கு நிகழப்படும். (பே-ரை.)

ஒருவழித்தணத்தல் முற்றிற்று.

## 16. உடன்போக்கு.

ஒருவழித்தணத்தல் நிகழாதாயின் உடன்போக்கு நிகழும் இஃது ஐம்பத்தாறு துறைகளை உடைத்து. அவை பின்வருமாறு:-

[1] பருவங் கூறல் படைத்துமொழி தல்லொடு,
[2] மருவமர் கோதையை மகட்பேச் சுரைத்தல்,
[3] பொன்னணி வுரைத்தல், [4] பொருள்விலை கூறல்,
[5] அன்னயென் னடையா ளருமைகேட் டழிதல்,
[6] தளர்வறிந் துரைத்தல், [7] தாழ்குழ லாள்தன்
உளநினை வுரைத்தல், [8] உடன்கொண்டு சேறற்
கருமை யுரைத்தல், [9] ஆதரங் கூறல்,
[10] மருவிய தடங்கயல் வாழா ளென்றல்,
[11] பொருவரு கற்பின் புனைநல னுரைத்தல்,
[12] துணிந்தமை கூறல், [13] துணிவு கேட்டல்,
[14] துணிவறி வித்தல், [15] தொல்லை நாண்விடல்,
[16] துணிவெடுத் துரைத்தல், [17] கொண்டக லெனவுரைத்தல்,
[18] அடிவழி நினைந்துநின் றவனுளம் வாடல்,
[19] கொடியிடை யாளைக் கொண்டுசென் றுய்த்தல்,
[20] ஓம்படுத் துரைத்தல், [21] வழிபடுத் துரைத்தல்,
[22] தேம்படு கோதையைத் திறலடு வேலோன்
பையக்கொண் டேகல், [23] பயங்கெட வுரைத்தல்,
[24] மையமர் கண்ணியை வழியயர் வகற்றல்,

[25] நெறிவிலக் கல்லொடு, [26] நெறியிடைக் கண்டவர்
செறிவெடுத் துரைத்தல், [27] சேயிழை யாளுடன்
வழிவிளை யாடல், [28] வழியெதிர் வருவோர்
எழினக ரணிமை யிதுவென வுரைத்தல்,
[29] நகர்காட் டல்லொடு, [30] நகரிடைப் புக்குப்
பதிபரி சுரைத்தல், [31] பாங்கியைக் கிட்டி
மதிநுத லாளை வளர்த்தவள் கேட்டல்,
[32] அறத்தொடு நிற்றல், [33] அதுகேட் டழுங்கல்,
[34] திறப்பா டுன்னிச் செவிலிகவன் றுரைத்தல்,
[35] அடிநினைந் திரங்கல், [36] அதுதாய்க் குரைத்தல்,
[37] மடவரல் போக வாடி யுரைத்தல்,
[38] கிளிமொழிக் கிரங்கல், [39] கிளர்சுடர்ப் பராய்தல்,
[40] அளிபெறு பருவத்திற் கவள்கவன் றுரைத்தல்,
[41] ஆடத் துணிதல், [42] நற்றாய் நயந்தவர்
கூடக் கரையெனக் கொடிக்குறி பார்த்தல்,
[43] சோதிடங் கேட்டல், [44] சுவடுகண் டறிதல்,
[45] ஏதமுற் றவைகண் டிரங்கி யுரைத்தல்,
[46] வேட்ட மாதரைக் கண்டு வினவல்,
[47] புறவொடு புலத்தல், [48] குரவொடு வருந்தல்,
[49] திறலருந் தவத்தொடு செல்லா நின்ற
மாவிர தியரை வழியிடை வினவல்,
[50] வேதியர் தம்மை விரும்பி வினவல்,
[51] புணர்ந்துடன் வருவோரைப் பொருந்தி வினவல்,
[52] மணந்தரு குழலாண் மன்னிய நிலையொடு
வேங்கை பட்டது கண்டு வியத்தல்,
[53] ஆங்கவ ரியைபணி யவட்கெடுத் துரைத்தல்,
[54] மீள வுரைத்தல், [55] மீளா தவளுக்
கூழ்முறை யிதுவென வுலகியல் புரைத்தல்,
[56] அழுங்குதாய்க் குரைத்த லெம்பதோ டாறும்
உழுங்கொலை வேலோ னுடன்போக் காகும். (பே-ரை.)

---

## 194. பருவங்கூறல்.

உருவது கண்டவள்
அருமை யுரைத்தது.

(இ-ள்.) ஒரு திருமேனி பெண்வடிவமாக அழகுபெற்று விளங்குகின்ற பருவங் கூறல்.

---

ஓராக மிரண்டெழி லாயொளிர் வோன்றில்லை யொண்ணுத
கராகம் பயின்றமிழ் தம்பொதிந் தீர்ஞ்சுணங் காடகத்தின் [லங்
பராகஞ் சிதர்ந்த பயோதர மிப்பரி சேபணைத்த
விராகங்கண் டால்வள் ளலேயில்லை யேயெம ரெண்ணுவதே.

(பொ-ரை.) ஒரு திருமேனி பெண் வடிவும் ஆண்வடிவுமாக அழகுபெற்று விளங்குகின்றவன்; அவனுடைய திருவம்பலத்தில் அழகிய நெற்றியினையுடையாள் சந்தன குங்குமம் நெருங்கி அமுதத்தை யுள்ளடக்கி, நெய்த்த நிறமுடைத்தாகிய சுணங்கான பொற்பொடியைச் சிதறின முலைகள் இப்படியே விம்மின இம்மணவொளியைக் கண்டால், நாயகனே! எங்கள் உறவின்முறையார் விசாரிக்குமது ஒன்றுமில்லையேதான். (எ-று.)

என, மெத்தவும் விசாரிப்பார்கள் என்றது. அங்கராகம்-அங்கம், உடம்பு; இதனால் விரும்பப்படுவது; சந்தன குங்குமம். இராகம் - முடுகுதல் என்பாருமுளர்; ஈண்டு நிறம்.

---

194. தோழி கூற்று.

'அலரறிவுறுத்த தோழி, இவள் முலை முதிர்வு கண்டமையான் மகட் பேசுவார்க்கு எமர் மறுது கொடுக்கவுங்கூடும்; அதுபடாமல் நிற்ப நீ முற்பட்டு வரைவாயாக வெனத் தலைமகனுக்குத் தலைமகளின் பருவங்கூறு நிற்றல். (பே-ரை.)

பராகம் - பொடி. அங்கராகம் - பூசப்படுவன. இராகம்-கதிர்ப்பு; நிறம். (பே-ரை.)

## 195. மகட்பேச்சுரைத்தல்.

படைத்துமொழிகிளவியிற் பணிமொழிப்பாங்கி
அடற்கதிர்வேலோற் கறியவுரைத்தது.

(இ-ள்) சிட்டித்துரைக்கும் சொல்லினாலே, ஆழ்ந்த வார்த்தையினையுடைய பாங்கியானவள் உயுத்தம் விட்ட பிரகாசத்தினை யுடைய நாயகனுக்கு அறிவுதோன்ற அறிவுறுத்திச் சொன்னது.

---

மணியக் கணியு மரனஞ்ச மஞ்சி மறுகிவிண்ணோர்
பணியக் கருணை தரும்பரன் றில்லையன் னுடிறத்துத்
துணியக் கருதுவ தின்றே துணிதுறை வாநிறைபொன்
அணியக் கருதுகின் றூர்பலர் மேன்மே லயலவரே.

(பொ-ரை.) அக்குமணியைச் சாத்துகின்ற தலைவன்; விடத்தாக்கஞ்சிச் சுழன்று பின்பு தேவர்கள் வந்து வணங்க அருளைத் தருகிற மேலானவன்; அவனுடைய புலியூரை ஒப்பாள் அளவில் அறுதியிடத்தக்க காரியத்தை இன்றே (துணிந்து செய்.) துறைவனே! அயலார் பலரும் நிறைந்த பொன்னை அணிய நினையா நின்றூர்கள் மேன்மேலும். ஆதலால் இன்றே (துணிவாயாக.) (எ-று.)

---

195. தோழி கூற்று.

துணிதல்-வரைதல், அல்லது உடன்கொண்டுபோதல்.

மேல்உரையில் (துணிந்துசெய்; துணிவாயாக) என்ற இடங்களில் ஏட்டில் 'அறவிடு' என்று காணப்படுகிறது.

---

## 196. பொன்னணிவுரைத்தல்.

பலபரிசினுலு மலர்நெடுங்கண்ணியை
நன்னுதற்பாங்கி பொன்னணிவரென்றது.

(இ-ள்.) மலரையொத்த நெடிய கண்களையுடையாளைப் பல படியாலும் நல்ல நெறியினையுடைய பாங்கி பொன்னணிவர் என்று சொன்னது.

---

பாப்பணி யோன்றில்லைப் பல்பூ மருவுசில் லோதியைநற்
காப்பணிந் தார்பொன் னணிவாரி னிக்கமழ் பூந்துறைவ
கோப்பணி வான்றோய் கொடிமுன்றி னின்றிவை யோர்குழுமி
மாப்பணி லங்கண் முழங்கத் தழங்கு மணமுரசே.

(பொ-ரை.) அரவாபரணத்தைப் பூண்டவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரிற் பல பூக்களொடும் பயின்ற மெத்தென்ற அளகத்தினையுடையாளைக் காப்புக்கட்டினார்கள். இனிப் பொன்னணிவார்களாயிருந்தார்கள். நாற்றமுடைய மலரினையுள்ள துறைகளையுடையவனே! கலியாணத்துக்குத் தக்க கோப்புக்களை நிறைத்த ஆகாயத்தே தலைசாய்ந்த கொடிகளை உடைத்தாகிய முற்றத்திலே, கலியாணமுரசுகள் இவை அழகாகக் குழுமித் திரண்டு நின்று, மிக்க சங்குகள் ஆரவாரிப்ப (த்தாமும்)முழங்கா நின்றன. (எ-று.)

இனிப்பொன்பூட்டுவார்களாயிருந்தது. (இனிச் செய்ய வேண்டுவது செய்வாயாக என்றவாறு.)

---

196. தோழி கூற்று.

சில்லோதி; சில்-நுண்மை.

காப்பென்றது காவலை. (பே-ரை.)

---

## 197. அருவிலையுரைத்தல்.

பேதையரறிவு பேதைமையுடைத்தென
வாதரத்தோழி யருவிலையுரைத்தது.

(இ-ள்.) அறிவில்லாதாருடைய விசாரம் கொண்டது விடாமையுடைத்தென்று அன்புடைத்தோழி நாயகிக்கு விலையில்லாமையைச் சொன்னது.

---

எலும்பா லணியிறை யம்பலத்தோ னெல்லைசெல் குறுவோர்
நலம்பா லியமுற்று நல்கினுங் கல்வரை நாடரம்ம
சிலம்பா வடிக்கண்ணி சிற்றிடைக் கேவிலை செப்பலொட்டார்
கலம்பா லியமுலை யின்விலை யென்னீ கருதுவதே.

(பொ-ரை.) எலும்பாலே அலங்கரிக்கிற சுவாமி; திருவம்பலத்தேயுள்ளவன்; அவனுடைய எல்லையாகிய ஞானகாண்டத்தைக் குறுகிநிற்பாருடைய நன்மையே பரந்த எல்லாவுலகங்களையும் நீ கொடுக்கினும், (எம்) மலையிடத்துண்டாகிய நாட்டினையுடையவர் கேட்பாயாக, வெற்பனே! மாவடு வகிரையொத்த கண்களையுடையாளது சிற்றிடைக்கு விலையாகச் சொல்லமாட்டார்கள்; ஆபரணங்கள் பரந்த தனத்தின் விலையாக நீ எப்பொருளை நினைக்கின்றது? (எ-று.)

---

197. தோழி கூற்று:-

எல்லைசேறல்-அறிவாலவனை அணுகுதல். அவர் நலம்பாவா இடம் இன்மையின் எஞ்சாமை முழுதுமென்பார், நலம்பாவியமுற்றுமென்றார்; என்றது அவர் சீவன் முத்தராயிருத்தல். அஃதாவது சீவனுடனிருக்கும் போதே முத்தியையடைந்திருத்தல். முத்தியாவது எங்குமொக்க வியாத்தியையடைந்திருத்தல். இது அகண்டபரிபூரணரென்றபடி. இவனுயர்ந்த நிலைமகனாதலால், தன்றமரைக் கல்வரை நாடரென்றும், பேதையரென்றும் கூறினாள். (பே-ரை.)

---

## 198. அருமைகேட்டழிதல்.

பெருமை நாட்டத்தவள்
அருமைகேட் டழிந்தது.

(இ-ள்.) பெரிய நயனங்களையுடையவள் அருமையைக் கேட்டு நெஞ்சழிந்தது.

---

விசும்புற்ற திங்கட் கழுமழப் போன்றினி விம்மிவிம்மி
அசும்புற்ற கண்ணோ டலறாய் கிடந்தரன் றில்லையன்னாள்
குயம்புற் றரவிடை கூரெயிற் றூறல் குழன்மொழியின்
நயப்பற்றி நின்று நடுங்கித் தளர்கின்ற நன்னெஞ்சமே.

(ப-ரை) அரன் தில்லை அன்னாள் - அரனுடைய பெரும்பற்றப்புலியூரை யொப்பாளுடைய, குயம் - முலைகளினும், புற்று அரவு இடை - புற்றிலே வாழ்கின்ற பாம்பின் கழுத்தை யொத்த இடையினும், கூர் எயிற்று ஊறல்-கூரிய முறுவல் ஊறுகின்ற நீரினும், குழல்மொழி - குழலோசை யொத்த வார்த்தையினும் உள்ள, நயம்பற்றி நின்று - இன்பத்தையே கருதி, நடுங்கித் தளர்கின்ற நன்னெஞ்சமே - நடுக்கமுற்று வாடும் நல்ல நெஞ்சமே! (நல்ல நெஞ்சமென்றது, குறிப்பாலே அறிவில்லாத நெஞ்சமே என்றது) விசும்பு உற்ற திங்கட்கு அழு மழப்போன்று - ஆகாயத்திலே பொருந்துகின்ற சந்திரனைப் பிடித்துத்தா என்று வேண்டியழுகிற பிள்ளைகளைப் போல், இனி விம்மி விம்மி-இப்பொழுது பொருமிப் பொருமி, அசும்பு உற்ற கண்ணோடு கிடந்து அலறாய் - நீர் அறாக் கண்ணோடு கிடந்து அலறாய். (எ-று)

---

**198.** தலைவன் கூற்று.

அசும்பு-நீர் அறாமை. நயம்-இன்பம்.

விசும்புற்ற திங்கட்கழுமழப்போன்று; 'வானுந்துமாமதி வேண்டியழு மழப் போலும்' (சிற். 147.)

## 199. தளர்வறிந்துரைத்தல்.

தண்டுறைவன் தளர்வறிந்து
கொண்டுநீங்கெனக் குறித்துரைத்தது.

(இ-ள்.) குளிர்ந்த துறையினையுடையவன் தன் தளர்ச்சியை யறிந்துகொண்டு நீங்குவாயாக என்று கருதிச் சொன்னது.

---

மைதயங் குந்திரை வாரியை நோக்கி மடலவிழ்பூங்
கைதையங் கானலை நோக்கிக்கண் ணீர்கொண்டெங் கண்டர்
[தில்லைப்
பொய்தயங் குந்நுண் மருங்குனல் லாரையெல் லாம்புல்லினுள்
பைதயங் கும்மரவம் புரையும் மல்குற் பைந்தொடியே.

இச்செய்யுளுக்கு உரை இல்லை. பின்னே உள்ளது பேராசிரியர் உரை:

(ப-ரை) பைதயங்கும் அரவம் புரையும் அல்குற் பைந்தொடி-படம் விளங்கும் பாம்பைப்பொக்கும் அல்குலையுடைய பைந்தொடி, மைதயங்கும் திரை வாரியை நோக்கி-மடலவிழாநின்ற பூவையுடையவாகிய தாழையையுடைய கானலையுநோக்கி, கண்ணீர்கொண்டு-கண்ணீரைக்கொண்டு, எம் கண்டர் தில்லைப் பொய் தயங்கும் நுண் மருங்குல் நல்லாரை எல்லாம் புல்லினுள்-பின் எம்முடைய கண்டரது தில்லைக்கணுளராகிய பொய்யாதல் விளங்கும் நுண்ணிய மருங்குலையுடைய தன்னுபத்தாராகிய நல்லாரை யெல்லாம் புல்லிக்கொண்டாள்; அவள் கருதியதொன்றுண்டு போலும். (எ-று)

---

199. தோழி கூற்று.

கண்ணீர் கொண்டென்றது, பெண்களுக்கியல்பான குணமொன்று, நெடுங்காலம் கூடமருவினரை விட்டுநீங்குகின்ற அயரத்தாற் றோன்றிய தொன்று, இக்காலமெல்லாம் உங்களைச் சேர்ந்து போந்த பெருநலத்தான்

இப்பெருநலம் பெற்றேனென்று முவகைக் கண்ணீரொன்று - இப்பெருநல மென்றது உடன்போக்கை. ஆதலான், நல்லாரையெல்லாம் புல்லிக் கொண்டு கண்ணீர் கொண்டாள். (பே-ரை.)

---

## 200. குறிப்புரைத்தல்.

நறைக் குழலி
குறிப்புரைத்தது.

இதற்கு உரை இல்லை.

மாவைவந் தாண்டமென் னோக்கிதன் பங்கன்வண் டில்லை [மல்லற்
கோவைவந் தாண்டசெவ் வாய்க்கருங் கண்ணி குறிப்பறி [யேன்
பூவைதந் தாள்பொன் னம்பந்து தந்தா ளென்னைப் புல்லிக் [கொண்டு
பாவைதந் தாள்பைங் கிளியளித் தாளின்றெம் பைந் [தொடியே.

(ப-ரை.) பூவை தந்தாள் - தன் பூவையையும் தந்தாள்; பொன்னம் பந்து தந்தாள் - பொன்னாற் செய்த அழகிய பந்தை யும் தந்தாள்; என்னைப் புல்லிக்கொண்டு பாவை தந்தாள்; என் னைத் தழுவிக் கொண்டு பாவையா......ளனையுஞ்......(புல்லிக் கொண்டு பாவை தந்தாளென்றது, பாவை மேலுள்ள அன் பால் அதனைத் தழுவிப் புல்லிக்கொண்டு என்று உரைப்பினும் அமையும்; புல்லிக்கொண்டது என்றது முன்னே அழைத்துச் சொல்லினும்? அமையும்.) பைங்கிளி அளித்தாள் இன்று எம் பைந்தொடியே - பச்சென்ற கிளியினையுந் தந்தாள் இப்பொழுது எம்முடைய அழகிய வளைகளையுமுடையாள்.

ஆதலால்,

மாவை வந்தாண்ட மென்னோக்கி தன் பங்கர் - மான்நோக்கத்தினைச் சென்று அடிமை கொண்ட மெல்லிய நோக்கினையுடையாள் பாகத்தையுடையவன், வண்தில்லை - அவனுடைய அழகிய பெரும்பற்றப்புலியூரில், மல்லல் கோவை வந்தாண்ட செவ்வாய் - அழகிய கொவ்வைக் கனியை வந்தடிமை கொண்ட சிவந்த வாயினையும், கருங்கண்ணி-கரிய கண்களையுமுடையாள், குறிப்பறியேன் - நினைவு இன்னபடி யென்றறிகின்றேனில்லை. (எ-று.)

---

200 தோழி கூற்று.

புல்லிக்கொண்டு பாவையைத் தந்தாளென்றியைத்து, பாவைமேலுள்ள அன்பால் அதனைத் தருவழிப் புல்லிக்கொண்டு தந்தாளென்றுரைப்பாருளர். (பே-ரை.)

பாவை-பஞ்சாய்க்கோரையினாற்செய்த பாவை; தாது முதலியவற்றால் செய்த பாவையுமாம்.

---

## 201. அருமையுரைத்தல்.

கானின்கடுமையுமானின்மென்மையும்
பதியின்சேட்சியு மிதுவெனவுரைத்தது.

(இ-ள்.) காட்டினது கடினமும் மானின் நோக்கினையுடையாளுடைய மென்மையும் தனது ஊரினது தூரமும் இத்தன்மையவென்று சொன்னது. இது வென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டுக.

---

மெல்லியல் கொங்கை பெரியமின் னேரிடை மெல்லடி பூக்
கல்லியல் வெம்மைக் கடங்கடுந் தீக்கற்று [1]வானமெல்லாம்
சொல்லிய சீர்ச்சுடர்த் திங்களங் கண்ணித்தொல் லோன் [புலியூர்
அல்லியங் கோதைநல் லாயெல்லை சேய்த்தெம் மகனகரே.

(பொ-ரை.) மெல்லிய இயல்பினையுடையாளது கொங்கை பெரியவாயிருந்தன. இவற்றைத் தாங்கும் இடை மின்னை நிகர்க்கும். மெல்லிய அடிகள் பூவாயிருந்தன. கல்லாலியன்ற வெய்ய காடு கொடிய நெருப்பாயிருந்தது. தேவர்கள் எல்லாரும் கற்றுச் சொல்லும் புகழினையுடைய ஒளியை யுடைத்தாகிய பிறையை யழகிய நெற்றி மாலையாகவுடைய பழையவனுடைய பெரும்பற்றப்புலியூரில், அல்லிமாலையுடைய நல்லாய்! எம்முடைய அகன்ற நகரியின் எல்லை தூரிதாயிருந்தது. (எ-று.)

என்றால், 'நான் கொண்டு நீங்கும்படியே (து?)' என்றது. தேவர்க்கெல்லாம் கற்றுச் சொல்லிய புகழென்றது, அவர்களும் தன் பக்கலிலே கற்றுச் சொல்லுகிற சொல்லும் நல்லது; தன் புகழ் தனக்கே தெரியும் என்பது கருத்து.

---

241. தலைவன் கூற்று.

[1] பா-ம். வானரெல்லாம்.

வானமெல்லாம்......சுடர்த்திங்கள்: 'அப்பிறை, பதினெண்கணனும் ஏத்தவும்படுமே (புறம். 1.) 'குழவித்திங்களிமையவரேத்த, வழுகொடு முடித்த வருமைத்து' (சிலப். 2: 38-9).

இதனைத் 'தலைவன் உடன்போக்கு மறுத்தற்குச் செய்யுளா'கக் காட்டுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ.531. உரை.)

## 202. ஆதரங்கூறல்.

அழற்றடம்புரையு மருஞ்சுரமதுவும்
நிழற்றடமிவட்கு நின்னொடேகினென்றது.

(இ-ள்.) காயக்கிலேசத்தை ஒத்து உரிய வகை உன்னோடே போகின், இவளுக்கு நிழல் உட்பட்ட தடாகத்தோடு ஒக்குமென்றது, எம்முடைய அழகிய வளையினையுடையாளுக்கு.

---

பிணையுங் கலையும்வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையால்
அணையு முரம்பு நிரம்பிய வத்தமு மையமெய்யே
இணையு மளவில் லாவிறை யோனுறை தில்லைத்தண்பூம்
பணையுந் தடமுமன் றேநின்னோ டேகினெம் பைந்தொடிக்கே.

(பொ-ரை.) பிணைமானும் கலைமானும் வலிய பேய்த்தேரைப் பெரிய பெரிய நீர்வேட்கையாலே தண்ணீரென்று குறுகும் முரம்பு நிரம்பிய அத்தமும், கல் விரவி உயர்ந்த நிலங்கள் மிக்க அரிய வழியும், சுவாமி! உண்மையாகத் தனக்கு ஒப்பும் அளவுமில்லாத இறைவனது பெரும்பற்றப்புலியூரில் தட்பமும் பொலிவும் உடைத்தாகிய மருதநிலமும் தடாகமுமல்லவோ உன்னுடனே போதப்பெறில் அவை? நீ இவளை அந்நியமாகச் சொல்வது என்? (எ-று)

---

202. தோழி கூற்று.

அழற்றடம் புரையு மருஞ்சுரம்-இப்பகுதிக்கு உரியஉரை காணப்பெறவில்லை. கொடுக்கப்பெற்றுள்ள உரைப்பகுதியின் பொருத்தம் புலப்படவில்லை.

அழற்றடம்-தீக்காய்கலம். விகாரவகையால் தடா தடமென நின்றது. அழலால் நிறைந்த பொய்கை எனினும் பொருந்தும். (பே-ரை.)

அளவு-எல்லை. பணை-மருதநிலம்.

கானமும் இனிமையாகும்: 'நீர்கால் யாத்த...... கானமு மினிய வா நும்மொடு வரினே'. (குறுந். 388.) 'தீயினும் வெய்ய வென்குவை யாயின், யாவது மினிய கானம், சேயுயர் சிலம்ப நின்னொடு செலினே' (தமிழ்நெறி. மேற். 90): 'வேல்புரை வெம்மைய கான மெனினுமவ் வேந்தன் செய்ய கோல்புரை தண்மைய வாநின்னொ டேகினெங் கொம்பி னுக்கே' (பாண்டிக்). 'மன்னெடு வேலிணைய் மாழை மடநோக்கி, நின் னொடு செல்வ நெடுங்கானம்-கொன்னுனைய, வேலன்ன வெம்மைய வாயினும் வேந்தர்செங்கோலென்ன லாகுங் குளிர்ந்து' (கிளவிமாலை). 'தீயபெருவனமுஞ் செந்தறையு நந்தறையும், தூய பெருவனமுஞ் சோலையு மாம்-ஆய, கலம்ப முலைமகட்குக் காமருபூங் கண்ணிச், சிலம்பாநின் பின்னர்ச் செலின்' (கிளவித் தெளிவு).

'தலைமகளை உடன்படுத்தற்குச் செய்யு'ளென இதனைக் காட்டுவர் இலக். விளக் ஆசிரியர் (சூ. 536. உரை.)

---

## 203. இறந்துபாடுரைத்தல்.

கார்த்தடமும் கயலும் போன்றீர்
வார்தடமுலையு மன்னனுமென்றது.

(இ-ள்.) கரியதடாகத்தையும் அதில் வாழும் கயலினையும் ஒப்பீர், கச்சணிந்த தனத்தாளும் மன்னனே நீயும் என்றது. (என்றது எதிர்மறை).

---

இங்கய லென்னீ பணிக்கின்ற தேந்த லிணைப்பதில்லாக்
கங்கையஞ் செஞ்சடைக் கண்ணுத லண்ணல் கடிகொடில்
பங்கயப் பாசடைப் பாய்தட நீயப் படர்தடத்துச்[ சிலைப்
செங்கய லன்றே கருங்கயற் கண்ணித் திருநுதலே.

(ப-ரை.) இணைப்பு இல்லாக் கங்கை அம் செம்சடைக் கண்ணுதல் அண்ணல்-தனக்கு ஒப்பு இல்லாத கங்கையணிந்த

அழகிய சிவந்த சடையினையும் கண்ணுடைத்தாகிய திரு நெற்றியினையுமுடைய பெரியவன்; கடிகொள் தில்லைப் பங்கயப் பாசடைப் பாய்தடம் நீ-அவன் காவல் செய்கிற பெரும்பற்றப்புலியூரில் தாமரையிற் பச்சென்ற இலைசெறிந்த தடாகத்தை ஒப்பை. அப்படர் தடத்துச் செங்கயல் அன்றே கருங்கயல் கண்ணித் திருநுதலே-அந்தப் பரந்த தடாகத்தில் சிவந்த கயல் மீனல்லவோ, கயலையொத்த கரிய கண்களையுடைய இந்த அழகிய நெற்றியினையுடையாள். இந்து அயல் என் நீ பணிக்கின்றது ஏந்தல்-நீ இங்ஙனம் புக்கு அயலாரது வார்த்தை சொல்லுவது என்தான்? (ஏந்தலே!) (எ-று.)

பங்கயப் பாசடைப் பாய்தடம் நீரிலே நிற்கிற கயலுக்கு இன்பம் தாமரையிலையுடைத்தானால் பிறிதொன்றினால் வருத்தப்படாது; அதுபோல உன்னுடனே போதுகையில் இவளுக்கு இன்பம். உடன்போய் நீ வரைந்துகொள்ளுத(லி)ல் இவளுக்கு ஏமா(ற்)றமும் வருத்தமும் படா; எனவே, உன்னைப் பிரிந்து அவள் இங்கு இருந்தால் தடம் துறந்த கயல்போல இறந்துபடும் என்பது கருத்து. உடன் கொண்டு போகாயாயின், அலரானும் காவல் மிகுதியானும் நின்னைத் தலைப்படுதலரிதாக, தடந்துறந்த கயல்போல்வள் இவள் (இறந்துபடுவள்) என்றவாறு.

---

203. தோழி கூற்று.

'என்றது எதிர்மறை' என்றதனால், 'இவள் இறந்துபடுவள்' என்று கூறியதாகிறது.

செங்கயல். 'செங்கயல் திளைக்குஞ் சுனைத்திருவேங்கடம் அடைநெஞ்சமே.' (திவ்ய. பெரிய திருமொழி. 8. 1-4. 10. 1.)

கயலன்றே இத்திருநுதலே - 'மீனே யென்ன மெய்தடுமாறி விழுகின்றாள்' (கம்ப. அயோ. தைலமாட்டு 64.) 'நீருள வெனினுள மீனு நீலமும......நானும் சீதையும், ஆருள ரெனினுளெ மருளு வாயென்றான்' (நகர். நீங்கு. 157) 'இந்த ஆகாசம் தேவர்கட்கு வாசத்தானமாகி மச்சியத்திற்குச் சலம் போலவும்'......(தக்க. 474 உரை.)

## 204. கற்புநலனுரைத்தல்.

பொய்யொத்தவிடை போக்குத்துணிய
வையத்திடை வழக்குரைத்தது.

[இ-ள்) பொய்யென்ற சொல்லுக்குப் பொருந்தின இடையையுடையாள் உடன்போக்கு அறுதியிடப் பூமியிடத்து வழங்கும் இயல்பைச் சொன்னது.

---

தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந் நாண்டகைசால்
வேயிற் சிறந்தமென் றோளிதிண் கற்பின் விழுமிதன்றீங்
கோயிற் சிறந்து சிற்றம்பலத் தாடுமெங் கூத்தப்பிரான்
வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே.

(உரை.) திருவீங்கோயில் மலையிலே சிறந்தெழுந்தருளி யிருந்து திருசிற்றம்பலத்தே ஆடியருளுகின்ற கூத்தனாகிய எம்முடைய சுவாமி தனது திருவாய்மலர்ந்தருளின வேதாகமத் திலே மிகுத்தெண்ணப்பட்டன, மக்களுக்குப் பழி நீக்கிப் பாது காக்கலாலே தாய்போற் சிறப்புடைத்தாகி மெல்லிய தோள்களை யுடையாளுக்குச் சிக்கென்ற கற்புடைமைபோலச் சீரிதல்ல. (இவை யிரண்டும் வேதநூலிற் சிறந்தனகாண்) பிறையினை யொத்த நெற்றியினையுடையாய்! "உயிரினும் சிறந்தது நாணே. நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந்ததுவே" எனவாகலின்.

---

204. தோழி கூற்று.

"ஈங்கோயிடத்துப் பொலிந்து மேவிச் சிற்றம்பலத்தின்கண் நின்றாடும் எம்முடைய கூத்தனாகிய பிரானது வாயின்கண் எப்பொழுதும் வந்து சிறத்தற்குக் காரணமாகிய அறிவால் சிறப்பையுடையையாகிய மதிநுதால்! மகளிர்க்குப் பழிநீங்கிப் பாதுகாத்தலில் நாண் தாய்போலச் சிறந்தது; அத்தன்மைத்தாகிய நாண் அழகமைந்த வேய்போலச் சிறந்த மெல்லிய தோள்களையுடையாய்! திண்ணிய கற்புப் போலச் சீரிதன்று.

தாயினும் சிறந்ததன்று நாணென்றுரைப்பினுமமையும். "உயிரினினும் சிறந்தன்று நாணே நாணினும்-செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (தொல். பொருள். களா. 22) என்றாராகலின், வாயிற்சிறந்த மதியிற்சிறந்த என்பதற்குத் தாய்போல நாண் சிறத்தலும், நாணினும் கற்புச்சிறத்தலுமாகிய இரண்டும் கூத்தப்பிரான் வாயிற்சிறந்த நூல்களிடத்துச் சிறப்புடைய பொருளென்றுரைப்பினுமமையும். (பே-ரை.)

"பாணினுஞ் சொல்லினியோர்க்கணி நாணெனப்பன்னுவதென், பூணினும்பொற்றிருமங்கல நாண்மிகப் பொற்புறல்போல், நாணினுங் கற்புச்சிறந்ததன்றோ நாடரிய, சேணினுஞ் சிற்பரனம்மான் சிராமலைச் சேயிழையே" (சிராமலைக்கோவை. 327.) "பேணிலவாயிற்பெற்றிருந்தாயிற் பெரிதெனச்சொல், நாணினு நற்பொருள் கற்பாவதேயென்று நங்கையர்க்கே" (கலைசைக்கோவை 328.).

---

## 205. துணிந்தமைகூறல்.

பொருவேலண்ணல் போக்குத்துணிந்தமை
செருவேற்கண்ணிக்குச் சென்றுசெப்பியது.

(இ-ள்.) போர்த்தொழிலுள வேலினையுடைய நாயகன் உடன்போக்க அறுதியிட்டபடியைச் செருச் செய்யும் வேலையொத்த கண்ணினையுடையாளுக்குச் சென்று சொல்லியது.

---

குறப்பாவை நின்குழல் வேங்கையம் போதொடு கோங்கம் [விராய்
நறப்பாட லம்புனை வார்பிணை வார்தம்பி ரான்புலியூர்
மறப்பா னடுப்பதொர் தீவினை வந்திடிற் சென்றுசென்று
பிறப்பா னடுப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே.

(உரை) குறவர் மகளே!

தம்பிரான் புலியூரை மறத்தல் கூடுவதொரு தீவினைவரு மாகில், அதனாற் சென்று சென்று பிறப்பான் அடுப்பினும் பின் னும் துன்னத்தகும் பெற்றியரே என்பதனை நிரை நிரையாக்கி, யோனிகளாலே சென்று பிறத்தல் கூடுவதாகிலும் அங்கேதாமும் சென்று நாளுங் கூடத்தக்க முறைமையினை யுடையார் (என்று கொள்க.) நின்மனை வேங்கை அம் போதொடு கோங்கம் விராய் நறப் பாடலம்புனைவார்-உன் மனையின் வேங்கைப்பூவோடே கோங் கம்பூவையும் கலந்து, தேனுடைத்தாகிய பாதிரிப்பூவையுங் கலந்து சூட்டுவதாக நினையாநின்றார்; (எனவே, கோங்கும் பாதிரி யுமுள்ளது பாலைநிலமாதலின் அந்நிலத்தேற உடன்கொண்டு போவதாக அறுதியிட்டாரென்பது கருத்து.)

---

205. தோழி கூற்று,

'கோங்கம் விராய்ப்பாடலம் புனைவார் நினைவாரென்றதனான், நீரிலாற் றிடை\ நின்னொடு செல்லலுற்றாரென்பது கூறினளாம். புலியூரை யுணர்ந்தார்க்குப் பின்னைமறத்தல் அரிதென்னுங்கருத்தான், மறப்பா னடுப்பதோர் தீவினை வந்திடினென்றாள். புலியூரை யொருகாலுணர்ந்த துணையானே பிறவிகெடுமன்றே; அவ்வாறன்றி யதனை மறந்தவாற்றானே பிறக்கக் கூடினுமென்னுங் கருத்தால், பிறப்பானடுப்பினுமென்றாள். அலர்நாணி உடன்போகாது ஈண்டிற் செறிக்கப்பட்டு அவரை எதிர்படா திருத்தல் அன்பன்றென்னுங் கருத்தால், பிறப்பானடுப்பினும் பின்னுந் துன்னத்தகும் பெற்றியரென்றாள்' (பே-ரை.)

---

## 206. துணிவொடுவினுதல்.

சிலம்பன்றுணிவொடு செல்சுரநினைந்து
கலம்புனைகொம்பர் கலக்கமுற்றது.

(இ-ள்) நாயகன் துணிந்த நெஞ்சுடனே போ(கும் சுரத் தினை நினைந்து ஆ)பரணங்களை அணிந்த, வஞ்சிக்கொம்பை ஒப்பா(ள்) கலங்கினது.

---

நிழற்றலை தீநெறி நீரில்லை கானக மோரிகத்தும்
அழற்றலை வெம்பரற் றென்பரென்னோதில்லை யம்பலத்தான்
கழற்றலை வைத்துக்கைப் போதுகள் கூப்பக்கல் லாதவர்
[போற்
குழற்றலைச் சொல்லிசெல் லக்குறிப் பாகுநங் கொற்றவர்க்கே.

(பொ-ரை) இரண்டு பக்கங்களினுமுண்டாகிய காட்டில் தண்ணீர்வேட்கையாலே ஓரி கூப்பிடாநிற்கும்; நிழலிடம் தீய்ந்த வழி நீரில்லை; அழலுடைத்தாகிய தலையாற் சிறந்த வெம்பரலை உடைத்தென்று பலரும் சொல்லுவார்கள். பெரும்பற்றப்புலியூரில் தில்லையம்பலத்தே உள்ளவருடைய சிபதாங்களைத் தலையிலே வைத்துக் கையாகிய பூக்களைக் குவித்து அஞ்சலிபண்ணக் கல்லாதவர்களைப் போலே, குழலிடத்துண்டாகிய ஓசையை ஒத்த வார்த்தையினையுடையாய்! நம்முடைய கொற்றவற்கு இவ்வழிக் கருத்துச் சென்றபடி எது காரணமாகத்தான்?

---

206. தலைவி கூற்று.

நிழற்றலை தீநெறி நீரில்லை: 'தீமேல் அயில்போற் செறிபரற்கான்' (சிற்.206.) 'எரியுந்தீமேலயில்போற் செறிபரற்கான்' (சிற். 228.)

'அயிலுருப் பனைய வாகி யைதுநடந்து, வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப, வேனி னின்ற வெம்பதம்' (சிறுபாண். 7-9.); 'அயில்காய்ந் தன்ன கூர்ங்கல்' (மலைபடு 373.) 'கொல்லடைந்த வேலன்ன கூர்ம்பரல்' (யா. வி. மேற்.).

---

## 207. போக்கறிவித்தல்.

பொருசுடர்வேலவன் போக்குத்[1] துணிந்தமை
அரிவைக்கவ ளறியவுரைத்தது.

(இ-ள்.) போர்த்தொழிலை வல்ல ஒளியுடைத்தாகிய வேலினையுடையவன் உடன்போக்கறுதியிட்டபடியை நாயகிக்கு அவள் அறியும்படி சொல்லியது.

---

காயமு மாவியு நீங்கள்சிற் றம்பல வன்கயிலைச்
சீயமு மாவும் வெரீஇவர லென்பல் செறிதிரைநீர்த்
தேயமும் யாவும் பெறினுங்கொ டார்நம ரின்னசெப்பில்
தோயமு நாடுமில் லாச்சுரம் போக்குத் துணிவித்தவே.

(பொ-ரை.) நீங்கள் உடம்பும் உயிருமாயிருந்தீர்கள்; திருச்சிற்றம்பலநாதனுடைய ஸ்ரீகயிலாய மலையில் சிங்கத்துக்கும் மற்றுமுள்ள துட்டமிருகங்களுக்கும் பயப்பட்டு, 'வாராதே கொள்' என்பன் நான். செறிந்த திரைகளையுடைத்தாகிய கடல் சூழ்ந்த இந்த உலகத்தையும் மற்றுள்ள பொருள்களையும் பெறினும் நம் உறவின்முறையானவர்கள் (உன்னைக்) கொடார்கள். இத் தன்மையன காண். சொல்லில், நீரும் மனித்தரும் இல்லா வழியிலே போகைக்கு அறுதியிடப்பண்ணினவை இவை காண். (எ-று.)

---

207. தோழி கூற்று.

(பா-ம்.) [1]. துணிவித்தது.

தலைவி, தலைவன் போகைக்குக் காரணம் யாதென வினவ, தோழி, 'நான் ஏதமஞ்சி அவரை வரவு விலக்கினேன்; அவர் வரைவொடு வரின் நமர் உன்னைக் கொடார். ஆகவே, உடன்போக்குக்குத் துணிந்தார்' என்றாள்.

---

## 208. நாணிழந்துவருந்தல்.

கற்புநாணினு முற்சிறந்தமையிற்
சேணெறிசெல்ல வாணுதறுணிந்தது.

(இ-ள்.) கற்பானது நாணத்துக்குமுன்னே சிறந்ததாய்த் தோன்றுகையாலே, தூரமுடைத்தாகிய வழியிலே போகைக்கு ஒளிசிறந்த நெற்றியினையுடையாள் அறுதியிட்டது.

---

மற்பாய் விடையோன் மகிழ்புலி யூரென் னொடுப்வளர்ந்த
பொற்பார் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்துநுந்தக்
[1]கற்பார் கடுங்கால் கலிக்கிப் பறித்தெறி யக்கழிக
இற்பாற் பிறவற்க வேழையர் வாழி யெழுமையுமே.

(பொ-ரை.) வளப்பம் உடைத்தாய்க் கதி பாய்கிற இடபத்தையுடையவன் விரும்பியருளுகிற பெரும்பற்றப்புலியூரில், நான் வளர்த்த தாயினும் வளர்ந்த அழகு மிக்க சிகரமான நாணமானது, நாயகர்மேல் வைத்த அன்பானது இடையிலே புகுந்து தள்ளக் கற்பாகிய பெருங்காற்றானது நிலைகலக்கிப் பறித்துப் போகடக் கழிவதாகுக. மகளிர் எழு பிறவியும் குடியிற் பிறவாதொழிவதாகவேண்டும். (எ-று.)

---

208. தலைவி கூற்று.

[1] (பா-ம்.) கற்பாங் கடுங்கால்

நாணிழந்து வருந்தலென்பது உடன்கொண்டு போகைக்குக் காரணங்கேட்ட தலைமகள், ஒருநாளுமென்னை விட்டு நீங்காது என்னுடனே வளர்ந்த பொலிவுடைத்தாகிய நாண் கற்பினெதிர் நிற்க மாட்டாது தன்னைவிட்டு நீங்காத என்னைக்கழிவதாக; மகளிர் எழுபிறப்பின் கண்ணுங் குடிப்பிறவாதொழிகவெனத் தான் அதற்குப் பிரிவாற்றாமையான் வருந்தாநிற்றல். (பே-ரை.)

என்னொடும் வளர்ந்த நாண்:- 'நாணொ டுடன்பிறந்த நாண்' (முத். 98.) 'நெடுநாணும் பேணார்' (நீதிநெறி. 84).

இதனைத் 'தலைவி ஒருப்பட்டெழுதற்குச் செய்யுளாக'க் கூறுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 536. உரை.)

---

## 209. துணிவெடுத்துரைத்தல்.

செல்வமாதர் செல்லத்துணிந்தமை
தொல்வரைநாடற்குத் தோழிசொல்லியது.

(இ-ள்.) செல்வத்தையுடைய மாதர் உடன்போக அறுதியிட்டபடியைப் பழைய மலைமேலுண்டாகிய நாட்டினையுடையவற்குப் பாங்கி சொன்னது.

---

கம்பஞ் சிவந்த சலந்தர னாகங் கறுத்ததில்லை
நம்பன் சிவநகர் நற்றளிர் கற்சுர மாகுநம்பா
அம்பஞ் சியாவம் புகமிக நீண்டரி சிந்துகண்ணாள்
செம்பஞ் சியின்மிதிக் கிற்பதைக் கும்மலர்ச் சீறடிக்கே.

(பொ-ரை) நடுக்கத்தைச் சீறின சலந்தரனுடைய வடிவைக் காய்ந்த பெரும்பற்றப்புலியூரிலே யுளனாகிய எல்லாராலும் விசுவசிக்கப்பட்டவனது சிவநகர் என்கிற திருப்படை வீட்டில் நல்ல தளிராயிருக்கும் கல்லுடைத்தாகிய அரியவழி, நாயகனே! அம்பானது பயப்பட்டு ஆவநாழிகையிலே புக்கொளிப்ப மிகவும் நீண்டு செவ்வரி பரந்த கண்களையுடையவளின் செம்பஞ்சினிலே மிதிக்கினும் பதைக்கின்ற மலர்போன்ற சிறிய அடிக்கு. (எ-று.)

கல்லுடைத்தாகிய அரியவழி சிவநகரில்நல்ல தளிரையொத்திருந்ததுகாண், என்றபடி.

---

209. தோழி கூற்று.

சிவநகர் என்பது ஒரு திருப்பதி. (பே-ரை.)

செம்பஞ்சியின் மிதிக்கிற் பதைக்கும்அடி - அஞ்சிலோதிய நம் மலர்ச் சீறடி:.....பஞ்சிமேலும் பனிக்கும் பனிக்குமே. (சீவக. 134.)

## 210. குறியிடங்கூறல்.

மன்னியவிருளிற் றுன்னியகுறியிற்
கோங்கிவர்கொங்கையை நீங்குகொண்டென்றது.

(இ-ள்.) நிலைபெற்ற இருளிடத்தே சேர்ந்திருந்த குறியிடத்தே கோங்கம்பூப்பரந்த மாலையினையுடையாளைக் கொண்டு நீங்குவாயாக என்றது.

---

முன்னோன் மணிகண்ட மொத்தவ னம்பலந் தம்முடிதாழ்த்
துன்னாத வர்வினை போற்பரந் தோங்கு மெனதுயிரே
அன்னா ளருமபெற லாவியன் னாயருளாசையினாற்
பொன்னார் [1]மணிமகிழ்ப் பூவிழ யாம்விழை பொங்கிருளே.

(ப-ரை.) எனது உயிரே அன்னாள்-என்னுடைய உயிரே ஒத்தவள், (உடைய) அரும் பெறல் ஆவி அன்னாய்-அவளுடைய பெறுதற்கரிய அரிய உயிரை ஒப்பாய்; அருள் ஆசையினால்-உன்னுடைய அருளைப்பெறலாமென்னும் ஆசையினாலே, பொன்னார் மணிமகிழ்ப் பூவிழ-பொன்னையொத்த தூய மகிழம்பூ விழ, அதனை, யாம் விழை பொங்கிருளே-நீசெய்த குறியென்று நாங்கள் விரும்புகிற மிக்க இருள், முனனோன் மணி கண்டம் ஒத்து-எல்லாப் பொருளுக்கும் முன்னோனுடைய நீலமணி போன்ற திருமிடற்றை யொத்து, அவன் அம்பலம் தம் முடி தாழ்த்து உன்னாதவர் வினைபோல் பரந்து ஓங்கும் - அவனுடைய திருவம்பலத்தைத் தங்களுடைய தலைசாய்த்து வணங்க நினையாதாருடைய இருவினை(போல் விரிந்து) ஓங்கும். (எ-று.)

விரிந்து-பொழுதைக்குப் பொழுது மிக்குச் செல்லாநின்று.

என்ன, கொண்டு நீங்குகைக்கு நல்லவிடம் மகிழம்பூ விழுந்த(இடம்); ......கோத்துக்கொண்டு இருப்போம்; பழைய குறியிடத்தே வந்து குறிசெய்வாயாக என்றது.

210. தோழி கூற்று.

(பா-ம்.) மணிமகிழ்பூவிழ.

'இனித்தாழாது இவ்விருட்காலத்துப் போகவேண்டுமென்றும், இரவுக்குறிக்கண்வரும் அரையிருட்கண் வந்து அக்குறியிடத்து நில்லென்றும் கூறினளாம். துன்னிய குறி-நீ முன்வந்து இவளை எதிர்ப்பட்ட குறியிடம். (பே-ரை.)

---

211. அடியொடுவழிநினைந்தவனுளம் வாடல்.

நெறிவுறுகுழலியொடு நீங்கத்துணிந்த
உறுசுடர்வேலோ னுள்ளம்வாடியது.

(இ-ள்.) நெறித்த கூந்தலினையுடையாளுடனே நீங்க அறுதியிட்ட, மிக்க ஒளியினையுடைத்தாகிய வேலினையுடையவன் மனம் வாடியது.

---

பனிச்சந் திரனொடு பாய்புனல் சூடும் பரன்புலியூர்
அனிச்சந் திகழுமஞ் சீறடி யாவ வழல்பழுத்த
கனிச்செந் திரளன்ன கற்கடம் போந்து கடக்குமென்றால்
இனிச்சந்த மேகலை யாட்கென் கொலாம்புகுந் தெய்துவதே.

(பொ-ரை.) குளிர்ச் சந்திரனுடனே வார்ந்த நீரைச் சூடுகிற மேலானவனுடைய பெரும்பற்றப்புலியூரில் அனிச்சப்பூவையொத்து விளங்குகின்ற அழகிய சிறிய அடிகளை உடையவள், ஆ, ஐயோ, ஐயோ! அழகிய பழுத்த பழத்தின் சிவந்த திரளையொத்த கல்லுடைத்தாகிய அரிய வழியை என்னுடனே போந்து நடப்பாளாமாகில், இப்பொழுது, நிறமுடைத்தாகிய மேகலாபரணமுடையாட்கு என்ன வந்துற்றது சொல்லுவாயாக வேண்டும். (எ-று.)

---

211. தலைவன் கூற்று.

ஆவ-இரங்கற்குறிப்பு. (சிற். 142.) சந்தம்-நிறம்.

## 212. கொண்டுசென்றுய்த்தல்.

வண்டமர் சூழலியைக்
கண்டுகொள் கென்றது.

(இ-ள்.) வண்டுகள் அமர்ந்த நெறித்த கூந்தலினையுடையாளைக் காண்பாயாக என்று காட்டியது.

---

வைவந்த வேலவர் சூழ்வரத் தேர்வரும் வள்ளலுள்ளந்
தெய்வந் தருமிரு ணேங்குமுழு துஞ்செழு மிடற்றின்
மைவந்த கோன்றில்லை வாழ்த்தார் மனத்தின் வழுத்துநர் [போன்
மொய்வந்த வாவி தெளியுந் துயிலுமிம் மூதெயிலே.

(பொ-ரை.) அழகிய திருமிடற்றிலே இருளையுடைய சுவாமியினுடைய பெரும்பற்றப்புலியூரை வாழ்த்தார் மனம் போலே பூமிமுழுதும் இருள் செறியாநின்றது; வாழ்த்துவார் மனம்போலப் பெருமையுடைத்தாகிய தடாகங்கள் தெளியாநின்றன. இப்பழைய ஊர்முழுதும் உறங்காநின்றது, இப்படியே, உன்னுடைய நினைவுக்கேற்க குறிவாய்த்தபடியால் வல்ல கூர்மையுடைத்தாகிய வேல்வீரர் சூழத் தேரிலே வரக்கடவ வள்ளலே! மேலும் நீ நினைத்தன தெய்வமே முடிக்குங்காண்.

---

212. தோழி கூற்று.

---

## 213. ஓம்படுத்துரைத்தல்

தேம்படு கோதையை
ஓம்ப டுத்தது.

(இ-ள்.) தேன் துளிக்கும் மாலையினையுடையாளைப் பரிகரித்துக்கொள்ளென்று நாயகனுக்குக் கையடையாக்கினது.

---

பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னூடிறத் துச்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயி [1]னருமறையின்
திறந்திரிந் தார்கலியும் முற்றும் வற்றுமிச் சேணிலத்தே.

(பொ-ரை.) தேவர்கள் இடைவிடாதே நடுங்கப் பறந்து செல்கின்ற புரங்கள் இடைவிடாமற் செல்கை அழியும்படி, மிக்க அக்கினியை ஏந்தி விளையாடியவனுடைய தெற்கின்கண் உண்டாகிய பெரும்பற்றப்புலியூரை ஒப்பாள் அளவில், வெற்பனே! தருமந் திரிந்ததற்குக் காரணமாகிய உன்னுடைய அருள் வேறுபடுமாகில், அரிய வேதத்தின் முறையும் வேறுபட்டுக் கடலும் சிறிதும் ஒழியாமல் வற்றும் இந்த அகன்ற பூமியில். என்ன, உனக்கு நான் சொல்லவேண்டுவதில்லை. (எ-று.)

213. தோழி கூற்று.

பா-ம். 1. அருமறையும்.

## 214. வழிப்படுத்துரைத்தல்.

மதிநுதலியை வழிபடுத்துப்
பதிவயிற்பெயரும் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) பிறை மிகுத்த நெற்றியினையுடையாளை ஒருவழிப் படுத்திவிட்டுத் தான் பதியிடத்தே வரும் பாங்கி சொன்னது.

ஈண்டொல்லை யாயமு மௌவையு நீங்கவிவ்வூர்க் கவ்வைதீர்
தாண்டொல்லை கண்டிடக் கூடுக நும்மையெம் மைப்பிடித் [தின்
றூண்டெல்லை தீரின்பந் தந்தவன் சிற்றம் பலநிலவு
சேண்டில்லை மாநகர் வாய்ச்சென்று சேர்க திருத்தகவே.

(பொ-ரை.) எம்மைப் பிடித்து இப்பொழுது வலிய அடிமைகொண்ட எல்லையற்ற இன்பமாகிய சிவாநந்தத்தை யளித்தவருடைய திருச்சிற்றம்பலம் நிலைபெற்ற பெரிய பெரும்பற்றப்புலியூராகிய நகரியிடத்தே அழகிதாகச் சென்று சேர்வாயாக. ஆரவாரமுடைத்தாகிய ஆயக்கூட்டமும் எங்கள் அன்னையும் இவ்விடத்தே யொழிய, இவ்வூரில் ஆரவாரமடங்க, அறத்தொடுநிலையாலே உம்மை விரைய வந்து காண்பேனாக விளைவதாக. (எ-று.)

---

214. தோழி கூற்று.

சேண்டில்லை யென்பதற்கு மதின்முதலாயின வற்றானுயர்ந்த தில்லை எனினும் அமையும். இவ்வூர்க்கவ்வை தீர்த்து - இவ்வூரின்கண் உண்டாகிய அலரை ஒருவாற்றான் விரைய நீக்கி. (பே-ரை.)

---

## 215. மெல்லக்கொண்டேகல்.

பஞ்சின்மெல்லடிப் பணைத்தோளியை
வெஞ்சுரத்திடை மெலிவகற்றியது.

(இ-ள்.) பஞ்சினும் மிருதுபதமான பாதமும் வேயை யொத்த பணைத்த தோள்களையுமுடையாளை வெய்ய வழியிடத்தே.........(மெலிவகற்றியது.)

---

பேணத் திருத்திய சீறடி மெல்லச்செல் பேரரவம்
பூணத் திருத்திய பொங்கொளி யோன்புலி யூர்புரையும்
மாணத் திருத்திய வான்பதி சேரு மிருமருங்குங்
காணத் திருத்திய போலுமுன் னுமன்னு கானங்களே.

(பொ-ரை.) தாள்பூணும்படி பெரிய பாம்பை அதன் கொடுமை திருந்தப் பண்ணின பேரொளியையுடையவன் (ஏதம் செய வந்த பாம்பு இவர் திருமேனியைக் காணுமளவில் இவ் வழகு கண்டு அவசமாய்த்து என்பது. இதனைத் திருத்திய ஒளி என்க). அவனுடைய பெரும்பற்றப்புலியூரையொத்த மாட்சிமைப்பட்ட திருந்தச் செய்த பெரிய ஊர்கள் இரண்டு பக்கங்களிலும் ஒன்றுக்கொன்று அண்ணிதாயிருக்கும் (புலியூரையும் பதி எனக் கூட்டுக). நமக்கு முன்னாக நிலைபெற்ற காடுகள் காட்சிக்காம்படி திருந்தச் செய்தன போலும். ஆதலால், பாங்கிமாராலே திருத்தப்பட்ட சிறிய அடியினை உடையாய், நான் விரும்பும்படி மெல்லப் போவாயாக. (எ-று.)

---

215. தலைவன் கூற்று.

---

### 216. அடலெடுத்துரைத்தல்.

வரிசிலையவர் வருகுவரெனப்
புரிதருகுழலிக் கருளவனுரைத்தது.

(இ-ள்.) வரிந்த சிலையினையுடையவர் வருகிறாரென்று நெறித்த கூந்தலையுடையாளுக்கு அருளுடையவன் சொன்னது.

---

கொடித்தேர் மறவர் குழாம்வெங் கரிநிரை கூடினென்கை
வடித்தே ரிலங்கெஃகின் வாய்க்குத வாமன்னு மம்பலத்தோன்
[1]அடித்தே ரலரென்ன வஞ்சுவ னின்னைய ரென்னின்மன்னுங்
கடித்தேர் குழன்மங்கை [2]கண்டிடிவ் விண்டோய் கனவரை
[யே.

(பொ-ரை.) நிலைநின்ற நறு நாற்றத்தை வண்டுகள் நுகருகின்ற அளகத்தையுடைய பெண்ணே, இந்த ஆகாய முட்டின பெருமலையிடத்தே வருகிறவர்களைப் பார்ப்பாயாக; கொடி

கட்டப்பட்ட தேரும் வீரருடைய திரளும் இரண்டும் வந்தா லும் என் கையிலே பிடித்த வடிக்கப்பட்டு அழகு விளங்குகிற வேலின் வாய்க்கு இரை போதாது. திருவம்பலத்தேயுள்ளவ னுடைய திருவடிகளை நினையாதவரைப்போலப் பயப்படுவேன் உங்கள்......(ஐயர் என்னின்); இருவரிலும் யாரென்று பார்த்துக் காண். (எ-று)

---

216. தலைவன் கூற்று.

(பா-ம்.) [1]. அடிதேர்பவர். [2]. கண்டிடிர்.

வரிசிலையவர் வருகுவரென-வரிசிலையவர் வாராநின்றார் இவர் யாரென. இடைச்சுரத்து அவடமரெதிர்படை தொடர்ந்து நிற்ப வழிவருவார் விலக்கி வரைவித்துக் கொடுப்ப. என்னை? "இடைச்சுர மருங்கின வடம ரெய்திக் கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட-வப்பாற்பட்ட ஒருதிறத் தானும் (பொருள். அகத்திணை. 41.) என்றார் தொல்காப்பியனார். (பே-ரை.)

---

## 217. அயர்வகற்றல்.

இன்னல்வெங்கடத் தெறிவேலவன்
அன்னமன்னவள் அயர்வகற்றியது.

(இ-ள்.) பொங்குடைத்தாகிய வெய்ய காட்டிலே எறிகிற வேலையுடையவன் அன்னத்தை யொப்......ளுடை.......தனைச் சொன்னது.

---

முன்னே னருண்முன்னு முன்னு வினையின்மு னகர்துன்னு
மின்னுக் கடறிதிப் போழ்தே கடந்தின்று காண்டுஞ்சென்று
பொன்னு ரணிமணி மாளிகைத் தென்புலி யூர்ப்புகழ்வார்
தென்னு வென[1]வுடை யானட மாடுசிற் றம்பலமே.

(பொ-ரை.) எல்லாப் பொருளுக்கும் முன்னேனுடைய திருவருளைமுற்பிறப்பின் நினையாத வினையினாலே, அறிவிலாதவர் செறிகிற இன்னாத அரிய வழியைக் கழிந்து சென்று இப்பொழுதே காணக்கடவோம். பொன்னாலே செய்து அழகிய மாணிக்கங்களை இட்டு இழைக்கப்பட்ட மாட மாளிகைகளாற் சூழ்ந்த அழகிய பெரும்பற்றப்புலியூரில் அதனைப் புகழ்வார் தென்னா தென வென்று புகழ, என்னையுடையான் திருக்கூத்தாடியருளுகிற சிற்றம்பலம்; இதனை இப்பொழுதே காணக்கடவோம். (எ-று.)

இவ்வருத்தந்தீரச் சொன்னபடி. 'நம் அரிய வழியை நடந்ததனால் கிலேசமுண்டா? இப்பொழுதே தரிசித்துப் புகுகின்றது திருச்சிற்றம்பலமல்லவோ'? என்றபடி.

---

217. தலைவன் கூற்று.

(பா-ம்.) [1]. உடையார்.

அன்னமன்னவள் அயர்வகற்றியது-அன்னம் போன்ற தலைவியின் வழிவருத்தந்தீரக் கூறியது.

முனகர்-அறிவிலாதவர், நீசர். (பே-ரை.)

'தலைவிக்குத் தலைவன் தன்பதியணிமை சாற்றற்கு'ச் செய்யுளாக இதனைக் கூறுவர் இலக். விளக். ஆசிரியர். (சூ. 536. உரை.)

---

## 218. நெறிவிலக்கிக்கூறல்.

சுரத்திடைக்கண்டவர் சுடர்க்குழைமாதொடு
சரத்தணிவில்லோய் தங்குகவென்றது.

(இ-ள்.) அரியவழியிற் கண்டவர், "ஒளியுடைத்தாகிய மகரக்குழையாற் சிறந்த நாயகியுடனே அம்பினையும் வில்லினையுமுடையவனே! இங்கே அவதரிக்க" என்றது.

---

விடலையுற் றூரில்லை வெம்முனை வேடர்த மியைமென்பூ
மடலையுற் றூர்குழல் வாடினண் மன்னுசிற் றம்பலவர்க்
கடலையுற் றூரி னெறிப்பொழிந் தாங்[1]கருக் கன்சுருக்கிக்
கடலையுற் றூன்கடப் பாரில்லை யின்றிக் கடுஞ்சுரமே.

(பொ - ரை.) நிலைபெற்ற திருச்சிற்றம்பலத்தே யுள்ளவர்க்கு அடுத்தாலயுற்றவர்களை(?)ப் போலத் தன் கிரணங்களால் விளங்கவேண்டுதலை யொழிந்து, அவ்விடத்தே தன் கிரணங்களை ஒடுக்கின அருக்கன் மேலைக்கடலைச் சேர்ந்தான். அதுவுமன்றி, இக்கடிய வழியை இன்றைக்கு இனி நடப்பாருமில்லை; நாயகனே நீ! சென்று அவதரிக்கைக்கும் ஒரு நன்மக்கள் உறைவிடமில்லை (நன்மக்களை உற்றூர் என்றது); வெய்ய முனையைச் செய்கிற வேடர்கள் உண்டாயிருக்கும்; தனியனுக இருந்தாய். அதுவன்றியும், மெல்லிய பூமாலை யொத்து மணங்கமழும் நிறைந்த கூந்தலினையுடையாளும் பொலிவழிந்தாள்.

என்ன, குறிப்பாலே பலபடியும் தங்கிப்போம் என்றுபடும்.

---

218. கண்டோர் கூற்று.

(பா-ம்.) [1]. அருக்கன் பெருக்கி. அருக்கன் பெருகி.

அடலையுற்றூர்-இதற்குப் பேராசிரியர் 'ஆட்படும் தன்மையைப் பொருந்தினவர்களல்லார்' என்று பொருள் கூறுவர்.

"வேடரொடு சாராத நன்மக்கள் இவர்க்கணியராதலின். அவரை உற்றூரென்றூர். வேடரில் உற்றூரில்லையென்று நன்றிசெய்யாரென்பது பயப்பஉரைப்பினுமமையும். (பே-ரை.)

## 219. கண்டவர் மகிழ்தல்.

மண்டழற் கடத்துக்
கண்ட வருரைத்தது.

(இ-ள்.) மிக்க நெருப்பை யொத்த காட்டிலே கண்டவர்கள் சொன்னது.

**அன்பணைத் தஞ்சொல்லி பின்செல்லு மாடவ் வீடவன்றன்**
**பின்பணைத் தோளி வருமிப் பெருஞ்சுரஞ் செல்வதன்று**
**பொன்பணைத் தன்ன விறையுறை தில்லைப் பொலிமலர்மேல்**
**நன்பணைத் தண்ணற வுண்ணளி போன்றுளிர் நாடகமே.**

(பொ-ரை.) சிறுபுறமும் அசைநடையும் காணவேண்டி அன்பாலே அணைத்துக்கொண்டு அழகிய சொல்லினையுடையாள் பின் செல்லா நிற்கும் நாயகன். இவளுடைய புறக்கொடையும் வழிச்செலவும் காணவேண்டி, நெடும்பொழுதெல்லாம் வேயை யொத்த தோள்களையுடையாள் அவன் பின்னே வாராநின்றாள். ஆதலால் இப்பெரிய வழிபோகிறபடியாயில்லை; இவர்கள் செய்தி பொன் கொழுந்துவிட்டு எரிந்தாற் போலொத்த சுவாமி வாழ்கிற பெரும்பற்றப்புலியூரில் பொலிவுடைத்தாகிய மலரிடத்தே, நல்ல மருத நிலத்தில் குளிர்ந்த தேனையுண்ட வண்டுச் சாதிகளைப்போலே விளங்கா நின்ற நாடகமாயிருந்தது. (எ-று.)

பணை - பண்ணை இடை குறைந்து நின்றது. பெரும்பற்றப் புலியூரிற் சூழ்ந்த வயற்பூக்களில் மதுவுண்ட வண்டுகள் களித்து ஒன்றோடொன்று சுற்றி விளையாடினாற் போல நடப்பதொரு நாடகமாயிருந்தது.

---

219. கண்டோர் கூற்று.

'பொன் பணைத்தன்ன இறை' என்றதற்கு. 'பொன் ஒரு வடிவு கொண்டு பெருத்தாற்போலும் இறை' என்று பொருள் கூறி. பொன்பணைத்தாற்போலும் இறை என்று பொருள் கூறுவாரும் உளர் என்பர் பேராசிரியர். 'பொன்னிற் றோன்றிறை பூங்கழல் போற்றிலே.' (பாகவதம் 768.)

கண்டார்க்கின்பஞ் செய்தலின், நாடகமென்றார். (பே-ரை.)

அஞ்சொல்லி பின்செல்லுமாடவன்:- 'வைவெயிற் றையண் மடந்தை முன்னுற் றெல்லிடை நீங்குமிளையோன'. (நற். 2: 7-8).

## 220. வழிவிளையாடல்

வன்றழற் கடத்து வடிவேலண்ணல்
மின்றங்கிடையொடு விளையாடியது.

(இ-ள்.) வலியநெருப்பை யொத்த காட்டில் வடித்த வேலினையுடைய நாயகன் மின்னின் தன்மை நிலைநின்ற இடையாளுடனே விளையாடிச் சொன்னது.

---

கண்கடம் மாற்பயன் கொண்டனங் கண்டினிக் காரிகைநின்
பண்கட மென்மொழி யாரப் பருக வருகவின்னே
விண்கட நாயகன் றில்லையின் மெல்லியல் பங்கனெங்கோன்
தண்கடம் பைத்தடம் போற்கடுங் கானகந் தண்ணெனவே.

(பொ-ரை.) "கட்டழகிற்பட்ட அழகினையுடையாய்! இப்பொழுது உன்னைக் காணப்பெற்றுக் கண்படைத்ததனாலுள்ள இலாபம் பெற்றேன். தேவர்கள் தங்களுடைய தலைவனாகவுள்ளவன்; பெரும்பற்றப்புலியூரிலுளனாகிய மெல்லியல் பங்கன்; எமக்குச் சுவாமியாகவுள்ளவன்; அவனுடைய திருக்கடம்பூரில் குளிர்ந்த தடாகம்போல கடிய காடானது தட்பமுண்டாமளவும், உன்னுடைய பண்ணின் இயல்பாகிய மெல்லிய வார்த்தையைச் செவியாரப் பருகும்படி இங்ஙனே வருவாயாக" என்று ஒரு நிழலிடத்தைக் காட்டிச் சொன்னது.

என்றது, ஆதித்தன் வெம்மை தணியுமளவு மென்னிழலிலிருந்து சில வார்த்தையை என் செவிக்கினிதாகச் சொல்லுவாயாக வேண்டும். (எ-று.)

---

220. தலைவன் கூற்று.

கடம்பைதடம்போற் கடுங்கானகம் குளிரும் வண்ணம் நின்மொழியைப் பருகவென்று கூட்டினுமமையும். (பே-ரை.)

கண்கள் தம்மாற் பயன் கொள்ளல்:- 'ஈண்டிவளிருந்தவாறெல்லாம் காணநோற்றிலன் கமலக் கண்களால்' (கம்ப. காட்சிப். 73)

## 221. நகராணிமைகூறல்.

வண்டமர் குழலியொடு
கண்டவ ருரைத்தது.

(இ-ள்.) வண்டு நுற்ற அளகத்தினையுடைய நாயகியுடனே நாயகனைக் கண்டவர்கள் சொல்லியது.

---

மின்றங் கிடையொடு நீவியன் றில்லைச்சிற் றம்பலவர்
குன்றங் கடந்துசென் றுனின்று தோன்றுங் குரூஉக்கமலந்
துன்றங் கிடங்குந் துறைதுறை வள்ளைவெள் ளைநகையார்
சென்றங் கடைதட மும்புடை சூழ்தரு சேணகரே.

(பொ-ரை) நிறமுடைத்தாகிய தாமரை மலர்கள் நெருங்கின அழகிய கிடங்குகளும், வள்ளைப்பாட்டைப் பாடுகிற வெள்ளிய முறுவலையுடையார் துறை துறைதோறும் சென்றவிடத்தே அடைகிற தடாகங்களும், மின்னினது தன்மை நிலைபெற்ற இடையினையுடையாளுடனே நீ பெரும்பற்றப்புலியூரில் திருச்சிற்றம்பலநாதனுடைய இம்மலையைக் கடந்து சென்றபொழுதே இடைவிடாமல் தோன்றும். (எ-று.)

---

221. கண்டவர் கூற்று.

வள்ளைப்பாட்டு-உலக்கைப்பாட்டு (சிலப். 29. காதை).

வள்ளை-நீரில்தோன்றும் ஒருவகைக்கொடி. 'நறுநீர்வள்ளை (பெருங் 2: 15. 88.); மாநீர் நெடுங்கயத்து வள்ளைக்கொடிமீது (நள. சுயம்வா. 148.). வள்ளைவெண்மலருடையது. (தேவா. 4337),

## 222. நகர்காட்டல்.

கொடுங்கடங்கடந்த குழைமுகமாதர்க்குத்
தடங்கிடங்குசூழ் தன்னகர்காட்டியது.

(இ-ள்.) கொடிய வழியைக் கடந்த மகரக்குழை சிறந்த முகத்தினையுடைய மாதர்க்குப் பெரிய கிடங்கு சூழப்பட்ட குளிர்ந்த நகரியைக் காட்டியது.

---

மின்போல் கொடிநெடு வானக் கடலுட் டிரைவிரிப்பப்
பொன்போல் புரிசை வடவரை காட்டப் பொலிபுலியூர்
மன்போற் பிறையணி மாளிகை சூலத்த வாய்மடவாய்
நின்போ னடையன் னந்துன்னி முன்றோன்று நன்னீணகரே.

(பொ-ரை.) மன்னாகிய முதலியாரைப் போலப் பிறையைச் சூடின மாடங்கள் சூலத்தையுடையனவாய், உன் நடையையொத்த நடையை உடைத்தாகிய அன்னங்கள்.........(துன்னி), முன்னே தோன்றுகிற நல்ல பெரிய நகரம், மிக்க ஆகாயமாகிய கடலிடத்தே மின்னையொத்த கொடியானது குடையை ஒக்க விரிப்ப, பொன்னாலே செய்த மதிலானது வடக்கின்கண் உண்டாகிய மகாமேரு இப்படியிருக்குமென்று காட்டப் பொலிவுபெற்ற பெரும்பற்றப்புலியூர் காண். (எ-று.)

என்ன, தொழுவாயாக என்றுபடும்.

போல, அசை.

---

222. தலைமகன் கூற்று.

துன்னி என்ற சொற்குள்ள உரையிருக்குமிடத்தில் 'சொவும்பட்டு' என்று காணப்படுகின்றது. 'சேரஉடன்பட்டு' என்றிருந்திருக்கலாமோ என்று தோன்றுகிறது.

மாளிகை சூலத்தவாய்- சூலம்-இடிதாங்கி. 'சத்தி நெற்றிசூட்டிய தாமம்-சூலத்தின் நெற்றியிற் சூட்டிய முப்புரியாகிய முத்தமாலை' (சிந். 144. உரை).

## 223. பதிபரிசுரைத்தல்.

கண்ணிவர்வளநகர் கண்டுசென்றடைந்து
பண்ணிவர்மொழிக்குப் பதிபரிசுரைத்தது.

(இ-ள்.) இடம்பரந்த அழகிய நகரியைக் கண்டு சென்று குறுகி இசைபோன்ற வார்த்தையையுடையாளுக்கு அவ்வூரினியல்பு சொல்லியது.

---

செய்குன் றுவையிவை சீர்மலர் வாவி விசும்பியங்கி
நைகின்ற திங்களெய்ப் பாறும் பொழிலவை ஞாங்கரெங்கும்
பொய்குன்ற வேதிய ரோதிட முந்திட மிந்திடமும்
எய்குன்ற வார்சிலை யம்பல வற்கிட மேந்திழையே

(பொ-ரை) செய்யப்பட்ட குன்றுகள் உவை; இவை சிறப்புடைத்தாகிய பூவோடைகள்; ஆகாயத்திலே நடந்து கிலேசிக்கிற சந்திரன் இளைப்பாறுகிற பொழில் அவை. பூமியிற் பொய் முதலாகிய குற்றங்கெடப் பிராமணர் வேதமோதுகிற இடம் உந்திடம்; இந்தவிடம் எய்கிற மலையாகிற நீண்ட வில்லையுடைய திருவம்பலநாதனுக்கிடம். மிக்க ஆபரணங்களை யுடையாய்! (எ-று)

---

223. தலைமகன் கூற்று.

இவையென்பது தன் முன்னுள்ளவற்றை. உவையென்பது முன்னின்றவற்றிற் சிறிது சேயவற்றை. அவையென்பது அவற்றினும் சேயவற்றை. (பே-ரை.)

ஒலவகைச்கட்டு: 'இவ்வு முவ்வு மவ்வும் பிறவு, மேம மார்ந்த நிற் பிரிந்து, மேவல் சான்றனவெல்லாம்' என்ற பரிபாடல் 4. 33-35. அடிகட்கு, 'இவையென்றது நணியவற்றை, உவையென்றது அவற்றிற் சேயவற்றை; அவையென்றது அவற்றினும் சேயவற்றை; பிறவென்றது காணப்படாதவற்றை' என்று பொருள் கூறுவர் பரிமேலழகர்.

ஞாங்கர்-மேல்.

---

## 224. செவிலிதேடல்.

கவலையுற்ற காதற்றோழியைச்
செவிலியுற்றுத் தெரிந்துவினையது

(இ-ள்.) கிலேசமுற்ற உயிர்த்தோழியைச் செவிலித் தாயார் ஆராய்ந்து கேட்டது.

---

மயிலெனப் பேர்ந்திள வல்லியி னொல்கிமென் மானவிழித்துக்
குயிலெனப் பேசுமெங் குட்டனெங் குற்றதென் னெஞ்சகத்தே
பயிலெனப் பேர்ந்தறி யாதவன் றில்லைப்பல் பூங்குழலாய்
அயிலெனப் பேருங் [1]கண்ணு யென்கொலா மின்றயர்கின்றதே.

குறிப்பு: இச்செய்யுளின் முதலிரண்டடிகட்குப் பொருள் காணப் பெறவில்லை.

(பொ-ரை.) என் நெஞ்சகத்தே தனக்கு வாழ்வென்று பிறர் சொல்லும்படி என்னைவிட்டு நீங்கி யறியாதவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் பூவணிந்த கூந்தலினையுடையாய்! வேலைப்போல் உலாவுகின்ற கண்களினையுடையாளுக்கு இப்பொழுது என்தான் வருந்துகின்றது? அதுகிடக்க. (எ-று.)

---

224. செவிலி கூற்று:

(பா-ம்.) [1]கண்ணிக்கு.

முதலிரண்டடிகளின் உரை:-

'மயில்போலப் புடைபெயர்ந்து, இளைய கொடிபோல நுடங்கி, மெல்லிய மான்போல் விழித்து, குயில் எனப்பேசும் எமது பிள்ளை யாண்டையது?' (பே-ரை.)

மயிலெனப் போந்து: 'மயில்கண்டன்ன மடநடை' (முருக. 310.) 'அணிமயிலன்ன வசைநடைக்கொடிச்சியை' (ஐங்குறு. 258:2). 'வருநல மயிலன் மடநடை மலைமகள்' (தே. இடைமருது).

குட்டன்-பிள்ளை.

இதனை, 'செவிலி பாங்கியை வினதற்குச்' செய்யுளாக அமைப்பர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 538. உரை.)

## 225. அறத்தொடுநிற்றல்.

சுடர்க்குழைப்பாங்கி படைத்துமொழிகிளவியிற்
சிறைப்புடைச்செவிலிக் கறத்தொடுநின்றது.

(இ-ள்) ஒளியிணையுடைத்தாகிய (தோழி) செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது.

---

ஆளரிக் கும்மரி தாய்த் தில்லை யாவருக் கும்மெளிதாந்
தாளரிக் குன்றிற்றன் பாவைக்கு மேவித் தழறிகழ்வேற்
கோளரிக் குநிக ரன்னு ரொருவர்கு ரூஉமலர்த்தார்
வாளரிக் கண்ணிகொண் டாள்வண்ட லாயத்தெம் வாணுத
[லே.

(பொ-ரை) ஆட்செய்த(ல்) விண்டுவுக்கும் அரிதாய், அவ்வாட்செய்தல்தான் பெரும்பற்றப்புலியூரில் எல்லார்க்கும் எளிதாகிய ஸ்ரீபாதத்தையுடையவருடைய இந்த மலையில், தன் பாவையாகிய பிள்ளைக்குப் பொருந்தி, பிரகாசமுடைய அழல் வேலினையுடைய, கோள் செய்கிற சிங்க ஏற்றுக்கு ஒப்பாரொருவர், நிறமுடைத்தாகிய பூ......யை, வாளையொத்த செவ்வரி பரந்த கண்களையுடையாள் வாங்கிக்கொண்டாள்; வண்டல் இழைத்து விளையாடுகிற ஆயக்கூட்டத்தாரிடத்திலே எம்முடைய ஒளிசிறந்த நுதலினையுடையவள்.

என்று பொருளாய், வண்டலிழைத்து விளையாடுகிற பக்குவமானபடியாலே, அறிவதறியாக் காலத்தின் நிகழ்ந்ததனை, அறிந்தபின்பு ஒழுக்கமாகக் கொள்கையாலே, கற்பினோடு மாறு கொள்ளாது; பாவைக்கென்றபடியாலே, சிறுபிள்ளைக்கு[க் கண]? மாலை தேடிக் கொடுத்த இயல்பாகையாலே நாயகன் பெருமையுடன் மாறுகொள்ளாது; அறியாத காலத்து நிகழ்ந்ததனை அறிந்தபின்பு ஒழுக்கமாகக் கொள்கையால் நாயகி கற்பினோடும் பெருமையோடும் மாறுகொள்ளாது. உலகினோடு மாறு கொள்ளாமையும் அதுவே.

---

225. தோழி கூற்று.

'மலர்த்தார்' என்றதற்கு உரிய பொருள் ஏட்டில் சிதைந்துள்ளது. 'பூமாலையை' என்றிருத்தல் கூடும்.

'ஆளரி,' ஒருகால் நரசிங்கமாகிய மாலெனினுமமையும்; கோளரிக்கு நிகரன்னாரென்பதற்குக் கோளரிக்கு ஒப்பாகிய அத்தன்மைய ரெனினும் அமையும். இக்குன்றின்கண் வண்டலாயத்து மேவிக்கொண் டானெனவியையும். தாளரிக்குன்றின் என்றதனான், இது தெய்வந்தர வந்ததென்றும், பாவைக்கென்றதனன் அறியாப் பருவமென்றும், கோளரிக்கு நிகரன்னாரென்றதனன் இவட்குத்தக்காரென்றும், மேவி என்றதனாற் பயிர்ப்பு நீங்கிற்றென்றும், தாரென்றதனன் மெய்யுற்ற தனேடொக்குமென்றும் கூறினாளாம். (பே-ரை)

---

## 226. கற்பு நிலைக்கிரங்கல்.

[1]விற்புரைநுதலி கற்புநிலைகேட்டுக்
கோடாய்கூற நீடாய் வாடியது

(இ-ள்.) வில்லை யொத்த நெற்றியினையுடையாள் கற்பு நிலைமை கேட்டுச் செவிலித்தாய் சொல்ல நற்றாய் வாடியது.

---

வடுத்தான் வகிர்மலர் கண்ணிக்குத் தக்கின்று தக்கன் மூத்தீக்
கெடுத்தான் கெடலிறைல்லோன் றில்லைப் பன்மலர் கேழ்கிளர
மடுத்தான் குடைந்தன் றழுங்க வழங்கித் தழீஇமகிழ்வுற்
றெடுத்தாற் கினியன வேயினி யாவன வெம்மனைக்கே.

(பொ-ரை.) ......வ(டு) வகிரை யொத்த கண்களையுடையாளுக்கு இது தக்கதொன்றன்று; தக்கனுடைய மூன்று தீயையும் கெடுத்தவன்; தனக்கொரு காலமும் கெடுதலில்லாத பழையவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் பல மலரும் நிறம் கெடும்படி மடுவிலே விழுந்து அன்று தான் கிலேசிக்க, அதற்குக் கிலேசித்

துத் தழீஇ, இவளை எடுக்கப் பெற்றோமென்று மகிழ்ந்து எடுத்த வற்கு இனியன செய்கையாலே, எம் அ(ன்)னைக்கு இனியன செய்கை ஆவன. அவையாவன வரைந்து கொடுக்கை.

**226.** செவிலி கூற்று.

(பா-ம்.) 1. கோடாயுள்ள நீடாயழுங்கியது.

வடுத்தான் வகிர்மலர்க்கண்ணி என்பதற்குப் பேராசிரியர், வடுத்தான் வகிரப் பட்டாற்போலும் மலர்ந்த கண்ணையுடையாள் என்று பதவுரை கூறி, வகிர்மலர்க்கண்ணி யென்புழிச் செயப்படுபொருளைச் செய்தது போலக் கூறினர்; 'வகிரென்னும் உவமவினை ஒற்றுமை நயத்தால் உவமிக்கப்படும் பொருண்மேலேறி நின்றது; தான் என்பதனை அசைநிலையாக்கி வடுவகிர் போலும் கண்ணென்றுரைப்பாருமுளர்'' என்று விளக்கமும் கூறுவர். (பே-ரை.)

தக்கின்று—தகாது.

ஏட்டில் புள்ளியிட்ட இடத்தில் 'மாவின்' என்ற சொல்விடப் பட்டது போலும்.

நீடாய்—நெடிதாய். (சிற். 230.)

இதனை, 'பாங்கியினுணர்ந்த செவிலி தோற்றுவார்க்கு எதிரழிந்து மொழிதற்குச்' செய்யுளாகக்கூறுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ.538—உரை)

---

## 227. கவன்றுரைத்தல்.

அவணிலை நினைந்து
செவிலி கவன்றது.

(இ-ள்.) நாயகியுடைய நிலையை நினைந்து செவிலித்தாய் கிலேசித்தது.

---

முறுவலக் காறந்து வந்தென் முலைமுழு வித்தழுவிச்
சிறுவலக் காரங்கள் செய்த[1]வெல் லாமுழு துஞ்சிதையத்
தெறுவலக் காலனைச் செற்றவன் சிற்றம் பலஞ்சிந்தியார்
உறுவலக் கானகந் தான்படர் வானு மொளியிழையே.

(பொ-ரை.) அப்பொழுது சிரித்துக்கொண்டு வந்து என் முலையிலே முழுகித் தழுவிக்கொண்டு சிறு விரகுகள் செய்தன வெல்லாம், ஆவிமுழுதும் அழியும்படி கொல்லுகிற வலிய் காலனையழித்தவன், அவனுடைய திருச்சிற்றம்பலத்தை நினையா தார் பொருந்துகிற வலிய காட்டிடத்தை, ஒளியுடைத்தாகிய வளைகளையுடையவள், அங்ஙனம் செய்தது இங்ஙனே போவ தற்காயிருந்தது. (எ-று.)

---

227. செவிலி கூற்று.

(பா-ம்.) செய்த தெல்லாம்.

'எனக்கு வெளிப்படாமற் பிரிவார் செய்வன செய்தாளென்னுங் கருத்தான் வலக்காரமென்றாள். குறித்துணர்வார்க்கு வெளிப்படு மென்னுங் கருத்தாற் சிறுமைப்படுத்தாள்' (பே-ரை.)

---

## 228. அடிநினைந்திரங்கல்

வெஞ்சுரமும்மவள் பஞ்சிமெல்லடியுஞ்
செவிலிநினைந்து கவலையுற்றது.

(இ-ள்.) வெய்ய வழியும் நாயகியின் பஞ்சுபோன்றுள்ள அடியும் செவிலி நினைந்து கவலையுற்றது.

---

35

**தாமே தமக்கொப்பு மற்றில்லவர் தில்லைத் தண்ணனிச்சப்**
**பூமேன் மிதிக்கிற் பதைத்தடி பொங்குநங் காயெரியுந்**
**தீமேல[1] யில்போற் செறிபரற் கானிற் சிலம்படிபா**
**யாமே நடக்க வருவினையேன் பெற்ற வம்மனைக்கே.**

(ப-ரை.) தாமே தமக்கு ஒப்பு மற்று இல்லவர் தில்லை- தமக்குத் தாமே உவமை யென்னும்படி வேறு தமக்கு உவமையாக ஒருவரும் இல்லாதவருடைய பெரும்பற்றப்புலியூரில், தண் அனிச்சப் பூ மேல் மிதிக்கின் பதைத்து அடிபொங்கும்-குளிர்ந்த அனிச்சப்பூமேல் மிதிக்கில் நடுங்கி அடிகளானவை கொப்புளித்துக் கொள்ளும், நங்காய் - பெரியவளே! எரியும் தீமேல் அயில்போல் - எரிகிற நெருப்பிடத்தே வைத்த வேலைப்போல, செறி பரல் கானில் - செறிந்த பரலுடைத்தாகிய காட்டிடத்தே, சிலம்படி பாய் - சிலம்புடைத்தாகிய அடிகள் பரப்பி, ஆமே நடக்க - நடக்கலாமோதான்! அருவினையேன் பெற்ற அம்மனைக்கே - அரிய தீவினையைச் செய்த நான் பெற்ற என் தாய்க்கு (எ-று.)

இப்படிக் கொத்தாரை யொக்க (நட)க்கலாமோதான்?

---

228. செவிலி கூற்று.

பா-ம். அயில்போல் செறிபரல்.

தீமே லயில்போற் செறிபரற் கானம்:- 'நிழற்றலை தீநெறி நீரில்லை கானகம் ஓரிகத்து, மழற்றலை வெம்பரற் றென்ப' (சிற். 606): 'அயிலுருப் பனைய வாகி யைது நடந்து, வெயி லுருப்புற்ற வெம்பரல் கிழிப்ப' (சிறுபாண் 7-8). 'அயில் காய்ந்தன்ன கூர்ங்கற் பாறை' (மலைபடு 373) 'மழுகுநுனை தோற்றிப், பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கல், விரனுதி சிதைக்கு நிரைநிலை,'பரன்முரம் பாகிய பயமில் கானம்' (அக. 5: 12-15) 'நுதிகொண் டனவெம் பரனுண் ணிலை வேல பதிகொண் டுபரந்தன, போன் றுவால், விதிகண் டவரல் லதுமீது செலார், வதிகொண் டதொர்வெவ் வழல்வாய் சொலின்வேம்' (சிந்தா. 1186).

---

## 229. நற்றாய்க் குரைத்தல்.

முகிழ்முலை மடந்தைக்கு முன்னியதறியத்
திகழ்மனைக் கிழத்திக்குச் செவிலி செப்பியது

(இ-ள்.) முகிழ்முலையினையுடைய நாயகிக்கு வந்து புகுந்த தறிய, விளங்கிய மனைக்கிழத்தியாகிய நாயகிக்குச் செவிலித்தாய் சொன்னது.

---

தழுவின கையிறை சோரிற் றமியமென் றேதளர்வுற்
றழுவினை செய்யுரை யாவஞ் சொற்பேதை யறிவுவிண்ணோர்
குழுவினை யுய்யநஞ் சுண்டம் பலத்துக் குனிக்கும்பிரான்
செழுவின தாள்பணி யார்பிணி யாலுற்றுத் தேய்வித்ததே.

(பொ-ரை.) தன்னைத் தழுவிக் கொண்டு கிடக்கிற என்னுடைய கையானது உறக்கத்தாலே சிறிது நழுவுமாகில், 'நாங்கள் தனிச்சிகள் அல்லரோ?' என்று நெஞ்சழிந்து கிலேசித்து அழுகிற தொழிலைச் செய்கிற அழகிய சொல்லினையும் பேதைத்தன்மையையும் உடையாளுடைய அறிவானது, தேவர்கள் திரள் பிழைக்கும்படி நஞ்சை அமுது செய்து திருவம்பலத்தே ஆடியருளுகிற சுவாமி, அவனுடைய அழகிய சிபாதங்களை வணங்காதார் உறுகிற கிலேசத்திலே பொருந்தின எங்களையும் மனம் வாடப் பண்ணிவிட்டது இற்றைநான்று. (எ-று.)

---

229. செவிலி கூற்று.

செழுவின—அழகிய. வளவின. (பே-ரை.) செழுமிய மாளிகை (சிற். 393).

## 230. நற்றாய் வருந்தல்

கோடாய் கூற
நீடாய் வாடியது

(இ-ள்) செவிலித்தாய் சொல்ல நற்றாய் கிலேசித்தது.

---

யாழியன் மென்மொழி வன்மனப் பேதையோ ரேதிலன்பின்
தோழியை நீத்தென்னை முன்னே துறந்துதுன் னார்கண்
[முன்னே
வாழியிம் மூதூர் மறுகச்சென் றாளன்று மால்வணங்க
வாழிதந் தானம் பலம்பணி யாரி னருஞ்சுரமே

(பொ-ரை.) அன்று புருடோத்தமனானவன் வணங்கச் சக்கரத்தைக் கொடுத்தவன்; அவனுடைய திருவம்பலத்தை, வணங்காதாரைப் போல, அரியவழியே, யாழோசையை யொத்த மெல்லிய வார்த்தையினையும் வலிய மனத்தினையும் பேதைத் தன்மையினையுமுடையவள் ஓர் அயலவன் பின்னே, தன்னுடைய உயிர்த்தோழியை விட்டு, என்னை அதற்கு முன்னே விட்டு, சத்துருக்கள் முன்னே இப்பழைய ஊரிலுள்ளா ரெல்லாம் அல ரெடுக்கும்படி போனாள்; இத்தன்மையை இவள் கற்றபடி என்? என்றது.

வாழி என்பது அசை.

---

230. நற்றாய் கூற்று.

'இற்செறிக்கப்பட்ட பின்னர்ப் பராமுகத்தாளென்பதனை உடன்போன பின்னர் உணர்ந்தாளாகலின்,' என்னை முன்னே துறந்தது, என்றாள். (பே-ரை.)

---

## 231. கிளிமொழிக்கிரங்கல்

மெய்த்தகை[1]மாதர் வெஞ்சுரஞ் செல்லத்
தத்தையை நோக்கித் தாய்புலம்பியது.

(இ-ள்.) உண்மையான அழகையுடைய மாதர் அருஞ்சுரம் போகக் கிளியைப் பார்த்துத் தாய் கிலேசித்தது.

---

கொன்னுனை வேலம் பலவற் றொழாரிற் குன்றங் [கொடியோள்
என்னணஞ் சென்றன ளென்னணஞ் சேரு மெனவயரா
என்னனை போயினள் யாண்டைய ளென்னைப் பருந்தடுமென்
றென்னனை போக்கன்றிக் கிள்ளையென் னுள்ளத்தை [யீர்கின்றதே.

(பொ-ரை) 'சிறந்த கூரிய திரிசூலவேலினையுடைய திருவம்பலநாதனைத் தொழாதாரைப் போலே மலைவழியைக் கொடியவளானவள் எத்தன்மையினாலே போனாள்? எவ்விடத்தே சேருகின்றாள்? என்று கொண்டு மயங்கி, 'என் தாயானவள் போனாள், எவ்விடத்தே யுள்ளாள்? என்னைப் பருந்து கொல்லவன்றோ புகுகின்றது என்று என் தாயானவள் போனதன்றி, அவள் பிள்ளையாகிய கிளியின் வார்த்தை என் உள்ளத்தை அரிந்து போடாநின்றது. (எ-று.)

---

231. நற்றாய் கூற்று.

1 பி-ம். மாது.

மெய்த்தகை-மெய்யாகிய கற்பு; புனையா அழகுமாம் (பே-ரை)

கொன்னுனைவேல்:- கொன்னெடுவேற் சூரகனும் (கந்தர்கலி, 93) கொல்நுனைவேல்-கொல்லுதற்குக் காரணமாகிய...வேல்; கொல்-கொற்றொழிலுமாம்; கொன்-பகைவர்க்கு அச்சத்தைத் தருமென்பதுமாம்.

இச்செய்யுளுடன் பின்வரும் கலைசைக் கோவைச் (355) செய்யுளை ஒப்பிடுக:-

புரகர ரெங்கள் கலைசைத் தியாகர் பொருப்பிடையாம்
பரிதவிக் கத்துறந் தாளென்று பாங்கியர் பஞ்சினைவார்
விரகறி தன்மக ளின்சொற் பயிற்றிய மென்கிளிதான்
அரகர வென்னநற் ருயழல் சேர்மெழு காயிடுமே

---

## 232. சுடரோடிரத்தல்.

வெஞ்சு ரந்தணிக்கெனச் செஞ்சுடரவற்கு
வேயமர் தோளி தாயர்பராயது.

(இ-ள்.) வெவ்வழற்சியினைத் தணிய வேண்டுமென்று சிவந்த பிரகாசத்தினையுடைய ஆதித்தனுக்கு மூங்கிலை நிகர்த்த தோளையுடைய தாயர் வேண்டிக்கொண்டது.

---

பெற்றே ணெடுங்கிள்ளை வாட முதுக்குறை பெற்றிமிக்கு
நற்றேன் மொழியழற் கானடந் தான்முக நானணுகப்
பெற்றேன் பிறவி பெருமற்செய் தோன்றில்லைத் தேன்பிறங்கு
மற்றேன் மலரின் மலர்த்திரந் தேன்சுடர் வானவனே.

(பொ-ரை.) தன்னைப் பெற்ற என்னுடனே, தன் பிள்ளையாகிய கிளியும் வாட, அறிவுமிகும் தன்மையானது நிரம்பி, நல்ல தேனையொத்த வார்த்தையினையுடையவள்; அழலுடைத்தாகிய காட்டிலே போனவள் முகம்;—தன்னை அணுகப்பெற்ற நான் பிறவியைப் பெற்றுப் பிறவாதபடி காத்தவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரிலே அழகிய தேனையுடைத்தாகிய செந்தாமரைப் பூப்போலே மலர்த்துவாயாக; சுடர்களின் தலைவனாகிய ஆதித்தனே! நான் உன்னை வேண்டிக்கொள்ளா நின்றேன். (எ-று.)

---

232. நற்றாய் கூற்று.

## 233. பருவநினைந்து கவறல்

முற்று முலைக்கு
நற்றாய் கவன்றது

(இ-ள்.) இளைய முலையினையுடையவளுக்கு நற்றாய் கிலேசித்தது.

---

வைம்மலர் வாட்படை யூரற்குச் செய்யுங்குற் றேவன் [மற்றென்
வைம்மலர் வாட்கண்ணி வல்லள்கொல் லாந்தில்லை யான் [மலைவாய்
மொய்ம்மலர்க் காந்தளைப் பாந்தளென் றெண்ணித்துண் [ணென்றொளித்துக்
கைம்மல ராற்கண் புதைத்துப் பதைக்குமெங் கார்மயிலே.

(பொ-ரை.) திருச்சிற்றம்பலநாதனுடைய மலையிடத்துச் செறிந்த மலருடைத்தாகிய காந்தட்பூவைப் பெரும்பாம்பென்று விசாரித்து துணுக்கென்றொளித்துக் கைகளாகிய மலரினாலே கண் புதைத்து நடுங்குகிற எம்முடைய கார்காலத்து மயிலையொப்பாள், கூரியதாகி மாலையணிந்த (வாளாகிய படையையுடைய) நாயகற்குச் செய்யக்கடவ குற்றேவல்களை என்னுடைய மை எழுதப்பட்ட வாள்போலும் கண்களையுடையவள் (செய்ய) வல்லளோதான். (எ-று.)

---

233. நற்றாய் கூற்று.

வாட்படை என்பதற்குரிய பொருள் "வா.........னெனு மாயுத்தத்தையுடைய" என்று காணப்படுகிறது. 'வாள் என்னும் மா ஆயுதத்தையுடைய' என்றதன் சிதைவுபோலும்.

பிரிவினுன் மகண்மேற் செல்லும் காதல்பெருங்காதலளாதலின், எங்கார் மயிலென்றும் என்வாட்கண்ணியென்றும் பல்காற்றன்னோடடுத்துக் கூறினாள். (பே-ரை)

## 234. நாடத்துணிதல்

கோடாய் மடந்தையை
நாடத் துணிந்தது.

(இ-ள்) செவிலித்தாயானவள் நாயகியைத் தேடுவதாகத் துணிந்து அறுதியிட்டது.

---

வேயின தோளி மெலியல்விண் ணோர்தக்கன் வேள்வியின் [வாய்ப்
பாயின சீர்த்திய னம்பலத் தானைப் பழித்துமும்மைத்
தீயின தாற்றல் சிரங்கண் ணிழந்து [1] திசைதிசைதாம்
போயின வெல்லையெல் லாம்புக்கு நாடுவன் பொன்னினையே.

(பொ-ரை.) வேயின் தன்மையாற் சிறந்த தோள்களை யுடையாய்! நீவாடாதேகொள்; தேவர்களானவர்கள் தக்கன் வேள்வியிடத்துப் பரந்த பெரும் புகழினையுடைய நாயகன் திருவம்பலநாதனைப் பழித்து, மூன்றுவகைத் தீயும் தலைகளும் இவை முதலாகிய புலன்களையும் இழந்து, தாங்கள் போயின வெல்லை யெல்லாம், பொன்னை நிகர்ப்பானைப் புகுந்து தேடக்கடவோம் என்றுபடும்.

---

234. செவிலி கூற்று.

(பா-ம்.) [1] திசைதிசை.

கோடாய்- செவிலி.

திசைதிசை— திசைதோறும். 'திசைதிசை தேனார்க்கும்' (கலி. 26. 13).

## 235. கொடிக்குறிபார்த்தல்.

நற்றாய் நயந்து
சொற்புட் பராயது.

(இ-ள்.) நற்றாயானவள் நயந்து வருவதுசொல்லும் புள்ளை வேண்டிக்கொண்டது.

---

பணங்களஞ் சாலும் பருவர வார்த்தவன் றில்லையன்ன
மணங்கொளஞ் சாயலு மன்னனு மின்னே வரக்கரைந்தால்
உணங்கலஞ் சாதுண்ண லாமொண் ணிணப்பலி யோக்குவன்
[மாக்
குணங்களஞ் சாற்பொலியுந் [1]நலசேட் டைக்கு லக்கொடியே.

(ப-ரை.) மாக்குணங்கள் அஞ்சாலும்-மிக்க குணங்கள் ஐந்தாலும் [குணங்கள் அஞ்......(சாவன)-மறைந்த புணர்ச்சியைத் தருதலும், பொழுதுகடவாதிடம்புகுதலும், ஒருக்காலும் சோம்பாதொழிகையும், .........] (பொலியும்......(விளங்கும்) நல் சேட்டைக் குலக்கொடியே-நல்ல சேட்டிப்பையுடைய அழகிய காகமே!, பணங்கள் அஞ்சு ஆலும் பரு அரவு ஆர்த்தவன்-அஞ்சு படங்களும் ஆலிக்கிற பெரிய பாம்பைப் பூண்டவன், தில்லை அன்ன-அவனுடைய பெரும்பற்றப்புலியூரை யொத்த மணம், கொள் அம் சாயலும் மன்னனும், இன்னே வரக் கரைந்தால்-நறுநாற்றம் பொருந்தி அழகிய மென்மையுடையாளும் அவளுடைய நாயகனும் [மயிலின் சாயலிணைந்த நாயகியும்] இப்பொழுதே வரும்படி அழைத்தால், உணங்கல் அஞ்சாது உண்ணலாம்-நாங்கள்போட்ட உணங்கல் உண்ணும் பொழுது ஒட்டுவாருண்டென்று பயப்படாதிருந்து உண்ணலாம், ஒள் ணிணப்பலி ஒக்குவன்-அழகிய நிணமாகிய பலியையும் உனக்கென்ன வைத்துத் தரக்கடவேன். ஆதலால் அவர்கள் வரும்படி ஒருக்கால் அழைப்பாயாக. (எ-று)

---

235. நற்றாய் கூற்று.

(பா-ம்.) [1] நலசேட்டை குலக்கொடியே

ஏட்டில் சிதைந்த இடங்கள் புள்ளியிடப்பெற்றுள்ளன.

ஒக்குவல் என்பதற்குத் தருவேன் என்றுரைப்பினுமமையும். குணங்களேந்தாவன: மறைந்த புணர்ச்சித்தாதலும், கலங்காமையும், பொழுதிறவாதிடம்புகுதலும், நெடுகக் காண்டலும், மடியின்மையும். சேட்டை, உறுப்பைப் புடைபெயர்த்தல். கொடி-காக்கை. நலசேட்டை குலக்கொடியே யென்று பாடமோதி, சேட்படையாகிய தெய்வத்தின் நல்லகொடியே யென்றுரைப்பாருமுளர். சொற்புட்பராயது-வருவது. சொல்லுதலையுடைய புள்ளை வேண்டிக்கொண்டது. (பே-ரை.)

காக்கை பலியுண்ணல்:- 'செஞ்சோற்றப் பலிமாந்திய' கருங் காக்கை(பொருநர் 183-4); 'வெண்ணெல் வெஞ்சோ, றெருகலத் தேந் தினுஞ் சிறிதென் றோழி......விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே (குறுங். 210. 3-6) 'மரையினிணைப்பலி யென்று மகிழ்ந்திடு வேன், இரைவாய் நிறைய வெடுத்துண்ணலாமின்றே னேழைவரக், கரைவா யிருகட் கொருமணி யைங்குணக் கார்க்கொடியே (கலைசைக் 350) 'நெய்யோ டளைந்த நிணப்பலி நல்குவன் செல்லுணங்கும், செய்யோடு கெண்டையுஞ் சேலுந் தருகுவன். (அம்பிகா. 396.)

---

## 236. சோதிடங்கேட்டல்.

சித்தந்தளர்ந்து தேடுங்கோடாய்
உய்த்துணர்வோரை யுரைமினென்றது.

(இ-ள்.) நெஞ்சுதளர்ந்து தேடுகிற செவிலித்தாய் விசாரித் தறிய வல்லவர்களைச் சொல்லுங்கள் என்றது.

முன்னுங் கடுவிட முண்டதென் றில்லைமுன் னோனருளால்
இன்னுங் கடியிக் கடிமனைக் கேமற் றியாமயர
மன்னுங் கடிமலர்க் கூந்தலைத் தான்பெறு மாறுமுண்டேல்
உன்னுங் கடதின்றி யோதுங் கணன்மறை யுத்தமரே.

(பொ-ரை) முற்காலத்துக் கடிய விடத்தைப் பானம் பண்ணின அழகிய பெரும்பற்றப்புலியூர்க்குப் பழைய முதலியார் திருவருளாலே, கலியாணத்தை இக்காவலுடைத்தாகிய மனையிலே நாங்கள் செய்ய, நிலைபெற்ற நறுநாற்றத்தையுடைய மலரினைச் செறிந்த கூந்தலுள்ளவளை இன்னமும் பெறுமாறுண்டாமாகில் விசாரியுங்கள்; குற்றமின்றிச் சொல்லுங்கள்; சதுர்வேதங்களுக்கதிபதிகளே! நீங்கள் சொல்வீராக. (எ-று.)

---

236. நற்றாய் கூற்று.

அருளாற் பெறுமாறு முண்டேலெனவியையும். தேவர் சென்றிரப்ப நஞ்சை நினைந்தாலும் கைம்மலர்க்கண் வந்திருந்ததாகலின், கருதப்படும் வெவ்விடமெனினுமமையும். யாங்கடியயரத் தான் கடிமலர்க்கூந்தலைப் பெறுமாறு முண்டேலென்றுரைப்பினுமமையும். இப்பொருட்குத் தானென்றது தலைமகனை. தீதின்றி யுண்ணுங்களெனினுமமையும். உய்த்துணர்வோரை:வெளிப்படாத பொருளை ஏதுக்களாலுணர்வோரை. (பே-ரை.)

விடம் கைம்மலர்க்கண் வந்திருந்தது: 'வெங்கடுவை விண்ணோர் கெஞ்சத் திருக்கையி லேற்றயின்றோய்' (மயிலையந்தாதி).

---

## 237. சுவடுகண்டறிதல்

[1] சுவடு தடத்திற்
செவிலிகண் டறிந்தது.

(இ-ள்.) அடிச்சுவடு காட்டிச் செவிலித் தாயானவள் சொல்லியது.

---

தெள்வன் புனற்சென் னியோனம் பலஞ்சிந் தியாரினஞ்சேர்
முள்வன் பரன்முரம் பத்தின்முன் செய்வினை யேனெடுத்த
ஒள்வன் படைக்கண்ணி சீறடி யிங்கிவை யுங்குவையக்
கள்வன் பகட்டுர வோனடி யென்று கருதுவனே.

(பொ-ரை.) தெளிந்த சலமதாகிய கங்கையைத் திருமுடியிலே யுடையவன்; அவனுடைய சிதம்பரத்தைச் சேராதாரைப் போல, முள்ளுருடைத்தாகிய வலிய கல் விரவின உயர்ந்த நிலத்திடத்து, முற்பிறப்பிற் செய்த தீவினையுடைய நான் எடுத்து வளர்ந்த அழகிதாகிய வலிதான வேலையொத்த கண்களையுடையவளின் சிறியவடி இங்கு இவை; இவ்வடி அக்கள்வனுகிய யானையை யொத்த வலியையுடையவனுடைய அடிகளாக நினையாகின்றேன். (எ-று.)

---

237. செவிலி கூற்று.

(பா - ம்) 1. சுவடுபடு கடத்துச்

---

## 238. சுவடுகண்டிரங்கல்.

கடத்திடைக்காரிகை யடித்தலங்கண்டு
மன்னருட்கோடா யின்னலெய்தியது.

---

(இ-ள்.) காட்டிடத்து நீர்மையுடையாளுடைய அடித்தலத்தைப் பார்த்து நிலைபெற்ற அருளுடைய செவிலித்தாயானவள் கிலேசமுற்றது.

பாலொத்த நீற்றம் பலவன் கழல்பணி யார்[1]பிணிவாய்க்
கோலத்த விசின்மிதிக் கிற்பதைத் தடிகொப்புள் கொள்ளும்
வேலொத்த வெம்பரற் கானத்தி னின்றோர் விடலைபின்போம்
[2]காலொத் தனவினையேன் பெற்ற மாணிழை கான்மலரே.

(பொ-ரை.) வெள்ளிய திருநீற்றையுடைய திருவம்பலநாதன் கழல் தொழாதார்கள் பிறவியிலுற்ற வியாதிபோலே, அழகிய சயனத்தினை மிதிக்கில் நடுங்கி, அடிகளானவை கொப்புளங் கொள்ளா நிற்கும்; வேலையொத்த வெய்ய பாலுடைத்தாகிய காட்டிடத்தே இப்பொழுது ஒரு நாயகன் பின்னே போகிற கால்களாகிய மலர்கள். தீவினையைச் செய்த நான் பெற்ற மாட்சிமைப்பட்ட ஆபரணங்களையுடையவள் காலாகிய மலர்கள் இப்படியிருந்தன. (எ-று.)

---

238. செவிலி கூற்று.

(பா-ம்.)

1. பிணியாய். பிணிபோல். 2. காலொத்திரா.

பிணிவாய்-என்றதற்கு வருத்தம் வாய்ப்ப என்றுபொருள் கூறுவர் பேராசிரியர்.

பாலொத்த நீறு-பாலனநீறு. பாலனைய நீறு: (ஞான- திருப்பாண்டி. 7. திருமாகறல்: 3) பால்வெள்ளை நீறு (திருவா. திருகோத். 18).

---

## 239. வேட்டமாதரைக் கேட்டல்

மென்மலர்கொய்யும் வேட்டமாதரைப்
பின்வருசெவிலி பெற்றிவினையது.

(இ-ள்.) மெல்லிய மலரைக் கொய்கிற வேட்.........டப் பெண்களைப் பின்சென்ற செவிலித் தாயானவள் முறைமையாலே கேட்டது.

---

பேதைப் பருவம்பின் சென்றது முன்றி லெனைப் பிரிந்தால்
ஊதைக் கலமரும் வல்லியொப் பாண்முத்தன் [1] றில்லை
[யன்னாள்
ஏதிற் சுரத்தய லானொடின் றேகினள் கண்டனையே
போதிற் பொலியுந் தொழிற்புலிப் பற்குரற் பொற்றொடியே.

(பொ-ரை) போதாலே பொலிவுபெற்ற தொழிலினையும் புலிப்பல் தாலியையும் உடைய அழகிய வளைகளையுமுடையாய். பேதைப் பருவமானது கழிந்தது. முற்றத் திடத்தே என்னை விட்டு நீங்கினபொழுது காற்றாலே மயங்குகிற வல்லிசாதத்தை யொப்பவள்; அழிவில்லாதவனுடைய பெரும்பற்றப்புலியூரை யொப்பவள்; தன்னுடைய மென்மைக்கு எத்தனை(யோ) அந்நிய மாயிருக்கிற அரிய 'வழியிடத்தே ஓர் அயலானவன் பின்னே இப்போது போனாள். கண்டாயாகிற் சொல்லுவாயாக. (எ-று.)

---

239. செவிலி கூற்று.

(பா-ம்) 1. தில்லையுன்னார்.

---

## 240. புறவொடுபுலத்தல்

[1] காட்டிற் புறவொடு
வாட்ட முரைத்தது.

(இ-ள்) காட்டிலே வாழ்கிற புறாவுடனே தன்னுடைய மெலிவைச் சொன்னது.

---

புயலன் றலர்சடை யேற்றவன் றில்லைப் பொருப்பரசி
பயலன் றனைப்பணி யாதவர் போன்மிகு பாவஞ்செய்தேற்
கயலன் றமியனஞ் சொற்றுணை [1] வெஞ்சுர மாதர்சென்றால்
இயலன் றெனக்கிற் றிலைமற்று வாழி யெழிற்புறவே.

(பொ-ரை.) நீரை அன்று விரிந்த சடையிலே ஏற்றுக் கொண்டவன்; பெரும்பற்றப்புலியூரிலேயுளனாகியும் மலையரையன் மகளுக்குத் துணையாகவுள்ளவன்; அவனை வணங்காதாரைப் போலவே மிகுந்த பாவம் பண்ணின எனக்கு அயலனுமாயிருந் தான்; தனியனுமாயிருந்தான். அழகிய சொல்லே துணையாக வெய்ய வழியே மாதானவள் போனாள். இது இயல்பன்றென்று சொல்லிற்றிலேயே. மற்று, வாழ்வாயாக அழகிய புறவே. இயல் பல்லவென்று சொல்லிற்றிலை என்றது.

---

240. செவிலி கூற்று.

(பா - ம்) வெஞ்சுரமாதல் கண்டால்; வெஞ்சுரம் போதல் கண்டால்.

'இது கூறிற்றாயின் அவள் செல்லாளென்பது கருத்து. பொருப் பரையன் மகளாதலிற் பொருப்பரசியெனத் தந்தைகிழமை மகட்குக் கூறப்பட்டது. பாவஞ்செய் தேற்கியலன் றெனக் கிற்றிலையெனக் கூட்டுக. பயலன் - கூற்றையுடையவன். (பே-ரை.)

புயல் - நீர்; சோர்புயன் முகிறலை விலங்கி (சிந்தா. 58).

---

## 241. குரவொடு வருந்தல்

தேடிச்சென்ற செவிலித்தாயர்
ஆடற்குரவொடு வாடியுரைத்தது.

(இ-ள்.) தேடிச் சென்ற செவிலித் தாயானவள் அசைந்த குரவோடே நேர்ந்து சொல்லியது.

---

பாயும் விடையோன் புலியூ ரனையவென் பாவைமுன்னே
காயும் கடத்திடை யாடிக் கடப்பவுங் கண்டுநின்று
வாயுந் திறவாய் குழையெழில் வீசவண் டோலுறுத்த
நீயுநின் பாவையு நின்று [1]நிலாவிடு நீள்குரவே.

(பொ-ரை.) குழையானது அழகைத்தர, வண்டுகள் ஆர வாரிப்ப, நீயும் நின் பிள்ளைகளுமாக நின்று நிலைபெறுகிற நீண்ட குரவே! கதிபாய்ந்து செல்லுகிற இடபத்தினையுடையவனுடைய புலியூரினை யொத்த என்னுடைய பிள்ளையானவள் நின்று கொதிக்கிற வழியிலே அசைந்தசைந்து போகக்கண்டு வைத்தும் ஒரு வார்த்தையும் சொல்லுகிறாயில்லை.

என்ன, இப்படிக்கொதித்த அரிய வழியிலே போகக்கண்டதேயன்றி நான் வந்தவிடத்திலும் ஒருவார்த்தை சொல்கின்றிலை (எ-று.)

---

*241.* செவிலி கூற்று.

பா - ம். நிலாவினை.

குழையெழில் வீச வண்டோலுறுத்தவென்பன, அணியாகிய குழை விளங்க என்பதூஉம், செவிலியர் ஓலாட்டவென்பதூஉம் தோன்ற நின்றன.

---

## 242. † விரதியரை வினவல்

வழிவருகின்ற மாவிரதியரை
மொழிமின்களென்று முன்னிமொழிந்தது.

(இ-ள்.) வழியே வாராநின்ற பெருவிரதம் பூண்டவர்களைச் சொன்மின் என்று எதிர்ப்பட்டுச் சொல்லியது.

---

சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கஞ் சூழ்சடை
[1]பொத்திய கோலத்தி னீர்புலியூ ரம்பல வர்க்குற்ற [வெண்
பத்தியர் போலப் பணைத்திறு மாந்தப யோதரத்தோர்
பித்திதற் பின்வர முன்வரு மோவொர் பெருந்தகையே.

(பொ-ரை.) இப்பி வடிவாகச் செய்யப்பட்ட சுத்த மடம் பட்ட (?) பொக்கணத்தினையும் எலும்பாகிய ஆபரணங்களையும் கட்ட(ங்க)மாகிய படைக்கலத்தையும் சூழ்ந்த சடையினையும் வெள்ளிதாகக் திருநீற்றாலே பொலிவுபட்ட மேனியையுமுடையீர்! பெரும்பற்றப்புலியூரில் திருவம்பலநாதனுக்கு மிக்க பத்தியானவர்களைப் போலே, பணைத்துச் செம்மாந்த முலைகளையுடைய ஓர் அறியாதவள் தன் பின்னேவர முன்னே வாராநின்றானே ஒரு பெரிய தகைப்பாட்டையுடையவன்; சொல்வீராக வேண்டும். (எ-று.)

---

242. செவிலி கூற்று.

(பா-ம்) (வெண்) பத்திய கோலத்தினீர்.

† மாவிரதியரை என்றிருத்தல் கூடும்.

'சுத்தி பிறர்க்குத் திருநீறு கொடுத்தற்கு இப்பி வடிவாகத் தலையோட்டா னமைக்கப்படுவதொன்று. என்பணி யென்புழி இயல்பும் கட்டங்கமென்புழித்திரிபும், விகாரவகையாற் கொள்க. கடங்கமென்பது மழு. இது கட்டங்கமென நின்றது. வெண்கோலம் நீறணிந்த கோலம். பத்தியர்க்குப் பணைத்தல் உள்ளத்து நிகழும் இன்புறவால்; மேனிக்கண் வரும் ஒளியும், ஒடுங்காமையும். இறுமாத்தல் தாழாத வுள்ளத்தராய்ச் செம்மாத்தல் - முலைக்குப் பணைத்தல், பெருத்தல் இறுமாத்தல் ஏந்துதல். வெண்பத்திய கோலத்தினீரென்ற பாடத்திற்கு வெண்ணீற்றுற் பத்திபடவிட்ட முண்டத்தையுடைய கோலமென்றுரைக்க. (பே-ரை.)

பொக்கணம் - ஒருவகைப் பை. 'மணங்கவர், பொற்புயத்துறு பொக்கணந் தூக்கினான். (திருவால. திருவிளை. 13: 3)

---

## 243. வேதியரை வினவல்.

மாதின்பின் வருஞ்செவிலி
வேதியரை விரும்பிவினவியது.

(இ-ள்.) மகள்பின்னே தேடி வருகிற செவிலித்தாய் பிராமணரை வினவிக்கேட்டது.

---

வெதிரேய் கரத்துமென் றோலேய் சுவல்வெள்ளை நூலிற்
[கொண்மூ
வதிரேய் மறையினிவ் வாறுசெல் வீர்தில்லை யம்பலத்துக்
கதிரேய் சடையோன் கரமா னெனவொரு மான்மயில்போல்
எதிரே வருமே சுரமே வெறுப்பவொ ரேந்தலொடே.

(பொ-ரை.) மூங்கிற்றண்டு பொருந்தின கையினையும், மெல்லிய தோல்பொருந்தின கழுத்தினையும், வெள்ளிய பூண் நூலினையும், மேகத்தின் முழக்கத்தினையொத்த வேதத்தினையு முடையீராய் இந்த வழியின் நடக்கிறவர்களே! பெரும்பற்றப் புலியூரில் திருவம்பலத்தே யுளனாகிய ஒளி பொருந்தின திருச் சடாபாரத்தையுடையவன் கையிலேந்தின மானை நிகர்த்த ஒரு மானோக்கினையுடையவள் மயிலைப்போலே எதிரே வாராநின் றாளோ? வந்தாளாகிற் சொல்லுவீராக வேண்டும். (எ-று)

---

243. செவிலி கூற்று.

'சுரமே வெறுப்ப வொரேந்தலொடே' என்பதன் பொருள் 'சுரந் தானே வெறுப்ப ஓர் ஆடவனோடு' என்பது; இஃது ஏட்டில் விடப்பெற் றது. 'கதிரேய் சடையோன்,' என்பதற்கு, 'மதிசேர்ந்த சடையையுடையவன்' என்பர் பேராசிரியர்.

ஏய் - பொருந்தின; இயைந்த.

---

'அருவரைக் கண்டேனெனக் கூட்டினு மமையும். ஆளியன் னு னென்றதனால், நின் மகட்கு வருவதோரிடையூறில்லை யெனக் கூறி னனும். தூண்டா விளக்கு - இல்பொருளுவமை. மணிவிளக்கெனினு மமையும். அணங்கமர் கோதையை-தெய்வநாற்றமமைந்த கோதையை யுடையாளை. (பே-ரை)

'தூண்டா விளக்கனையாய்' என்றது, வந்த ஆடவன் தன் தலைவியை நோக்கிக் கூறியதாகலாம்.

இச்செய்யுளுடன் கலைசைக் கோவை (362) ஐயும், சிராமலைக் கோவை (362) ஐயும் ஒப்பிடுக.

---

## 245. வியந்துரைத்தல்

வேங்கைபட்டதும் பூங்கொடிநிலையும்
நாடாவரும் கோடாய்கூறியது.

(இ-ள்) . வேங்கைப்புலி பட்ட படியும், பூத்த வல்லிசாதம் போன்றவள் நிலையும் தேடி வருகிற செவிலித்தாய் சொன்னது.

---

பூங்கயி லாயப் பொருப்பன் திருப்புலி யூரதென்னத்
தீங்கையி லாச்சிறி யாளின்ற திவ்விடஞ் சென்றெதிர்ந்த
வேங்கையின் வாயின் வியன்கைம் மடுத்துக் கிடந்தலற
வாங்கயி லாற்பணி கொண்டது திண்டிற லாண்டகையே.

(பொ-ரை.) பொலிவுடைத்தாகிய கயிலை யலையினையுடைய வன்; அவனுடைய அழகிய பெரும்பற்றப் புலியூரெனும்படி குற்றமில்லாத சிறியவள் நின்றவிடம் இவ்விடம். தன்னுடனே மாறுபட்டு வந்த புலியானது தன் வாயிலே பெரிய கையை மடுத்துக் கிடந்து கூப்பிடும்படி சிக்கென்ற தைரியத்தையுடைய நாயகன் அவ்விடத்துத் தன்கையில் வேலினை வேலை கொண்டது அவ்விடமாயிருக்கும். (எ-று.)

245 செவிலி கூற்று.

'தீங்கையிலா வென்புழி இன்மை, உடைமைக்கு மறுதலையாகிய இன்மை. மசளடிச் சுவடு கிடந்தவழிச் சென்று நின்றனளாதலின் அதனை இவ்விடமென்றும், வேங்கைபட்ட விடத்தை அவ்விடமென்றுங் கூறினாள். வேங்கை தன் காதலியை யணுகாமல் அது வரும் வழிச் சென்றேற்றனாதலிற சென்றெ‌ன்றாள்'. (பே-ரை.)

---

## 246. இயைபெடுத்துரைத்தல்

சேயிழையோடு செம்மல்போதர
ஆயிழைபங்கனென் றயிர்த்தேமென்றது.

(இ-ள்) சிவந்த ஆபரணங்களை யுடையாளுடனே நாயகன் போக அழகிய ஆபரணங்களையுடைய உமாதேவி பங்களுகிய மகாதேவனென்றயிர்த்தேமென்றது.

---

மின்றெருத் திடுகழ னூபுரம் வெள்ளைசெம் பட்டுமின்ன
வொன்றெருத் திடவுடை யாளொடொன் றும்புலி யூர [னென்றே
நன்றெருத் தெழிலைத் தொழுவுற் றனமென்ன தோர்நன்மை [தான்
குன்றத் திடைக்கண் டனமன்னை நீசொன்ன கொள்கையரே.

(பொ-ரை) ''ஒளிதிரண்டவன் காலிலே யணிந்தவீரக்கழலும் அவள் காலிலே அணிந்த சிலம்பும்; அவனுடுத்த வெள்ளைப் பட்டும் அவளுடுத்த செப்பட்டாடையும் இவை விளங்கி ஒன்றுபடப் பிரகாசிப்ப, எல்லாப் பொருளையுமுடைத்தாகிய உமாதேவி ஒன்றுபட்டுத் தோன்றுகிற பெரும்பற்றப் புலியூரையுடைய முதலியாரென்று சொல்லி மிகவும் ஒப்புக்கொண்டு, அவ்

வழக்கைத் தொழக் கடவதாக நினைந்தோம்; அஃதென்ன நன்மை யோதான்! தாயே! நீ சொன்ன கோட்பாட்டை யுடையவர்களை அம்மலை வழியிற் கண்டோம்!"

மலையில் வழியிடத்தே கண்டோர், 'கண்டோம் என்ன, நன்மைதான்' (?) என்றனர் என்றபடும்.

---

246. கண்டோர் கூற்று.

[1] (பா-ம்) என்ன நன்மையதாம்.

உடையாளொடு ஒன்றும் கோலம்: 'தோலும் துகிலும் குழையுஞ் சுருள் தோடும், பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும். சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக், கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ' (திருவா. திருக்கோத் 18.)

---

## 247. மீளவுரைத்தல்.

கடுங்கடங் கடந்தமை கைத்தாய்க்குரைத்து
நடுங்கன்மின் மீண்டு நடமினென்றது.

(இ-ள்.) அரிய காட்டுவழியைக் கடந்ததனைச் செவிலிக்குச் சொல்லி, 'நடுங்காதீர்; மீண்டுபோம்' என்றது.

---

மீள்வது செல்வதன் றன்னையிவ் வெங்கடத் தக்கடமாக்
கீள்வது செய்த கிழமைவா னெடுங்கிளர் கெண்டையன்ன
நீள்வது செய்த கண்ணு ளிங்கெடுஞ்சுர நீந்தியெம்மை
ஆள்வது செய்தவன் றில்லையி னெல்லை யணுகுவரே.

(பொ-ரை.) இவ்வரையிடத்தே அந்த (மத) முடைத்தாகிய யானையைக் கிழித்(த) நாயகனுடனே உபலாளிக்கிற (?) கயலை

யொத்த நீளிய மரவடு வகிர் போன்ற கண்களையுடையாள் தூரிய வழியைத் தொலைத்து, நம்மையாளும் தொழிலினைச் செய்து நின்றவனுடைய பெரும்பற்றப்புலியூரினெல்லையைச் சென்று சேர்வள்; ஆதலால் நீரினிச் செய்யத் தகுவது மீளுவதே; செல்கை காரிய முடைத்தன்று. தாயே! (எ-று.)

---

**247.** கண்டோர் கூற்று.

'இவ்வெங்கடத்து — வெய்யவிச்சுரத்தின்கண். கிளர்கெண்டையன்ன -புடைபெயராநின்றகெண்டைபோலும். சுரங்கடத்தல் இருவர்க்கு மொக்குமெனினும், கீள்வது செய்த கண்ணுணீந்தி யெனத் தலைமகன் மேற்கூறினார் வெஞ்சுரத்திற்கவள் பஞ்சின் மெல்லடி தகாவாகலின். கிழவேனொடு மென்றதனால் அவன் பற்றுக்கோடாக நீங்கினாளென்பது விளக்கினார்'. (பே-ரை)

கீள்வதுசெய்த - பிளந்த 'அண்டகோ ளகைமுகடு கீண்டு' (குமரகுரு. பிரப. 100: 3)

---

## 248. உலகியல்புரைத்தல்.

செவிலியது கவலைதீர
மன்னியவுலகியன் முன்னியுரைத்தது.

(இ-ள்) செவிலித்தாயுடைய கிலேசந்தீர நிலைபெற்ற உலகினியல்பினை எதிர்பட்டுச் சொன்னது.

---

சுரும்பிவர் சந்துந் தொடுகடன் முத்தும்வெண் சங்குமெங்கும்
விரும்பினர் பாற்சென்று மெய்க்கணி யாம்வியன் கங்கையென் [னும்
பெரும்புனல் சூடும்பி ரான்சிவன் [1]சிற்றம் பலமனைய
கரும்பன மென்மொழி யாருமந் நீர்மையர் காணுநர்க்கே.

(பொ-ரை.) வண்டுகள் பறக்கப்படாகின்ற சந்தனமரமும், சகரராலே தோண்டப்பட்ட கடலிற் பிறந்த முத்தும், வெள்ளிய சங்கும், எவ்விடத்தும் தம்மை விரும்பினவர்களிடத்தே சென்று அவர்களுக்கு மெய்க்கு அலங்காரமாகாநிற்கும். நலமாகிய (?) கங்கையென்று சொல்லப்பட்ட அதிக சலத்தைச் சூடியருளுகிற தலைவன், சிவனென்னுங் நாமத்தையுடையவன், அவனுடைய திருச்சிற்றம்பலத்தை யொத்துக் கரும்பை நிகர்த்த வார்த்தை யினையுடையாளும், விசாரிக்கில், அத்தன்மையினள்; காண்; ஆதலால் நீ செல்ல வேண்டா (வா-று.)

---

248. கண்டோர் கூற்று.

(பா-ம்.) சிற்றம்பல மன்னுங் கரும்பன மென்மொழியாள்.

வியன் கங்கை-அகன்றகங்கை.

சுரும்பிவர்......மேய்க்கணியாம்: பலவறு நறுஞ் சாந்தம் படுப்ப வர்க் கல்லதை, மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு, நினையுங்காலும்மக ளுக்குமாங் கனையளே: சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை, நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந், தேருங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே". (கலி. பாலை. 8.)

இறையனார் சூத் 23. மேற்கோள் கல்லாடம் 21; சீவக. 563; பெருங். 1. 47: 253-5; குலோத்துங்கசோழன் கோவை 392; கோடீசுவரக்கோவை 352 முதலியவற்றையும் காண்க.

வருணத்திற் போதுந் தருத்தரும் போது மலர்ந்தவந்தத்
தருணத்திற் சூடுநர்க் கல்லரா தவைக்கவை தாமென்செயுங்
கருணைத் திரவியத் தியாகேசர் சோகழிக் காரிகையா
யருணைத் திலவித மூருமந் நீர்மைய ரன்பினர்க்கே (துறைசை)361.

## 249. அழுங்குதாய்க்குரைத்தல்

செழும்பழன மணைந்தமை
அழுங்குதாய்க் குரைத்தது.

(இ-ள்.) அழகிய மருதநிலத்தை........... கிலேசிக்கிற தாய்க்குச் சொன்னது.

---

ஆண்டி லெடுத்தவ ராமிவர்தா மவரல் குவர்போய்த்
தீண்டி லெடுத்தவர் தீவினை தீர்ப்பவன் றில்லையின்வாய்த்
தூண்டி லெடுத்தவ ராறெங்கொ டெற்றப் பழம்விழுந்து
பாண்டி லெடுத்த பஃறா மரை கீழும் பழனங்களே.

(ப-ரை.) அவர் அல்குவர் போய் - அவர்கள் போய் அவதரிப்பார்கள். [எவ்விடத்தே யென்னில்,] தீண்டில் எடுத்தவர் தீவினை தீர்ப்பவன் தில்லையின் வாய்- தம்மைச் சென்று குறுகுகிற(வர்) பிறவி என்கிற கடலில் அழுந்தாமல் எடுத்து, அவர்கள் தீவினையைத் தீர்க்கிறவருடைய பெரும்பற்றபுலியூரில், தூண்டில் எடுத்த வரால்- தூண்டிலினது இரையை விழுங்கிய வரால், தெங்கொடு எற்றப் பழம் விழுந்து- தெங்குடன் மோதத் தென்னம் பழம் விழுந்து, பாண்டில் எடுத்த- கிண்ணம் போலே உயரமலர்ந்த, பல் தாமரை கிழும்- பலதாமரைப் பூக்களை ஆங்கு அழிக்கின்ற, பழனங்களே- தடாகங்களையுடைய மருத நிலத்தே [சென்று புகுவார்கள்.] ஆண்டு இல் எடுத்தவராம் இவர்தாம்- இல்லிலே எடுத்து வளர்த்த கைத்தாயராக வேண்டுமிவர். (எ-று)

---

249 கண்டோர் கூற்று:-

'ஆண்டிலெடுத்தவராமிவர்தாமென்று தம்முட் கூறிப் பின் செவிலிக்குக் கூறினாராக வுரைக்க. இவ்வாறு பகராது, செவிலிகேட்ப முழுவதூஉந் தம்முட் கூறினாராக வுரைப்பினுமமையும்.

நில்லாவளை (192) தொட்டு இதுகாறும்வரப் ,பாலைத்திணை கூறியவாறறிக. (பே-ரை.)

உடன்போக்கு முற்றிற்று.

## 17. வரைவுமுடுக்கம்.

இவ்வாறு உடன்போக்கு நிகழாதாயின், வரைந்துகோடல் நிகழும். அது நிகழுமிடத்துத் தோழியான் வரைவு முடுக்கப் பட்டும், வரை பொருட் பிரிந்து வந்தும் நிகழுமென்ப. அவற்றுள் வரைவுமுடுக்கம் பதினாறு துறையுடைத்து. அவைவருமாறு.

[1]வருத்தங் கூறல், [2]அவன்மறுத் துரைத்தல்,
[3]உள்ளது கூறல், [4]ஏதங் கூறல்,
[5]பகல்வர லென்றல், [6]தொழுதிரந் துரைத்தல்,
[7]சிறைப்புறங் கூறல், [8]மந்திமேல் வைத்தல்,
[9]கண்டுயி லாமை கண்டா ருரைத்தல்,
[10]பகலுடம் பட்டாள்போன் றிரவர லென்றல்,
[11]இரவுடம்பட் டாள்போன்று பகல்வர லென்றல்,
[12]இரவும் பகலும் வரவொழி கென்றல்,
[13]காலங் கூறல், [14]கூறுவிக் குற்றல்,
[15]செலவு கூறல், [16]பொலிவழி வுரைத்தலென்
றீரெண் கிளவியு மியம்புங் காலை
வாரணி முலையாய் வரைவு முடுக்கம்.

(பே-ரை.)

---

## 250. வருத்தமிகுதிகூறி வரைவுகடாதல்

இரவுக்குறியிடத் தேந்திழைப்பாங்கி
வரைவுவேண்டுதல் வரவுரைத்தது.

(இ-ள்.) இரவுக்குறியிடத்து ஏந்திழை பாங்கி வரைந்து கொள்வாயாக என்னும் இடம் தோன்றச் சொன்னது.

---

எழுங்குலை வாழையி னின்கனி தின்றிள மந்தியந்தண்
செழுங்குலை வாழை நிழலிற் றுயில்சிலம் பாமுனைமேல்
உழுங்கொலை வேற்றிருச் சிற்றம் பலவரை யுன்னலர்போல்
[1] அழுங்கொலை வேலன்ன கண்ணிக்கென் னோநின் னருள்
[வகையே

(பொ-ரை.) இளமந்தி............குலையுடைத்தாகிய வாழையின் இனிய பழத்தைத் தின்று, அழகினையும் தட்பத்தினையும் உடைத்தாகிய............குலை யுடைத்தாகிய வாழை நிழலிலே உறங்குகிற மலையினையுடையவனே! சத்துருக்கள் முனையிடத்தைக்கிழித்துச் செல்லுகிறதொத்து வேலாகிய சூலவேலையுடைய திருச்சிற்றம்பலவரை நினையாதவரைப் போலே, வருந்துகிற கொலைத் தொழிலாற் சிறந்த வேல்போன்ற கண்களை யுடையாளுக்கு உன் அருளின் கூறுபாடு எத்தன்மைத்து? (எ-று.)

என்று பொருளாய், 'உன் நாட்டத்துப் பண்புதான் உன்னிடத்தே உண்டாயிருக்க வேண்டாவோ?' என்றது. எங்ஙனெனின், 'இளைய மந்திக் குரங்கானது அழகுடைத்தாகிய வாழையின் பழத்தைத் தின்று எழுகிற குலையுடைத்தாகிய வாழை நிழலிலே பிறிதொன்றிற்கு வெருவாதே உறங்கும் மலையினையுடையவனே!' என்றதாற் போந்த பொருள்: 'இவளும் உன்னோ.........டைப் போகத்தை அநுபவித்து உன் திருவடி நிழலிலே தாயார் சொல்லுக்கு உண்ணடுங்கிக்கா......யுறையும தல்லவோ நன்மையாவ' தென்றுபடும்.

---

250 தோழி கூற்று.

பா-ம் 1 அழுங்குலைவேல்

'நின்னருள்வகை யென்னோவென்பதற்கு இவ்வாறு வருந்துமிவ டிறத்து இனி நீ செய்யக்கருதியவகை யாதோவெனினுமமையும். அழுங் கொலைவேலென்பது பாடமாயின் அழாநின்ற கொலைவேல்போலுங் கண்ணையுடையாட்கென்றுரைக்க. எழுங்குலை-இளங்குலை. செழுங்குலை-முதிர்ந்தகுலை. எழுங்குலையும் முதிர்ந்தகுலையுமுடையான் இடைபருது

பழுக்கும் வாழைத்திரள்களின்கண் உண்டாகிய கனியை நுகர்ந்து, மந்திவேறொன்றான் வெருவாது அவ்வாழை நிழலின் கீழின்புற்றுத் துயிலுமாறுபோல, ஆராவின்பமிடையீட்டு நுகராது நீ வரைந்து கோடலான் இடையறாத பேரின்பந்துய்த்து, அன்னை சொல்லா லுண்டாங் காது நின்றாணிழற்கீழ் இவளின்புற்று வாழ்தல் வேண்டுமென உள்ளுறை காண்க.' (பே-ரை)

செழுங்குலையில் கனி உள்ளமை கருதத்தக்கது. ஏட்டிலும் அக் கருத்தையொட்டி உரை வகுக்கப்பெற்றிருப்பதைக் காணும்போது செய்யுளின் முதலடி 'செழுங்குலை' என்றும், இரண்டாமடி 'எழுங்குலை' யென்றும் பாடம் இருந்திருக்ககூடுமென்று தோன்றுகிறது.

இச்செய்யுளின்கருத்தோடு பின்வருவனவற்றை ஒப்பிடுக:- "கோழிலைவாழைக் கோண்மிகு பெருங்குலை, யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த, சாரற் பலவின் சுளையொ டூழ்படு, பாறை நெடுஞ்சுனை விளைந் தேற, லறியா துண்ட கடுவன்" (அகம். 2) 'புணர்நிலை வளகின் குளகமர்ந் துண்ட புணர்மருப் பொழில் கொண்ட வரைபுரை செலவின், வயங் கெழில் யானை' (கலி. 43: 20- 21)

---

## 251. பெரும்பான்மை கூறி மறுத்தல்

குலம்புரி கொம்பர்க்குச்
சிலம்பன் செப்பியது.

(இ-ள்.) அழகிதாய் விரும்பத்தக்க வஞ்சிக்கொடியை யொப்பாளுக்கி நாயகன் சொன்னது.

---

பரம்பயன் றன்னடி யேனுக்குப் பார்விசும் பூடுருவி
வரம்பயன் மாலறி யாத்தில்லை வானவன் வானகஞ்சேர்
அரம்பையர் தம்மிட மோவன்றி வேழத்தி னென்புநட்ட
குரம்பையர் தம்மிட மோவிடந் தோன்றுமிக் குன்றிடத்தே.

(பொ-ரை.) மேலாய பொருளாயுள்ளவன்; தன் அடியேனாகிய எனக்குப் பெரும்பயனாயுள்ளவன்; பூமியையும் ஆகாயத்தையும் ஊடுருவி நிற்கையாலே அவனுடைய திருவடியின் எல்லையை அயனும் மாலும் அறியாத தில்லை வானவன்; அவனுடைய தெய்வலோகத்தைச் சேர்ந்த தெய்வ மகளிரிடமோ? அன்றி, அது யானையெலும்பை வேலியாக நட்ட குறவரிடமோ இக்குன்றிடத்தே தோன்றுகின்ற விடம்" (எ-று.)

தெய்வ மகளிரிடமாகவன்றோ நான் நினைந்திருப்பது என்றது.

---

## 251. தலைவன் கூற்று.

'என்றது. அவனையும் அவனை எட்டவுஞ் சுட்டவும் படாத தெய்வமென்றிருத்தலான், அவள் வாழுமிடத்தை அரம்பையரிடமென்றே கருதுவல், அன்றாயினுரை. என வரைவுடம்படாது கூறியவாறு. பயன்- இரவுக்குறியிடமுணர்த்துதல். (பே-ரை.).

வேழத்தின் என்பு வேலி:— 'மத்தவெங் களிற்றுக் கோட்டு வன்தொடர்வேலி சோலை' (பெரிய. கண்ணப்ப.2.)

---

## 252. உள்ளது கூறி வரைவுகடாதல்.

இன்மையுரைத்த மன்னனுக்கு
மாழைநோக்கி தோழியுரைத்தது.

(இ-ள்.) இல்லாததொன்றைச் சொன்ன நாயகனுக்குக் குளிர்ந்த நோக்கினையுடையாளுடைய தோழி சொன்னது.

---

சிறூர்கவண் வாய்த்த மணியிற் சிதைபெருந் தேனிழுமென்
றிருல்கழி வுற்றெஞ் சிறுகுடி லுந்து மிடமிதெந்தை
உருவரை யுற்றூர் குறவர்பெற் றாளுங் கொடிச்சியும்பர்
பெருவரு ளம்பல வன்மலைக் காத்தும் பெரும்புனமே.

(பொ-ரை.) சிறு பிள்ளைகள் கையில் கவண் வாய்க்கப்பெற்ற மணியாலே அழித்த பெருந்தேனானது இழுமென்கிற அநுகரணச் சத்தத்தினையுடைத்தாய் இருலினின்றும் கழிந்து எம்முடைய சிறிய வீடுகளைத் தள்ளுகிற இடமாமிது என் பிதாவுக்கு முற்றாட்டாயிருந்தது. எங்களுக்கு உறவின்முறையாரும் குறவராயிருந்தனர். எங்களைப் பெற்றவளும் குறத்தி. தேவர்கட்கும் பெறவரிய திருவருளையுடைய திருவம்பலநாதனுடைய திருமலையிடத்து நாங்கள் காப்பதும் பெரும்புனமாயிருந்தது. (எ-று.)

'என்ன, ஒருவருக்கும் வசப்படாது, மாதாவாலும் பிதாவாலும் செய்தொழிலாலும் செற்றியாலும் (?) இருக்கும்; என்றால், எங்களுக்கு மாதாவும் பிதாவும் குறக்குலமாய், செய்தொழிலும் தினைக்காவலாய், எம்மென்ற செற்றியினாலே (?) பண்பையுடைத்தாய் இருக்க, நீ எது கண்டு, எங்களைப் புகழ்ந்தாய்?' என்றது.

---

## 252. தோழி கூற்று.

"கோவையுந் தொகையு மாவயின் வரையார்" என்பதனான், இது தொடர்நிலைச் செய்யுளாதலிற் குரம்பையர் தம்மிடமோ வென்று வினவப்பட்ட இடம் எஞ்சிறு குடிலுந்து மிடமெனவும் ஒரு புனத்தைச் சுட்டி, இதெந்தை யுருவரையெனவும், கூறினளாக உரைப்பினுமமையும். சிறுரெறிந்த மணியாற் பெருந்தேன் சிதைந்து அவ்விருலைவிட்டுக் கழிந்து சிறுகுடிலிற் பரந்தாற்போல, அயலார் கூறும் அலரான் நுமது மறைந்தவொழுக்கம் நும்வயினடங்காது பலருமறிய வெளிப்படா நின்றதெனவுள்ளுறை காண்க. பயன்-குறியிட முணர்த்துதல். (பே-ரை)

——

## 253. ஏதங்கூறி யிரவரவு விலக்கல்.

இரவருதுயர மேந்தலுக் கெண்ணிப்
பருவரலெய்திப் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) நாயகனுக்கு இரவிடத்தே வருகிற கிலேசத்தை விசாரித்துத் துன்பமுற்ற தோழி சொன்னது.

---

கடந்தொறும் வாரண வல்சியி னுடிப்பல் சீயங்கங்குல்
இடந்தொறும் பார்க்கு மியவொரு நீயெழில் வேலின்வந்தால்
படந்தொறும் தீயரவன் னம்பலம் பணியாரி னெம்மைத்
தொடந்தொறுந் துன்பென்ப தேயன்ப நின்னருடோன்று
[வதே.

(ப-ரை.) பலசீயம் வாரண வல்சியின் நாடி - பல சிங்கங்களும் யானையாகிய உணவைத்தேடி, கங்குல் - இராக்காலத்து, கடந்தொறும் - காடுதொறும், இடந்தொறும் - காட்டில் அவை வாழும் இடங்கள்தோறும், பார்க்கும் இயவு - பார்க்கும் வழியிடத்தே, ஒரு நீ - ஒரு துணையுமில்லாத நீ, எழின் வேலின் வந்தால் - அழகிய வேலே துணையாக வந்தால், அன்ப நின் அருள் தோன்றுவதே - அன்பனே! நின்னுடைய அருள் எங்களுக்குத் தோன்றுகிறது. படம்தொறும் தீ அரவன் - படங்கள்தோறும் அக்கினியைக் கான்றுவிடுகிற பாம்பையுடையவன், அம்பலம் பணியாரின் - அவனுடைய திருவம்பலத்தை வணங்காதாரைப்போலே, எம்மைத் தொடர்ந்து ஓறும் துன்பு என்பதே - எம்மை இடைவிடாமல் ஒறுக்கிற துன்பம் (தோன்றுநின்றது.) (எ-று.)

---

253. தோழி கூற்று.

'என்றது, எமக்கு நீ செய்யுந் தலையளியை யாங்கள் துன்பமாகவே உணரா நின்றோம் என்றவாறு. நாடுதல் - மனத்தாலாராய்தல். பார்த்தல் - கண்ணால் நோக்கல்' (பே-ரை.)

## 254. பழிவரவுரைத்துப் பகல்வரவு விலக்கல்

ஆங்ஙனமொழுகு மடல்வேலண்ணலைப்
பாங்கியைய பகல்வரலென்றது.

(இ-ள்.) அப்படியிலே பகற்குறி வந்தொழுகுங் கொலை வேலையுடைய நாயகனைப் பாங்கியானவள் பகற்குறியில் வர வேண்டா வென்றது. ஆங்ஙனம் என்றது, விட்டுப்பெற்றியாய் முன் சொன்ன பகற்குறியை.

---

களிறுற்ற செல்லல் களைவயிற் பெண்மரங் கைஞ்ஞெமிர்த்துப்
பிளிறுற் றவானப் பெருவரை நாட பெடைநடையோ
டொளிறுற்ற மேனியன் சிற்றம் [1]பலநெஞ் சுறுதவர்போல்
வெளிறுற்ற வான்பழி யாம்பக லீசெய்யு மெய்யருளே.

(பொ-ரை.) களிறானது [2]அனலிலே(?) பட்டுற்ற கிலேசத்தைக் களைய வேண்டி அதன் பெண்ணாகிய பெண்யானை மரத்தை முறித்து அதன் கையிலே கொடுத்துத் தான் பற்றி வலிக்கவும் வராதபடியாலே கூப்பிடுகிற ஆகாயத்தைத் தோய்ந்த பெரிய மலைமேலுண்டாகிய நாட்டினையுடையவனே! அன்னப் பெடையையொத்த நடையினையுடையாளுடனே விளங்குகிற திரு மேனியையுடையவன்; அவனுடைய திருச்சிற்றம்பலத்தை நினையாதாரைப் போலே, பகற்பொழுதினிடத்தே நீ செய்கிற மெய்யான அருள்வெளிப்பட்ட பெரும்பழியாகா நிற்கும். ஆதலாற் பகற்குறியின் வரவேண்டா என்றபடி.

வழியல்லாத வழியே வந்து யானையானது பாயப் பிடியானை அதனை யெடுக்க முயன்றாற்போல, நீயும் வழியல்லாத வழியாகிய களவொழுக்கத்திலே வந்து இச்சிற்றின்பத்திலே அழுந்துகையாலே உன்னை இது மாற்றவேண்டி நானும் கிலேசியா நின்றேன் என்றது.

---

254. தோழி கூற்று.

(பா-ம்.) 1. பலவனையுன்னலர்போல்.

2. 'அனற்றிலே' என்று ஏட்டில் காணப்படுகிறது. 'அசும்பின் கண்' என்பது பேராசிரியர் உரை.

வெளிறு - வெளிப்படுதல். 'வெளிறு விரவ வருதி கண்டாய்' (11 ஆம் திரு. 278)

---

## 255. தொழுதிரந்துகூறல்.

இரவரவி னேதமஞ்சிச்
சுரிதருகுழற்றோழி சொல்லியது.

(இ-ள்.) இரவுக்குறி வரவுக்குப் பயப்பட்டு நெறித்த கூந்தலினையுடைய தோழி சொன்னது.

---

கழிகட் டலைமலை வோன்புலி யூர்[1]கரு தாதவர்போற்
குழிகட் களிறு வெரீஇயரி யாளி[2]குழீஇ வழங்காக்
கழிகட் டிரவின் வரல்கழல் கைதொழு தேயிரந்தேன்
பொழிகட் புயலின் மயிலிற் றுவளு மிவள்பொருட்டே

(ப-ரை.) பொழி கண் புயலின் மயிலின் துவளும் இவள் பொருட்டு—பொழியாநின்ற கண்ணாகிய மேகங்களை யுடையவளாய் மயில்போல் வாடுகிற இவள் காரணமாக, குழிகண்களிறு-குழிந்த கண்களையுடைய யானைகள், அரியாளி வெரீஇ-சிங்கத்துக்கும் யாளிக்கும் பயப்பட்டு, குழீஇ வழங்கா-ஓரிடத்தே திரண்டு போகமாட்டாதே நிற்கிற, கழி கட்டிரவின்-மிகுதியாகிய கடுமையைச் செய்கிற இரவிடத்தே, கழிகண் தலை மலைவோன் புலியூர் கருதாதவரின் வெரீஇ-கண்கழிந்த தலையோட்டைச் சூடுகிறவனுடைய பெரும்பற்றப் புலியூரைச்சேராதாரைப்போலே (வெருவி). வரல்-வாரா தொழிவாயாக. (எ-று.)

255. தோழி கூற்று.

(பா-ம்.) [1] கருதார் மனம்போல். [2] குழிவழங்கா.

'கழி அச்சத்தைச் செய்யுமியல்பாற் சிறத்தல். கழகட்டிரவினென்பதற்குக் கழி சிறப்பின்கண் வந்து அரையிரவின்கண் என்பதுபட நின்றதெனினுமமையும். பொழிகட் புயலின் மயிலிவற்றவளுமென்றதனால், இவ்வாறிவளாற்றுளெனினும் நீ வரற்பாலையல்லையென்றுகூறி வரைவுகடாவினளாம். (பே-ரை.)

---

256. தாயறிவு கூறல்.

சிறைப்புறத்துச் செம்மல்கேட்ப
வெறிக்குழற்பாங்கி மெல்லியற்குரைத்தது.

(இ-ள்.) நாயகன் கேட்கவேண்டிச் சிறைப்புறமாக நறுநாற்றத்தினைப் பொருந்திய அளகத்தினையுடைய பாங்கி மெல்லிய இயல்பினையுடையாளுக்குச் சொன்னது.

---

விண்ணுஞ் செலவறி யாவெறி யார்கழல் வீழ்சடைத்தீ
வண்ணன் சிவன்றில்லை மல்லெழிற் கான லரையிரவின்
அண்ணன் மணிநெடுந் தேர்வந்த துண்டா மெனச்சிறிது
கண்ணுஞ் சிவந்தன்னை யென்னையு நோக்கினள் கார்மயிலே

(உரை) விண்ணும் செலவு அறியாவெறியார் கழல் வீழ்சடைத் தீ வண்ணன் என்பதாவது, சென்று நின்ற நிலைமையைத் தேவர்களும் அறியாத நறுநாற்றமுடைத்தாகிய சீபாதங்களையும் தாழ்ந்த சடையினையுமுடைய தழற்பிழம்புபோன்ற சுரூபத்

தைக் கண்டு பிரமன், மால் அடிமுடியும் தேடும் அவர்களால் காணப்பட்டிலன் என்பது கருத்து. அப்படிக் காணப்படாத வன் அன்பரிடுமலரிலே வெளிப்பட்ட நறுநாற்றங் கமழும் திருவடியிணையும் அவர்களுக்குத்தோன்றும் தாழ்ந்த சடையு முடையவன்; சிவன்-சிவதத்துவனுயுள்ளவன். தில்லைமல் லெழிற் கானவரையிரவின்-அவனுடைய பெரும்பற்றப்புலி யூரின் வளப்பமும் அழகுமுடைத்தாகிய கடற்சோலையிடத்தே இடையாமத்தே, அண்ணல் மணிநெடுந்தேர் வந்தது உண்டா மென-தலையானதொரு மணி கட்டப்பட்ட பெருந்தேர் வந்ததாக வேண்டுமென்று, சிறிது கண்ணும் சிவந்து அன்னையும் நோக் கினள் கார்மயிலே-அற்பமாத்திரம் கண்களைச் சிவப்பித்துத் தாயானவள் என்னையும் குரோதத்துடனே பார்த்தாள்காண், கார்காலத்து மயிலையொப்பாய், (எ-று.)

'என்னையும் சிறிது பார்த்தாள்' (என்றாள்). தங்களைக் கோபிக்கிலும், முற்றப்பார்க்கிலும் இவ்வொழுக்கம் வெளிப் பட்டதாக......(அது) மாநிக்கிறவர்களென்று கருதி; வரை வொடு வருவானாவது பயன்.

---

256. தோழி கூற்று.



## 257. மந்திமேல் வைத்து வரைவுகடாதல்

வரிவளையை வரைவு கடாவி
அரிவைதோழி யுரைபகர்ந்தது.

(இ-ள்.) அழகிய வளைகளையுடையாளை வரைந்து கொள்ளும் படியை முடுக்கி நாயகியுடைய தோழி சொன்னது.



[1] வான்றோய் பொழிலெழின் மாங்கனி மந்தியின் வாய்க்கடு [வன்
தேன்றோய்த் தருத்தி மகிழ்வகண் டாடிரு நீண்முடிமேல்
மீன்றோய் புனற்பெண்ணை வைத்துடை யாளையு மேனிவைத் [தான்
வான்றோய் மதிற்றில்லை மாநகர் போலும் வரிவளையே.

(பொ-ரை.) அழகிய நீண்ட திருச்சடாபாரத்தின் மேலே, நட்சத்திரத்தைப் பொருந்திய புனற்கங்கையாகிய பெண்ணை வைத்து, எல்லாமுடையாளையும் திருமேனியில் ஒரு பாகத்தில் வைத்தவனுடைய, ஆகாயத்தைப் பொருந்தின மதில் சூழப் பட்ட அவனுடைய பெரும்பற்றப்புலியூராகிய நகரியை யொத்த அழகிய வரி (வளைகளை)யுடையாள், ஆகாயத்தைத் தோய்ந்த பொழிலின் அழகிய பழத்தைத் தேனிலே தோய்த்து மந்திக் குரங்கின் வாயிலே கொடுத்(து) இ(வ்)வினியோகங் கொள்ளப் பெற்றோமே யென்று கடுவன் குரங்கு மகிழ்கின்றதனைக் (கண்டாள்) (எ-று.)

இதனால், இந்தமலையிலே விலங்கு சாதிகள் முதலாகத் தம் மால் பாதுகாக்கப்படுவனவற்றைப் பாதுகாவா நின்றன; நம் முடைய நாயகரல்லரோ நம்மை நினையாதொழிந்தார் என்று கருதுவள் என்பது கருத்து.

---

257. தோழி கூற்று.

[1] கான்றோய் பொழில்

---

## 258. காவன்மேல்வைத்துக்கண்டுயிலாமைகூறல்.

நகர் காவலின்
மிகுகழி காதல்

(இ-ள்.) நகரியைக் காப்பார் காவலிலே மிகவும் சிறந்த அன்பாலே சொன்னது.

---

நறைக்கண் மலிகொன்றை யோனின்று நாடக மாடுதில்லைச்
சிறைக்கண் மலிபுனற் சீர்நகர் காக்குஞ்செவ் வேலிளைஞர்
பறைக்கண் படும்படுந் தோறும் படாமுலைப் பைந்தொடியாள்
கறைக்கண் மலிகதிர் வேற்கண் படாது கலங்கினவே.

(பொ-ரை.) தேனினைத் தன்னிடத்தே யுடையதாகிய கொன்றைமாலையையுடையவன்; அவன் நின்று கூத்தாடியருளுகிற பெரும்பற்றப்புலியூராகிய, அணையிடத்தே நின்று சிறைப்படும் புனல் சுற்றிச் சூழப்பட்ட சீரிய நகரியைக் காக்கின்ற சிவந்த வேலையுள்ள இளைஞருடைய துடியின்வட்டம் ஆரவாரிக்குந்தோறும், விழாத முலைகளையும் அழகிய வளைகளையும் உள்ளவளுடைய, தன்னிடத்தே இரத்தம் செறிந்த ஒளிவேலையொத்த கண்கள் உறங்காது வருந்தின. (எ-று.)

258.

இஃது இன்னார் கூற்றென்னாது துறைகூறிய கருத்து. (பே-ரை.)

---

## 259. பகலுடம்பட்டாள்போன்று இரவுவரவு விலக்கல்.

விரைதரு தாரோய்
இரவர லென்றது.

(இ-ள்.) திவ்ய கந்தம் பொருந்தின மாலையினையுடையவனே! இரவுக்குறிவாராதே கொள் என்றது.

---

கலரா யினர்நினை யாத்தில்லை யம்பலத் தான்கழற்கன்
பிலரா யினர்வினை போலிரு ளூங்கி முழங்கிமின்னிப்
புலரா விரவும் பொழியா மழையும்புண் ணின்னுழைவேன்
மலரா வருமருந் தும்மில்லை யோநும் வரையிடத்தே.

(உரை) கலரானவர் நினையாத்தில்லையம்பலத்தான்-அறிவில்லாதவர்களால் நினையப்படாத பெரும்பற்றப்புலியூரில் திருவம்பலத்தே உள்ளவனுடைய, கழற்கண் அன்பிலாதார்வினையகல திருவடிகண்டு அன்பிலாதார் தீவினைபோல,

இருள் தூங்கி முழங்கி மின்னி-எனவும் நிரைநிரையாக வைத்து, புலராஇரவும், பொழியாமழையுமென்னும் சொற்களுடனே கூட்டி, இருள் செறிந்து விடியாத இரவும், முழங்கி மின்னிப் பொழிவது போலக்காட்டிப் பொழியாத மழையும்,

புண்நுழை வேல் மலரா வரும்-புண்ணிலேபட்டுருவுகின்ற வேல் பூ வென்னும்படி மிகவும் கொடியதாய் வாராநின்றன. மருந்தும் இல்லையோ நும் வரையிடத்தே-இது, நீ வரைந்து கொள்ளாயாகில் வரைந்துகொள்ளு மளவும் இவ்வளவிலே நிற்கும்படி ஒரு மருந்தாகிலுமில்லையோ, நுங்கள் வரையிடத்தே-என்றபடும்.

---

259. தோழி கூற்று.

---

## 260. இரவுடம்பட்டாள்போன்று பகல்விரவுவிலக்கல்

இகலடு வேலோய்
பகல் வரலென்றது.

(இ-ள்.) மாறுபட்டாரைக் கொல்லுகிற வேலினையுடையவனே! பகற்குறி வாராதொழி என்றது

---

இறவரை யும்பர்க் கடவுட் பராய்நின் றெழிலியுன்னிக்
குறவரை யார்க்குங் குளிர்வரை நாட கொழும்பவள
நிறவரை மேனியன் சிற்றம் பலநெஞ் சுருதவர்போல்
உறவரை மேகலை யாட்கல ராம்பக லுன்னருளே.

(உரை.) இற-மழை பெய்யாதொழிய, வரையும்பர்- மலையி னுச்சியிலே இருக்கிற குறவர்கள், மழைபெய்விப்பதாக நினைந்து தெய்வத்துக்குப் பலிகொடுத்து வேண்டிக் கொண்டு குறவர் (ஐகாரம் அசைநிலை) ஆரவாரிக்கின்ற குளிர்ந்த மலைமேலுண்டா கிய நாட்டினையுடையவனே! அழகிய பவளத்தின் நிறம் போன்ற வரையினை நிகர்த்த திருமேனியையுடையவன்; அவனுடைய திருச்சிற்றம்பலத்தை நினையாதாரைப் போலே, கிலேசிக்க, உன்னுடைய அருள்- பகற்குறியிடத்தே - வருவாயாகில் அரை யிலே சிறந்த மேகலாபரணத்தை யுடையவளுக்கு அலராக நிற்குமாதலால் பகற்குறி யிடத்தே வரவேண்டா. (எ-று.)

---

260. தோழி கூற்று:

குறவர் பரவும் பருவத்துத் தெய்வத்தைப் பரவாது, பின் மழை மறுத்தலானிடர்ப்பட்டு அதனை முயல்கின்றார் போல, நீயும் வரையும் காலத்து வரையாது, இவளை எய்துதற்கரிதாகிய விடத்துத் துன்புற்று வரைய முயல்வையென உள்ளுறை காண்க. (பே-ரை.)

---

## 261. இரவும் பகலும் வரவு விலக்கல்

இரவும் பகலும்
வரவொழி கென்றது

(இ-ள்.) இரவிடத்தும் பகலிடத்தும் வரவேண்டா வென்று விலக்கியது

---

சுழியா வருபெரு நீர்சென்னி வைத்தென்னைத் தன்றொழும்பிற்
கழியா வருள்வைத்த சிற்றம் பலவன் கரந்தருமான்
விழியா வரும்புரி மென்குழ லாடிறத் தையமெய்யே
பழியாம் பகல்வரி னீயிர வேதும் பயனில்லையே.

(பொ-ரை.) சுழித்துக் கொண்டு வருகிற பெரு நீராகிய கங்கையைத் திருமுடியிலே வைத்து, என்னைத் தன் அடிமைத் திறத்துக்குப் போந்தேனென்று, நீக்கி நிறுத்தாத அருளை என்னிடத்தே வைத்த திருசிற்றம்பலநாதன்; அவன் கையிலேந் திய மான்போலச்சதாகாலமும் விழித்துச் செல்லுகிற, நெறித்த மெல்லிய கூந்தலினையுடாளளவில், சுவாமி, உண்மையாக நீ பகற்குறியிடத்தே வருகையினாலே, சிறிதும் பயன் படாது; என்ன, இரவும் பகலும் வாராதேகொள், நாயகனே (எ-று.)

சுழித்துக் கொண்டு வருகிற பெரிய நீரை அதன் விசையை மாற்றித் திருமுடியிலே வைத்தாற் போல, நில்லாது பரக்கும் நெஞ்சுடைய என்னையும் ஒரு வழிப்படுத்தி ஆண்டா னென்பது கருத்து.

---

**261.** தோழி கூற்று.

*சுழியா.........நீர்: 'சுழித்தவார் புனற் கங்கை சூடி' (தே. ஞா திருத்தெங். 5)*

---

## 262. காலங்கூறிவரைவுகடாதல்.

*முந்தியபொருளைச் சிந்தையில்வைத்து*
*வரை தருகிளவியிற் றெரியவுரைத்தது.*

(இ-ள்.) முற்படத் தோன்றுகிற பொருளை நெஞ்சிலே வைத்து வரையவேண்டுமென்கின்ற வார்த்தையாலே விளங்கச் சொன்னது.

---

மையார் கதலி வனத்து வருக்கைப் பழம்விழுதேன்
எய்யா தயின்றிள [1]மந்திகள் சோரு மிருஞ்சிலம்பா
மெய்யா வரியதெ னம்பலத் தான்மதி யூர்கொளவெற்பின்
மெய்யார் வளரின வேங்கைபொன் மாலையின் முன்னினவே.

(உரை) பெரியதாய் வளரா நின்ற இளைய வேங்கைகள் பொன்னரிமாலையைப் போல தோன்றாநின்றன, (என்ன வரையுங்காலமும் வந்தது. நீ நினைத்தால் முடியாதனவுமில்லை; ஆதலால் நீ நினையாமலே கிடக்கின்......து. உன்னுடைய மலையின் வளமிருந்தபடி; ஓர் இன்பத்தைத் தெரியாமலிருக்கும்போதும் விலங்குச்சாதிகள் முதலாகப் பெற்று அநுபவியாநின்றன என்றால், நீயுமாகி ......றித்தால் முடியாதிருக்குமோ என்றது.)

---

262. தோழி கூற்று.

(பா-ம்) மந்திகடேரும்.

மேலே குறிக்கப்பெற்றது பொழிப்புரையாகாது: இப்பாடலிற்குப் பேராசிரியர் கூறும் உரை பின்வருமாறு:—இருளார்ந்த வாழைக் காட்டின்கண் வருக்கைப்பலாவின் பழம் விழுதலாலுண்டாகிய தேனை இளைய மந்திகள் அறியாதேயுண்டு பின் களியாற்சோரும் பெரிய சிலம்பை யுடையாய்! மதிநிரம்பாநின்றது; அம்பலத்தானுடைய இவ்வெற்பின்கண் செறிவார்ந்த வளராநின்ற இளைய வேங்கைகள் பூத்துப் பொன் மாலைபோலத் தோன்றின. இனி மெய்யாக உனக்கரியது யாது?

நின்மலைக்கண் விலங்குகளும் இத்தன்மைத்தாகிய தேனைக் குறியாதுண்டு இன்புறாநின்றனவாகலின் குறித்தவற்றின் நினக்கரியது யாது? இதுவன்றோ பருவமுமென வரைவு பயப்பக் கூறியவாறாயிற்று. வேட்டபொருள் உள்ளத்துமுற்பட்டுத் தோன்றுதலின், வரைவை முந்தியபொருளென்றாள் (பே-ரை.)

விலங்குகளும் இன்புறா நின்றன:

"வையை நீர் விழவின்கண் மைந்தரும் மகளிருமேயன்றி விலங்குகளும் ஒத்த அன்பினராயின; அது நின்மரட்டில்லை யாயிற்றென்பது கூறியவாறு" என்ற பரிபாடல் (10. 55) உரையையும்,

"குறியா வின்ப மெளிதி னின்மலைப்
பல்வேறு விலங்கு மெய்து நாட
குறித்த வின்ப நினக்கெவ னரிய"

என்ற அகநானூற் (உ) றுப்பாடலின் பகுதியையும் ஒப்பிடுக.

மதியூர்கொளும் நாளிலும் வேங்கைமலரும் நாளிலும் வரைதல் மரபு:

'வேங்கை விரிவிட நோக்கி, வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனள் கொளற்கே', (கலி. 38. 1-2) 'மன்ற வேங்கை மணநாட் பூத்த, மணியே ரரும்பின் பொன்வீ' (அகப்: 232-7-8); வேங்கையு மொள்ளிணர் விரிந் தன; நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே (அகம். 2- 16-7.)

இதனை வரைநாளுணர்த்தற்குச் செய்யுளாகக் கூறுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 523. உரை)

---

## 263. கூறுவிக்குற்றல்

ஒத்தடுதாவ்வா துரைத்ததோழி
கொத்தவிழ்கோதையாற் கூறுவிக்குற்றது

(இ-ள்) நாயகனுடைனே பொருந்தவும் பொருந்தாமலும் வரைவின் ... கினதோழி, கொத்து விரிகின்ற மாலையையுடைய நாயகி தன்னைக் கொண்டே சொல்லுவிப்பதாக நினைந்தது

---

தேமாம் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்துவிண் ணோர்வணங்க
நாமா தரிக்க நடம்பயில் வோனைநண் ணாதவரின்
வாமாண் கலைசெல்ல நின்றூர் கிடந்தநம் மல்லல்கண்டால்
தாமா வறிகில ராயினென் னுஞ்சொல்லுந் தன்மைகளே

(பொ-ரை.) தேமாம் பொழிலாலுலே சூழப்பட்ட பெரும் பற்றப்புலியூரில் திருவம்பலத்திலே தேவர்கள் வந்து வணங்க,

மானிடராகிய நாம் ஆதரம் பண்ணவும், திருக்கூத்தாடியருளு கிறவனைச் சேராதாரைப் போலே, குரங்கினின்று (அழகு) மாட்சிமைப் பட்ட மேகலாபாரம் கழலவும், இதனை விசாரியாதே நின்றவர், பெருகிக் கிடந்த நம்முடைய கிலேசத்தைப்பார்த்தால், தாமாக அறியாராகில், இவருக்கு நாம் அறிவுக்கும் இயல்புகள் எங்ஙனேதான்? (எ-று.)

என்ன, நாயகி மறுமாற்றஞ் சொல்லவும், அவன் கேட்பவனாவது பயன்.

---

263. தோழி கூற்று.

இதனைப் 'பாங்கிநின்குறை நீயே சென்றுரை' என்றற்குச் செய்யுளாகக்கூறுவர் இலக். விளக். ஆசிரியர் (சூ. 521. உரை)

---

## 264. செலவு நினைந்துரைத்தல்

பாங்கிநெருங்கப் பணிமொழிமொழிந்து
தேங்கமழ் சிலம்பற்குச் சிறைப்புறக்கிளவி

(இ-ள்.) பாங்கியானவள் நெருங்கி வார்த்தை சொல்வதற்கு நாயகியானவள் பலவார்த்தையும் பேசியது. தேன்கமழும் மலையினையுடையவனுக்குச் சிறைப்புறத்துச் சொல்லும் வார்த்தையாயது.

---

வல்சியி னெண்கு வளர்புற் றகழமல்கும் மிருள்வாய்ச்
செல்வரி தன்றுமன் சிற்றம் பலவரைச் சேரலர்போல்
கொல்கரி சீயங் குறுகா வகைபிடி தானிடைச்செல்
[1]கல்லத ரென்வந்த வாறென் பவர்ப்பெறிற் கார்மயிலே

(ப-ரை.) சிற்றம்பலவரைச் சேரலர்போல் - திருச்சிற்றம்பலநாதனைச் சேராதாரைப்போலே, கொல் கரி சீயம் குறுகா வகை - கொலைத்தொழிலைவல்ல யானையைச் சிங்கம் சென்று குறுகாதபடி, பிடிதான் இடை செல் - பிடியானையானது தான் இடையிலே புகுந்து தன் முகத்தைக் காட்டி அதன் மறுப்பை மறைத்துப் பரிகரிக்கிற, கல் அதர் என் வந்தவாறு என்பவர் பெறின் - கல்லுடைத்தாகிய வழியிலே நீங்கள் வந்தபடி என்? என்று சொல்வாரைப் பெறின், கார்மயிலே-கார்காலத்து மயிலையொப்பாய்! வல்சி எண்கு வளர்புற்று அகழ-தனக்கு உணவு காரணமாகக் கரடியானது மிக்க புற்றை அகழும்படி, மல்கும் இருள் வாய்-செறிந்த இருளிடத்தே, செல்வு அறிதுமன்-செல்கை அரிதென்று காண் (எ-று.)

சென்றாலும் வினவுவாரில்லை: எனவே, மாணி(ல)த்திறந்துபடுவரென்பது கருத்து.

---

**264.** தோழி கூற்று.

(பா-ம்) கல்லதரின்.

---

## 265. பொலிவழிவுரைத்து வரைவுகடாதல்

வரைவுவிரும்பு மன்னுயிர்ப்பாங்கி
விரைதருகுழலி மெலிவுரைத்தது

(இ-ள்.) வரைந்து கொள்ளுகிறதை விரும்புகிறதை விரும்புகிற நிலைபெற்ற உயிர்போன்ற பாங்கி நறுநாற்றமுடைத்தாகிய கூந்தலினையுடையவள் வாடியதனைச் சொன்னது.

வாரிக் களிற்றின் மருப்புகு முத்தம் வரைமகளிர்
வேரிக் களிக்கும் விழுமலை நாட விரிதிரையின்
[1]நாரிக் களிக்கமர் நன்மாச் சடைமுடி நம்பர்தில்லை
ஏரிக் களிக்கரு மஞ்ஞையிந் நீர்மையென் னெய்துவதே.

(பொ-ரை.) இம்மலையிற் குறமகளிர் ஆனை மருப்புக்கள் உகுத்த முத்துக்களைக் கள்ளுக்கு முகந்து கொடுக்கும் சிரிய மலை மேலுண்டாகிய நாட்டினையுடையவனே! விரிந்த திரையையுடைய பெண்(ணாகிய) கங்கைக்குக் கொடுக்கப் பொருந்தின நல்லபெரிய திருச்சடாமகுடத்தையுடைய சிவனது பெரும்பற்றபுலியூரில் அழகுடன் களிக்கும் கரிய மயிலை யொப்பாள் இத்தன்மையை அடைகுவதேன் தான்?

என்ற பொருளாய், ஆனைக் கொம்பினின்றுகுத்த முத்துக்களை மதுபானங் காரணமாக முகந்து கொடுத்தாற்போலஇவளும் தன் அண்ணன்மார்களுடைய காவல் நீங்கி உனக்கெளியளாயின (மை) பார்க்காது உனக்கின்பஞ் செய்கிற களவொழுக்கங்கள் காரணமாக இகழ மதித்தாய்; அத்தனை, என்றது.

---

265. தோழி கூற்று.

[1] பா -ம் - நாரிக்களித்தமர்

---

## 18. வரைபொருட்பிரிதல்.

இது முப்பத்துமூன்று துறையுடைத்து. அவை வருமாறு:-

[1]முலைவிலை கூறல், [2]வரைவுடம் படுத்தல்,
[3]வரைபொருட் கேகலை யுரையவட் கென்றல்,
[4]நீகூ றென்றல், [5]சொல்லா தேகல்,
[6]பிரிந்தமை கூறல், [7]நெஞ்சொடு கூறல்,

[8]நெஞ்சொடு வருந்தல், [9]வருத்தங்கண்டுரைத்தல்,
[10]வற்புறுத் தல்லொடு, [11]வன்புறை யழிதல்,
[12]வாய்மை கூறல், [13]மன்னவன் மெய்யுரை,
தேருது புலப்பல், [14]காலமறைத் துரைத்தல்,
[15]தூதுவர வுரைத்தல், [16]தூதுகண் டழுங்கல்,
[17]மெலிவு கண்டு செவிலி யுரைத்தல்,
[18]மேவிய செவிலி கட்டுவைப் பித்தல்,
[19]கலக்குற்று நிற்றல், [20]கட்டுவித் திகூறல்,
[21]வேலனை யழைத்தல், [22]இன்ன லெய்தல்,
[23]விலக்க நினைத்தல், [24]நிலைமை யுரைத்தல்,
[25]அறத்தொடு நிற்றல், [26]ஐயந் தீர்த்தல்,
[27]அவன்வெறி விலக்கல், [28]செவிலிக்குத் தோழி
அறத்தொடு நிற்றல், [29]நற்றாய்க்குச் செவிலி
அறத்தொடு நிற்றல், [30]தேர்வர வுரைத்தல்,
[31]மணமுரசு கேட்டு மகிழ்ந்து ரைத்தல்
[32]ஐயுற்றுக் கலங்கல், [33]அவனிதி காட்டல்
ஆறைந் துடனே கூறிய மூன்றும்
விரைமலர்க் குழலாய் வரைபொருட் பிரிதல்.

(பே-ரை.)

---

## 266. முலைவிலை கூறல்

கொலைவேற் கண்ணிக்கு
விலையிலை யென்றது.

(இ-ள்.) கொலை செய்யும் வேல் போன்ற கண்ணினை யுடையாளுக்கு மதிக்கும் விலை இல்லையென்று சொன்னது.

---

குறைவிற்குங் கல்விக்குஞ் செல்விற்கு நின்குலத் திற்கும்வந் [தோர்
நிறைவிற்கு மேதகு நீதிக்கு மேற்பினல் லானிணையின்
இறைவிற் குலாவரை யேந்திவண் டில்லைய னேழ்பொழிலும்
உறைவிற் குலாநுத லாள்விலை யோமெய்ம்மை யோதுநர்க்கே

(பொ-ரை.) ஒரு குறை (யுடை) யாயிருக்கிற நீ வந்த வரத்திற்கும், உன்னுடைய கல்விமிகுதிக்கும், உங்கள் குடிக்கேற்ற பெரு(மை)க்கும், நின்னுடைய வமிசத்திற்கும், உன்னிடத்தே நட்புக் கொள்ள நாடி வந்த நல்லோர்களுக்கும், ....., பஞ்சேந்திரியங்கள் ஒருப்பட்டு நிரம்பத்தக்க நின் ஒழுக்கத்திற்கும், இவற்றான் ஏற்கினல்லது, விசாரிக்கில், சுவாமி வில்லாக வளைத்த மகா மேருவை ஏந்தியவன்; அவனது அழகிய பெரும்பற்றப்புலியூரிலே யுள்ளவன்; அவனுடைய ஏழு பொழிலாகிய ஏழு பூமியும் உறையிடவும் போதாது; இத்தலையல்லது, விற்போன்ற நெற்றியினையுடையாளுக்கு, உண்மை சொல்லில் விலையோதான்? (எ-று.)

---

**266.** தோழி கூற்று.

ஏழ்பொழில் (சிற். 7; 31.)

இப்பாடலிலுள்ள சொற்களுக்குப் பேராசிரியர் வேறு விதமாகப் பொருள் கூறுவர். செல்வு- இருமுதுகுரவராற் கொண்டாடப் படுதல். நிறைவு- அறிவொடு கூடிய ஒழுக்கம். நீதி- உள்ளப் பொருத்த முள்வழி மறுத்து கொடுத்தல். உறைவில்லென்பதற்கு உறையையுடைய வில்லெனினுமமையும்.

'உரவோனூடும் ஊருங்குலமும் மரபும் புகழும் வாய்மையுங் கூறற்குச் செய்யுளாகக் கூறுவர் இலக்-விளக்- ஆசிரியர் (சூ 523 -உரை)

---

## 267. வருமதுகூறி வரைவுடம்படுத்தல்.

[1]தொடுத்தனவிடுத்துத் தோகைதோளெய்தி
இடுக்கண்பெரி திரவரினென்றது.

(இ-ள்) எங்கள் (ஊ)ர் இனமுறையார் அடுக்கிச் சொல்லுகின்ற பொருள்களைக் கொடுத்து மயில்போன்றவள் தோளைப் பெறுவாயாக. இரவிடத்தே வரில் இடுக்கண் பலவும் உண்டாம்.

---

வடுத்தன நீள்வகிர்க் கண்ணிவெண் ணித் திலமா ணகைக்குத்
தொடுத்தன நீவிடுத் தெய்தத் துணியென்னைத் தன்றொழும்
[2]படுத்தநன் னீள்கழ லீசர்சிற் றம்பலந் தாம்பணியார்க் [பிற்
கடுத்தன [3]தாம்வரிற் பொல்லா திரவினின் னாருளே.

(பொ-ரை.) வடுவிடத்தனவாகிய நீண்ட வகிரை யொத்த கண்களையும் வெள்ளியமுத்துப்போலும் ஒளிசிறந்த முறுவலையும் உடையாளுக்கு எங்கள் உறவின்முறையாராலே அடுக்கிச் சொல்லுகின்றவற்றை நீ கொடுத்து இவளைப் பெறும்படியை அறுதியிடுவாயாக. என்னைத் தன்னுடைய தொண்டுபடுத்தலிலே ஆக்கிக்கொண்ட நன்றாக அளவிடப்படாத சிபாதங்களையுடைய முதலியாருடைய திருச்சிற்றம்பலத்தை வணங்காதார்க்கு அடுத்தனவாகிய குற்றங்கள் வரின் பொல்லாதாய் முடியும். இரவிடத்தே நீ ஒழுகுகின்ற பெறுதற்கரிய அருளானது பொல்லாதாக முடியும்.

ஆதலால் இவளை வரைந்துகொள்ளும்படி அறுதியிடுவாயாக வேண்டும். (எ-று)

---

267. தோழி கூற்று.

(பா-ம்.) 1. தொடுத்தது. 2. படுத்தன நீள்கழல். 3. தான்.

சிற்றம்பலந்தாம் பணியார்க்கடுத்தன தாம் வருகையாவது கெர்ப்பம் வருகை. நீவரின் எமக்கடுத்தன தாமுளவா மென்று பொருளுரைப் பாருமுளர். (பே-ரை.)

---

## 268. வரைபொருட்பிரிவை யுரையெனக்கூறல்

ஆங்கவள்வயி னீங்கலுற்றவன்
இன்னுயிர்த்தோழிக்கு முன்னிமொழிந்தது.

(இ-ள்.) அவ்விடத்து நாயகியிடத்தினின்றும் நீங்குவதாக நினைந்தவன் இனிதாகிய உயிர்போன்ற தோழிக்கு எதிர்ப்பட்டுச் சொன்னது.

குன்றங் கிடையுங் கடந்துமர் கூறு நிதிகொணர்ந்து
மின்றங் கிடை[1] நும்மை யும்வந்து மேவுவ னம்பலஞ்சேர்
மன்றங் கிடைமரு தேகம்பம் வாஞ்சிய மன்னபொன்னைச்
சென்றங் கிடைகொண்டு வாடா வகைசெப்பு தேமொழியே

(ப-ரை.) அம்பலம் சேர் மன் - திருவம்பலத்தைப் பொருந்தின தலைவன், தங்கு இடைமருது ஏகம்பம் வாஞ்சியம் அன்ன பொன்னை - அவன் நிலைநின்ற திருவிடைமருதூர், திருவேகம்பம் திருவாஞ்சியம் என்கிற திருப்படை வீடுகளை யொப்பாளை, சென்று அங்கு இடைகொண்டு வாடா வகை செப்பு - சென்று அவ்விடத்தே இடங்கொண்டு வாடாதபடி சொல்லுவாயாக வேண்டும், தேமொழியே - தேனையொத்த வார்த்தையினை உடையாய், நீதான். குன்றங்கிடையும் கடந்து - மலைக்கிடையில் கல்லுடைத்தாகிய அரிய வழியினையுங் கடந்து, உமர் கூறு நிதி கொணர்ந்து - உங்கள் உறவின்முறையாராலே சொல்லப்பட்ட நிதியினையும் கொண்டுவந்து, மின்தங்கு இடை நும்மையும் வந்து மேவுவன் - மின்போன்ற இடையினையு... உங்களை வந்து பொருந்தக் கடவேன் (எ-று.)

---

268. தலைவன் கூற்று.

(பா-ம்.) 1. நும்வயின்.

---

## 269. நீயே கூறென்றல்

காய் கதிர்வேலோய் கனங்குழையவட்கு
நீயேயுரை நின்செலவென்றது

(இ-ள்.) கொலைத் தொழிலினையும் பிரகாசத்தையுமுடைய வேலினையுடைய நாயகனே! கனத்த மகரக் குழையையுடையாளுக்கு நின்னுடைய செலவை நீயே சொல்வாய் என்றது.

கேழே வரையுமில் லோன்புலி யூர்ப்பயில் கிள்ளையன்ன
யாழேர் மொழியா ளிரவரி னும்பகற் சேறியென்று
வாழே னெனவிருக் கும்[1]வரிக் கண்ணியை நீ வருட்டித்
தாழே னெனவிடைக் கட்சொல்லி யேகு தனிவள்ளலே

(பொ-ரை.) தனக்கிணை யாவருமில்லாதவன்; அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் வாழ்கின்ற கிளியை நிகர்த்த, யாழின் இசையைப் போன்ற வார்த்தையினையுடையவள்; இரவிடத்தே வரினும்' பகற் பொழுதெல்லாம் பிரிந்திருப்பை' யென்றும், 'உயிர் வாழே' னென்றும் இருக்கின்ற செவ்வரி பரந்த கண்களையுடையாளை, நீ நுதலும் தோளும் முதலாயினவற்றைத் தடவி, 'நிமிடமளவும் தாழ்த்து அங்கே உயிர் கொண்டு இரேன்' என்று, ஒப்பிலாத நாயகனே!, அதனிடையிலே சொல்லிப் போவாய் (எ-று.)

269. தோழி கூற்று:

பா - ம். வடிக்கண்ணியை.

கிளி மென்மையும் மென்மொழியுடைமையையும் பற்றி மென்மொழியையுடையாட்குவமையாய் வந்தது. யாழோசை செவிக்கினிதாதல் பற்றி மொழிக்குவமையாய் வந்தது. வாழேனெனவிருக்கு மென்றதனன், இத்தன்மைத்தாகிய இவளதுபிரிவாற்றாமையை மறவாதொழிய வேண்டு மென்றாளாம். இடைக்கணென்றது இவ்வொழுக்கத்தால் நினக்கு வரும் ஏதம் நினைந்து ஆற்றாளாம் செவ்வி பெற்றென்றவாறு (பே-ரை.)

## 270. சொல்லாதேகல்

நிறைவளை வாட
உரையா தகன்றது.

(இ-ள்.) நிறைந்த வளைகளையுடைய நாயகி வாடச் சொல்லாதே போனது.

வருட்டிற் றிகைக்கும் வசிக்கிற் றுளங்கு மனமகிழ்ந்து
தெருட்டிற் றெளியலள் செப்பும் வகையில்லை சீரருக்கன்
குருட்டிற் புகச்செற்ற கோன்புலி யூர்குறு கார்மனம்போன்
றிருட்டிற் புரிகுழ லாட்கெங்ங னேசொல்லி [1]யேகுவனே.

(பொ-ரை) பிரிவு காரணமாக நுதலும் தோளும் தடவுவேனாகில், 'இதற்குக் காரணம் ஏது' என்று திகையாநிற்கும். வசமாக சில வார்த்தைகளைச் சொல்வேனாகில், 'இதற்குக் காரணம் ஏது' என்று நடுங்காநிற்கும். தெளியும்படி வார்த்தை சொல்லில், நெஞ்சு மகிழ்ந்து தெளியாள். பிரிவறிவிக்கலாவதொரு (உ)பாயமில்லை. சீரிய ஆதித்தன் பன்னிருவரின் இனத்தை யொழித்துக் குருடாக் கிடமாகச் சென்று சேரும்படி அழித்த சுவாமி, அவனுடைய பெரும்பற்றப்புலியூரைச் சேராதார் மனம்போலே இருண்டு நெறித்த கூந்தலினையுடையாளுக்கு (எங்ஙனம்) சொல்லி நான் பிரிவேன். (எ—று)

---

270. தலைவன் கூற்று.

பா - ம். யேகுவதே.

அருக்கன் குருட்டிற்புகச் செற்றகோன்:- 'விண்ணிற் பகனார் தாம்தூக்கு மெல்லா விருளு மீண்டுதம் கண்ணிற் புகுந்த கதை' (தக்க. 45.) 'பகற்சுடரிற் பகற்கிருகட் பரப்பிருளைப் படுத்தே' (தக்க. 490)

---

## 271. பிரிந்தமைகூறல்.

தேங்கமழ் குழலிக்குப்
பாங்கி பகர்ந்தது.

(இ-ள்.) நறுநாற்றங் கமழாநின்ற கூந்தலினையுடையாளுக்குத் தோழி சொன்னது.

---

நல்லாய் நமக்குற்ற தென்னென் றுரைக்கே னமர்தொடுத்த
வெல்லா நிதியு முடன்விடுப் பானிமை யோரிறைஞ்சு
மல்லார் கழலழல் வண்ணர்வண் டில்லை [1]தொழார்களல்லாற்
செல்லா வழற்கட மின்றுசென் றூர்நஞ் சிறந்தவரே.

(பொ-ரை.) நன்மையுடையாய்! நாயகர் வந்துற்ற நன்மை யினை என்ன நன்மை யென்று சொல்லுவேன்? நம்முடைய உறவின் முறையாராலே அடுக்கிச் சொல்லப்பட்ட வெல்லாப் பொருள்களையும் ஒருக்காலே கொடுத்துவிடுவதாக, தேவர்கள் வந்து வணங்குகிற வளப்பமுடைத்தாகிய சீபாதங்களையுடைய தழல் விசும்பு போன்ற திருமேனியை யுடையவர், அவருடைய வண்மையுடைத்தாகிய (பெரும்பற்றப்புலியூரைத் தொழாதா ரல்லது செல்லலாகாத நெருப்புக்) காட்டை இன்று சென்றூர் நம் சிறந்தவரே.

நம்முடைய சிறப்புள்ளவர் இப்பொழுது போனராதலால் இந்த நன்மையை என்ன நன்மையென்று சொல்லுவேன்! (எ-று).

---

271. தோழி கூற்று:

(பா-ம்.) [1] தொழார்களல்லார்.

'தில்லை தொழார்களல்லாற் செல்லாவழல்' என்ற பகுதிக்கு ஏட்டில் உரை இல்லை.

'என்னென்றுரைக்கே னென்றதனுன், தொடுத்தது விடுப்பச் சென்றூராகலின் இன்பமென்பேனோ? அழற்கடஞ் சென்றமையாற் றுன்பமென்பேனோ வெனப் பொதுப்படக் கூறுவாள் போன்று, வரைவு காரணமாகப் பிரிந்தாராகலின் இது நமக்கின்பமே யென்றுற்றுவித் தாளாம்.' (பேரை.)

## 272. நெஞ்சொடுகூறல்.

கல்வரைநாடன் சொல்லாதகல
மின்னெளிமருங்கு றன்னெளிதகர்ந்தது.

(இ-ள்.) கல்லுடைத்தாகிய மலைமேலுள்ள நாட்டினையுடையவன் போகிறேனென்று சொல்லாமற் பிரிந்தகல, மின்னைப்போல் நுடங்குகிற மருங்கினையுடைய நாயகி தன்னுடைய பிரகாசங் குன்றியது.

---

அருந்தும் விடமணி யாமணி கண்டன்மற் றண்டர்க்கெல்லா
மருந்து மமிர்தமு மாகுமுன் னோன்றில்லை வாழ்த்தும்வள்ளல்
திருந்துங் கடநெறி செல்லுமிவ் வாறு சிதைக்குமென்றால்
வருந்தும் மடநெஞ்ச மேயென்ன யாமினி வாழ்வகையே.

(பொ-ரை.) உண்கிற நஞ்சமுமழகு செய்கிற நீலமணி போன்ற திருமிடற்றினையுடையவன், மற்றுள்ள தேவர்களுக்கெல்லாம் மருந்துமாய் அமுதமுமாகிற பழையவன், அவனுடைய பெரும்பற்றம்புலியூரைப் புகழ்கிற வள்ளலானவன் திருந்தின கடப்பாட்டையுடைய முறைமையிலே செல்லுகின்ற இத்தன்மை நம்மை யழிக்குமாகில் இதற்கு வருந்துகிற அறியாத என்பேதை நெஞ்சமே! இப்பொழுது உயிர் வாழும் உபாயம் ஏதாந்தன்மைதான்? (எ-று.)

---

272. தலைமகள் கூற்று.

---

## 273. நெஞ்சொடு வருந்தல்

வெற்ப னீங்கப்
பொற்பு வாடியது

(இ-ள்.) நாயகன் பிரிய அழகினையுடையாள் வாடியது.

ஏர்ப்பின்னை தோண்முன் மணந்தவ னேத்த வெழிறிகழுஞ்
சீர்ப்பொன்னை வென்ற செறிகழலோன் றில்லைச் சூழ்பொழில்
[வாய்க்
கார்ப்புன்னை பொன்னவிழ் முத்த மணலிற் கலந்தகன்றார்
தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ்சென் கொலாமின்று
[[1] செய்கின்றதே.

(பொ-ரை.) அழகிய (பின்னைப்) பிராட்டி தோள்களை முன் பொருந்தின புருடோத்தமன் ஏத்த, புகழ் அழகு விளங்காநின்ற செம்பொன்னை வெற்றி செய்கிற வீரக்கழல் செறிந்த சீபாதங்களையுடையவன்; அவனுடைய பெரும்பற்றப் புலியூரைச் சூழ்ந்த ...............

முத்தையொத்த வெள்ளியமணலிலே கூடிப்பிரிந்தவருடைய தேரின் பின்னே சென்ற என் நெஞ்சம்...... முது செய்கிற படியே ...........றைசேர வலிந்தோ என்னை மறந்து தான் அங்கே நின்று விட்டுச் சொல்ல விட......டடதொ ......

---

273. தலைமகள் கூற்று.

பா - ம். தேய்கின்றதே.

இம்பாடலின் உரை ஏட்டில் மிகவும் சிதைந்துள்ளது. பேராசிரியர் உரையின் வருமாறு:-

அழகையுடைய பின்னை யென்கிற தேவியுடைய தோள்களை முற்காலத்துக் கலந்த மாயோன் நின்றுபரவ, எழில்விளங்கும் செம்பொன்னை வென்ற திருவடிகளையுடையவனது தில்லைக்கட் சூழ்ந்த பொழிலிடத்து, கரிய புன்னை பொன் போல் மலராநின்ற முத்துப் போலு மணலையுடைய தோரிடத்து, கூடி நீங்கினவரது தேர்ப்பின் சென்ற என்னெஞ்சம் இவ்விடத்து இன்று செய்கின்றதென்னோ! அறிகின்றிலேன்.

## 274. வருத்தங்கண்டுரைத்தல்

அழலுறுகோதையின் விழுமுறுபேதையை
நீங்கலரெனப் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) அக்கினியிற் சேர்ந்த மாலைபோல வாடிய நாயகியைப் பிரியாரென்று பாங்கி சொன்னது.

---

கானமர் குன்றர் செவியுற வாங்கு கணைதுணையா
மானமர் நோக்கியர் நோக்கென மாநற் றொடைமடக்கும்
வானமர் வெற்பர்வண் டில்லையின் மன்னை வணங்கலர்போற்
றேனமர் சொல்லிசெல் லார்செல்லல் செல்ல றிருநுதலே.

(பொ-ரை) காட்டிலே வாழ்கிற குறவரானவர்கள் காதளவும் செல்ல நிரம்ப வலித்த அம்பை, தங்கள் துணைவியராகிய மான் நோக்கத்தை யொத்த கண்களையுள்ளவர்களுடைய பார்வையும் மான் நோக்கந்தான் நோக்கையாலே, மானுக்குத் தொடுத்த நல்லபாணத்தை எய்யாதே மடக்குகிறவர், ஆகாயத்தைப் பொருந்தும்படிக்கு உயர்ந்த மலையினையுடையவர், அழகிய பெரும்பற்றப் புலியூரிற் கர்த்தனை வணங்காதாரைப் போலே, தேனையொத்த இனிய வார்த்தையினையுடையாய்! போகார் காண். ஆதலால் அழகின நெற்றியினையுடையாய்! கிலேசத்தையடையாதே கொள் (எ-று.)

---

274. தோழி கூற்று.

கொலைத் தொழிலாளரும் தந்துணைவியரோடொப்பனவற்றிற்கு மிடர் செய்யாத வெற்பினராதலின், நீ இவ்வாறு வருந்த நீட்டியாரென்பது கருத்து. (பே-ரை.) 'தொடுத்த வாளியர் துணைபுணர் கானவர். இடுக்கண் செய்யா தியங்குனர்' (மலைபடு 17-8)

'எய்யத் தொடுத்தோன் குறத்திநோக்கேற்றதெனக், கையிற் கணைகளைந்து கன்னிமான் - பயப்போ, என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தாங்கெயில்கள், சென்றன்று வென்றான் சிலம்பு (11 ஆம்திரு. 414)

வருகுவர்மீண்டெனப் பாங்கி வலித்தற்கு'ச் செய்யுளாக இதனைக் கூறுவர். இலக். விளக். ஆசிரியர் (சூ 527. உரை)

---

## 275. வழியொழுகி வற்புறுத்தல்.

[சூழிருங் கூந்தலைத்
தோழி தெருட்டியது.]

(இ-ள்.) சுற்றிக் கூட்டப்பட்ட அளகத்தினையுடையாளைத் தோழி தெளிவித்தது.

மதுமலர்ச் சோலையும் வாய்மையு மன்பு மருவிவெங்கான்
கதுமெனப் போக்கு நிதியின ருக்குமுன் னிக்கலுழ்ந்தாள்
நொதுமலர் நோக்கமொர் மூன்றுடை யோன்றில்லை நோக்கலர்போல்
இதுமலர்ப் பாவைக்கென் னோவந்த வாறென்ப ரேந்திழையே.

(உரை.) காட்டிலே அவா கடிதாகிய போக்கையும்பொருள் தேடி வருகையையும் நினைத்து நீ யழுதால், அயலார் கண்மூன்றுடையவனுடைய பெரும்பற்றப்புலியூரைத் துதியாரைப் போலே......ங்களாகிய சீதேவியை ஒப்பாளுக்கு இது வந்தபடியேனென்று ஆராயத்தகுங்காண்; மிகுந்த ஆபரணங்களையுடையாய்!

---

275. தோழி கூற்று.

இச்செய்யுளுக்குரிய கொளு காணப்பெறவில்லை. உரையும் மேலேயுள்ள அளவே உள்ளது. இதற்குரிய பேராசிரியர் உரை பின் வருமாறு:

'அவரைப் புதுவதுகண்ணுற்ற மதுமலரையுடைய சோலையையும், அன்று நின்னிற் பிரியேன் பிரியினாற்றேனென்று கூறிய வஞ்சினத்தினது மெய்ம்மையையும், வழிமுறை பெருகிய வன்பையும், நம்மோடு மருவிவைத்துப் பின்கதுமென வெங்கானிற்போக்கிய போக்கையும், போய்த்தேடு நிதியினது செய்தற்கருமையையும், நினைந்து நீ கலுழ்ந்தாய்; ஏந்திழாய்! ஏதிலார், மலர்ப்பாவை யன்னாட்கு இவ்வேறுபாடு வந்தவாறென்னோ வென்றையுறுவர்; அதனால் நீயாற்றுவாயாக; கண்களொடு மூன்றையுடையவனது தில்லையைக் கருதார்போல வந்தவாறென்னோவெனக் கூட்டுக. (எ-று.)

## 276. வன்புறை யெதிரழிந்திரங்கல்.

[1] மன்கறைவேலவன் வரைவுநீட
வன்புறையழிந்தவண் மனமழுங்கியது.

(இ-ள்.) நிலைநின்ற இரத்தம் பொருந்தின வேலினையுடைய வன் வரைந்துகொள்ள நீட்டிப்ப, வலியுறுத்தலிழந்து நாயகி மனம் வாடியது.

---

வந்தாய் பவரையில் லாமயின் முட்டை யிளையமந்தி
பந்தா டிரும்பொழிற் பல்வரை நாடன்பண் போவிலிதே
கொந்தார் நறுங்கொன்றைக் கூத்தன்றென் றில்லை தொழார்
[குழுப்போற்
சிந்தா குலமுற்றுப் பற்றின்றி னையுந் [2] திருவினர்க்கே.

(பொ-ரை.) கொத்து நிறைந்து நறுநாற்றமுடைத்தாகிய கொன்றைமாலையை யணிந்த கூத்தனது தக்ஷிண திக்கினுண்டாகிய புலியூரைத் தொழாதாருடைய திரள்போல, பிரிந்தகாலத்துச் சிந்தையானது ஒருவர் ஆதாரமும் அன்றியிலே கிலேசித்து ஆறியிருக்கவல்ல பாக்கியமுடையவர்களுக்கு, சென்று ஆராய்வாரை உடைத்தல்லாத மயில் முட்டையைக்கொண்டு இளைய மந்திக் குரங்கு ஆடி விளையாடும் பெரிய பொழிலையுடைத்தாகிய பல மலைகளாற் சிறந்த நாட்டினையுடையவன் செய்திதான் அழகாயிருந்தது. (எ-று.)

திருவினர் என்றது குறிப்பாலே இழித்தபடி. வந்தாராய்பவரையில்லாத மயின்முட்டையைக் கொண்டுபோய் மந்திக்குரங்கு அதன் வருத்தமறியாமல் பந்தாடினாற்போல, நாயகரால் வந்தாராயப்படாத நம்மைக்கொண்டு பாங்கியானவள் தனக்கு வேண்டினது சொல்லி வருந்தி நின்றாளென்பது கருத்து.

---

276. தலைவி கூற்று:

(பா-ம்) [1]. வன்கறைவேலோன். [2]. திருவினெற்கே.

'நையுந் திருவினர்க்கென்றது, நையுந்துணையாயிரந்துபடாதிருந்து அவனளிபெற்ற ஞான்று இன்புறவெய்தும் நல்வினையாட்டியர்க்கென்றவாறு. எனவே, யானது பெறுமாறில்லை யென்றாளாம். உற்றதாராய்ந்து ஓம்புவாரில்லாத மயிலினது முட்டையால் ஈன்ற வருத்தமறியாத இளமந்தி, மயிலின் வருத்தமும் முட்டையின் மென்மையும் பாராது பந்தாடுகின்றாற்போலக் காதலரான் வினவப்படாத என் காமத்தை நீ யிஃதுற்றறியாமையான் எனது வருத்தமும் காமத்தினது மென்மையும் பாராது, இவ்வாறுரைக்கின்றாயென உள்ளுறை வகையாற் றோழியை நெருங்கி வன்புறை யெதிரழிந்தவாறு கண்டுகொள்க. அல்லதூஉம், வந்தாய்பவர் தோழியாகவும், இளமந்தி தலைமகனாகவும், பந்தாடுதல் தலைமகளது வருத்தம் பாராது தான்வேண்டிய வாறொழுகும் அவனதொழுக்கமாகவும், உரைப்பினுமமையும். திருவினெற்கே யென்பது பாடமாயின், இவ்வாறு வன்கண்மையேனாய் வாழுந்திருவையுடையேற்கென வுரைக்க. இதற்குத் திரு ஆகுபெயர்' (பே-ரை.)

'கான மஞ்ஞை யறையீன் முட்டை, வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும், குன்ற நாடன் கேண்மை யென்றும், நன்றுமன் வாழி தோழி யுண்கண், நீரொ டொராங்குத் தணப்ப, உள்ளாதாற்றல் வல்லு வோர்க்கே' (குறுந். 38) என்ற பாடலின் கருத்தை இதனோடு ஒப்பிடுக.

---

## 277. வாய்மைகூறி வருத்தந்தணிதல்

வேற்றடங் கண்ணியை
யாற்று வித்தது.

(இ-ள்.) வேல்போலுங் கண்ணையுடையாளை [1] ஆற்றப் படுத்தினது.

---

மொய்யென் பதேயிழை கொண்டவ னென்னைத்தன் மொய்
[கழற்காட்
செய்யென் பதேசெய்த வன்றில்லைச் சூழ்கடற் சேர்ப்பர்
[சொல்லும்
பொய்யென் பதேகருத் தாயிற் புரிகுழற் பொற்றொடியாய்
மெய்யென் பதேதுமற் றில்லைகொ லாமிவ் வியலிடத்தே.

(பொ-ரை.) வலிமையையுடைய என்பதனையே தனக்கு ஆபரணமாகக் கொண்டவன்; என்னைத் தன்னுடைய பெரிய சீபாதங்களுக்கு ஆட்செயவென்கிற கருத்தைச்செய்து நின்றவன்; [என்றபடி. ஏதென்னில், பேரறிவுடையராகிய பிரமன் மால்களுக்கு மயக்கத்தைக்கொடுத்தது. அவர்களிறந்துபடவே, அவர்களுடைய எலும்பைப் பூணாகப் பூண்டுநின்றவன் ஓரறிவு மில்லாத எனக்குத்தன்னை அறிவித்து, தனக்கு ஆட்செயச் செய்வித்துக் கொள்ளாநின்றான்] அவனுடைய பெரும்பற்றப் புலியூரைச் சூழ்ந்த கடலின் துறையையுடையவருடைய வார்த்தையும் பொய்யென்பதே நினைவாயாகி, நெறித்த கூந்தலினை யுடைய அழகிய வளையணிந்த கையையுடையாய்! இப்பெரு நிலத்து மெய்யென்பது சிறிது மில்லையாய்விடும். (எ-று.)

---

**277.** தோழி கூற்று.

(பா-ம்.) [1] ஆற்றும்படி சொன்னது.

---

### 278. தேறாது புலம்பல்

[1] தீதறுகுழலி தேற்றத்தேறாது
போதுறுகுழலி புலம்பியது

(இ-ள்.) குற்றமற்ற கூந்தலினையுடையவள் தெளிவிக்கத் தெளியாதே பூப்பொருந்தின கூந்தலினையுடையவள் வருந்தியது.

---

மன்செய்த முன்னாண் மொழிவழி யேயன்ன வாய்மைகண்டு
மென்செய்த நெஞ்சு நிறையு[1] நில் லாவென தின்னுயிரும்
பொன்செய்த மேனியன் றில்லை யுறாரிற் பொறையரிதா
முன்செய்த தீங்குகொல் காலத்து நீர்மைகொல் மொய்குழலே

(பொ-ரை.) நாயகனானவன் நமக்கு முன்னாட் சொன்ன வார்த்தைப்படியே அத்தன்மையாகிய உண்மையைக் கண்டும், என் நெஞ்சமும் நிறையும் நிற்கின்றனவில்லை. இவை என் செய்தனதாம்? என்னுடைய இனியவுயிரும் பொன்னை யொத்த திருமேனியையுடையவனுடைய பெரும்பற்றப்புலியூரை நெஞ்சிடைப் பொருந்தாதாரைப்போலே பொறையுடைமை அரிதாகி நின்றது. செறிந்த கூந்தலினை யுடையாய்! அதற்குக் காரணம், முற்பிறப்பிற் செய்த தீமையோ? கால நீர்மையோ? சொல்லுவாயாக வேண்டும். (எ-று.)

---

278. தலைவி கூற்று.

(பா-ம்) [1] தீதறுகண்ணி. [2] நில்லாது.

'உயிர் துன்பமுழத்தற்குக் காரணமாதலின், அதனையுந் துன்பமாக நினைந்து இன்னுயிரும் பொறையரிதாமென்றாள்.' (பே-ரை.)

---

## 279. காலமறைத்துரைத்தல்

காந்தள்கருவுறக் கடவுண்மழைக்கென்
றேந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

(இ-ள்.) காந்தாளானது அரும்ப, தெய்வத்தினால் வந்த மழைகாண் என்று மிக்க ஆபரணங்களையுடைய பாங்கி மிகுத்துச் சொன்னது.

---

கருந்தினை யோம்பக் கடவுட் பராவி நமர்கலிப்பச்
சொரிந்தன கொண்மூச் சுரந்ததன் பேரரு ளாற்றெழும்பிற்
பரிந்தெனை யாண்டசிற் றம்பலத் தான்பரங் குன்றிற்றுன்றி
விரிந்தன காந்தள் வெருவரல் காரென வெள்வளையே

(பொ-ரை.) பச்சென்ற தினையைப் பரிகரிப்பதாகத் தெய்வத்திற்குப் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு நம்முடைய உறவினர் ஆரவாரிக்க, நீரைச் சொரிந்தன மேகங்களானவை. தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பது மாணுக்கர்க்குச் சுரந்த பெரிய அருளைப் பொறுக்க மாட்டாமையினாலே தானும் வாய்மை மறுத்து என்னை அடிமை கொண்ட திருச்சிற்றம்பல நாதனுடைய திருப்பரங்குன்றிலே நெருங்கி விரிந்தன காந்தளானவை; வெள்ளிய வளைகளையுடையாய்! இது காரென்று பயப்படாதே; இது தெய்வமழை காண். (எ-று.)

---

## 279. தோழி கூற்று.

[1] சுரந்ததன்......சிற்றம்பலத்தான்' என்ற பகுதிக்குப் 'பொறுத்தற்கரிதாகச் சுரந்த பெரியவருளான் அடிமைக்குத் தகாத என்னைத் தன்னடிமைக் கண்ணே கூட்டி நடுவு நிலைமையின்றிப் பரிந்தாண்ட சிற்றம்பலத்தான்' என்று பொருள்கூறுவர் பேராசிரியர்.

---

## 280. தூதுவர வுரைத்தல்.

ஆங்கொரு தூதுவரப்
பாங்கிகண் டுரைத்தது.

(இ-ள்.) அவ்விடத்தே ஒரு தூதுவரப் பாங்கி கண்டு சொன்னது.

---

வென்றவர் முப்புரஞ் சிற்றம் பலத்துநின் ருடும்வெள்ளிக்
குன்றவர் குன்று வருடரக் கூடினர் நம்மகன்று
சென்றவர் தூதுகொல் லோவிருந் தேமையுஞ் செல்லல்செப் [பா
நின்றவர் தூதுகொல் லோவந்து தோன்று நிரைவளையே.

(பொ-ரை.) மூன்று புரங்களையும் வென்றவர்; திருச்சிற்றம்பலத்தே நின்றாடி யருளுகிற, வெள்ளிமலையையுடையவர்; அவருடைய குறைவுபடாத அருள் கொண்டுவந்து நமக்குத் தர நம்மைக் கூடிச் சிநேகித்தவர்; நம்மை விட்டுப் பிரிந்தவர்; அவர் நமக்கு விட்ட தூதோ? அவர் பிரிய ஆற்றவிருந்த எம்மிடத்தும் இன்னாமையைச் சொல்லா நின்ற ஏதிலார் தூதோ வந்து தோன்றுவது? [என்பதாவது, வருத்தம் சொல்லா நின்றவர்களுடைய தூதோ? (எ-று.)] நிரைத்தவளைகளையுடையாய்!

---

280. தோழி கூற்று.

உரைமிகவும் சிதைந்துள்ளது.

---

## ※ 281. தூதுகண்டழுங்கல்.

அயலுற்ற தூதுவரக்
கயலுற்றகண்ணி மயலுற்றது.

(இ-ள்.) அயலுற்ற தூதுவர-அயலார் தூதுவர, கயலுற்ற கண்ணி மயலுற்றது-கயலையொத்த கண்களையுடையாள் மயக்கமுற்றது.

---

வருவன செல்வன தூதுக ளேதில வான்புலியூர்
ஒருவன தன்பரி னின்பக் கலவிக ளுள்ளுருகத்
தருவன செய்தென தாவிகொண் டேகியென் னெஞ்சிற்றம் [மை
இருவின காதல ரேதுசெய் வானின் றிருக்கின்றதே.

(ப-ரை.) வருவன செல்வன தூதுகள் ஏதில-அயலாருடைய தூதுகள் வருவனவும் செல்வனவுமாயிருந்தன; வான்புலியூர் ஒருவனது அன்பரின்-பெரிய பெரும்பற்றப்புலியூரில் ஒப்பில்லாதவனுடைய அன்பரைப்போல, இன்பக் கலவிகள் உள்ளுருகத் தருவன செய்து-உள் உருகும்படி இன்பத்தைத் தருகிற கலவிகளைச் செய்து, எனது ஆவி கொண்டு ஏகி-என் உயிரைக் கொண்டுபோய், என் நெஞ்சில் தம்மை இருவின காதலர்-என்னுடைய நெஞ்சிலே தம்மை இருத்தின காதலர், ஏது செய்வான் இன்று இருக்கின்றதே-இப்பொழுது இருக்கின்ற இது என் செய்வதாகத்தான்! (எ-று.)

---

**281.** தலைவி கூற்று

* தஞ்சை, ஸரஸ்வதி மஹால் நூல்நிலையப்பிரதியில், இச்செய்யுள் முதல் நூலின் இறுதிவரை காணப்படும் உரை, அச்சில் முன்பே வெளிவந்துள்ள பேராசிரியர் உரையைப் பின்பற்றியதாகவேயுள்ளது. இங்கு, இனி, கொடுக்கப்பெறுபவை, அடையாறு, மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய ஏட்டுப்பிரதியிலுள்ளவை. இவை இப்பதிப்பில் இதுகாறும் காணும் உரையின் தொடர்ச்சியாகவே காணப்பெறுகின்றன.

---

## 282. மெலிவுகண்டு செவிலிகூறல்

வண்டமர் புரிகுழ லொண்டொடிமெலிய
வாடாநின்ற கோடாய் கூறியது

(இ-ள்.) வண்டமர் புரிகுழல்-வண்டுகள் அமரப்படாநின்ற நெறித்த கூந்தலினையுடைய, ஒண்டொடி மெலிய-அழகிய வளைகளையுடையாள் வாட, வாடாநின்ற-அதற்குத் தளராநின்ற, கோடாய் கூறியது-செவிலித்தாய் சொன்னது.

---

வேயின மென்றோண் மெலிந்தொளி வாடி விழிபிறிதாய்ப்
பாயின மேகலை பண்டைய ளல்லள் பவளச்செவ்வி
ஆயின வீச னமரர்க் கமரன்சிற் றம்பலத்தான்
சேயின தாட்சியிற் பட்டன ளாமித் திருந்திழையே

(ப-ரை.) வேய்இன மென்தோள் மெலிந்து ஒளி வாடி-வேயின் தன்மையாற் சிறந்த மெல்லிய தோள்களானவை மெலிந்து அழகு வாடி, விழிபிறிதாய்-விழிகளும் வேறுபட்டு, பாயின மேகலை-பரந்த மேகலையையுடையவள், பண்டையள் அல்லள்-பண்டைத்தன்மை உடையாளல்லள். பவளச் செவ்வி ஆயின ஈசன்-பவளத்தின் செவ்வி நிறத்தை யொத்த திரு மேனியையுடையவன்; அமரர்க்கு அமரன்-தேவர்களுக்கெல்லாம் தேவனுயுள்ளவன்; சிற்றம்பலத்தான்-திருச்சிற்றம்பல நாதன், சேயினது ஆட்சியில் பட்டாள்ஆம் இ திருந்திழையே-அவனுடைய திருமகனுகிய சுப்பிரமணியனுலே ஆளப்பட்ட இடத்தே சென்றுளாக வேண்டும், திருந்தின ஆபரணங்களையுடையாள். (எ-று.)

---

282. செவிலி கூற்று

---

## 283. கட்டுவைப்பித்தல்.

மால்கொண்ட கட்டுக்
கால்கொண்டது.

(இ-ள்.) மால்கொண்ட கட்டு-பெருமைகொண்ட கட்டை கால்கொண்டது-தொடங்கினது.

சுணங்குற்ற கொங்கைகள் சூதுற் றிலசொற் றெளிவுற்றில
குணங்குற்றங் கொள்ளும் பருவ முறுள் குறுகாவசுரர்
நிணங்குற்ற வேற்சிவன் சிற்றம் பலநெஞ் சுறுதவர்போல்
அணங்குற்ற நோயறிவு வுற்றுரை யாடுமி னன்னையரே.

---

(பு-ரை.) சுணங்குஉற்ற கொங்கைகள் சூது ற்றில-சுணங்கு பொருந்தின முலைகளானவை சூதின் வடிவைப் பொருந்தின வில்லை; சொல் தெளிவுற்றில - இன்னும் வார்த்தை(கள்) தெளிந்தனவில்லை; குணம் குற்றம் கொள்ளும் பருவம் உறாள் - நன்மையும் தீமையும் அறிகிற பக்குவத்தை அடைந்திலள்; குறுகா அசுரர் நிணம்குற்ற வேல் - தன்னை வந்து சேராத அசுர ருடைய நிணத்தைக் குத்திப் பறித்த சூலவேலினையுடைய, சிவன் - சிவனென்னும் திருநாமத்தையுடையவன், சிற்றம்பலம் நெஞ்சு உறாதவர்போல் - அவனுடைய திருச்சிற்றம்பலத்தை நெஞ்சிலே பொருந்தாதாரைப்போலே, அணங்கு உற்ற நோய் - தெய்வத்தை ஒப்பாள் உற்ற நோய், அறிவுற்று உரையாடுமின் அன்னையரே - தாய்மார், நீங்கள் விசாரித்துச் சொல்லுவீராக வேண்டும். (எ-று.)

---

283. செவிலி கூற்று.

குணம் குற்றம் கொள்ளும் பருவம் - பெதும்பைப் பருவம். (பே-ரை.)

---

## 284. கலக்கமுற்று நிற்றல்.

தெய்வத்திற் [1]றெளியுமென
எவ்வத்தின் மெலிவுற்றது.

(இ-ள்.) தெய்வத்திற் றெளியுமென - தெய்வத்தாலே தெளியுமென்று, எவ்வத்தின் மெலிவுற்றது - கிலேசத்தாலே மெலிவுற்றது.

---

மாட்டியன் றேயெம் வயிற்பெரு நாணினி மாக்குடிமா
சூட்டியன் றேநிற்ப தோடிய வாறிவ ளுள்ளமெல்லாம்
காட்டியன் றேநின்ற தில்லைத்தொல் லோனைக்கல் லாதவர்போல்
வாட்டியன் றோர்குழ லார்மொழி யாதன வாய்திறந்தே.

---

(பு-ரை.) ஓடியவாறு இவள் உள்ளம் எல்லாம் காட்டி - இவள் உள்ளம் ஓடின வழியெல்லாம் காட்டி, அன்றே நின்ற தில்லைத் தொல்லோனை - அன்றுதொட்டு நின்ற பெரும்பற்றப் புலியூரில் பழையவனை, கல்லாதவர்போல் — சீலி(?) யாதவர் களைப்போலே, வாட்டி - வாடப்பண்ணி, அன்று ஏர் குழலாள் மொழியாதன வாய் திறந்தே — அழகிய கூந்தலினையுடையவள் அன்று வாய்திறந்து சொல்லத்தகாதனவற்றை இப்பொழுது வாய்திறந்து சொல்லும்படி பண்ணி, மாட்டி அன்றே எம்வயின் பெருநாணினை — எம்மிடத்துண்டாகிய பெரிய நாணத்தை இப் பொழுது மாளப்பண்ணியல்லவோ, மாக்குடி மாசு ஊட்டியன்றே நிற்பது - இக்குடியை மாசு உண்ணப்பண்ணிவித்தல்லவோ இவள் நிற்பது ?

---

284. தோழி கூற்று.

(பா-ம்.) றெரியுமென.

'இவளென்றது கட்டுவித்தியையென்று இவணிற்பதெனக் கூட் டித் தலைமகள் கூற்றாக உரைப்பினுமமையும். தெய்வம் - கட்டுக்குரிய தெய்வம்' (பே-ரை.)

---

## 285. கட்டுவித்தி கூறல்.

கட்டு விச்சி
விட்டு ரைத்தது.

(இ-ள்.) கட்டுவிச்சி - கட்டுப்படுக்குமவள், விட்டுரைத் தது — விட்டுசொன்னது.

---

குயிலிதன் றேயென்ன லாஞ்சொல்லி கூறன்சிற் றம்பலத்தான்
இயலிதன் றேயென்ன லாகா விறைவிறற் சேய்கடவு
மயிலிதன் றேகொடி வாரணங் காண்க வன்சூர்தடிந்த
அயிலிதன் றேயிதன் றேநெல்லிற் றோன்று மவன்வடிவே.

(ப-ரை) குயில் இது அன்றே என்னலாம் சொல்லி கூறன்-குயிலோசை இதுதான் அல்லவோ என்று சொல்லாநின்ற வார்த்தையினையுடைய தேவியைப் பாகத்தேயுடையவன்; சிற்றம்பலத்தான்-சிற்றம்பலநாதன்; இயல் இது அன்றே என்னல் ஆகா இறை-அவனுடைய இயல்பு இது அன்றென்று சொல்லலாகாத சுவாமி (யினது), விறல்சேய் - வெற்றியையுடைய பிள்ளை, கடவு - அவர் கடாவுகிற, மயில் இது அன்றே - மயில் இதுவன்றோ? கொடி வாரணம் காண்க - அவனுக்குக் கொடியாகிய கோழியும் பாருங்கள்; வன் சூர் தடிந்த அயில் இது அன்றே - வலிய சூரனை வெட்டின வேல் இதுவன்றோ? இது அன்றே நெல்லில் தோன்றும் அவன் வடிவே - நெல்லிலே தோன்றினவன் வடிவு இதுவன்றோ? என்ன, அவனாலே வந்ததோ காணும் என்றது.

---

285. கட்டுவித்தி கூற்று.

(பா-ம்) 1. கட்டுவித்தி.

கட்டுப்பார்க்கும் வழக்கத்தைப் பற்றிய செய்யுட்களை நற்: 288; அகநா. 98; குறிஞ்சிப். 7. ந; பெருங். 37 : 235; திவ்: சிறியதிருமடல், 20-22; திவ். திருவாய் 4. 6 : 3; மீனாட்சியம்மைகுறம், 26 முதலிய நூல்களிற் காண்க.

---

## 286. வேலனை யழைத்தல்

வெறியாடிய வேலனைக்கூஉய்
நெறியார்குழலி தாயர்நின்றது

(இ-ள்.) வெறியாடிய வேலனைக்கூய் வெறியாடுவதாக வேலனை அழைத்துவிட்டு, நெறியார் குழலிதாயர் நின்றது-நெறித்த கூந்தலினையுடையாளுடைய தாயர் நின்றது.

வேலன் புகுந்து வெறியா டுகவெண் மறியறுக்க
காலன் புகுந்த வியக்கழல் வைத்தெழிற் றில்லைநின்ற
மேலன் புகுந்தென்க ணின்றா னிருந்தவெண் காடனைய
பாலன் புகுந்திப் பரிசினி னிற்பித்த பண்பினுக்கே.

(ப-ரை.) காலன் புகுந்து அவியக் கழல் வைத்து - காலனானவன் அவிந்து போம்படிக்கிடந்த சீபாதத்தை வைத்து, எழில் தில்லை நின்ற மேலன் - அழகிய பெரும்பற்றப்புலியூரிலே எழுந்தருளி நின்ற மேலாயுள்ளவன்; புகுந்து என்கண் நின்றான் - என்னிடத்தே புகுந்து எழுந்தருளி நின்றவன், இருந்த வெண்காடு அனைய - அவன் எழுந்தருளியிருந்த திருவெண்காட்டையொத்த, பாலன் புகுந்து இப்பரிசினில் நிற்பித்த பண்பினுக்கே - பிள்ளையானவன் புகுந்து இம்முறைமையாலே நிறுத்தின இயல்புக்கு, வேலன் புகுந்து வெறியாடுக - வேலனானவன் புகுந்து வெறியாடவும் அமையும்; வெண்மறியறுக்க - அதற்குப் பலியாக வெள்ளாட்டு மறியையும் அறுக்கவும் அமையும். (எ-று.)

---

286. தாயர் கூற்று:

'வெறியாடுதலேயன்றி இதுவும் தகாதென்னுங் கருத்தால், மறியறுக்கவெனப் பிரித்துக் கூறினாளாம். கழல் வைத்தென்றான் எளிதாகச் செய்தலான். பாலனென்னும் பான்மயக்கம் அதிகாரப் புறனடையாற் கொள்க' (பே-ரை.)

---

## 287. இன்னலெய்தல்

ஆடியவெறியிற் கூடுவதறியாது
நன்னறுங் கோதை யின்னலெய்தியது.

(இ-ள்.) ஆடிய வெறியில் - ஆடுகிற வெறியிடத்தே, கூடுவதறியாது - அவைபிற்றை யறியாதே, நன்னறுங்கோதை - நல்ல நறுநாற்றத்தையுடைய மாலையினையுடையவள், இன்னல்எய்தியது - கிலேசமுற்றது.

அயர்ந்தும் வெறிமறி யாவி செகுத்தும் விளர்ப்பயலார்
பெயர்ந்து மொழியா விடினென்னை பேசுவ பேர்ந்திருவர்
உயர்ந்தும் பணிந்து முணரான தம்பல முன்னலரிற்
றுயர்ந்தும் [1]பிறிதி னொழியினென் னுதுந் துறைவனுக்கே.

(ப-ரை.) அயர்ந்தும் வெறி – வெறியாடியும், மறி ஆவி செகுத்தும்-வெள்ளாட்டு மறியின் உயிரை அழித்தும், விளர்ப்பு அயலார் பெயர்ந்தும் ஒழியாவிடின் என்னைபேசுவ – விளர்ப்பமானது மீண்டு போகாதபொழுது அயலாரவர்கள் என்ன சொல்லுவார்கள்? பெயர்ந்து இருவர் - தங்கள் நிலைமையினின்றும் பெயர்ந்த பிரும்மா விட்டுணுக்கள் இருவருவம் அன்னமும் பன்றியுமாய், உயர்ந்தும் பணிந்தும் உணரான் - அன்னமாய் உயர்ந்தும் பறந்தும், பன்றியாய்த் தாழவிழுந்தும் உணரப்படாதவன், அம்பலம் உன்னலரின் - அவன் திருவம்பலத்தை உணராதாரைப்போலே, துயர்ந்தும் - வருந்தியும், பிறிதின் ஒழியின் – அந்நியமாயிருக்கிற வெறியாட்டிலே தீரில், என்னுதும் துறைவனுக்கே - துறைவனுக்கே அன்பு தரக்கடவேனுன். (?)

287. தலைமகள் கூற்று.

(பா-ம்.) 1. பிறிது மொழியின்

என்னுதும் என்பதற்கு, 'நாமென்னுதும்' எனப் பதவுரைகூறி 'தன்னைப் பிரிதல், துன்பமாய் இன்றியமையாத யாம் இத்தன்மையாகவும், அளிக்கின்றிலனெனவுட்கொண்டு, அவனை நாம் முன்னம் நெருங்க முயங்கு மன்பாமாறெல்லாம் இன்றென்னுமென்னுங் கருத்தால், என்னுது மென்முள்' என விளக்கங் கூறுவர் பேராசிரியர்.

---

## 288. வெறிவிலக்குவிக்க நினைதல்.

அயறருவெறியின் மயறருமென
விலக்கலுற்ற குலக்கொடி நினைந்தது

(இ-ள்.) அயல்தருவெறியின் - இந்நோய்க்கு [1] அயலார் ........கிற வெறியாட்டாலே, மயல்தருமென - மயக்கத்தைத் தருமென்று, விலக்கலுற்ற - விலக்குவதாக நினைத்த, குலக் கொடி நினைந்தது - அழகிய வஞ்சிக்கொடியை யொப்பாள் விசாரித்தது.

---

சென்றார் திருத்திய செல்ல னின்றார்கள் சிதைப்பரென்றால்
நன்றா வழகிதன் றேயிறை தில்லை தொழாரினைந்தும்
ஒன்றா மிவட்கு மொழிதல்கில் லேன்மொழி யாதுமுய்யேன்
குன்றார் துறைவர்க் குறுவே னுரைப்பனிக் கூர்மறையே

(ப-ரை.) சென்றார் திருத்திய செல்லல் - மறிந்தவர் உண்டாக்கின கிலேசத்தை, நின்றார்கள் சிதைப்பர் என்றால் - இந் நோய்க்குச் சிறிதும் பொருத்தமின்றியே நின்றவர்கள் போக்கு வார்களாமாகில், நன்றா அழகிது என்றே - மிகவும் அழகிதாய் இருந்ததன்றே! இறை தில்லை தொழார் இனைந்தும் - சுவாமி யுடைய பெரும்பற்றப்புலியூரைத் தொழாதாரைப்போலே கிலேசித்தும், ஒன்றும் இவட்கு மொழிதல்கில்லேன் - எனக்கு ஒன்றுபட்டிருக்கிறவளுக்கும் சொல்லாதிருக்(கிறேன்); மொழி யாதும் உய்யேன் - சொல்லாதே(யும்) உயிர்வாழமாட்டேன்; குன்று ஆர் துறைவர்க்கு உறுவேன் - மணற்குன்றுகளார்ந்த துறையினையுடையவர்க்குப் பொருந்தின நான், உரைப்பன் இக் கூர்மறையே - இச்சிறந்த......யினிச் சொல்லக்கடவேன். (எ-று.)

---

288. தலைமகள் கூற்று.

ஒன்றாமிவட்கு: 'ஒன்றித் தோன்றும் தோழி' (தொல். அகத். 39)

## 289. அறத்தொடுநிற்றலையுரைத்தல்.

வெறித்தலை வெரீஇ வெருவரு தோழிக்
கறத்தொடு நின்ற வாயிழை யுரைத்தது.

(இ-ள்.) வெறித்தலை வெரீஇ - வெறியாட்டிடத்துக்குப் பயப்பட்டு, வெருவருதோழிக்கு - பயப்படுகிற தோழிக்கு, அறத்தொடு நின்ற ஆயிழை உரைத்தது - அறத்தொடு நின்ற அழகிய் ஆபரணங்களையுடையாள் சொன்னது.

---

யாயுந் தெறுக வயலவ ரேசுக வூர்நகுக
நீயு முனிக நிகழ்ந்தது கூறுவ லென்னுடைய
வாயு மனமும் பிரியா விறைதில்லை வாழ்த்துநர்போல்
[1] தூய னினக்குக் கடுஞ்சூ டருவன் சுடர்க்குழையே.

(ப-ரை.) என்னுடைய வாயும் மனமும் பிரியா இறை - என்னுடைய வாக்கினின்றும் மனத்தினின்றும் நீங்காத சுவாமி; தில்லை வாழ்த்துநர்போல் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரை வாழ்த்துவாரைப்போலே, தூயன் நினக்கு - உனக்கு நான் தூயேன்; கடுஞ்சூள் தருவன் சுடர்க்குழையே - ஒளியுடைத் தாகிய மகரக்குழையினை யுடையாய்! கடிய சூளு(றவைத்) தரக் கடவேன்; யாயும் தெறுக - மாதாவும் கோபிக்க அமையும்; ஊர் நகுக - ஊரிலுள்ளாரும் சிரிக்க அமையும்; நீயும் முனிக - நீயும் என்னை முனிய அமையும்; நிகழ்ந்தது கூறுவேன் - புகுந்த படியைச் சொல்லக்கடவேன். (எ-று.)

---

289. தலைவி கூற்று.

1. பா-ம். தூயனெனக்கு

அலங்காரம், பரியாயம் - பொருண்முரணுமாம் (பே-ரை.)

## 290. அறத்தொடுநிற்றல்.

செய்தவெறியி னெய்துவதறியாது
சிறத்தொடித்தோழிக் கறத்தொடுநின்றது.

(இ-ள்.) செய்தவெறியின் - செய்யப்பட்டவெறியின், எய்துவதறியாது - வந்து புகுதுமத்தையறியாதே, சிறத்தொடித் தோழிக்கு அறத்தொடு நின்றது - சிறமுடைத்தாகிய வளைகளையுடைய தோழிக்கு அறத்தொடு நின்றது.

---

[1]வண்டலுற் றேமெங்கண் வந்தொரு தோன்றல் வரிவளையீர்
உண்டலுற் றேமென்று நின்றதொர் போழ்துடை யான்புலி [யூர்க்
கொண்டலுற் றேறுங் கடல்வர வெம்முயிர் கொண்டுதந்து
கண்டலுற் றேர்நின்ற சேரிச்சென் றேனோர் கழலவனே.

(ப-ரை.) வண்டல் உற்றேம் எங்கண் — விளையாட்டுப் பொருந்தின எங்களிடத்தே, வந்து ஒரு தோன்றல் - வந்து ஒரு தோன்றலானவன், வரிவளையீர் — அழகிய வளைகளையுடையீர்! உண்டல் உற்றேம் என்று வந்து நின்றது ஓர் போழ்து — உங்கள் சிற்றிலிலே உண்கைக்குப் பொருந்தினேமென்று நின்றதொரு அவசரத்திலே, உடையான் புலியூர் - உடையானுடைய பெரும் பற்றப்புலியூரிலே, கொண்டல் உற்றேறும் கடல்(வர) - கீழ்க் காற்றுப் பொருந்துதலாலே கரையிலே ஏறுகிற கடலானது, (எம்மேல்வர) எம் உயிர் கொண்டு தந்து — எங்கள் உயிரைப் பிழைப்பித்துக்கொண்டு தந்து, கண்டல் உற்று ஏர் நின்ற - கடல் மரம் பொருந்தி அழகு நிலைநின்ற, சேரி சென்றான் ஓர் கழலவனே — சேரியிடத்தே சென்றான், வீரக் கழலினையுடையான் ஒருவன்; இனித்தக்கது செய்வாயாக வேண்டும் என்றது; என்ற பொருளாய், அறத்தொடு நிற்கும்பொழுது உலகினோடு மாறு கொள்ளாமையும் தாய் காவலொடு மாறுகொள்ளாமையும்

வேண்டும். எங்ஙனமென்னில், தாய் காவலுடன் மாறு கொள்ளாமையாவது, அறிவதறியாக் காலத்தே செய்த தொன்றுகையாலே தாய் காவலுடனே மாறுகொள்ளாது; தன் காவலுடனே மாறுகொள்ளாமை, அயல் கூட்டத்தாரெல்லாரும் நிற்க.........செய்ததொன்றுகையாலே தன் காவலுடனே மாறுகொள்ளாது; உலகினோடு மாறுகொள்ளாமை, அறிவதறியாக் காலத்தே செய்த தோன்றை அறிந்ததற்குப் பின்னும் அவனே தெய்வமாகக் கொள்ளுகையினாலே உலகினோடு மாறு கொள்ளாது; கற்பினோடு மாறுகொள்ளாமையும் அதுதான். நாயகன் பெருமையுடன் மாறுகொள்ளாமை, பெண்களாயிருப்பார் நீரிலே புக்கு வருந்தக் கண்டிருக்கை முறைமையல்லவாகையாலே நாயகன் பெருமையுடனே மாறுகொள்ளாது. நாயகி பெருமையுடனே மாறுகொள்ளாமையும் முன்பு கற்புக்குச் சொன்னது.

---

290. தலைமகள் கூற்று.

விளையாடுகையில் தலைவனைக்கண்டு தலைவி நட்புச்செய்தல்:— குறுந்: 294; 326; கலி: 76: 1-3; அகநா. 110: 6-25; 180: 1-9; ஆகிய செய்யுட்களைக் காண்க.

---

## 291. ஐயந்திரக் கூறல்.

விலங்குதல்விரும்பு மேதகுதோழி
அலங்கற்குழலிக் கறியவுரைத்தது.

(இ-ள்.) விலங்குதல் விரும்பும் - வெறிவிலக்குதலை விரும்புகிற, மேதகு தோழி - மேம்பாடு தக்கதோழி, அலங்கல் குழலிக்கு - மாலையணிந்த கூந்தலினையுடையாளுக்கு, அறிய உரைத்தது - அறியும்படி சொன்னது.

---

குடிக்கலர் கூறினுங் கூறு வியன்றில்லைக் கூத்தனதாள்
முடிக்கல ராக்குமொய் பூந்துறை வற்கு முரிபுருவ
வடிக்கலர் வேற்கண்ணி வந்தன சென்றுநம் யாயறியும்
படிக்கல ராமிவை யென்னு மறைக்கும் பரிசுகளே.

(ப-ரை) குடிக்கு அலர் கூறினும் கூறு - நம் குடிக்கு இழிவு சொல்லினும், சொல்லவொண்ணாத, வியன் தில்லைக் கூத்தன தாள் - பெரிய பெரும்பற்றப்புலியூரில் கூத்தனாகிய முதலியார் சிபாதங்களை, முடிக்கு அலர் ஆக்கும் - தன் முடிக்குப் பூவாகக் கொள்ளுகிற, மொய் பூந்துறைவற்கு - பூவுடைத்தாகிய துறையையுடையவற்கு, முரி புருவ வடிக்கு அலர் வேல் கண்ணி - வளைந்த புருவத்தினையும் வடித்த அலருடைத்தாகிய வேலை யொத்த கண்களையுமுடையாய்! வந்தன-நமக்கு வந்த குற்றங்கள் சென்று நம் யாய் அறியும்படிக்கு அலராம் - நம்முடைய யாயானவள் அறியும்படி சென்று அலராக நின்றன; இவை என் நாம் மறைக்கும் பரிசுகளே - இவையிற்றை நாம் மறைக்கும்படி என் தான் சொல்லுவாயாக வேண்டும். (எ-று)

---

291. தோழி கூற்று.

வடிக்கலர் வேல் கண்ணி என்றதற்கு 'வடுவகிரிற் பரந்த வேல் போலும் கண்ணையுடையாய்' என்று உரை கூறிப் பின்னும் 'வடுவகிரோடு பிறபண்பாலொக்குமாயினும், பெருமையானெவ்வாதென்னும் கருத்தான்,வடிக்கலர் கண்ணென்றுள்' என்று விளக்கமும் கூறுவர் பேராசிரியர்.

---

## 292. வெறிவிலக்கல்.

அறத்தொடுநின்ற திறத்தினிற் பாங்கி
வெறிவிலக்கிப் பிறிதுரைத்தது.

(இ-ள்.) அறத்தொடு நின்ற திறத்தினில் - அறத்தொடு நின்ற முறைமையாலே, பாங்கி - பாங்கியானவள், வெறிவிலக்கிப் பிறிது உரைத்தது-வெறி விலக்கிப் பிறிதொன்றைச் சொன்னது.

---

விதியுடை யாருண்க [1]வெறிவி லக்கல மம்பலத்துப்
பதியுடை யான்பரங் குன்றினிற் பாய்புனல் யாமொழுகக்
கதியுடை யான்கதிர்த் தோணிற்க வேறு கருதுநின்னின்
மதியுடை தெய்வ மேயில்லை கொல்லினி வையகத்தே.

(ப-ரை.) விதியுடையார் உண்க வேரி - மது வுண்ண விதியுடையார் உண்ண அமையும். விலக்கலம் - இது விலக்கற் போந்தோமல்லோம். அம்பலத்துப் பதி உடையான் - திருவம்பலத்தை இருப்பிடமாகவுடையவன், பரங்குன்றினில் - அவனுடைய திருப்பரங்குன்றினிடத்து, பாய் புனல் யாமொழுக கதியுடையான் - பரந்த புனலிலே நாங்கள் முழுகிப் போக விரைந்து வருகிற (வார்த்தையுடைய)வன்; கதிர்தோள் நிற்க - அவனுடைய ஒளியுடைத்தாகிய தோள்களானவை நிற்க, வேறு கருதும் - நோய்க்குக்காரணமாக வேறே (எண்ணும்), நின்னின்- உன்னினுங் காட்டில், மதியுடையார், தெய்வமே, இல்லை கொல் இனி வையகத்தே - இந்நோய்க்குக் காரணம் வேறே தேடித் திரிகிற உன்னைப்போலே மதியுடையார் உலகத்து ஒருவரும் இல்லைபோலே இருந்தது; (தெய்வமே!)

---

## 292. தோழி கூற்று.

'ஓரிடத்தா னொதுக்கப்படாமையிற் பதியுடையவனென்று சொல்லப்படாதவன் அம்பலத்தின்கண் வந்து பதியுடையனாயினனென்பது பட உரைப்பினுமமையும். பரங்குன்றினினென்பதற்குப் 'பாலன்புகுந்திப் பரிசினினிற்பித்த' என்றற்குரைத்த (சிற். 286) துரைக்க. கதி-ஆண்டுச் சென்ற செலவு. கதிர்த்தோணிற்க வென்பதற்கு எடுத்ததற் பொருட்டு அவன்றோள் வந்து நிற்க வென்று பொருளுரைத்து அவ்வெச்சத்திற்கு முடிபாக்கினுமமையும். (பே-ரை.)

## 293. செவிலிக்குத் தோழியறத்தொடு நிற்றல்

சிறப்புடைச் செவிலிக்
கறத்தொடு நின்றது.

(இ-ள்.) சிறப்புடைச் செவிலிக்கு - சிறப்புடைச் செவிலித் தாய்க்கு, அறத்தொடு நின்றது - அறத்தொடு நின்றபடி.

---

மனக்களி யாயின்றி யான்மகிழ் தூங்கத்தன் வார்கழல்கள்
எனக்களி யாநிற்கு மம்பலத் தோனிருந் தண்கயிலைச்
சினக்களி யானை கடிந்தா ரொருவர்செவ் வாய்ப்பசிய
புனக்கிளி யாங்கடி யும்வரைச் சாரற் பொருப்பிடத்தே.

(ப-ரை.) மன களியாய் இன்று யான் மகிழ்தூங்க - உள்ளக் களிப் (புண்டு) இப்பொழுது நான் செம்மாந்திருப்ப; தன் வார்கழல்கள் - தன்னுடைய வார்கழலணிந்த சீபாதங்களை, எனக்கு அளியா நிற்கும் அம்பலத்தோன் - எனக்குத் தாராநிற்கிற திருவம்பலநாதன், இரும் தண் கயிலை - அவனுடைய மிகவுந் தட்பத்தினையுடைய பெரிய ஸ்ரீகயிலாயத்தில், சின களியானை கடிந்தார் ஒருவர் - சினக்களி யானையை ஓட்டினரொருவர்; செவ்வாய் பசிய - சிவந்த வாயினையும் பச்சென்ற நிறத்தினையுமுடைத்தாகிய, புனகிளியாம் கடியும் -புனத்திற் கிளியை நாங்கள் ஓட்டுகிற, வரை சாரல் பொருப்பிடத்தே - மலையிற் சாரலுடைத்தாகிய பக்கமலையிடத்தே, ஓட்டினர் ஒருவர் என்ன, அவர்க்கு வரைந்துகொடுக்க வேண்டும் என்று படும்.

---

293. தோழி கூற்று.

'கிளிகடியும் பருவமென்றதனாற் கற்பினோடு மாறுகொள்ளாமை முதலாயின கூறினாம்' (பே-ரை.)

## 294. நன்றாய்க்குச் செவிலியறத்தொடு நிற்றல்

கற்பினின்வழாமை நிற்பித்தெடுத்தோள்
குலக்கொடி தாயர்க் கறத்தொடு நின்றது.

(இ-ள்.) கற்பினின் வழாமை நிற்பித்து - கற்பினின்று வழுவாமற் பண்ணி, எடுத்தோள் - எடுத்து வளர்த்த செவிலித் தாயானவள், குலக்கொடி தாயர்க்கு - அழகிய வஞ்சிக்கொம்பை யொப்பாளுடைய நற்றாய்க்கு, அறத்தொடு நின்றது - அறத் தொடு நின்றபடி.

---

இளையா ளிவளையென் சொல்லிப் பரவுது மீரெயிறு
முளையா வளவின் முதுக்குறைந் தாண்முடி சாய்த்திமையோர்
வளையா வழுத்தா வருதிருச் சிற்றம் பலத்து மன்னன்
திளையா வருமரு விக்கயி லைப்பயில் செல்வியையே.

(ப-ரை.) முடிசாய்த்து இமையோர் - முடியைச் சாய்த்துத் தேவர்களானவர்கள், வளையா வழுத்தா வரு - சூழ்ந்து புகழ்ந்து வருகிற, திருச்சிற்றம்பலத்து மன்னன் - திருச்சிற்றம்பலத் துத் தலைவன், திளையாவரும் அருவிக் கயிலை பயில் செல்வியையே - திளைத்து வருகிற அருவியையுடைய யுடைத் தாகிய ஸ்ரீ கயிலாயத்தே வாழுகிற செல்வத்தை யுடைய(வளை), இளையாள் இவளை - இளையாளாகிய இவளை, என் சொல்லி பரவு தும் - எதைச் சொல்லிப் புகழ்வோம்? ஈரெயிறு முளையா அள வின் முதுக்குறைந்தாள் - முற்படத் தோன்றக்கூடிய இரண்டு எயிறும் தோன்றுவதற்கு முன்னே அறிவு முதிர்ந்துவிட்டாள். (எ-று.)

---

294. செவிலி கூற்று.

திளையா வருமருவி: 'கன்னிநாரையைத் திளைத்தலிற் பெடைமயில் தெருட்டும் (சீவக-50) தேனு மமிழ்தும் திளைத்தாங் கினியன' (சீவக; 519). திளைத்தல் - அமுதொழுகுதல் (ந-உரை)

## 295. தேர்வரவு கூறல்

மணிநெடுந்தேரோ னணிதினின்வருமென
யாழியன்மொழிக்குத் தோழிசொல்லியது.

(இ-ள்.) மணிநெடுந்தேரோன் - மணிகட்டப்பட்ட நெடிய தேரினையுடையவன், அணிதினில் வருமென - அண்ணிதாக வருவனென்று, யாழியல் மொழிக்கு - யாழோசையை யொத்த வார்த்தைய யுடையாளுக்கு, தோழி சொல்லியது - தோழி சொன்னது.

கள்ளின மார்த்துண் ணும் வண்கொன்றை யோன்றில்லைக்
[கார்க்கடல்வாய்ப்
புள்ளின மார்ப்பப் பொருதிரை யார்ப்பப் புலவர்கடம்
வள்ளின மார்ப்ப மதுகர மார்ப்ப வலம்புரியின்
வெள்ளின மார்ப்ப வரும்பெருந் தேரின்று மெல்லியலே

(ப-ரை.) கள் இனம் ஆர்த்து உண்ணும் வண் கொன்றையோன் - வண்டுச்சாதிகள் ஆரவாரித்து உண்கிற வளவிய திருக்கொன்றை (மாலையையுடையோனது), தில்லை கார் கடல் வாய் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்த கடலிடத்து, புள் இனம் ஆர்ப்ப-புட்கள் (ஆரவாரிக்கவும்,) பொருதிரை ஆர்ப்ப - கரையோடேபொருகிற திரைகள் ஆரவாரிப்பவும், புலவர்கள் தம் வள்ளினம் ஆர்ப்ப புலவருடைய வளவிய திரள்கள் ஆரவாரிப்பவும் (மதுகரம் ஆர்ப்ப-வண்டுகள்ஆரவாரிப்பவும்), வலம்புரியின் வெள்ளினம் ஆர்ப்ப - சங்கினுடைய வெள்ளிய திரள்கள் ஆரவாரிப்பவும், வரும் பெருந்தேர் இன்று மெல்லியலே - மெல்லிய இயல்பினையுடையாய்! இப்பொழுது ஒரு பெரிய தேர் வாராநின்றது காண். (எ-று)

---

295. தோழி கூற்று.

கள்- வண்டு. (பதிற்- 27.)

'கரந்த வொழுக்கத்து மணியொலி யவித்து வந்ததேர், வரைந்தெய்த இவ்வரவத்தோடும் வருமென மகிழ்ந்து கூறியவாறு. கள் என்பது வண்டினுள் ஒருசாதி யென்பாருமுளர். புள்ளினத்தையும் பொருதிரையையும் அவன் வரவிற்கு உவந்தார்ப்பனபோலக் கூறினாள். இதனை மிகைமொழிப்பாற் படுத்திக்கூறுக.' (பே-ரை.)

## 296. மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்தல்

நிலங்காவலர் நீண்மணத்தின்
நலங்கண்டவர் நயந்துரைத்தது.

(இ-ள்.) நிலங்காவலர் - பூமியைக் காக்கிறவருடைய, நீண் மணத்தின் - நீண்ட மணத்தின், நலங்கண்டவர் - நன்மையைப் பார்த்தவர்கள், நயந்துரைத்தது - விரும்பிச் சொன்னது.

---

பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம் பொன்பொதிந்த
தோரண நீடுக தூரிய மார்க்கதொல் மாலயற்கும்
காரண னேரணி கண்ணுத லோன்கடற் றில்லையன்ன
வாரண வும்முலை மன்றலென் றேங்கு மணமுரசே.

(ப-ரை.) தொல் மால் அயற்கும் காரணன் - பழைய மாலுக்கும் அயனுக்கும் காரணமாயுள்ளவன்; ஏர் அணி கண்ணுதலோன் - அழகு பொருந்தின திரு நயனத்தையும் அழகிய திருநெற்றியினையும் உடையவன்; கடல் தில்லை அன்ன - அவனுடைய கடல் சூழ்ந்த பெரும்பற்றப் புலியூரையொத்த, வார் அணவும் முலை ......முலையினையுடையவளுடைய, மன்றல் ஏங்கும் மணமுரசே - கலியாணம் என்று (ஏங்கும்) ஆரவாரியா நின்றன (மணமுரசுகள்); பூரண பொற்குடம் வைக்க - நன்றாகிய நிறைந்த பொற்கரகத்தையும் வைக்க; மணி முத்தம் பொன் பொதிந்த தோரணம் நீடுக - தோரணத்திலே நீலமணியினையும் முத்தினையும் (பொன்னையும்) நன்றாகச் செய்யுங்கள்; தூரியம் ஆர்க்க - வாத்தியங்களை முழங்கச் சொல்லுக. (எ-று.)

---

296. மனையிலுள்ளார் கூற்று.

வார் அணவு முலை என்பதற்கு 'வாரால் கட்டப்படுமளவைச் சென்றணவும் முலை' என்று பதவுரையும், 'வாரைப் பொருந்து முலையெனினுமமையும்' என்று விளக்கப்பொருளும் வரைவர் பேராசிரியர்.

## 297. ஐயுற்றுக் கலங்கல்

நல்லவர்முரசுமற் றல்லவர்முரசெனத்
தெரிவரிதென வரிவைகலங்கியது

(இ-ள்.) நல்லவர் முரசு - நாயகருடைய முரசை, அல்லவர் முரசென - மற்றந்த அயலார் முரசென்று, தெரிவு அரிதென - தெரிகையரிதென்று, அரிவை கலங்கியது - நாயகி கிலேசித்தது.

—

[1] அடற்களி யாவர்க்கு மன்பர்க் களிப்பவன் றுன்பவின்பம்
படக்களி யாவண் டறைபொழிற் றில்லைப் பரமன்வெற்பிற்
கடக்களி யானை கடிந்தவர்க் கோவன்றி நின்றவர்க்கோ
விடக்களி யாநம் விழுநக ரார்க்கும் வியன்முரசே.

(ப-ரை.) அடல்களி யாவர்க்கும் அன்பர்க்கு அளிப்பவன் - வெற்றியுடைத்தாகிய களிப்பைத் தனக்கு அன்பரானவர்யாவர் சிலர்க்கும் கொடுப்பவன், துன்ப இன்பம் பட - இன்ப துன்பம் படும்படிக்கு [ஈடாகத் தனக்கு ஒப்பார் சிலர் யாவர்க்கும் கொடுக்கிறவன்;] களியாவண்டு அறை பொழில்-களித்து வண்டுகள் ஆரவாரிக்கிற பொழில் சூழப்பட்ட, தில்லைப் பரமன் வெற்பில் - பெரும்பற்றப்புலியூருக்குப் பழையனாகிய முதலியாருடைய மலையில், கடகளியானை கடிந்தவர்க்கோ - உள்ளக்களிப்பை யுடைத்தாகிய மதயானையை நம்மிடத்தில் வாராமல் ஓட்டினவர்க்கோ? அன்றி நின்றவர்க்கோ - ......சிலர்க்கோ? விடகளியா - மிகவும் களித்து, நம் விழுநகர் ஆர்க்கும் வியன்முரசே - நம்முடைய விழுமிய நகரியிலே ஆரவாரிக்கிற பெரிய முரசமானது ஆர்க்கின்றது? அறிகிறோமில்லை.

---

297. தலைவி கூற்று.

பா-ம் 1. அடக்களி.

'துன்ப இன்பம் பட அடல் களியாவர்க்கும் அன்பர்க்கு அளிப்பவன் - பிறவியான் வரும் துன்பமின்பமும் கெட இயல்பாகிய பேரின்பத்தை யாவராயினும் அன்பராயினர்க்கு வரையாது கொடுப்போன்." (பே-ரை.)

## 298. நிதிவரவு கூறுநிற்றல்

மகிழ்தரு மனத்தொடு வண்புகழ்த்தோழி
திகழ்நிதி மடந்தைக்குத் தெரியவுரைத்தது.

(இ-ள்) மகிழ்தரு மனத்தொடு - மகிழ்ச்சியைத் தருகிற மனத்துடனே, வண்புகழ் தோழி - வளவிய புகழையுடைய பாங்கி, திகழ்மனை கிழத்திக்கு - வளவிய மனைக்கிழத்தியாகிய நற்றாய்க்கு, தெரிய உரைத்தது - தெரியும்படி சொன்னது.

---

என்கடைக் கண்ணினும் யான்பிற வேத்தா வகையிரங்கித்
தன்கடைக் கண்வைத்த தண்டில்லைச் சங்கரன் றாழ்கயிலைக்
கொன்கடைக் கண்டரும் யானை கடிந்தார் கொணர்ந்திறுத்தார்
முன்கடைக் கண்ணிது காண்வந்து தோன்று முழுநிதியே.

(ப-ரை.) என் கடைக் கண்ணினும் - கடையாகிய என்னிடத்திலும், யான் பிற ஏத்தாவகை இரங்கி - நான் பிற தெய்வங்களை வாழ்த்தாதபடி தானே இரங்கி, தன் கடைக்கண் வைத்து - தன்னுடைய திருக்கடைக்கண் வைத்து, தண் தில்லை சங்கரன் - குளிர்ந்த பெரும்பற்றப்புலியூரில் சங்கரனாகியவன், தாழ் கயிலை - அவனுடைய நீண்ட கயிலாயத்திலே, கொன் கடைக் கண் தரும் யானை கடிந்தார் - அச்சத்தைச்.........தரும் யானையை ஓட்டியவர், கொணர்ந்து இறுத்தார் - கொண்டு வந்துவிட்டார்; முன் கடைக்கண்ணிது காண் - உன் கடைக்கண் முன்னே பாராய், வந்து தோன்றும் முழுநிதியே - வந்து தோன்றுகிற நம் உறவின் முறையாராலே சொல்லப்பட்ட முழுநிதியைக் [கடைக்கண் முன்னே பாராய்]. (எ-று.)

---

298. தோழி கூற்று.

கடைக்கணென்பதனை முடிவாக்கி, என் முடிவுகாலத்தும் பிற வேத்தா வகை யென்றுரைப்பாருமுளர். கொன்கடைக் கண்டரும் யானை யென்பதற்கு அச்சத்தைக் கடைக்கண் தரும்யானை என்றுரைப்பாருமுளர். (பே-ரை.)

45 வரைபொருட்பிரிதல் முற்றிற்று.

## 19. மணஞ்சிறப்புரைத்தல்

மணஞ் சிறப்புரைத்தல் என்பது வரைந்த பின்னர் மணஞ் சிறப்புக் கூறு நிற்றல். அதற்குத் துறைகள் ஒன்பது. அவை பின் வருமாறு:—

[1] மணமுரசுகூறல், [2] மகிழ்ந்துரைத்தலொடு,
[3] வழிபாடுகூறல், [4] வாழ்க்கை நலங்கூறல்,
[5] காதல்கட்டுரைத்தல், [6] கற்பறிவித்தல்,
[7] கற்புப்பயப்புரைத்தல், [8] காதன்மருவுரைத்தல்,
[9] கலவியுரைத்தல், கருதிய வொன்பது
நலமிகு மணமிவை நாடுங்காலே. (பே-ரை)

---

### 299. மணமுரசு கூறல்

வரைவுதோன்ற மகிழ்வுறுதோழி
நிரைவளைக்கு நின்றுரைத்தது.

(இ-ள்) வரைவுதோன்ற மகிழ்வுறுதோழி — கலியாணம் தோன்ற மகிழ்ச்சியுறுகிற தோழி, நிரை வளைக்கு நின்று உரைத்தது — நிரைத்த வளையினையுடையாளுக்கு நின்று சொன்னது.

---

பிரசந் திகழும் [1] வரைபுரை யானையின் பீடழித்தார்
முரசந் திகழுமுரு [2] கியநீங்கு மெவர்க்கு முன்னும்
அரசம் பலத்துநின் றாடும்பிரா னருள்பெற் றவரிற்
புரைசந் தமேகலை யாய்த்துயர் தீரப் புகுந்துநின்றே.

(ப-ரை.) எவர்க்கும் முன்னும் அரசு—எல்லாத் தேவர்களுக்கும் முன்னையுண்டாகிய அரசாயுள்ளவன்; அம்பலத்து நின்றாடும் பிரான்— திருவம்பலத்தே நின்றாடியருளுகிற தலைவன்; அருள் பெற்றவரின் - அவனுடைய திருவருளைப் பெற்றவர்களைப்

போலே, புரை சந்த மேகலையாய்- மேலான சிறப்புடைத்தாகிய மேகலாபரணத்தினையுடையாய்! துயர் தீர புகுந்து நின்றே- கிலேசம் தீரும்படிக்கு ஈடாகப் புகுந்து நின்று, பிரசம் திகழும்வரை- தேன் விளங்குகிற மலையில், புரை யானையின் பீடு அழித்தார்- மலையை யொத்த யானையின் பெருமையை அழித்தவர், முரசும் திகழும்—முரசானது விளங்கா நின்றது; முருகியம் நீங்கும்— முருகனுக்குக் கொடுக்கிற வாத்தியங்களெல்லாம் நீங்காநின்றன. ஆகையால் நீ கிலேசிக்க வேண்டாம் காண் என்றபடிம்.

---

299. தோழி கூற்று.

(பா-ம்.) [1] வரையுயர் யானை [2]. முருகுங் கமழும்.

[1] முருகுங்கமழுமென்று பாடமோதி, கலியாணத்திற் குறுப்பாம் நறுவிரை நாறு நின்றன வென்றுரைப்பாருமுளர்' (பே-ரை.)

## 300. மகிழ்ந்துரைத்தல்

மன்னியகடியிற் பொன்னருங்கோதையை
நன்னுதற்றோழி தன்னின் மகிழ்ந்தது.

(இ-ள்.) மன்னிய கடியில் – நிலைபெற்ற கலியாணத்தில் பொன்னருங்கோதையை- அழகிய நாற்றமுடைத்தாகிய மாலையினையுடையாளை, நன்னுதற்றோழி - நல்ல நெற்றியினையுடைய பாங்கி, தன்னின் மகிழ்ந்தது- தன்னிலே மகிழ்ந்தது.

---

இருந்துதி யென்வயிற் கொண்டவன் யானெப் பொழுது [முன்னு
மருந்து திசைமுகன் மாற்கரி யோன்றில்லை வாழ்த்தினர்போல்
இருந்து திவண்டன வாலெரி முன்வலஞ் செய்திடப்பால்
அருந்துதி காணு மளவுஞ் சிலம்ப னருந்தழையே,

(ப-ரை.) இருந்துதி என் வயின் கொண்டவன் - மிக்க துதிப்பை என்னிடத்தே கொண்டவன்; யான் எப்பொழுதும் உன்னும் மருந்து- நான் எப்பொழுதும் நினைக்கிற மருந்தாயுள்ளவன்; திசைமுகன் மாற்கு அரியோன் – திக்குகள் தோறும் முகமுடைத்தாகிய பிரம(னுக்கும்) விட்டுணுக்(கும்) அரியனாயுள்ளவன்; தில்லை- அவனுடைய பெரும்பற்றப்புலியூரை, வாழ்த்தினர் போல்-வாழ்த்தினவரைப் போலே, இருந்து திவண்டன-இருந்து விளங்கின, வால் எரி முன் வலம்செய்து– வலிதாக எரியை வலம் செய்து, இடப்பால் அருந்துதி காணும் அளவும்–வசிட்டனுக்கு இடப்பாகத்தளாகிய அருந்துதியைக் காணும் அளவும், சிலம்பன் அருந்தழையே - சிலம்பன் அரிய தழையை [விளங்கின] என்ன, அவர் வரைந்து கொள்ளுமளவு அத்தழையைப் பற்றுக்கோடாகக் கொண்டு ஆற்றினளென்று பாங்கி பிரியப்பட்டுச் சொன்னது.

---

**300.** தோழி கூற்று.

'வேய்வன மென்றோள் (282) என்பது தொட்டு, இதுகாறும்வர இப்பாட்டுப் பத்தொன்பதும் அறத்தோடு நிலையினும், அதன் பின்னர் வரைதலையும் அதலினவென்பது. அகத்திணையின் மிகத்திகழும் இன்பக்கலவி இன்பக்களவு முற்றிற்று. எண்பத்தோராம் பாட்டு முதல் இப்பாட்டீறாகத் தோழியாலாய கூட்டம். (பே-ரை.)

---

## 301. வழிபாடு கூறல்

மணமனைகாண வந்தசெவிலிக்குத்
துணைமலர்க்குழலி தோழிசொல்லியது.

(இ-ள்.) மணமனை காண வந்த செவிலிக்கு– கலியாண மனை காண வந்த செவிலிக்கு, துணை மலர் குழலி தோழி சொல்லியது- இணையொத்த மலரணிந்த கூந்தலையுடையாளுடைய தோழி சொன்னது.

---

சீரிய லாவியும் யாக்கையு மென்னச் சிறந்தமையாற்
காரியல் வாட்கண்ணி யெண்ணக லார்கம லங்கலந்த
வேரியுஞ் சந்தும் வியறந் தெனக்கற்பி னிற்ப[1] ரன்னே
காரியல் கண்டர்வண் டில்லை வணங்குமெங் காவலரே.

(ப-ரை.) கார் இயல் கண்டர்- பருவமேகத்தை (யொத்த) கருமிடற்றையுடையவர்; வண்தில்லை வணங்கும் எம் காவலர்— அவருடைய வளவிய பெரும்பற்றப்புலியூரை வணங்குகிற எம்முடைய காவலரானவர், சீர் இயல் ஆவியும் யாக்கையும் என்ன சிறந்தமையால் — சீர்புடைத்தாகிய உடம்பும் உயிருமென்னச் சிறந்தமையாலே, கார் இயல் வாள் கண்ணி எண் அகலார்-கருமை பொருந்தின ஒளி ஆர்ந்த கண்களையுடையவளுடைய விசாரத்தினின்றும்நீங்கார்; கமலம் கலந்த வேரியும்-செந்தாமரைப் பூவிலே பொருந்தின தேனும், சந்தும்—சந்தன மரமும், வியல் தந்தெனதம்மிலொத்து...விளங்கினாற் போல, கற்பின் நிற்பர் அன்னே - தாயே! நாயகியுடைய கற்பிடத்தே நிற்பர் காண். (எ-று.)

---

301. தோழி கூற்று.

(பா-ம்.) [1] இன்னே.

'எண்ணகலா ரென்றதனாற் காதலியாதலும், கற்பினிற்பரென்றதனால் வாழ்க்கைத் துணையாதலுங் கூறப்பட்டன. ஆவியும் வேரியும் தலைமகட்குவமையாகவும், யாக்கையும் சந்தும் தலைமகற்குவமையாகவும் உரைக்க. பிரித்துவமையாக்காது, இவரது கூட்டத்திற்கு அவற்றது கூட்டமுவமையாக உரைப்பினுமமையும்' (பே-ரை)

---

## 302. வாழ்க்கை நலங்கூறல்

மணமனைச்சென்று மகிழ்கருசெவிலி
அணிமனைக்கிழத்திக் கதன்சிறப்புரைத்தது.

(இ-ள்.) மணமனை சென்று— கலியாணமனையிலே சென்று, மகிழ்தரு செவிலி—மகிழ்ச்சி விரும்புகிற செவிலித் தாயானவள்,

அணிமனை கிழத்திக்கு- அழகிய மனைக்கிழத்தியாகிய நற்றாய்க்கு, அதன் சிறப்பு உரைத்தது- மிக்க சிறப்பைச் சொன்னது.

——

தொண்டின மேவுஞ் சுடர்க்கழ லோன்றில்லைத் தொன்னகரிற்
கண்டின மேவு மில்லியவ ணின்கொழு நன்செழுமென்
றண்டின மேவுதிண் டோளவன் யானவ டற்பணிவோள்
வண்டின மேவுங் குழலா ளயன்மன்னு மிவ்வயலே.

(ப-ரை) தொண்டினம் மேவும் சுடர் கழலோன்- அடியார் திரள் பொருந்தின ஒளியுடைத்தாகிய ஸ்ரீபாதங்களையுடையவன்; தில்லை தொல் நகரில் - அவனுடைய பெரும்பற்றப்புலியூராகிய பழைய நகரில், கண்ட இல்-என்னாற் காணப்பட்ட அவளுடைய இல்லமானது, நம்மேவும் இல்- நம்முடைய பொருந்தின இல்லத்தோடொக்கும்; நீ அவள்-உன்னை ஒத்திருப்பள் அவள்; செழுமெல் தண்டு இனம் மேவும் தோளவன்- வளவியதாய் மெத்தென்று தண்டாயுதத்தின் திரள்களை யொத்த தோள்களையுடையவன், நின் கொழுநன்- உன்னுடைய கொழுநன் தானுயிருக்கும்; யான் அவள் தற்பணிவோள்- அவளை வணங்குகிறவள், என்னை ஒத்திருக்கும்; வண்டினம் மேவு குழலோள்- வண்டுச் சாதிகள் பொருந்தின கூந்தலையுடையவளின், அயல் மன்னும் இவ்வயலே- அயலார், நம்முடைய் நிலைபெற்ற அயலோ டொப்பார்கள். (எ-று)

---

302. செவிலி கூற்று.

'பெண்டீர்க்கு ஊறினி தாதனைக்கித் தோளிற்கு மென்மை கூறினார்' (பே-ரை.)

## 303. காதல் கட்டுரைத்தல்

சோதி வேலவன்
காதல் கட்டுரைத்தது.

(இ-ள்.) சோதி வேலவன் – ஒளியுடைத்தாகிய வேலினை யுடையவன், காதல் கட்டுரைத்தது - அன்பு இயல்பைச் சொன்னது.

---

பொட்டணி யானுதல் போயினும் பொய்போ லிடையெனப்
இட்டணி யன்[1] றவி சின்மல ரன்றிமி திப்பக்கொடான் [பூண்
மட்டணி வார்குழல் வையான் மலர்வண் டுறுதலஞ்சிக்
கட்டணி வார்சடை யோன்றில்லை போலிதன் காதலனே.

(ப-ரை.) போய் இறும் பொய்போல் இடையென – பொய்யை யொத்த இடையானது நைந்து முறியுமென்று, பூண் இட்டு அணியான் – ஆபரணங்களைப் பூட்டி அலங்கரியான்; தவிசின் மலரன்றி மிதிப்ப கொடான் - படுக்கையிலே மிதிக்கும் பொழுது இவள் கால் நோவுமென்று மலரின்றி மிதிப்பக் கொடான்; மட்டு அணிவார் குழல் வையான் மலர் வண்டு உறுதல் அஞ்சி – தேனுடைத்தாகிய நீண்ட கூந்தலிலே வண்டுகள் (சேர்கின்றனவோ) என்று பயப்பட்டு மலரையும் வையான்; கட்டு அணிவார் சடையோன் - கட்டப்பட்டு அழகியதாய் நீண்ட திருச்சடாபாரத்தையுடையவன், தில்லை போலிதன் காதலனே- அவனுடைய பெரும்பற்றப்புலியூரை யொப்பாளுடைய காதல னவன். [இவையித்தனையும் செய்யான் காண்; இவை செய் யாதிருக்க, கேட்கவேண்டுமோ, இடை ஒடியுமென்று பயப் பட்டு,] பொட்டு அணியான் நுதல் – நெற்றியில் திலக முதலாக இட்டு அலங்கரியான் காண். (எ-று.)

---

**303.** செவிலி கூற்று.

(பா-ம்) 1. தவிசின் மிசை

பொட்டு அணியாமை: 'திருநுதல் திலகமும் சுமத்த லாற்றாள்' (பெருங்: 5: 1. 139). கட்டணி வார் சடையோன், கட்டு-மிகுதி. 'கட்டழி காமத்தீயில்' (சிந்தா. 255)

## 304. கற்புறிவித்தல்.

[1] விற்பயில் நுதலிவள்
கற்பறி வித்தது.

(இ-ள்.) வில் பயில் நுதல் இவள் - வில்லை யொத்த நெற்றியினை யுடையாளுடைய, கற்பு அறிவித்தது - கற்பை அறிவித்தது.

---

தெய்வம் பணிகழ லோன்றில்லைச் சிற்றம்பலமனையாள்
தெய்வம் பணிந்தறி யாளென்று நின்று திறைவழங்காத்
தெவ்வம் பணியச்சென் றாலுமன் வந்தன்றிச் சேர்ந்தறியான்
பௌவம் பணிமணி யன்னார் பரிசின்ன பான்மைகளே.

(ப-ரை) தெய்வம் பணி கழலோன் - பிறராற் கொண்டாடப்படும் தெய்வங்கள் வணங்குகிற ஸ்ரீபாதத்தையுடையவன்; தில்லை சிற்றம்பலம் அனையாள் - அவனுடைய பெரும்பற்றப் புலியூரில் திருவம்பலத்தை யொப்பாள், தெய்வம் பணிந்து அறியாளென்று - ஒரு நாளும் தன் பர்த்தாவாகிய தெய்வம் ஒழிய வேறொரு தெய்வத்தை வணங்கி யறியாளென்று, நின்று திறை வழங்காத் தெவ்வம்பணியச் சென்றாலும் - முன்னின்று திறை கொடாத சத்துருக்கள் எதிர்ப்புத் தொடுக்கையினாலே, அவர்கள்மேல் (அம்பை) எடுத்துவிட்டுச்சென்றாலும், பின் வந்து அன்றிச் சேர்ந்து அறியான்-அவருடைய மன்னனைவன் அதை முடித்து இவளிடத்தேவந்து அவதரிக்குமது அல்லால் வேறொரு இடத்தில் அவதரித்தறியான்; பௌவம் பணிமணி அன்னார்பரிசு இன்ன பான்மைகளே - கடல் தந்த முத்தும், பணி தந்த சிகாமணியும் ஒத்த பெரிய வமிசத்துப் பிறந்து உய்வோருடைய முறைமைகள் இத்தன்மைத்தாயிருந்தன. (எ-று)

---

304. செவிலி கூற்று.

(பா-ம்) 1. விற்பொலி நுதலி.

'தெவ்வம் பணியச் சென்றாலு மென்பதற்குத் தெவ்வர் அம்பை யணியவென்றும், பௌவம் பணிமணி யென்பதற்குக் கடலிடத்தும் பாம்பிடத்தும் உளவாகிய முத்தும் மாணிக்கமுமென்றும் உரைப்பாருமுளர். (பே-ரை.)

## 305. கற்புப்பயப்புரைத்தல்

கற்புப் பயந்த
அற்புத முரைத்தது.

(இ-ள்.) கற்பு பயந்த - கற்புடைமையைத் தந்த, அற்புதம் உரைத்தது - அழகைச் சொன்னது.

---

சிற்பந் திகழ்தரு திண்மதிற் றில்லைச் சிற்றம்பலத்துப்
பொற்பந்தி யன்ன சடையவன் பூவண மன்னபொன்னின்
கற்பந்தி வாய்வட மீனுங் கடக்கும் படிகடந்தும்
இற்பந்தி வாயன்றி வைகல்செல் லாதவ னீர்ங்களிறே.

(ப-ரை.) சிற்பம் திகழ்தரு - நுண்டொழில் விளங்குகிற, திண் மதில் தில்லை சிற்றம்பலத்து - திண்ணிய மதில் சூழ்ந்த பெரும்பற்றப்புலியூர்ச் சிற்றம்பலத்துளனாகிய, பொற்பந்தி அன்ன சடையவன் பூவணம் அன்ன பொன்னின் - பொன் தகட்டு நிரையை யொத்த திருச்சடையையுடையவனுடைய திருப்பூவணத்தை யொத்த பொன்னினுடைய, கற்பு - கற்பு, அந்திவாய் வடமீனும் கடக்கும் - அந்திக்காலத்து வடபால் தோன்றும் அருந்ததி கற்பையும் செயிக்கும்; அதற்குக்காரணம்; படி கடந்தும் இல் பந்தி வாய் அன்றி வைகல் செல்லாது அவன் ஈர்ங் களிறே-தன் இல்லங் கடந்து போனாலும், சத்துரு செயம் பண்ணி இவள் இல்லில் பந்தியிடத்தே வந்து கட்டுமதல்லது, போனவிடங்களில் அவதரியாது, அவனுடைய பெரிய யானையே.

என்றது, தான் இருந்த தேசத்தில் அரசனுக்கு வெற்றி புண்டாம்; ஆதலால் தன் கணவனுக்கு (படி கடந்து) செல்ல வேண்டா என்பது கருத்து. (எ-று)

---

305. செவிலி கூற்று.

'பொற்பந்தியன்ன சடை'யென்பதற்கு அழகிய அந்திவானம் போலும் சடையென்பாருமுளர். அந்திக்காலத்துக் கற்புடை மகளி

ரால் தொழப்படுதலின், அந்திவாய் வடமீனென்றாள். கற்புப் பயந்த அற்புதமாவது படிகடந்தும் கடிதுவரும் வண்ணம் எடுத்துக்கொண்ட வினையை யிடையூறின்றி இனிது முடித்தல். படிகடத்தல் - நெடுஞ் சேட் சேறல். (பே-ரை.)

---

## 306. மருவுத லுரைத்தல்

இருவர் காதலு
மருவுத லுரைத்தது.

(இ-ள்.) இருவர் காதலும் - இருவரன்பும், மருவுதல் உரைத்தது - பொருந்தினபடியைச் சொன்னது.

---

மன்னவன் றெம்முனை மேற்செல்லு மாயினு மாலரியே
றன்னவன் றேர்புறத் தல்கல்செல் லாது வரகுணனுந்
தென்னவ னேத்துசிற் றம்பலத் தான்மற்றைத் தேவர்க்கெல்
[லாம்
முன்னவன் மூவலன் னாளு[1] மற்றோர்தெய்வ முன்னலளே.

(ப-ரை.) மன்னவன் தெம்முனை மேல் செல்லுமாயினும் - பெருநில மன்னன் ஏவவிட அவன் முனையிடத்தே சென்றதாயினும், மால் அரி ஏறு அன்னவன் தேர்புரத்து அல்கல் செல்லாது - பெரிய சிங்க வேற்றை ஒப்பானுடைய தேர் பிறிதோரிடத்தும் அவதரியாது; வரகுணனும் தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான் - வரகுணனாகிய பாண்டியனாலே புகழப்பட்ட திருச்சிற்றபலநாதன், மற்றை தேவர்க்கு எல்லாம் முன்னவன் - மற்றெல்லாத் தேவர்களுக்கு முன்னுயுள்ளவன், மூவல் அன்னாளும் - அவனுடைய திருமூவலை ஒப்பாளும் மற்றோர் தெய்வம் உன்னலளே, தன் கணவனாகிய தெய்வத்தையன்றிப் பிறிதொரு தெய்வத்தைத் தெய்வமாக நினையாள். (எ-று)

---

306. செவிலி கூற்று.

(பா-ம்.) 1. மற்றைத் தேவர்கட்கும்

## 307. கலவியின்பங் கூறல்

நன்னுதன்மடந்தை தன்னலங்கண்டு
மகிழ்தாங்குளத்தோ டிகுளைகூறியது.

(இ-ள்.) நன்னுதல் மடந்தை - நல்ல நெற்றியினையுடைய நாயகி, தன்நலம் கண்டு - தான் பெற்ற நலத்தைப் பார்த்து, மகிழ் தாங்கு உளத்தோடு இகுளை கூறியது - மகிழ்ச்சி மிக்க உள்ளத்தோடே தோழி சொன்னது.

---

ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ராருயி ரீருக்கொண்
டானந்த வெள்ளத் திடைதிளைத் தாலொக்கு மம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம் வற்றுது முற்று திவ்வணிநலமே.

(ப-ரை.) ஆனந்த வெள்ளத்து அழுந்து ஒரு ஆர் உயிர் - இன்ப வெள்ளத்தே அழுந்தக் கடவதோர் அரியவுயிர், ஈர் உரு கொண்டு ஆனந்த வெள்ளத்திடை திளைத்தாலொக்கும் அம்பலம் சேர் ஆனந்த வெள்ளத்து அறை கழலோன் - இரண்டு வடிவுகொண்டு காமவின்பம் துய்த்தல் காரணமாக, வற்றுத இன்பம் வளரும் திருவம்பலத்தைப் பொருந்தின இன்ப வெள்ளத்தைத் தருகிற வீரக்கழல் ஆரவாரிக்கிற சீர்பாதங்களை யுடையவன், அருள் பெற்றவரின் - அவனுடைய திருவருளைப் (பெற்றவர்களை)ப் போலே, ஆனந்த வெள்ளம் வற்றுது-இவ்வின் பம் ஒரு நாளும் குறையாது; முற்றுது இவ் அணி நலமே - இவ்வழகிய நன்மை முதிருவதும் செய்யாது. நீர்க்கடலுக்கு ஒரு நாளிலே வற்றுவதுமுண்டு, முதிர்தலுமுண்டு; இவ்வின்பக் கடலுக்கு அதுவில்லை. (எ-று.)

---

307. செவிலி கூற்று.

ஓராருயிர் ஈருடல் கொண்டது: கிற். 71; 'பாவைசீ புலவியி னீடல் பாவியேற், காவியொன் திருண்டெம்பல்லது' (சீவக. 1017)

காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கு, மாவிபோ லாடையுமொன் ருனதே' (கலி. கலிதொடர் 84) 'மருங்கிலா நங்கையும் வசையி லையனும் ஒருங்கிய இரண்டுடற் குயிரொன் ருயினர்'. (கம்ப. மிதிலைக். 38)

மணஞ்சிறப்புரைத்தல் முற்றிற்று.

---

## 20. ஓதற் பிரிதல்.

ஓதற் பிரிவென்பது, வரைந்துகொண்ட பின்னர்த் தலைமக னுக்கு முதற்பிரிவு ஓதலாதலாற் கல்வியின் மிகுதி கூறி நீங்கா நிற்றல். அது நான்கு துறை யுடைத்து. அவை,

[1]கல்விநலங்கூறல், [2]பிரிவுநினைவுரைத்தல்,
[3]கலக்கங் கண்டுரைத்தல், [4] காதலர்தமது
வாய்மொழி கூறல், வருவன நான்கும்
நிலைமையில் கல்வி தேருங்காலே

(பே-ரா.)

---

### 308. கல்வி நலங்கூறல்.

கல்விக்ககல்வர் செல்வத்தவரெனச்
செறிகுழற் [1]பாங்கி யறிவறிவித்தது.

(இ-ள்.) கல்விக்கு அகல்வர் செல்வத்தவர் என - இல் வாழ்க்கைச் செல்வத்தையுடையாயவர் கல்விகாரணமாகப் பிரி வரென்று, செறி குழல் பாங்கி அறிவறிவித்தது - செறிந்த கூந் தலினையுடைய பாங்கி அறியத்தருவதான பிரிவை' அறிவித்தது.

---

சீரள வில்லாத் திகழ்தரு கல்விச்செம் பொன்வரையின்
ஆரள வில்லா வளவுசென் றாரம் பலத்துணின்ற
ஓரள வில்லா வொருவ னிருங்கழ லுன்னினர்போல்
ஏரள வில்லா வளவின ராகுவ ரேந்திழையே.

(ப-ரை.) சீர் அளவு இல்லா திகழ்தரு கல்வி செம்பொன் வரையின் - சிறப்புக்கு எல்லை யில்லாது விளங்கா நின்ற கல்வியாகிய மகாமேருவின், ஆர் அளவு இல்லா அளவு சென்றார் - மிக்க அளவுகளால் அளவிட வொண்ணாத எல்லையை யடைந்தவர்கள்- [மிக்க அளவாவன, காதமென்றும் புகையென்றும் சொல்லுகிற எண்ணிலக்கணங்கள்] அம்பலத்துள் நின்ற ஓர் அளவில்லா ஒருவன் - திருவம்பலத்தே நின்றருளின ஒன்றாலும் அளவிடப்படா ஒருவன் தான் [இங்கு ஒன்றாலும் என்றது, காட்சியாலும் அநுமானத்தாலும்] இரும் கழல் உன்னினர் போல் - அவனுடைய பெரிய திருவடிகளை நினைத்தவர்களைப் போலே; [திருவடிக்குப் பெருமையாவது அடைந்தாரை விடாமை] ஏர் அளவில்லா அளவினர் ஆகுவர் ஏந்திழையே - அழகுக் கெல்லையில்லாத அளவையுடையவர்கள் ஆபரணங்களையுடையாய்! - ஆவர், (எ-று)

[என்று, உலகத்தார் மேலே வைத்துச்சொல்ல, நம்முடைய நாயகரும் பிரிவார் என்பது கருத்து.]

---

308. தோழி கூற்றும் ஆம்.

பா-ம் 1 பாங்கிக்கறிவித்தது.

'செம்பொன் வரையென்றாள்', தூய்மையும் பெருமையும் கலங்காமையும் உடைமையான். கற்றதன் மேலுங் கற்க நினைக்கின்றாளுதலால் ஆரளவில்லா அளவு சென்றாரென்றாள். ஆரளவு உயர்ந்த உளவு. பாங்கியறிவறித்தது என்பது பாடமாயின், தலைமகளது குறிப்பைக்கண்டு தோழி தலைமகட்குக் குறிப்பினாற் கூறினாளாக வுரைக்க. (பே-ரை.)

## 309. பிரிவுநினைவுரைத்தல்.

கல்விக்ககல்வர் செல்வத்தவரெனப்
[1]பூங்குழை மாதர்க்குப் பாங்கி பகர்ந்தது.

(இ-ள்.) கல்விக்கு அகல்வர் செல்வத்தர் என - இல்வாழ்க்கையையுடைய நம் நாயகரும் கல்வி காரணமாகப் பிரியாநின்றாரென்று, பூங்குழை மாதர்க்கு - பொலிவையுடைத்தாகிய குழையினையுடைய நாயகிக்கு, பாங்கி பகர்ந்தது - தோழி சொன்னது.

---

வீதலுற் றார்தலை மாலையன் றில்லைமிக் கோன்கழற்கே
காதலுற் றார்நம்மை கல்விசெல்வீ தரு மென்பதுகொண்
டோதலுற் றாருற் றுணர்தலுற் றார்செல்லன் மல்லழற்கான்
போதலுற் றார்நின் புணர்முலை யுற்ற புரவலரே.

(ப-ரை.) வீதல் உற்றார் தலை மாலையன் - செத்தவருடைய தலைகளால் தொடுத்த மாலையினையுடையவன்; தில்லை மிக்கோன் - பெரும்பற்றப்புலியூரில்மேலானவன்; கழற்கே காதலுற்றார்நம்மை- அவனுடைய திருவடிகளுக்கே அன்புற்றவர்கள் பெறும் நன்மையை, கல்வி, செல்வீ, தரும் என்பது கொண்டு - இல்வாழ்க்கைச் செல்வத்தையுடையாய்! கல்வி தரவிற்று என்னும் இதனைப் புத்தி பண்ணி, ஓதலுற்றார் உற்று உணர்தலுற்றார்-ஓதலால் மிக்காரைக் கிட்டி உணர்வதாக நினைந்து, செல்லல் மல் அழல் கான்-நிறைந்த கிலேச முடைத்தாகிய வளவிய அழலுடைத்தாகிய காட்டிலே, போதலுற்றார் - போவதாக நினைத்தார், காண்; நின் புணர்முலை யுற்ற புரவலரே - உன்னுடைய தம்மிற் பொருந்தின முலைகளிலே அன்பு செய்த நாயகர். (எ-று.)

போனாலும், தாழார் என்பது கருத்து.

---

309. தோழி கூற்று

(பா-ம்.) 1. பூங்குழல் மடந்தைக்கு.

"ஒத்தான் எயர்ந்தாரை கிடைத்து அவரோடு சாவித் தமது கல்வி மிகுதியை யறிதலுற்ருரென்றுரைப்பாருமுளர். உணர்தலுற்ரு ரென்பதனை முற்ருக வுரைப்பினுமமையும். நின் புணர்முலையுற்ற வென்ற தனுன், முலையிடத்துத் துயிலை நினைந்து நீட்டியாது வருவரென்றும், புரவலரென்றதனுன், நின்னலர் தொலையாமற் காப்பரென்றுங் கூறிப் பிரிவுடம்படுத்தாளாம். செல்வத்தவரென்றது ஈண்டுத் தலைமகனை". (பே-ரை.)

---

## 310. கலக்கங் கண்டுரைத்தல்.

ஓதற்ககல்வர் மேதக்கவரெனப்
பூங்கொடி கலக்கம் பாங்கி கண்டுரைத்தது.

(இ-ள்.) ஓதற்கு அகல்வர் மேதக்கவர் என - மேம்பாடுதக்கவர் ஓதுதற்குப் பிரியா நின்ருரென்று சொல்ல, பூங்கொடி கலக்கம் பாங்கி கண்டு உரைத்தது - பூத்தவல்லிச் சாதி ஒப்பாள் கலங்கின படியைப் பாங்கி கண்டு சொன்னது.

---

கற்பா மதிற்றில்லைச் சிற்றம் பலமது காதல்செய்த
விற்பா விலங்கலெங் கோனை விரும்பலர் போலவன்பர்
சொற்பா விரும்பின ரென்னமெல் லோதி செவிப்புறத்துக்
கொற்பா விலங்கிலை வேல்குளித் தாங்குக் குறுகியதே.

(ப-ரை.) கல் பா மதில் தில்லை சிற்றம்பலமது காதல் செய்த-கல் பரந்த மதில் சூழப்பட்ட பெரும்பற்றப்புலியூர் திருச் சிற்றம்பலத்தை விரும்பின, வில் பா விலங்கல் எங்கோனை விரும்பலர் போல - வில்லாகிய பரந்த மலையையுடைய எம்முடைய சுவாமியை விரும்பாதாரைப் போல வருந்த, அன்பர் சொல் பா விரும்பினர் என்ன - நம் நாயகர், சொல்லால் இயன்ற பாக்களைக் கற்க விரும்பினரென்று சொல்ல, அச்சொல், கொல் பா இலங்கு

இலை வேல் குளித்தாங்கு - கோல் தொழில் பரந்து விளங்கின இலைத் தொழிலையுடைத்தாகிய வேல் சென்று மூழ்கினாற் போல, மெல்லோதி செவி புறத்து குறுகியதே - மெல்லிய மயிரினையுடையாள் செவியிடத்தே குறுகிற்று. (எ-று)

---

**310.** தோழி கூற்று.

பொருப்பு வில்லிமேல் விருப்புடையார் கல்விக் கடனீந்தி வருந்தாமை யின் விரும்பலர் போலச் சொற்பா விரும்பின ரென்றாள். இனி வருந்த வென்பதோர் சொல்லை விரித்து விரும்பலர் போல வருந்த அச்சொற் குறுகிய தென்றுரைப்பினுமமையும். பூங்கொடி கலக்கம் பாங்கி, தன் னுள்ளே, சொல்லியது; தலைமகற்குக் கூறிய தென்றுரைப்பாருமுளர். (பே-ரா.)

---

## 311. வாய்மொழி கூறித்தலைமகள்வருந்தல்.

நீதறுகல்விக்குச் செல்வன்செல்லுமெனப்
போதுறுகுழலி [1] புலம்பியது.

பிரியா மையுமுயி ரொன்றாவ தும்பிரி யிற்பெரிதுந்
தரியா மையுமொருங் கேநின்று சாற்றினர் தையன்மெய்யிற்
பிரியா மைசெய்து நின்றோன் றில்லைப்பேரி யலூரரன்ன
புரியா மையுமிது வேயினி யென்னும் புகல்வதுவே.

(ப-ரை.) பிரியாமையும் - நம்மை விட்டு நீங்காமையும், உயிர் ஒன்றாவதும் - இருவர்க்கும் உயிர் ஒன்றாவதும், பிரியின் பெரிதும் தரியாமையும் - எம்மை விட்டு நீங்கினால் மிகவும் ஆற்றாமையும், ஒருங்கே நின்று சாற்றினர் - ஒருபடிப்பட மாறாமல் சொன்னார். [அவற்றில் 'பிரியோம்' என்றது வென்றுபடக் கண்டோம், இப்போது பிரிகையாலே.] தையல்மெய்யின் பிரியாமைசெய்து நின்றோன் - பரமேசுவரி திருமேனியினின்று நீங்

காதே நின்றவன், தில்லை பேரியல் ஊரர் - அவனுடைய பெரும் பற்றப்புலியூராகிப் பெரிய இயல்பாற் சிறந்த ஊரையுடையவர், அன்ன பிரியாமையும் இதுவே, இனி நாம் என்புகல்வதுவே - நீக்கி நின்ற இரண்டும் வேறுபடாதே யிருக்குமது இப்பிரியாமையின் விழுக்காடாயிருக்கு மென்றால், இனி நாம் எதைச் சொல்லுவோம் (எ-று.)

---

311. தலைமகள் கூற்று.

(பா-ம்.) [1] பொறையழிந்தது. [2] இன்னல் புரியாமையுமிதுவே

ஏட்டில் தில்லை பேரியலூரன் என்று பாடங்கொண்டு உரையெழுதப் பெற்றுள்ளது. பொருள் பொருத்தம் நோக்கி ஊரர் என்று கொண்டு உரை இங்குக் கொடுக்கப் பெற்றுள்ளது.

தையல் மெய்யிற் பிரியாத பேரன்பினேனது தில்லைக்கண் பயின்றும் அன்பு பேணுது பிரிதல் எங்ஙனம் வல்லராயினர் என்றுங் கருத்தால், பிரியாமை செய்து நின்றோன் தில்லைப் பேரியலூரர் என்றாள். பிரிவு காணப்பட்டமையின், அன்ன வென்றது ஒழிந்த விரண்டையுமேயாம். அன்னபுரியாமையும் இதுவே யென்பதற்குப் பிரிவு முதலாகிய நமக்கின்னாதவற்றைத் தாம் செய்யாமையும் இதுவேயாயிருந்ததெனினுமமையும். இன்னல் புரியாமையுமிதுவே யென்று பாட மென்பாருமுளர். (பே-ரை.)

---

## 21. காவற்பிரிவு.

காவற் பிரிவென்பது, எல்லாவுயிர்களையும் அரசன் பாதுகாக்க வென்னும் தருமநூல்விதியான் அக்காவற்குப் பிரிதல். அஃது இரண்டு துறைகளையுடையது - அவை, பின்வருமாறு:-

> [1] பிரிவறிவித்தல், [2] பிரிவுகேட்டிரங்கல்,
> வருபவையிரண்டும் வையங்காவல். (பே-ரை.)

## 312. பிரிவறி வித்தல்.

இருநிலங்காவற் கேகுவர்நமரெனப்
பொருசுடர்வேலோன் போக்கறிவித்தது.

(இ-ள்.) இரு நிலம் காவற்கு ஏகுவர் நமர் என — பெரிய பூமியைக் காப்பதற்காகப் போகா நின்றார் நம் நாயகரென்று, பொரு சுடர் வேலோன் போக்கு அறிவித்தது - பொருகிற ஒளியையுடைய வேலவன் பிரிவை அறிவித்தது.

---

மூப்பா னிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான் வியன்றில்லை யானரு ளால்விரி நீருலகங்
காப்பான் பிரியக் கருதுகின் றார்நமர் கார்க்கயற்கட்
பூப்பா னலமொளி ரும்புரி தாழ்குழற் பூங்கொடியே.

(ப-ரை.) மூப்பான் இளையவன் முன்னவன் பின்னவன் எல்லாப் பொருளையும் தோற்றுவிப்பது காரணமாகத் தனக்கு முன்னே ஒரு திருவடிவு கொள்கையாலே மூப்பான்; திருவடிவுக்கு முதிர்ச்சியில்லாமையாலே இளையவன்; அவ்வடிவு கொள்வதற்கு முன்பு முன்னவன்; வடிவு தவிர்ந்த பின்பு பின்னவன்; முப்புரங்கள் வீப்பான் - முப்புரங்களையும் அழிக்கிறவன்; வியன் தில்லையான் - பெரும்பற்றப்புலியூரினுள்ளவன்; அருளால் - அவனுடைய திருவருளாலே, விரிநீர் உலகம் காப்பான் பிரியக் கருதுகின்றார் நமர் — விரிந்த நீராற் சூழப்பட்ட உலகைக் காப்பான் பிரிவதாக நினையா நின்றார் நம்முடைய நாயகர்; கார் கயல் கண் - கரிய கயல் போலும் கண்ணினது, பூப்பானலமொளிரும் - பாடலம் பூவின் (?) நன்மை விளங்குகிற [பானல் — நெய்தல்] புரிதாழ் குழல் பூங்கொடியே — நெறித்து நீண்ட கூந்தலினையுடையாய்! பூத்த வல்லிசாதியை யொப்பாய்! (எ-று)

---

312. தோழி கூற்று.

'முன்னவன் பின்னவன' என்றதற்கு, 'உலகத்திற்கு முன்னுள்ளோன்; அதற்குப் பின்னுமுள்ளோன்' என்றும், 'பூப்பானலமொளிரும்'

என்றதற்கு, பூவின் கண் நறுநாற்றமுடைமையாகிய நன்மை விளங்கு மென்றும் பொருளுரைப்பர் பேராசிரியர்.

முன்னவன் பின்னவன்: 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' (திருவாச- திருவெம். 9)

உலகங் காத்தல்: பெரிய. திருநகரச். 36-

---

## 313. பிரிவு கேட்டிரங்கள்.

மன்னவன் பிரிவு நன்னுதலறிந்து
பழங்கணெய்தி யழுங்கல்சென்றது

(இ-ள்) மன்னவன் பிரிவு நன்னுதல் அறிந்து - நாயக னுடைய பிரிவை நல்ல நெற்றியினையுடையாள் அறிந்து, பழங் கண் எய்தி அழுங்கல் சென்றது – வருத்த முற்று மயக்கத்தை யடைதது

---

சிறுகட் பெருங்கைத் திண்கோட்டுக் குழைசெவிச் செம்முக [மாத்
[1] தெறுகட் டழியமுன் னுய்யச்செய் தோர்கருப்புச் சிலை [யோன்
உறுகட் டழலுடை யோனுறை யம்பல முன்னலரின்
துறுகட் புரிகுழ லாயிது வோவின்று சூழ்கின்றதே.

(ப-ரை.) சிறுகண் பெருங்கை திண் கோட்டு குழைச்செவி செம்முகமா – சிறிய கண்ணினையும் பெரிய கையினையும் திண் ணிய மருப்பினையும் குழைந்தசெவியினையும் சிவந்த முகத்தினையு முடைய யானையினது, தெறு கட்டு அழிய - கோபித்த கோப்பு குலைய, முன் உய்ய செய்தார் - முன்பு நம்மைப் பிழைப்பித்தவர்,

கருப்புச் சிலையோன் உறு கண் தழலுடையோன் - கருப்பு, வில்லையுடைய காமன் நடுவே புக, படுகிற கண்ணிடத்தாகிய நெருப்பையுடையவன், உறை அம்பலம் உன்னலரின் - வாழ்கிற திருவம்பலத்தை நினையாதாரைப் போல, துறு கள் புரிகுழலாய் - நெருங்கிய தேனுடைத்தாகிய நெறித்த கூந்தலினையுடையாய்! இதுவோ இன்று சூழ்கின்றதே - இப்பொழுது விசாரிக்கிறது இதுவே? (எ-று.)

என்பது, நன்மையன மாற்றல். பாதுகாக்கப் படுவகாலத்து யானை கொல்லாமற் காத்தவர், தம்மாற் பரிகரிக்கப்படுங் காலத்து இங்ஙனம் செய்கை தருமோ? என்றது.

---

313. தலைமகள் கூற்று.

(பா-ம்) 1 தெறுகட்டழீஇ முன்ன முய்பச் செய்தோர்.

---

## 22. பகைதணிவினைப் பிரிவு.

பகைதணிவினைப் பிரிவென்பது தம்மிற் பகைத்த வேந்தரைப் பகையைத் தணித்து இருவரையும் பொருந்தப் பண்ணுதல். இஃது இரு துறைகளையுடையது. அவை பின்வருமாறு:-

[1] பிரிவு கூறல், [2] வருத்தந்தணித்தல்
இருபகைதணித்தற் கேகலென்ப.

---

## 314. பிரிவு கூறல்

[1] துன்னும் பகைதணிய மன்னவன்பிரிவு
நன்னறுங் கோதை முன்னிமொழிந்தது.

(இ-ள்) துன்னும் பகைதணிய - தம்மில் அடர்பட்டிருக்கிற பகைவரைத் தணிவு செய்கைக்கு, மன்னவன் பிரிவு - நாயகன்

பிரிகிறபடியை, நன்னறுங் கோதை முன்னி மொழிந்தது - நல்ல நறு நாற்றத்தால் சிறந்த மாலையினையுடையாள் முன்னின்று சொன்னது.

---

மிகைதணித் தற்கரி தாமிரு வேந்தர்வெம் போர்மிடைந்த
பகைதணித் தற்குப் படர்தலுற் ருர்நமர் பல்பிறவித்
தொகைதணித் தற்கென்னை யாண்டுகொண் டோன்றில்லைச்
[சூழ்பொழில்வாய்
முகைதணித் தற்கரி தாம்புரி தாழ்தரு மொய்குழலே.

(ப-ரை) மிகைத்தணித்தற்கு அரிதாம் இருவேந்தர் - தத்தம் மிகைகளை ஒருவரால் தணிவு செய்கைக்கு அரிய இரண்டு அரசருடைய, வெம் போர் மிடைந்த பகை தணித்தற்கு படர்தல் உற்ருர் நமர் — வெய்ய பூசல் நெருங்கின பகையைத் தணிவிப்பதாகப் போக நினைத்தார் நம்முடைய நாயகர்; பல்பிறவி தொகை தணித்தற்கு என்னை ஆண்டு கொண்டோன் - பல பிறவித் திரளை மாற்ற வல்லப்படிக்குச் சாதனமாக என்னை அடிமை கொண்டவன் தில்லை சூழ்பொழில் வாய் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்த பொழிலிடத்து, முகை தணித்தற்கு அரிதாம் புரிதாழ்தரு மொய்குழலே-செவ்விய அரும்புகளாலும் தாழ்வு படுத்த வொண்ணுத நாற்றத்தை உடைத்தாய நெறித்த நீண்ட கூந்தலினையுடையாய்! (எ-று.)

ஒருவரை ஒருவர் மிகை தணித்தற் கரியவர் என்றமையால், இவர் சொல்லுமளவில் கடுகச் சந்து செய்வரென்பது கருத்து.

---

314. தோழி கூற்று.

(ப-ம்.) [1] துன்னும் பகைதணிப்ப மன்னவன் பிரிவு, நன்னறுங் கோதை முன்னி மொழிந்தது.

எளிதிற் சந்து செய்வித்துக் கடிதின் மீள்வரென்பது பயப்ப, மிகை தணித்தற் கரிதாம் இரு வேந்த ரென்றதனல் ஒத்த வலியினராதலும், வெம்போர் மிடைந்த வென்றதனல் ஒத்த தொலைவினராதலுங் கூறினாாம் - மிகைதணித்தற் கரிதாம்பகை யெனவியையும். (பே-ரை.)

## 315. வருத்தந் தணித்தல்.

*மணிப்பூண்மன்னவன் றணப்பதில்லை*
*அஞ்சல்பொய்யென வஞ்சியைத் தணித்தது.*

(இ-ள்.) மணிப்பூண் மன்னவன் - மணியழுத்தப் பட்ட பூணியையுடைய நாயகன், தணப்பதில்லை - பிரிவதில்லை, அஞ்சல் பொய்யென - அஞ்சாது கொள்; பொய்காண் என்று, வஞ்சியைத் தணித்தது - நாயகியைத் தணித்தது.

---

நெருப்புறு வெண்ணெயு நீருறு முப்பு மெனவிங்ஙனே
பொருப்புறு தோகை புலம்புறல் பொய்யன்பர் போக்குமிக்க
'விருப்புறு வோரை விண்ணோரின் மிகுத்து நண்ணார்கழியத்
திருப்புறு சூலத்தி னோன்றில்லை போலுந் திருநுதலே.

(ப-ரை.) மிக்க விருப்புறு வோரை - மிக்க அன்பு செய்கிற வர்களை, விண்ணோரின் மிகுத்து - தேவர்களில் மேலாக்கி, நண்ணார் அழிய - சத்துருக்கள் இறந்துபட, திருப்புறு சூலத்தி னோன் - திரிக்கப்பட்ட திரிசூலத்தையுடையவன், தில்லை போலும் திருநுதலே - அவனுடைய பெரும்பற்றப்புலியூரை யொத்த திருநுதலே! பொருப்பு உறு தோகை - மலையிலே பொருந்தின மயிலை யொப்பாய்! பொய் அன்பர் போக்கு - அன்பர் போக்கு பொய் காண்; (ஆதலால்) நெருப்பு உறு வெண்ணெயும் - நெருப் பிலே உற்ற வெண்ணெய் உருகினாற் போலவும், நீர் உறும் உப்பு மென - நீரிலே உற்ற உப்பு (கரைந்தாற்) போலவும், இங்ஙனே புலம்புறல் - இப்படிக் கிலேசியாதே கொள் (எ-று.)

---

315. தோழி கூற்று.

*மிக்க விருப்புறுவோரை...நண்ணார் கழிய: 'புன்மையரை, மிகவே உயர்த்திவிண் ணோரைப் பணித்தி''* (திருவா - 14.)

## 23. வேந்தற்குற்றுழிப் பிரிவு.

வேந்தற் குற்றுழிப் பிரிவென்பது ஒரு வேந்தனுக்கொரு வேந்தன் தொலைந்து வந்தடைந்தால் அவனுக்குதவி செய்யப் பிரியாநிற்றல். இதற்குத் துறைகள் பதினாறு. அவை வருமாறு.

[1]பிரிந்தமை கூறல், [2]பிரிவாற்றாமை,
[3]கார்மிசை வைத்தல், [4]காரைநோக்கி
வருந்தியுரைத்தல், [5]மலர்க்குழலரிவை
கூதிர்கண்டு கவறல், [6]குளிர்முன்பனிக்கவள்
நொந்து கூறல், [7]நோக்கிப் பின்பனிக்
கிரங்கியுரைத்தல், [8]இளவேனில் கண்டவன்
இன்னலெய்தல், இதுவவர் குறித்த
பருவ மாமென வரவுகூறல்,
[10]பருவ மறைத் துரைத்தல் மறுத்துரைத்தலொடு
[11]தேர்வரவு கூறல், [12]வினைமுற்றி நினைதல்,
[13]நிலைமைநினைந் துரைத்தல், [14]முகிலொடு கூறல்,
[15]வரவெடுத் துரைத்தல், [16]மறவாமை கூறல்,
மற்றிவை யீரெட்டு, முற்றுழிப் பிரிவாம்.

(பே-ரை)

---

### 316. பிரிந்தமை கூறல்.

விறல்வேந்தர் வெம்முனைக்கண்
திறல்வேந்தர் செல்வரென்றது.

(இ-ள்.) விறல் வேந்தர் வெம்முனைக்கண் - வெற்றியினை யுடைய அரசர் வெய்ய முனையிடத்தே, திறல் வேந்தர் செல்வர் என்றது - வெற்றியினையுடைய நம் அரசர் போகாநின்றார் என்றது.

---

போது குலாய புனைமுடி வேந்தர்தம் போர்முனைமேல்
மாது குலாயமென் னோக்கிச்சென் றார்நமர் வண்புலியூர்க்
காது குலாய குழையயெழி லோனைக் கருதலர்போல்
ஏது கொலாய்விளை கின்றதின் றொன்னா ரிடுமதிலே.

(ப-ரை.) போது குலாய புனைமுடி வேந்தர்தம் போர்முனை மேல் - பொற்பூ அழகுபெறச் சூடின முடியினையுடைய அரச ருடைய போர் செய்கிற முனையிடத்தே, மாதுகுலாய மென் னோக்கி, சென்றார் நமர் - அழகு வீறு பெற்ற மெல்லிய நோக்கி னையுடையாய்! நம் நாயகர் போனார்; வன் புலியூர் காது குலாய குழைய எழிலோனைக் கருதலர் போல் - வளவிய பெரும்பற்றப் புலியூரில் காது அழகு பெற்ற குழையினையுடைய அழகனை நினையாதாரைப் போல, ஏது குலாய் விளைகின்றது இன்று ஒன் னார் இடுமதிலே - ஏதாய் விளையப் புகுகின்றது தான் இப் பொழுது, சத்துருக்கள் இட்ட மதில் (எ-று.)

---

316. தோழி கூற்று.

'வினை முடித்துக் கடிதுமீள்வ ரென்பது பயப்ப, ஒன்னாரிடு மதில் இன்றே அழியும் என்று கூறினாளாம். சென்றாரெனத் துணிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாள். திறல் வேந்தரென்றது, சாதி பற்றி யன்று; தலைமை பற்றி' (பே-ரை.)

---

## 317. பிரிவாற்றாமை கார்மிசைவைத்தல்

வேந்தற்குற்றுழி விறலோன் பிரிய
ஏந்திழைப் பாங்கி யெடுத்துரைத்தது

(இ-ள்.) வேந்தற்கு உற்றுழி விறலோன் பிரிய - தனக்குச் சார்வாகிய அரசனுக்கு வினைவுற்ற விடத்து வெற்றியையுடைய நாயகன் போக, ஏந்திழைப் பாங்கிக்கு எடுத்துரைத்தது - மிக்க ஆபரணங்களையுடைய தோழிக்கு மிகுத்துச் சொன்னது.

---

பொன்னி வளைத்த புனல்சூழ் நிலவிப் பொலிபுலியூர்
வன்னி வளைத்த வளர்சடை யோனை வணங்கலர்போல்
துன்னி வளைத்தநந் தோன்றற்குப் பாசறைத் தோற்றுங்
மின்னி [1] வளைத்த விரிநீர் கவரும் வியன்முகிலே [கொலோ

(ப-ரை.) பொன்னி வளைத்த புனல் சூழ் நிலவிப் பொலி புலியூர் - காவேரியினின்றும் கோலப்பட்ட நீராற் சூழப்பட்ட நிலைபெற்றுச் சிறந்த பெரும்பற்றப்புலியூரில், வன்னி வளைத்த வளர் சடையோனை வணங்கலர்போல் - வன்னித் தளிரால் சூழப் பட்ட மிக்க திருச்சடையையுடையவனை வணங்கமாட்டாதாரைப் போல்வருந்த, துன்னி வளைத்த நம் தோன்றற்குப் பாசறை தோன்றுங்கொலோ - நெருங்கிச் சென்று விட்டு வளைந்து கொண்ட நம் நாயகற்குப் பாசறைப் படை விட்டிலே தோன்று (மிறே). மின்னி வளைத்த விரிநீர் கவரும் வியன் முகிலே - மின்னிப் பூமியைச் சூழ்ந்துகொண்ட [முகிலென்று கூட்டி இப் பொழுதைத் தொழிலு முன்னைத் தொழிலுமாக்கி] இம்முகில், தோன்றுமோ என்று கூட்டுக ;

என்று பொருளாய், இது தோன்றில் எடுத்துக்கொண்ட வினை முடியாது மீள்வரென்று கிலேசித்து நின்றேனல்லது, அவர் பிரிவுக்குக் கிலேசிக்கிறேனல்லேன் என்பது கருத்து.

---

317. தலைவி கூற்று.

(பா-ம்) 1. வளைத்து.

'பொன்னி வளைத்த புனலென்பதற்கு பொன்னியாற் றகையப் பட்ட புனலென்றும், வன்னிவளைத்த வென்பதற்குத் தீயை வளைத் தாற்போலுஞ்சடை என்பாருமுளர். (பே-ரை)

## 318. வானோக்கி வருந்தல்.

மானோக்கி வடிவுநினைந்தோன்
வானோக்கி வருந்தியது.

(இ-ள்.) மான் நோக்கி - மான் நோக்கம் போன்ற நல்ல நோக்கினையுடையாள், வடிவை நினைந்தோன் — அவள் வடிவை நினைத்தவன், வான்நோக்கி வருந்தியது - ஆகாசத்தைப் பார்த்து வருந்தினது.

---

கோலித் திகழ்சிற கொன்றி னொடுக்கிப் பெடைக்குருகு
பாலித் திரும்பனி பார்ப்பொடு சேவல் பயிலிரவின்
மாலித் தனையறி யாமறை யோனுறை யம்பலமே
போலித் திருநுத லாட்கென்ன தாங்கொ லென்போதரவே.

(ப-ரை.) கோலித் திகழ் சிறகு ஒன்றின் ஒடுக்கி, பெடைக் குருகு பாலித்து இரும்பனி பார்ப்பொடு சேவல் பயில் இரவின் - சேவலானது தன் குஞ்சுகளோடே தன் பெடைக் குருகையும் விளங்காநின்ற சிறகொன்றாலே கோலி ஒடுக்கி [ஒரு பக்கத்தே கொண்டு] மிக்க பனியைச் சீலிக்கிற இரவினிடத்தே, [திகழ் பாதுகாக்கப்படுவாரைப் பாதுகாத்தலாலே விளங்கின சிறகென்று புகழ்ந்தான்; புகழவே, நாமும் நம்மாற் பாதுகாக்கப் படுவாரைப் பாதுகாத்தலே வழக்கமென்பது கருத்து]; மால் இத்தனை அறியா மறையோன் - மாலால் சிறிதும் அறியப்படாத பிராமணன், உறை அம்பலமே போல் இத்திருநுதலாட்கு - அவன் வாழ்கிற திருவம்பலத்தை யொப்பாளாகிய அழகிய நெற்றியினையுடையாளாகிய இவளுக்கு, என்னதாம் கொல் என் போதரவே — என்னதான் மிகவும் நான் போந்த போதரவு? [இத்திருநுதலாளென்று, உருவெளிப்பாடாக்கி உரைக்கவும் அமையும்.]

---

318. தலைவன் கூற்று.

இதனோடு 320-ம் செய்யுளையும் ஒப்பிடுக.

'இரவினென்னதாமென வியையும். நாம் இக்காலத்து நம் காத விக்குப் பனிமருந்தாயிற்றிலே மென்னும் உள்ளத்தனாகலின், பெடை யொடுக்கிய சிறகைத் திகழ்சிறகெனப் புனைந்து கூறினான். போலித்திரு லாட் கென்பதற்கு அம்பலம்போலும் இத்திருநுதலாட் கென்றுரைப் பினுமமையும். இத்திருநுதலாளென்றான் தன்னெஞ்சத்தளாகலின்' (பே-ரை.)

---

## 319. கூதிர்கண்டு கவறல்.

இருங்கூதி ரெதிர்வுகண்டு
கருங்குழலி கவலையுற்றது

(இ-ள்.) இருங் கூதிர் எதிர் வரவு கண்டு - பெரிய கூதிர்க் காலம் வந்து தோன்றினமையைக் கண்டு, கருங்குழலி கவலையுற் றது - கருமையுடைய கூந்தலினையுடையாள் வருந்தினது.

---

கருப்பின மேவும் பொழிற்றில்லை மன்னன்கண் ணாரருளால்
விருப்பின மேவச்சென் றார்க்குஞ்சென் றல்குங்கொல் வீழ்
[பனிவாய்
நெருப்பின மேய்நெடு மாலெழில் தோன்றச்சென் றாங்குநின்ற
பொருப்பின மேறித் தமியரைப் பார்க்கும் புயலினமே

(ப-ரை.) கருப்பினம் மேவும் பொழில் தில்லை மன்னன் கண் ஆர் அருளால் - கருப்புத் திரள் பொருந்தின பொழில் சூழ்ந்த தில்லையிடத்து மன்னனுடைய நிறைந்த அருளாலே, விருப்பு இனம் மேவச் சென்றார்க்கும் - தம்மை விரும்பின திரள் தம்மால் உதவி பெற்று மகிழும்படி பிரிந்தவரிடத்தும், சென்று அல்கும் கொல் - சென்று அவதரிக்குமோதான்.? வீழ்பனிவாய் நெருப்பின் மேய் - விழாநின்ற பனியிடத்தே நெருப்புத் திரளைப் பொருந்திக் கொண்டு, நெடுமால் எழில் தோன்ற - நெடிய

மாலின் அழகிய நிறம் தோன்ற, சென்று ஆங்கு நின்ற பொருப்பினம் ஏறி - அவ்விடத்தே நின்ற மலைகளின் மேலே பாய்ந்து ஏறி, தமியரைப் பார்க்கும் புயலினமே - தனித்தாருண்டோ, நாம் உயிர் கொள்ள வேண்டுமென்று, எட்டிப் பார்க்கிற மேகத்திரள். (எ-று.)

---

319. தலைமகள் கூற்று:

'நெருப்பினமே யென்பதனைப் புயன்மே லேற்றி இடிநெருப்பென்றும், சென்றென்பதனை மலைமே லேற்றி உயர்ந்தென்றும் உரைப்பினும் அமையும்' (பே-ரை.)

புயலினம் மாலெழில் தோன்றச் சென்று பொருப்பினம் ஏறுதல்: மாஅல் போல...... வல னேர்பு கோடு கொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி (முல்லைப். 3- 5.)

---

## 320. முன்பனிக்கு நொந்துரைத்தல்.

ஆன்றபனிக் காற்றுதழிந்
தீன்றவளை யேழைநொந்தது.

(இ-ள்.) ஆன்ற பனிக்கு ஆற்றாது - மிக்க பனியாலே ஆற்றாதே, அழிந்து - நெஞ்சழிந்து, ஈன்றவளை ஏழை நொந்தது - பெற்ற தாயை நாயகி நொந்தது.

---

சுற்றின வீழ்பனி தாங்கத் துவண்டு துயர்கவென்று
பெற்றவ ளேயெனைப் பெற்றாள் பெடை[1] சிறகா லொடுக்கிப்
புற்றில வாளர வன்றில்லைப் புள்ளுந்தம் பிள்ளைதழீஇ
மற்றினஞ் சூழ்ந்து துயிலப் பெறுமிம் மயங்கிருளே.

(ப-ரை) சிறகாலே ஒடுக்கிக் கொண்டு, புற்றிலவாள் அரவன் - புற்றில ஒளி சிறந்த பாம்பையுடையவன், [புற்றில்லாமை, வேள்வித் தீயிலே பிறந்தமையால்], தில்லைப் புள்ளும் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரிடத்துப் புட்சாதிகள் பெடை சிறகான் ஒடுக்கி - பெடையைத்தம் தம்பிள்ளை தழீஇ - தம் பிள்ளைகளைத் தழுவிக் கொண்டு, மற்று இனம் சூழ்ந்து - மற்றுள்ள தம் இனத்தையும் சூழ்ந்து, துயிலப்பெறும் இம்மயங்கிருளே - உறங்கப் பெறு நின்றன இந்த மயக்கத்தை யுடைத்தாகிய இருளிலே; சுற்றின வீழ்பனி - சுற்றிக் கொண்டு வீழா நின்ற பனி தூங்கத் துவண்டு - செறி......தே துவண்டு, துயர்க என்று - வருந்து வாயாக வென்று, பெற்றவளே எனைப் பெற்றாள் - பெற்றவளே என்னை இங்ஙனம் வருந்தும்படி பெற்றாள் (எ-று.)

---

**320.** தலைவி கூற்று.

புற்றில வாளரவு - சிற்- 97.

---

## 321. பின்பனிநினைந்திரங்கல்

இரும்பனியி னெதிர்வுகண்டு
சுரும்பிவர்குழலி துயரநினைந்தது.

(இ-ள்) இரும் பனியின் எதிர்வு கண்டு - மிக்க பனிக்காலம் எதிர் கொண்டபடியைக் கண்டு, சுரும்பு இவர் குழலி துயரம் நினைந்தது - வண்டுகள் பறக்கப்பட்ட கூந்தலினையுடையாள் கிலேசத்தை நாயகன் விசாரித்தது.

---

புரமன் றயரப் பொருப்புவில் லேந்திப்புத் தேளிர்நாப்பண்
சிரமன் றயனைச்செற் றோன்றில்லைச் சிற்றம் பலமனையாள்
பரமன் றிடும்பனி பாரித்த வாபரந் தெங்கும்வையஞ்
சரமன்றி வான்றரு மேலொக்கு மிக்க தமியருக்கே

(ப-ரை) புரம் அன்று அயர பொருப்பு வில்லேந்தி - முப்புரங்களும் அன்று வருந்தும்படி மலையாகிய வில்லேந்தி, புத்தேளிர் நாப்பண் - தேவர்களுக்கு நடுவே, சிரம் அன்று அயனை செற்றோன் - அன்று அயனைத் தலையறுத்தவன் [தேவர்கள் நடுவே அயனைத் தலையறுத்தானென்றது, இவர்கள் பிதாவாகிய அவனைத் தலையறுப்ப ஒரு சேட்டையற்று நின்றானென்பது கருத்து?], தில்லைசிற்றம்பலம் அனையாள் - அவனுடைய பெரும்பற்றப்புலியூர் திருச்சிற்றம்பலத்தை யொப்பாளுடைய, பரம் அன்று இரும்பனி பாரித்தவா - அவள் அளவல்ல, பெரும்பனி பரந்தபடி, பரந்து எங்கும் வையம் - பூமியெங்கும் பரந்து, சரம் அன்றி வான் தருமேல் ஒக்கும் - பகைத்து ஆகாசமானது சர வருஷத்தைப் பொழியுமாகில் அதனையொக்கும், மிக்க தமியருக்கே - மிகவும் தனித்திருப்பார்க்கு. (எ-று.)

என்றது, இப்பனி பொழிகிறபடி, சரவருஷம் பொழிந்தாலொக்கும், தனியே இருப்பவர்க்கெல்லாம்; என்ன, எனக்கும் அப்படி, என்றது; என்றால், அவளால் இது ஆற்றுவதன்று என்றபடி.

---

321. தலைமகன் கூற்று.

(பா-ம்) அன்று வான்.

'பரந்தெங்குந் தருமேலென்றியைப்பினு மமையும். அன்று வானென்பது பாடமாயின் வையத்தையன்றி அவ்வானமுமென உரைக்க. இக்காலத்து அவளாற்றாமை சொல்ல வேண்டுமோ எனக்கு மாற்றலரிது என்பது போதரத் தமியருக்கெனப் பொதுவகையாற் கூறினார். இதனைத் தோழிகூற்றென்பாரு முளர்' (பே-கர)

## 322. இளவேனில் கண்டின்னலெய்தல்

இன்னிளவேனின் முன்னுவது கண்டு
மென்னகைப்பேதை யின்னலெய்தியது.

(இ-ள்.) இன்னிளவேனில் - இனிய இளவேனிற்காலம், முன்னுவது கண்டு - எதிர்கொண்டபடியைக் கண்டு, மெல்நகை பேதை - மெலவிய முறுவலையுடைய நாயகி, இன்னலெய்தியது- வருத்தமுற்றது.

---

வாழும் படியொன்றுங் கண்டிலம் வாழியிம் மாம்பொழிற் [றேன்
[1] சூழு முகைச்சுற்றும் பற்றின வாற்றெண்டை யங்கனிவாய்
யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பல மாதரியாக்
கூழின் மலிமனம் போன்றிரு ளாநின்ற கோகிலமே.

(ப-ரை.) வாழி - வாழ்வாயாக; தொண்டையங்கனி வாய் யாழின் மொழி மங்கைபங்கன் - ஆதொண்டையில் அழகிய பழத்தையொத்த வாயினையுடைய, யாழோசையுமொத்த வார்த்தையினையுடைய, பரமேசுவரி பாகத்தையுடையவன், சிற்றம்பல ஆதரியா கூழின்மலிமனம் போன்று இருளாநின்ற கோகிலமே- அவனுடைய சிற்றம்பலத்தை அன்பு செய்யாதே கூழ்க்களி களாலே களிக்கும் மனங்களின் இருட்சிபோலத் தம்நிற மும் பொழுதைக்குப் பொழுது இருண்டு செல்லாநின்றன குயில்கள்; இம்மாம் பொழில் தேன் சூழும் முகை சுற்றும் பற்றின வால்- (அவை) இந்த மாம்பொழிலிடத்து வண்டுகள் சூழப் பட்ட அரும்பிடத்தே சுற்றும் வளைந்தனவாதலால், வாழும்படி ஒன்று கண்டிலம்- உயிர்வாழும் உபாயமொன்றும் கண்டிலோம். (எ-று.)

---

322. தலைமகள் கூற்று.

[1] (பா-ம்.) சூழுமுகைச் சுற்றும்பற்றின.

'கிழவிநிலையே வினையிடத் துரையார் - வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" (தொல், பொருள். கற்பி 45.) என்பதனான், இக்கிளவியைத் தும் காலங்காட்ட வேண்டி இத்துறையுட் கூறினரென்பது கருத்தாகக் கொள்க. (பே-ரை.)

---

## 323. பருவங்காட்டி வற்புறுத்தல்

கார்வருமெனக் கலங்குமாதரைத்
தேர்வருமெனத் தெளிவித்தது

(இ-ள்) கார் வரும் எனக் கலங்கு மாதரை - கார்காலம் வாராநின்றதென்று கலக்கமுற்ற நாயகியை, தேர் வரும் எனத் தெளிவித்தது - இனி நம் நாயகர் தேர் வருமென்று தெளியச் சொன்னது.

---

[1] பூண்பதென் றேகொண்ட பாம்பன் புலியூ ரரன்மிடற்றின்
மாண்பதென் றேயென வானின் மலரு மணந்தவர்தேர்
காண்பதன் றேயின்று நாளையிங் கேவரக் [2] கார்மலர்த்தேன்
பாண்பதன் றேர்குழ [3] லாயெழில் வாய்த்த பனிமுகிலே

(ப-ரை.) கார் மலர் தேன் பாண் பதன் தேர் குழலாய் - தேனுடைத்தாகிய மலரிலே வண்டு பொகுட்டின் செவ்வியை ஆராய்கின்ற அழகிய கரிய கூந்தலினையுடையாய்! எழில் வாய்த்த பனிமுகிலே - அழகு பொருந்தின குளிர்ந்த மேகங்கள், பூண்பது என்றே கொண்ட பாம்பன் - பூணப்படுவதென்றே நிச்சயித்துக் கைக்கொள்ளப் பட்ட பாம்பையுடையவன் [அன்றே, என்று பாடமோதி முற்காலத்தே என்றுரைப்பாருமுளர்.] புலியூர் அரன் - பெரும்பற்றப்புலியூர்த் தலைவனுடைய, மிடற்றின் - திருமிடற்றினது, மாண்பது என்றே என வானின் மலரும் - மாட்சிமை தோன்றுகிற அதுவல்லவோ என்னும்படி ஆகாயத்தே

*பரவ நின்றன; ஆதலால், மணந்தவர் தேர்காண்பதன்றே இன்று நாளை இங்கே வர - பொருந்தின நம்முடைய நாயகர் தேரும் இன்று நாளை இவ்விடத்தே வரக் காண்பது அல்லவோ இனி உள்ளது? எனவே, குறித்த பருவம் தப்பாதென்றது. (எ-று)

---

323. தோழி கூற்று.

(பா-ம்.) 1 ஆண்பதன்றே. 2 கான்மலர் 3 எழிலாய.

---

## 324. பருவமன்றென்று கூறல்.

காரெனக்கலங்கு [1]மேரெழிற் மாதரை
இன்றுணைத்தோழி யன்றெனமறுத்தது.

(இ-ள்.) காா எனக் கலங்கும் ஏர் எழில் மாதரை - கார் காலம் என்று கலங்குகிற மிக்க அழகினையுடைய நாயகியை, இன்துணை தோழி - அவளுக்கு இனிய துணையாகிய தோழி, அன்று என மறுத்தது - கார் அன்று என்று மறுத்தது.

---

தெளிதரற் காரெனச் சீரனஞ் சிற்றம் பலத்தடியேன்
களிதரக் கார்மிடற் றோனட மாடக்கண் ணார்முழவங்
துளிதரற் காரென வார்த்தன வார்ப்பத் தொக்குன் குழல்
[போன்
றளிதரக் காந்தளும் பாந்தளைப் பாரித் தலர்ந்தனவே.

(ப-ரை.) சீர் அன்னம் - சீரிய அன்னத்தை யொப்பாய்! சிற்றம்பலத்து, அடியேன் களிதர, கார் மிடற்றோன் நடம் ஆட - கரிய திருமிடற்றை யுடையவன், திருச்சிற்றம்பலத்தே அடியேனும் கண்டு களிக்கும்படி திருக்கூத்தையாட, கண் ஆர் முழவம் துளிதரல் கார் என ஆர்த்தன - முகம் நிறைந்த

முழவம் மழைபொழியும்.....போல ஆரவாரித்தன; ஆர்ப்ப - ஆரவாரித்தலாலே, தொக்கு உன்குழல் போன்று அளிதரக் காந்தளும் பாந்களைப் பாரித்து அலர்ந்தனவே.....உன் (கூந்தல்) போல வண்டுச் சாதிகளைத் தம்மிடத்தே வருவிப்பதாக, இக் காலத்தே, காந்தட் பூக்களும் பாம்பின்படத்தை யொத்து இன மாக மலர்ந்தன; தெளிதரல் கார் என - கார்காலமென்று தெளி யாதே. (எ-று.)

எனவே, 'வம்புகாண்' என்றது.

---

**324.** தோழி கூற்று.

(பா-ம்.) 1. ஏரெழிற் கண்ணியை

## 325. மறுத்துக் கூறல்.

பருவமன்றென்று பாங்கிபகர
மருவமர் குழலி மறுத்துரைத்தது.

(இ-ள்.) பருமன்றென்று பாங்கி பகர - குறித்த பருவம் அன்று என்று தோழி சொல்ல, மருவமர் குழலி மறுத்துரைத் தது-தேன்பொருந்தின கூந்தலையுடையாள் மறுத்துச் சொன்னது.

தேன்றிக் கிலங்கு கழலழல் வண்ணன்சிற் றம்பலத்தெம்
கோன்றிக் கிலங்குதிண் டோட்கொண்டற் கண்டன் குழை [யெழிறுண்
போன்றிக் கடிமலர்க் [1] காந்தளும் போந்தவன் கையனல் [போல்
தோன்றிக் கடிமலரும் பொய்ம்மையோ மெய்யிற் றுூன்றுவதே

(ப-ரை.) தேன் - தேனை யொத்தவன், திக்கு இலங்கு கழல் அழல் வண்ணன் - திசைதோறும் பிரகாசித்த திருவடி.

கலையுடைய அக்கினி ரூபியானவன் சிற்றம்பலத்து எங்கோன் - அவன் திருச்சிற்றம்பலத்தானாகி, எம்போல்வார்க்குச் சுவாமியா யுள்ளவன், திக்கு இலங்கு திண்தோள் கொண்டல் கண்டன் - திக்குகளை விள (க்) கா நின்ற திண்ணிய திருப்புயங்களாக வுடையனுமாயப் பருவமேகத்தை யுடைய (பருவமேகத்தை யொத்த) திருமிடற்றை யுடையவன், குழை எழில் நாண் போன்று இக்கடிமலர்க் காந்தளும் போந்து - அவனுக்குத் திருக்குழையும் திருவரைநாணுமாகிய பாம்பின் படத்தை யொத்து, இந்த நறுநாற்றமாகிய காந்தளும்........(புறப்பட்டு), அவன் கை அனல்போல் தோன்றிக் கடிமலரும் பொய்ம்மையோ மெய்யில் தோன்றுவதே - அவனுடைய கையில் ஏந்தின தீயை ஒக்கத் தோன்றி இவனுடைய நறுநாற்றமுடைத்தாகிய பூவும் மெய்யே தோன்றுகின்றதும் பொய்யோ (எ-று.)

ஓகாரம் எதிர்மறையாய் மெய்யென்றுபடும்.

---

325. தலைமகள் கூற்று.

(பா-ம்) 1. குழலி. 2. காந்தளுமின்று.

'கடியென்பது நாற்றம். கடிமலர் முதலாகிய தன்பொருட்கேற்ற வடை. மெய்யிற் றோன்றுவதென்பதற்கு மெய்போலத் தோன்றுவ தெனினுமமையும்.' (பே-ரை.)

---

## 326. தேர்வரவு கூறல்.

பூங்கொடி மருளப்
பாங்கி தெருட்டியது.

(இ-ள்) பூங்கொடி மருள - பருவங்கண்டு பூத்த கொடியை யொப்பாள் மயங்க, பாங்கி பகர்ந்தது - தோழி சொன்னது.

---

திருமா லறியாச் செறிகழற் றில்லைச்சிற் றம்பலத்தெம்
கருமால் விடையுடை யோன்கண்டம் போற்கொண்ட [லெண்டிசையும்
வருமா லுடன்மன் பொருந்த றிருந்த மணந்தவர்தேர்
பொருமா லயிற்கணல் லாயின்று தோன்றுநம் பொன்னகர்க்கே.

(ப-ரை) திருமால் அறியா செறி கழல் - திருமால (ரல்) அறியப்படாத வீரக் கழல் செறிக்கப்பட்ட சீர்பாதங்களையுடைய [செறித்தலாலே வீரக்கழலும், கழல் என்ற ஆகுபெயராலே திருவடியுமாகின்றன], தில்லை சிற்றம்பலத்து எம் கருமால் விடையுடையோன் - பெரும்பற்றப் புலியூர்ச் சிற்றம்பலத்தே யுளனாகிய எம்முடைய மிகவும் பெரிய இடபத்தினையுடையவன், கண்டம் போல் கொண்டல் எண் திசையும் வருமால் - அவனுடைய திருமிடற்றையொத்த மேகங்கள் எட்டுத்திக்கும் வராநின்றன ; உடல் மன் பொருந்தல் திருந்த - கோபித்த அரசர்கள் தங்களுடன் பொருந்துதல் திருத்தம் பெறுதலாலே, மணந்தவர் தேர், பொரும் மால் அயில் கண் நல்லாய், இன்று தோன்றும் நம் பொன் நகர்க்கே - பொருகிற பெரிய கூரிய வேலை யொத்த கண்களை யுடையாய்! நம்முடன் கூடினவர் தேர் நம் பொன்னகரிடத்தே இப்பொழுது தோன்றுங் காண். (எ-று.)

---

326. தோழி கூற்று.

## 327. முனைமுற்றி நினைதல்.

[1] பாசறை நிலை படைப்போர்வேந்தன்
மாசறு [2] பூணவள் மதிமுக நினைந்தது.

(இ-ள்.) பாசறைநிலை படைப்போர் வேந்தன் - பாசறைப் படைவீட்டிலே நிலைநின்ற படைப்போரை யுடையவரசன், மாசறு பூணவள் மதிமுகம் நினைந்தது - குற்றமற்ற ஆபரணங்களையுடையாளுடைய சந்திரனையொத்த முகத்தை நினைந்தது.

புயலோங் கலர்சடை யேற்றவன் சிற்றம் பலம்புகழு
மயலோங் கிருங்களி யானை வரகுணன் வெற்பின்வைத்த
கயலோங் கிருஞ்சிலை கொண்டுமன் கோபமுங் காட்டிவருஞ்
செயலோங் கெயிலெரி செய்தபி னின்றோர் திருமுகமே.

(ப-ரை.) செயல் ஓங்கு எயில் எரி செய்த பின் - தொழில் மிக்க மதிலை எரித்தபின்பு, (மதில் என்பது ஊரை), இன்று ஓர் திருமுகமே - இப்பொழுது ஓர் திரு முகம், புயல் ஓங்கு அலர் சடை ஏற்றவன்-நீரை நீண்டு விரிந்த திருச்சடையி லேற்றவன், சிற்றம்பலம் புகழும் - அவனுடைய திருச்சிற்றம் பலத்தை வாழ்த்தும், மயல் ஓங்கு இருங்களியானை வரகுணன் வெற்பின் வைத்த-மயக்கம் மிக்க களிப்பையுடைத்தாகிய யானை களையுடைய வரகுணனை பாண்டியன் இமயபருவதத்தின்கண் எழுதிவைத்த, கயல் ஓங்கு இருஞ்சிலை கொண்டு - கயலையும் மிகவும் சிலையையும் தன்னிடத்தே கொண்டு, மன் கோபமும் காட்டி வரும் - நிலைபெற்ற கோபத்தையும் தோற்றுவித்து வாரா நின்றது. (எ-று.)

இனி இங்கே நிற்கை யரிதுபோலும் என்றது.

இனி, சிலேடை வகையால், ஊரை எரித்தற்கு முனிந்த கயலாம் சிலையையும் விற்படையையும் கொண்டு மன்னன் கோபத்தையும் தோற்றுவித்து ஒரு திருமுகம் வாராநின்றது; இத்திருமுகம் ஆற்றலரிது போலும் என வேறொரு பொருளும் (கொள்க.)

**327.** தலைமகன் கூற்று.

---

(பா-ம்.) 1. பாசறைமுற்றி. 2. பூண்முலை.

வரகுணன் சேரநாட்டையுடையவனென்பது அவன் சிலை பொறி யுடைமையால் தெரியவருகிறது.

## 328. நிலைமை நினைந்து கூறல்.

பொற்றொடிநிலைமை மற்றவனினைந்து
திருந்து தேர்ப்பாகற்கு வருந்துபு புகன்றது.

(இ-ள்.) பொற்றொடி நிலைமை - அழகிய வளைகளையுடையாள் நிலைமையை, மற்றவன் நினைந்து - மற்று அந்த நாயகன் நினைந்து, திருந்து தேர் பாகற்கு - திருந்தின தேர்ப்பாகனுக்கு, வருந்துபு புகன்றது - கிலேசித்துச் சொன்னது.

---

சிறப்பிற் றிகழ்சிவன் சிற்றம் பலஞ்சென்று சேர்ந்தவர்தம்
பிறப்பிற் றுனைந்து பெருகுக தேர்பிறங் கும்மொளியார்
நிறப்பொற் புரிசை மறுகினிற் [1] றுன்னி மடநடைப்புள்
இறப்பிற் றுயின்று முற்றத் திரைதேரு மெழினகர்க்கே.

(ப-ரை) பிறங்கும் ஒளியார் நிறபொன் புரிசை மறுகினில் - மிக்க ஒளியால் நிறைந்த மாற்றற்ற பொன்னாலே செய்த மதில் சூழ்ந்த ஊரின் தெருக்களில், துன்னி, மடநடை புள் இறப்பில் துயின்று - பெடையும் சேவலும் தம்மிற் சேர்ந்து, மடப்பத்தையுடைய நடையாற் சிறந்த புள்ளாகிய மாடப்புறா இறப்பிலே துயின்று, முற்றத்து இரை தேடும் எழில் நகர்க்கே - பிற்பட்டு, முற்றத்தே சேர்ந்திருந்து இரை எடுக்கின்ற அழகிய நகரிடத்தே, சிறப்பின் திகழ் சிவன் சிற்றம்பலம் சென்று சேர்ந்தவர் - தம் சிவனுடைய திருநாட்களாலே சிறந்த திருச்சிற்றம்பலத்தைச் சென்று அடைந்தாருடைய, பிறப்பில் துனைந்து பெருகுக தேர் - பிறவியற்ற கடுமைபோல விரைந்து முடுகுவதாகத் தேரானது. (எ-று.)

---

328. தலைவன் கூற்று,

(பா-ம்) 1. துன்னும்.

புறக்கள் துணையோடு துயின்று (முன்றிலின்கண்) விளையாடுவன கண்டு ஆற்றகில்லாளென்பது போதர, இறப்பிற்றுயின்று முற்றத்திரை

தேருமென்றான். சிற்றம்பலஞ் சென்று சேர்ந்தவர் பிறவியிறுதிக்கண் பேரின்பமெய்துமாறுபோல, (யானும் சுரம்) செல்லிறுதிக்கட் பெருந்தோண் முயங்குவலென்னுங் கருத்தாற் பிறப்பிற்றுனைந்து பெருகுக தேரென்றான். (பே-ரை.)

---

## 329 முகிலொடு கூறல்.

முனைவற்குற்றுழி வினைமுற்றிவருவோன்
கழுமலெய்திச் செழுமுகிற்குரைத்தது.

(இ-ள்) முனைவற்கு உற்றுழி வினைமுற்றி வருவோன்-முனை செய்யும் அரசனுக்குப் போருற்றவிடத்து, அவனுக்காக வினை முனைமுடித்து வருகின்ற(வன்), கழுமல் எய்தி செழுமுகிற்கு உரைத்தது - மயக்கமுற்று வளவிய முகிலுக்குச் சொன்னது.

---

அருந்தே ரழிந்தன மாலமென் றோல மிடுமிமையோர்
மருந்தே ரணியம் பலத்தோன் மலர்த்தாள் வணங்கலர்போல்
திருந்தே ரழிந்து பழங்கண் டருஞ்செல்வி சீர்நகர்க்கென்
றுந்தே ரிதன்முன் வழங்கேல் முழங்கேல் வளமுகிலே.

(ப-ரை.) அருந்து, ஏர் அழிந்தனம், ஆலம், என்று ஓலம் இட, இமையோர் மருந்து - எங்கள் அழகு அழிந்தோம்; இந்நஞ்சை உண்பாயாக வேண்டும் என்று முறையிடுகிற தேவர்களுக்கு ஔடதமானவன், [என்றது, அமுது வேண்டிக் கடல் கடைந்த தாங்கள் சாவாமலிருப்ப இவன் சாவாமற் பரிகரித்தான் என்பது கருத்து], ஏர் அணி அம்பலத்தோன் மலர்த்தாள் வணங்கலர்போல் - மிக்க அழகுடைத்தாகிய திருவம்பலத்தே உள்ளவனுடைய மலரையொத்த திருவடிகளை வணங்காதாரைப் போல, திருந்து ஏர் அழிந்து பழங்கண் தரும் செல்வி - திருந்தின அழகழிந்து வருந்துகிற நாயகியுடைய, சீர்நகர்க்கு என்

வரும்தேர் இதன்முன் வழங்கேல் - சீரிய நகரியிடத்துப் போகிற என்னுடைய தேராகிய இதன் முன்னே போகாதொழிவாயாக. [போனுயாகிலும்], முழங்கேல், வளமுகிலே - வளவிய முகிலே, முழங்காதே ஒழிவாயாகவேண்டும். (எ-று.) எனவே, முகிலுக்கே முற்படத் தேர்கடாவ வேண்டுமென்பது கருத்து.

---

**329.** தலைவன் கூற்று.

'பழங்கண் தரும் என்பற்கு, துன்பத்தை யுண்டாக்கும் என்று உரை கூறி, துன்பத்தை எனக்குத் தருமென்று உரைப்பினுமமையும்' என்பர் பேராசிரியர்.

## 330. வரவெடுத்துரைத்தல்.

வினைமுற்றிய வேந்தன்வரவு
புனையிழைத்தோழி பொற்றொடிக்குரைத்தது.

(இ-ள்.) வினைமுற்றிய வேந்தன் வரவு - வினைமுடித்த நாயகன் வரவை, புனையிழைதோழி - அணியத்தக்க ஆபரணங்களையுடைய தோழி, பொற்றொடிக்கு உரைத்தது - அழகிய வளைகளையுடையாளுக்குச் சொன்னது.

---

பணிவார் குழையெழி லோன்றில்லைச் சிற்றம் பலமனைய
மணிவார் குழன்மட மாதே பொலிகநம் மன்னர்முன்னுப்
பணிவார் திறையும் பகைத்தவர் சின்னமுங் கொண்டுவண்
அணிவார் முரசினொ டாலிக்கு மாவோ டணுகினரே. [டேர்

(ப-ரை.) நம் மன்னர் - நம்முடைய நாயகர், முன்னு பணிவார் திறையும் - முன்னின்று வணங்குவாரிட்ட திறையும், பகைத்தவர் சின்னமும் - வணங்காதே பகைத்தவருடைய விருதுகளும், (வண்தேர் முன்னுக்கொண்டு - தமது வண் தேர்க்கு முன்னாகக்கொண்டு, அணிவார் முரசுனேடு ஆலிக்கும்

மாவோடு, அணுகினரே) வீரமுரசுகள் முழங்க, யானை குதிரைகள் கதிபாய, வந்துகுறுகினர் இனி. பணிவார்குழை எழிலோன்-பாம்பாகிய நீண்ட குழையாலுண்டாகிய அழகையுடையவன், [என்றது, சிலர்க்கு ஆபரணங்களைப் பூண்டாலும் அழகு செய்திராது; இவனுக்கு, நீண்ட பாம்புகளைப் பிடித்துப் பூண்டும் அதனாலும் அழகு செய்வதென்பது கருத்து], தில்லைச்சிற்றம்பலம் அனைய மணி வார் குழை மடமாதே; பொலிக - அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் திருச்சிற்றம்பலத்தை விட்டு நீங்கவொண்ணாத அழகினையுடையாய், நீலமணியை யொத்த நீண்ட கூந்தலினையும் மடப்பத்தையு முடையாய் (பொலிவடைவாயாக).. (எ-று.)

---

**330.** தோழி கூற்று.

ஏட்டில் இப்பாடலின் பொருள் சில விடங்களிற் சிதைந்துள்ளது இதன் இறுதியில், இந்நன்மை பொலிவு பெறுவதற்குக் குறித்த பருவத்தே வினை முடிவு செய்து வந்தமையா.........மன்னரென்ருள்......த் துறந்து வருகையாலே இனிப் பிரிவில்லை. நம்மிற் கூடிய பொலிவு .........ளென்பது கருத்து'' எனறு எழுதப்பெற்றுள்ளது.

---

## 331. மறவாமை கூறல்.

பாசறைமுற்றிப் பைந்தொடியோடிருந்து
மாசறு தோழிக்கு வள்ளலுரைத்தது.

(இ-ள்.) பாசறை முற்றிப் பைந்தொடியோடிருந்து - பாசறைப் போரை முடித்து வந்து அழகிய வளைகளையுடையாளுடனே இருந்து, மாசறு தோழிக்கு வள்ளலுரைத்தது - குற்றமற்ற தோழிக்கு நாயகன் சொன்னது.

---

கருங்குவ ளைக்கடி மாமலர் முத்தங் கலந்திலங்க
நெருங்குவ ளைக்கிள்ளை நீங்கிற்றில ணின்று நான்முகனோ
டொருங்குவ ளைக்காத் தானுண ராதவன் றில்லையொப்பாய்
மருங்குவ ளைத்துமன் பாசறை நீடிய வைகலுமே.

(ப-ரை.) நின்று நான்முகனோடு ஒருங்கு வளைக் காத்தான் உணராதவன் தில்லை ஒப்பாய் - நான்முகனோடே சங்கேந்திய கையையுடையவனும் மாறுமல் ஆராய்ந்தும் உணரப்படாதவனுடைய பெரும்பற்றப் புலியூரை யொப்பாய்! மருங்கு வளைத்து மன்பாசறை நீடிய வைகலுமே - மாற்றரசனுடைய பாசறையை வளைத்துக்கொண்டு அவன் பக்கத்தே தாழ்த்திருந்த நாளெல்லாம், கருங்குவளை கடி மா மலர் முத்தம் கலந்து இலங்கும் - கண்ணாகிய குவளையில் நறுநாற்றமுடைத்தாகிய பெரிய மலர்களிலே கண்ணீர்த் துளியாகிய முத்துக்கள் விரவி விளங்கும்; நெருங்கு வளைகிள்ளை நீங்கிற்றிலள் - நெருங்கிய வளைகளையுடையாளாகியளாய்க் கிளியை ஒப்பாள் என்னை விட்டு நீங்கிற்றிலள். (எ-று.)

வினை முடித்த பின்பு இவளை நினைத்தலேயன்றி, வினை முடிவதற்கு முன்னும் இவளைக் கருதிக் கொண்டு இருந்தேனென்னுமது தோன்ற வைகலும் என உம்மையைக் கொடுத்தார்.

---

331. தலைவன் கூற்று.

வேந்தற்குற்றுழிப் பிரிவு முற்றிற்று.

---

## 24. பொருள்வயிற் பிரிவு.

பொருள்வயிற் பிரிதலென்பது, குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள் கொண்டு இல்லறஞ் செய்தால் அதனான்வரும் பயன் அவர்க்காம் அத்துணையல்லது தமக்காகாமையால் தமது பொருள் கொண்டு இல்லறஞ் செய்தற்குப் பொருடேடப் பிரியா

கிற்றல். இஃது இருபது துறைகளையுடைத்து: அவை வருமாறு:—

[1]வாட்டங் கூறல், [2]பிரிவுநினை வுரைத்தல்,
[3]ஆற்றாது புலம்பல், [4]ஆற்றாமை கூறல்,
[5]திணைபெயர்த் துரைத்தல், [6]பொருத்த மறிந்துரைத்தல்,
[7]பிரிந்தமை கூறல், [8]பிரிவாற்றாமையா
னிரவுறு துயரத்திற் கிரங்கி யுரைத்தல்,
[9]இகழ்ச்சி நினைந்தழிதல், [10]உருவு வெளிப்படுதல்,
[11]நெஞ்சொடு நோதல், [12]நெஞ்சொடு புலத்தல்,
[13]நெஞ்சொடு மறுத்தல், [14]நாளெண்ணி வருந்தல்,
[15]வேறு வரவுகண் டிரங்கி யுரைத்தல்,
[16]பருவங்கண் டிரங்கல், [17]முகிலொடு கூறல்,
[18]தேர்வரவு கூறல், [19]இளையரெதிர் கோடல்,
[20]உண்மகிழ்ந் துரைத்தல், ஓதிய ஒருபது
மாமதி நுதலாய், வான்பொருட் பிரிதல்.

(பே-ரை).

---

## 332. வாட்டங்கூறல்

பிரிவுகேட்ட வரிவைவாட்டம்
நீங்கலுற்றவன் பாங்கிக்கிசைத்தது.

முனிவரு மன்னரு முன்னுவ பொன்னால் முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்[1] றிருச் சிற்றம் பலமனையாள்
துனிவரு நீர்மை யிதென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிது வோவென்று வந்திக்கு நன்னுதலே.

(ப-ரை.) முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுன் முடியும் என பணிவரும்கண் - முனிவரும் அரசரும் நினைக்கப்படுவன, [மறுமை யின்பமும் இம்மை இன்பமும் இவையிரண்டும்] பொன்னுண்டாகவே முடியும் என்று சொல்லுமளவில், கண்கள் நீர்வர வாளா நிற்பன; பரமன் திருச்சிற்றம்பல மனையாள் - பரமனுடைய திருச்சிற்றம்பலத்தை யொப்பாள், துனி வரு நீர்மை இது என் என்று - வெறுக்குந் தன்மையாகிய இது என்னவென்று, தூநீர் தெளித்து அளிப்ப - தூய நீரைத் தெளித்துத் தலையளி செய்ய, நனி - நெடுங்காலமாக விருந்தன; வரு நாள் இதுவோ — நீர் வருவேன் என்று சொன்ன நாள் இந்நாளோ? என்று வந்திக்கும் நன்னுதலே — என்று தொழாநிற்கும், நல்ல நெற்றியினையுடையாள். (எ-று.)

என்றது, பிரிவு அறிவுக்கும் அளவில் புத்தி கலங்கிக் கலங்கின காலமெல்லாம் பிரிந்த காலமாகக் கலங்கி, தலையளிசெய்த பொழுது வந்த காலமாகக் கருதி, இது தன்னை நெடுங்கடலாகக் கருதித் தொழாநிற்பவள் எனவே பிரிவரிதென்றுபடும்.

---

332. தலைவன் கூற்று.

(பா-ம்.) திருச்சிற்றம்பலமனையாய்.

'துறந்தார் கருதுவதாகிய மறுமையின்பமும், அரசர் கருதுவதாகிய இம்மையின்பமுமென்று, நிரனிறையாகக்கொண்டு, அவரிருவரும் கருதுவனவாகிய இப்பொருளிரண்டனையும் பொருண் முடிக்குமென்று பொதுவகையாற் கூறினானெனக் கொள்க. (பே-ரை.)

'பொருளா லிகபர மென்னுமுன் நீர்கண் பொழியவுள்ளம்
மருளா வயர்ந்தன டுநீர் தெளித்துடன் மாற்றமின்னே
வெருளா வெழுந்தின்ன நாட்சென்ற தோவிங்கு மேவவென்று
தெருளா வணங்கிடு மெம்மான் சிராமலைத் தேமொழியே'
என்பது சிராமலைக்கோவை (452)

## 333. பிரிவு நினைவுரைத்தல்.

பொருள் வயிற் பிரியும் [1] பெருவேலவனெனச்
சுருளுறு குழலிக்குத் தோழி சொல்லியது.

வறியா ரிருமை யறியா ரெனமன்று மாநிதிக்கு
நெறியா ரருஞ்சுரஞ் செல்லலுற் றார்நமர் நீண்டிருவர்
அறியா வளவுநின் றோன்றில்லைச் சிற்றம் பலமனைய
[2] செறிவார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் திருநுதலே.

(ப-ரை.) நீண்டு இருவர் அறியா அளவு நின்றோன் - அயனும் மாலும் அறியா அளவிலே நீண்டு நின்றவன், தில்லை சிற்றம்பலம் அனைய - அவனுடைய திருச்சிற்றம்பலத்தை யொத்த, செறி வார் கருங் குழல் வெள் நகை செவ்வாய் திரு நுதலே - நெருங்கி நீண்ட கரிய கூந்தலினையும் வெள்ளிய முறுவலினையும் சிவந்த வாயினையும் அழகிய நெற்றியினையுமுடையாய்! வறியார் இருமையும் அறியார் என - (பொருள் இல்லாதார்) இம்மை மறுமையாயுள்ள இன்பம் அறியார் (என்று), மன்னும் மாநிதிக்கு - நிலைபெற்ற பெரும் பொருளுக்கு, நெறி ஆர் அருஞ் சுரம் செல்லலுற்றார் நமர் - வழி (அறிதற்கு) அரிய, போகைக்கு அரிய காட்டைப் போவதாகநினைந்தார் காண் நம்முடையநாயகர். (எ-று.)

நமரென்பது நம் அன்புக்குப் பொருந்த ஒழுகும் அவர் எனவே, பொருள் முடித்துக் கடுக வருவரென்று படும்.

---

333. தோழி கூற்று.

(பா-ம்.) 1. பொருத்த நினைந்து. 2. செறியார்.

வறியார் இருமை அறியார்: "ஈதலுந் துய்த்தலு மில்லோர்க்கில்' (குறு. 63. 1.) "இசையு மின்பமு மீதலு மூன்றும், அசைவுடை னிருந்தோர்க் கரும்புணர் வின்மென." (நற். 214-1-2.)

### 334. ஆற்றாது புலம்பல்

பொருடரப்பிரிவு மருடருபவனெனப்
பாங்கிபகரப் பூங்கொடிபுலம்பியது.

(இ-ள்.) பொருடரப் பிரிவும் அருள் தருபவனென - பொருள் கொண்டு வரப் பிரியானின்றான் அருளைத் தரக்கடவனென்று, பாங்கி பகர - தோழி சொல்ல, பூங்கொடி புலம்பியது வல்லிசாதியை யொப்பாள் வருந்தினது.

---

சிறுவா ளுகிருற் றுறுமுன்னஞ்சின்னப் படுங்குவளைக்
கெறிவாள் கழித்தன டோழி யெழுதிற் கரப்பதற்கே
அறிவா ளொழிகு வதஞ்ச னமம்பல வர்ப்பணியார்
குறிவாழ் நெறிசெல்வ ரன்பரென் றம்ம கொடியவளே.

(ப-ரை.) எழுதிற் கரப்பவர்க்கே அறிவாள் ஒழுகுவது அஞ்சனம்-அஞ்சனம் எழுதில் (எழுதுகின்ற) பொழுதும் நாயகர் தோன்றாமையை அறிந்திருந்தும், அம்பலவர் பணியார் குறிவாழ் நெறி செல்வர் அன்பரென்று-திருச்சிற்றம்பலநாதரை வணங்காதவர்கள் அடையாளமாக உறைகிற வழியிடத்தே அன்பர் போகாநின்றாரென்று, கொடியவளே - கொடியவள் சொல்லி, சிறுவாள் உகிர் உற்று உறுவண்ணம்- சிறு உகிர்பட்டுப் படா மாத்திரையிலே, சின்னப்படும் குவளை - பொடியாய்ப் போகிற குவளைப் பூவுக்கு, எறிவாள் கழித்தனள் தோழி - வெட்டவல்ல வாளை உறை கழித்து வெட்டினாள் தோழியானவள். (எ-று.)

கொடியவள் என்ற பின்பு தோழி யென்றது குறிப்பு மொழி

---

334. தலைவி கூற்று.

(ப-ம்) 1. கொடியவரே.

அஞ்சன மெழுதின் எழுதுகின்ற காலத்துக் காதலர் தோன்றாமையால், அவ்வஞ்சனத்தை ஒழிவது அறியாள் தோழி; அவள் கொடியவள் என்பது கருத்து.

அஞ்சனம் ஒழிகுவது

கண்ணுள்ளார் காதல வராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து. (குறள் 1127.)

## 335. ஆற்றுமை கூறல்.

ஏழை யழுங்கத்
தோழி சொல்லியது.

(இ-ள்.) ஏழை அழுங்க - தாம் பிரிவறிவித்த காலத்து அதற்கு நாயகி கவலைப்படுகையாலே, தோழி சொல்லியது - நாயகனுக்குத் தோழி சொன்னது.

---

வானக் கடிமதிற் றில்லையெங் கூத்தனை யேத்தலர்போற்
கானக் கடஞ்செல்வர் காதல ரென்னக் கதிர்முலைகள்
மானக் கனகந் தருமலர்க் கண்கண்முத் தம்வளர்க்கும்
தேனக்க தார்மன்ன னென்றோ வினிச்சென்று தேர்பொருளே.

(ப-ரை.) வான கடி மதில் எம் கூத்தனை ஏற்றலர் போல் - வான் அளவும் செல்ல உயர்ந்த சிறந்த மதிலாற் சூழப்பட்ட பெரும்பற்றப்புலியூரில் எம்முடைய கூத்தனை வாழ்த்தாதாரைப் போல, கானக் கடம் செல்வர் காதலர் என்ன - காடு உடைத்தாகிய அரிய வழியிலே போகா நின்றார் நம்முடைய நாயகரென்று சொல்லும் அளவில், கதிர் முலைகள் மான கனகம் தரும் - கதிர்த்த முலைகள் கொண்டாடப்பட்ட பொன்னைத் தரா நின்றன; மலர்க்கண்கள் முத்தம் வளர்க்கும் - மலரை யொத்த கண்கள் முத்துக்களை மிகா நின்றன; தேன் நக்க தார் மன்னன் - மது மலர்ந்த மாலையினையுடைய மன்னனே! என்றோ இனி சென்று தேர் பொருளே - இனிச் சென்று தேர்கின்ற பொருள் எப்பொருள்தான்? (எ-று.)

---

**335.** தோழி கூற்று.

மானம் என்றது அளவை. (பே-ரை.)

குறிப்பு :—இப்பாடல் ஏட்டில் சிதைத்துவிட்டது. உரையும் முன் பாடலுரையுடன் கலந்தெழுதப்பெற்றுள்ளது. சிதைந்தனபோக எஞ்சியுள்ளவை முன் அச்சுப்பிரதியிலுள்ளபடியே காணப்படுகின்றன.)

## 336. திணைபெயர்த்துரைத்தல்.

துணைவன்பிரியத் துயருறுமனத்தொடு
திணைபெயர்த்திட்டுத் தேமொழிமொழிந்தது.

(இ-ள்.) துணைவன் பிரிய - நாயகன் பிரிய, துயருறு மனத்தொடு - வருத்தமுற்ற மனத்துடனே, திணை பெயர்த்திட்டு, நிலம் பெயர்த்திட்டு, தேன்மொழி மொழிந்தது - தேனை யொத்த வார்த்தையினையுடையாள் சொன்னது.

---

சுருடரு செஞ்சடை வெண்சுட ரம்பல வன்மலயத்
திருடரு பூம்பொழி லின்றுயிர் போலக் கலந்திசைத்த
வருடரு மின்சொற்க ளத்தனை யும்மறந் தத்தஞ் சென்றோ
பொருடரக் கிற்கின் றது [1] தனி யேற்குப் புரவலரே.

(ப-ரை.) சுருள் தரு செஞ்சடை வெண் சுடர் அம்பலவன் மலயத்து - நெரித்த சிவந்த திருச்சடையிலே வெள்ளிய திரு விளம்பிறையையுடைய திருவம்பல நாதனுடைய பொதியின் மலையிடத்து, இருள் தரு பூம் பொழில் இன்னுயிர் போலக் கலந்து இசைத்த - (இருள)ான பூம் பொழிலிடத்தே இனிய உயிர் போல நின்று சொன்ன, அருள் தரும் இன் சொற்கள் அத்தனையும் மறந்து அத்தம் சென்றோ - அருளுண்டான இனிய சொற்கள் அத்தனையும் மறந்து அரிய வழியிலே (சென்றோ), பொருள் தரக்கிற்கின்றது தமியேற்கு புரவலரே - பொருள் தரப் புகுகின்றது தனித்திருக்க (ப்பட்ட) என்னை, புரக்கக் கடவர். (எ-று)

என்றது, திருவம்பல நாதனிடமுமாயதிலே, பொதியின் மலையுமாயதிலே, பூம்பொழிலுமாயிருக்கிற சத்திய பூமியிலே, சொன்ன வார்த்தையை மறந்து பொருள்தர நினைக்கிறவர் புரக்கக் கடவரே யல்லவோ எனக் குறிப்பாலே இகழ்ந்தாள்; அன்றி, கலந்தும் நினையாதவர் எனவே, காமத்துக்கும் கூட்டல்லர் என் பது கருத்து. தமியேற்கு எனவே, புரக்க வேண்டு மிடத்தும்

புரவாதவர் என்பது கருத்து. தனி, தன் நாயகனைத் தன் அன்புக்குத் துணையாகப் பெறாத தனிமை.

---

336. தலைமகள் கூற்று.

(பாடம்) 1. வினையேற்கு.

' திணை பெயர்த்திடுதல் - பிரிவுள்ளிப் பாலை நிலத்தனாகியானை மருத நிலத்தானாக்குதல். (பே-ரை.)

---

## ௩௩௭. பொருத்த மறிந்துரைத்தல்

[1]பொருள்வயிற்பிரியு மருடருபவனெனப்
பூங்கொடிமருளப் பாங்கிபுகன்றது

(இ-ள்.) பொருள் வயிற்பிரிவும் அருள்தருபவன் என - அருள் தரக்கடவர் பொருளிடத்துப் பிரியா நின்றாரென்று, பூங்கொடிமருள- பூத்தகொடியினை ஒப்பாள் மயங்கினவிடத்து, பாங்கி புகன்றது - தோழி சொன்னது.

---

மூவர்நின் றேத்த முதல்வ னாடமுப் பத்துமும்மைத்
தேவர்சென் றேத்துஞ் சிவன்றில்லை யம்பலஞ் சீர்வழுத்தாப்
பாவர்சென் றல்கு நரக மனைய புனையழற்கான்
போவர்நங் காதல ரென்னு முரைப்பது பூங்கொடியே.

(ப-ரை) மூவர் நின்று ஏத்த - அரி, அயன், இந்திரனாகிய மூவரும் மாறாமல் புகழ, முதல்வன் ஆட - எல்லாப் பொருட்கும் காரணமாகியவன் ஆடா நிற்ப, முப்பத்து மும்மைத் தேவர் சென்று ஏத்தும் - முப்பத்து மும்மையாகிய எண்ணையுடைய தேவர்கள் சென்று தோத்திரஞ் செய்யும், சிவன் தில்லை அம்பலம் சீர் வழுத்தா - சிவனுடைய பெரும்பற்றப்புலியூரில் திருவம்

பலத்தைச் சிறப்பாய்ப் புகழாத, [அம்பலத்தின் சீர் என்னலும் ஆம்], பாவர் — பாவிகள் [இவர்களைப் பாவிகள் என்றது, தேவர்களும் காரணதேவர்களும் வாழ்த்தும் மாத்திரையல்லது, தெரிக்கப்படாதே வருந்தின(?) திரும்வம்பலம் வியாக்கிரபாத முனியாலே கட்புலனாகப் பெற்று வைத்தும், வாழ்த்தீமை யில்லாப் பாவிகள் என்றார்], சென்று அல்கும் நரகம் அனைய புனை அழல் கான் - அவர்க்கு என்றும் நிலையாக அவதரிக்கிற நரகத்தை யொத்த அழல் கை செய்யா கடவேலாத்த காட்டிலே, போவர் நம் காதலர் - நம்முடைய காதலர் போகா நின்றார், என்னும் உரைப்பது பூங்கொடியே பூங்கொடியை யொப்பாய், நாம் என்ன வார்த்தையைச் சொல்லுவோம். (எ-று.)

என்றது, நம்காதலர் என்றும் அம்பலத்தை வாழ்த்துபவராய் வைத்தும் இக் காட்டிலே போம்படியானால், நாம் சொல்வதற்கு ஒரு வார்த்தையில்லை; நம்மேல் காதலராய் வைத்தும் இக்காட்டிலே போகாநின்றது ஒரு காரியத்தைக் கருதியன்றே; அக்காரியம் முடிவு செய்யும் அளவு நாம் ஆற்றியிருத்தலன்றி, ஆம், ஆகாது என்னும் நினைவு நமக்கு என் செய்ய, என்றபடி; காதலர் எனவே, கடிது மீள்வர் என்பது கருத்து.

---

1. தோழி கூற்று.

(பா-ம்) 1. பொருள்வயிற் பிரிவோன் பொருத்த நினைந்து சுருளுறு குழலிக்குத் தோழிசொல்லியது. (பே-ரா)

## 338. பிரிந்தமை கூறல்

எதிர்நின்றுபிரியிற் கதிர்நீவாடுதற்
குணர்த்தாதகன்றான் மணித்தேரோனென்றது

(இ-ள்) எதிர்நின்று பிரியின் கதிர்நனி வாடுதற்கு - முன்னின்று சொல்லிப் பிரியில் நீ ஒளி வாடுவை என்று பயப்பட்டு,

உணர்த்தாது அகன்றான் மணித்தேரோன் என்றது - மணியழுத் தப்பட்ட தேரினையுடையவன் சொல்லாதே பிரிந்தான் என்றது

---

தென்மாத் திசைவசை தீர்தரத் தில்லைச்சிற் றம்பலத்துள்
என்மாத் தலைக்கழல் வைத்தெரி யாடு மிறைதிகழும்
பொன்மாப் புரிசைப் பொழிற்றிருப் பூவண மன்னபொன்னே
வன்மாக் களிற்றொடு சென்றன ரின்றுநம் மன்னவரே.

(ப-ரை.) தென் மா திசை வசைதீர்தர - மிக்க தென் திசையிலுள்ள குற்றம் நீங்க, தில்லை சிற்றம்பலத்துள் - பெரும்பற் றப்புலியூரில் திருச்சிற்றம்பலத்திலே, என் மா தலை கழல் வைத்து எரியாடும் இறை திகழும் - என்னுடைய நாய்த் தலையிலே திரு வடிகளை வைத்தும், எரியை ஏந்திக்கொண்டும் ஆடுகிற சுவாமி சிறந்து எழுந்தருளியிருந்த, [என்றது, தூயதல்லாத என் னுடைய நாய்த்தலையிலே திருவடிகளை வைத்தும் எல்லார்க்கும் தண்ணளி செய்கிற சீகரத்திலே நெருப்பை வைத்தும் இச் செய்கைகளுடனே தூயதாயுமிருக்கிற திருச்சிற்றம்பலத்திலே ஆடினானென்பது கருத்து], பொன் மா புரிசை பொழில் திருப் பூவணம் அன்ன பொன்னே - பொன்னாற் செய்த பெரிய மதி லாற் சூழப்பட்ட பொழிலாற் சிறந்த திருப்பூவணத்தை யொத்த பொன்னே!, வன்மா களிற்றொடு சென்றனர் இன்று நம் மன்ன வரே - வலியும் பெருமையுமுடைய யானையுடனே (இன்று நம் மன்னவர்) போனார். (எ-று.)

என்ன, போர்க்குச் சிறந்தது யானையாதலால் கடுக வினை முடித்து மீள்வர் என்பது கருத்து.

---

338. தோழி கூற்று.

தென்திசை வசைதீர்தர: "தென்னாட்டவருஞ் சுவர்க்கம் புகுத லால்" (நாலடி 243).

நால்வகைத் தானையோடு சென்றாரெனினும் மதில்கால் சாய்த் தற்குக் களிறு சிறந்தமையின் அதனையே கூறினார். செல்வர் என் றது சென்றாரென்றமையாற் சொல்லாது பிரிந்தானும். மாவென்பது விலங்கென்று நாய்த்தலை யென்பாருமுளர். (பே-ரை.)

## 339. இரவுறு துயரத்திற் கிரங்கியுரைத்தல்.

அயிறருகண்ணியைப் பயிறருமிரவினுள்
தாங்குவதரிதெனப் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) அயில்தரு கண்ணியைப் பயில் தரும் இரவினுள்- வேலையொத்த கண்களையுடையாளைப் பல இரவு செறிந்தலொத்த இரவிடத்தே, தாங்குவது அரிதெனப் பாங்கி பகர்ந்தது - ஆற்றுவித்தல் அரிதென்று தோழி சொன்னது.

---

ஆழியொன் றீரடி யும்மிலன் பாகன்முக்கட் டில்லையோன்
ஊழியொன் றாதன நான்குமைம் பூதமு மாறொடுங்கு
மேழியன் றாழ்கட லும்மெண் டிசையுந் திரிந்திளைத்து
வாழியன் றோவருக் கன்பெருந் தேர்வந்து வைகுவதே.

(ப-ரை.) ஆழியொன்று - தேருக்குக் காலும் ஒன்றே; ஈரடியும் இலன் பாகன் - பாகன் இரண்டு காலும் உடையனல்லன்; முக்கண் தில்லையோன் ஊழி ஒன்றாதன நான்கும் - நாலு சாமங்களும், மூன்று திருநயனங்களையுடையனாகிய தில்லையோனாற் படைத்த ஊழியுடன் ஒவ்வாமல் விஞ்சியிருந்தன; ஐம்பூதமும் ஆறு ஒடுங்கும் - பஞ்ச பூதங்களும் தோன்றி முறைமையிற் சென்றொடுங்குகிற ஊழி என்று முன்னே கூட்டுக. [என்றது, பிருதிவி சங்கார முதலாக வாயுசங்கார மீறாகத் தோன்றும் ஊழிகளின்றியே, பஞ்சபூத பரிணாமங்களெல்லாம் ஒடுங்குகிற மகாசங்காரத்தை] ஏழ் இயன்ற ஆழ் கடலும் - ஏழாகச் செய்த ஆழ்ந்த கடல்களையும், [ஆழம் சொல்ல வேண்டினது தன்னைச்சாரின் நீளத்தோன்றுதற்கு], எண்திசையும் திரிந்து - எட்டுத் திக்கும் திரிந்து சுழன்று, இளைத்து - இவ்வழிச் செல்லலாலே இளைத்து, அருக்கன் பெரும் தேர் வந்து வைகுதுமே - ஆதித்தனுடைய பெரிய தேர் வந்து அவதரிப்பது, அன்றோ - பின்பு அல்லவோ? (எ-று.)

அவ்வளவும், இவனை எங்ஙனே ஆற்றுவிப்பன், எனத் தன்னுள் அழிந்தது.

---

339. தோழி கூற்று.

ஐம்பூதமும் ஆறுகளொடுங்கும் எழ்கடலுமென்றெண்ணிக் கடலோடருக்கற்கியை புண்மையால் ஐம்பூதத்திற் பிரித்துக் கூறினாரென்பாருமுளர். இரவும் பகலும் ஒப்பவருமாயினும் இரவுறு துயரத்திற் காற்றுமையின், இராப்பொழுது - பலகால் வருவதுபோலப் பயிறருமிரவென்றாள். (பே-ரை.)

இருகாலும் இல்லை வலவனுக் கேறும் எழுபரித்தேர்க்(கு)
ஒருகால்ஒழிய இருகாலும் இங்கில்லை ஒண்சிலம்பா
குருகாலும் வாரிதி ஏழுமெண் குன்றமும் சூழ்ந்திரவி
வருகாலம் என்றுகொல் அன்றுகொல் நீயும் வருவதுவே.

என்பது அம்பிகாபதிக் கோவை (283.)

---

## 340. இகழ்ச்சி நினைந்தழிதல்.

உணர்த்தாது பிரிந்தாரென
மணித் தாழ்குழலி வாடியது.

(இ-ள்.) உணர்த்தாது பிரிந்தாரென- அறிவியாது பிரிந்தார் என்று, மணித் தாழ்குழலி வாடியது- நீல மணியை யொத்த நீண்ட கூந்தலினையுடையாள் மெலிந்தது.

---

பிரியா ரெனவிகழ்ந் தேன்முன்னம் யான்பின்னை யெற்பிரியின்
தரியா ளெனவிகழ்ந் தார்மன்னர் தாந்தக்கன் வேள்விமிக்க
எரியா ரெழிலழிக் கும்மெழி லம்பலத் தோனெவர்க்கும்
அரியா னருளிலர் போலன்ன வென்னை யழிவித்ததே.

(ப-ரை.) பிரியார் என இகழ்ந்தேன் முன்னம் யான்- நம் மன்னர் முன்னாளிலே நகையாடிப் 'பிரிவன், என்றபொழுது, இவர் அருளிச் செய்கிறது நகையாட்டல்லது பிரியார் என்று நெகிழ்ந்

திருந்தேன் யான்; பின்னர் என் பிரியின் தரியாள், என இகழ்ந்தார் மன்னர்தாம்- நாம் நெகிழ்ந்திருந்தது கண்டு, 'நம்மைப் பிரிந்தால் இவள் துன்பம் தரியாள், என்று நெகிழ்ந்து, சொல்லாதே பிரிந்தார் நம் நாயகரும்; தக்கன் வேள்வி மிக்க எரியால் எழில் அழிக்கும்- தக்கனுடைய வேள்வியிடத்து மிக்க யாகத்தீயின் நிறைந்த அழகை அழிக்கிற, எழில் அம்பலத்தோன்- அழகிய திருவம்பலத்திலுள்ளவன், எவர்க்கும் அரியான்- எல்லார்க்கும் அரியவன், அருளிலர் போல்- அவனுடைய திருவருளில்லாதாரைப் போலே, அன்ன என்னை அழிவித்த- அவைகாண், என்னை அழிவித்தன, (எ-று.)

அவர் பிரிந்தாலும் நான் துன்பமுறேன் என்று, அவரும் தன்மையால் அளவில்லையாகப் பிரிவுள் நீட்டியரோ என்னக் கருதி வருந்தினேன் என்றது.

தக்கன் வேள்வி மிக்க எரியாரெழி லழிக்கும் எழிலம்பலத்தோன் என்றது, தேவர்களும் இருடிகளும் ஓமத்திற் பிறந்த கொடியோரும் தோற்றலும், தோலாமனூரவணியாக(?) யேவுவது நெருப்பை; அந்நெருப்பு தோன்றுவதெனவே, நீக்கியுள்ளார்......... சென்மம் சொல்லாமலே விளங்கும் (??)

---

340. தலைவி கூற்று.

உண்மையாற் காரணமாவனவும், உணரப்பட்டாற் காரணமாவனவும் எனக் காரணம் இருதிறத்தவாம். அவற்றுட்பிரிவு தரியாமைக்கு உணரப்பட்டாற் காரணமாதலின் பிரியினென் புழிப் பிரிகின்றாராக வுணரினென்பது ஆற்றலாற் பெற்றாம். புலி வரிலஞ்சுமென் புழிப்போல எரியாரெழிலழிக்கு மென்பதற்கு எரியினது எழிலழிக்கு மேன்பாருமுளர். ஆரைக் கிளவி கொடுத்து இழித்துக் கூறினாரெனினு மமையும். அழிக்குமென்பது கால மயக்கம். கற்பந்தோறும் இவ்வாறு செய்தலின் நிகழ்காலத்தாற் கூறினாரெனினு மமையும். உணர்த்தாது பிரியினும் ஒருவாற்றானுணர்ந்து பின்னும் ஆற்றாளாவளாலெனின், தீயது பிறகாணப்படு

மென்பதாகலானும், முன்னின்று உணர்த்த வல்லனலல்லாமை யாலும் அவ்வாறு பிரியுமென்க. (பே-ரை)

பிரியார்.........இகழ்ந்தார். "செல்வா ரல்லரென் றியா னிகழ்ந்தனனே, ஒல்வா ளல்லளென் றவரிகழ்ந் தனரே" (குறுந். 43:1-2). செல்லா ரவரென யானிகழ்ந் தனனே, ஒல்லா ளிவளென வொழிந்தனர், நல்லெழி லுண்க ணரிவையுமென் னெஞ்சே (தமிழ்நெறி. மேற்) "செல்லா ரவரென் றியானிகழ்ந் தேன்சுரஞ் செல்லத்தன்கண், ஒல்லா ளவளென் றவரிகழ்ந்தார்" (பாண்டிக்கோவை).

---

## 341. உருவு வெளிப்பட்டு நிற்றல்.

பொருள் வயிற் பிரிந்த [1] விருளறு வேலவன்
ஓங்கழற் கடத்துப் பூங்கொடியை நினைந்தது.

(இ-ள்) பொருள் வயின் பிரிந்த இருளறு வேலவன்—பொருளிடத்துப் பிரிந்த ஒளி வேலினையுடையவன், ஓங்கு அழல் கடத்து பூங்கொடியை நினைந்தது-மிக்க அழலுடைத்தாகிய காட்டிலே பூத்த கொடியை ஒப்பாளை நினைந்தது.

---

சேணுந் திகழ்மதிற் சிற்றம் பலவன் றெண்ணீர்க்கடனஞ்
சூணுந் திருத்து மொருவன் றிருத்து முலகினெல்லாங்
காணுந் திசைதொறுங் கார்க்கய லுஞ்செங் கனியொடுபைம்
பூணும் புணர்முலை யுங்கொண்டு தோன்றுமொர் பூங்
[கொடியே.

(ப-ரை.) சேணும் திகழ் மதில் சிற்றம்பலவன் - அதி தூரத்தே சிறந்து தோன்றும் மதில் சூழப்பட்ட திருச்சிற்றம் பலத்தேயுள்ளவன்; [என்றது, திருவம்பலம் நின்ற தானத்தே சென்றாலும் தேவர்களுக்கும் தெரியாதது; வியாக்கிரபாத முனி யாலே கட்புலனாகிய அதிதூரங்களிலே கண்டு நின்று தொழும் படியாயது என்பது கருத்து.] தெண்ணீர்க்கடல் நஞ்சு ஊணும்

திருத்தும் ஒருவன்- தெளிந்த நீரையுடைய கடலில் நஞ்சை ஊணாக உகந்து அருந்தின ஒருவன்; [என்றது, அல்லாத தேவர்களும் இருடிகளும் சுமரிக்குமளவில் வந்து வீழ்வதான தனை ஏதம் செய்யாமற் காத்தலன்றி, அமுதாம்படி திருத்திக் கொண்ட ஒருவன் என்பது கருத்து; ஒருவனென்றது, அமுது கடைகிற காலத்து நாம் அனைவோரும் உளமாக, அவன் ஒருவனும் வந்து செய்வது ஏனென, அங்கு அவதரித்து அனைவரும் அழிய வந்த நஞ்சை வென்ற ஒருவன் என்றபடி; அன்றி, நஞ்சுனும் திருத்தும் ஒருவன் (?) என்றாக்கி, நஞ்சூணை வஞ்சகமென்றும் பாபமென்றும் நூல்களில் அருளிச்செய்துவைத்து, அதுவும் பிறர் பிழைக்க உண்ணில் என்றும் புண்ணியமாகத் திருத்தினனெனுமாம்.]

திருந்தும் உலகிலெல்லாம் காணும் திசைதொறும்- அவனால் திருந்தச் செய்யப்பட்ட உலகிலெவ்விடத்தும் பார்க்கும் திக்குகளிலெல்லாம், கார்க்கயலும் செங்கனியொடு பைம்பூணும் புணர்முலையும்- (கண்ணாகிய) கரிய கயலும், (வாயாகிய) சிவந்த தொண்டைப் பழமும், அழகிய ஆபரணங்களும் பூண்ட தம்மிற் புணர்ந்த முலைகளும், கொண்டு தோன்றும் ஓர் பூங்கொடியே- கொண்டு தோன்றா நின்றது ஒரு வல்லி சாதி. [எங்கும் தோன்றும் எனவே, மீண்டு பார்த்தபொழுது தோன்றி முன்னிலையாகிலன்றே போகலாவது; எங்குந் தோன்றுதலாற் போகலரிதென நின்றது.] (எ-று)

---

341· தலைமகன் கூற்று.

(பா-ம்.) 1 வொளிறு வேலவன்.

இச்செய்யுளுடன்,

> விரும்பும் பொருள்முற்றி வெவ்வினை யேன்இன்று மீளுநெறி
> இரும்பும் பொறிஎழும் கானமன் றோஇள நீருமந்தண்
> கரும்பும் கமுகும் கதலியும் சேல்களும் காமரிசைச்
> சுரும்பும் பயில்குழற் சோலையும் நீகொண்டு தோன்றுவதே.

என்ற அம்பிகாபதிக் கோவைச் செய்யுளை ஒப்பிடுக.

கார்க்கயல்- கரிய கயல் (சிற். 312)

---

## 342. நெஞ்சொடு நோதல்.

வல்லழற்கடத்து மெல்லியலைநினைந்து
வெஞ்சுடர்வேலோ னெஞ்சொடுநொந்தது.

(இ-ள்) வல்லழற் கடத்து-வலிய அழலுடைத்தாகிய காட்டிலே, மெல்லியலை நினைந்து - மெல்லிய வியல்பினையுடையாளை நினைந்து, வெஞ்சுடர் வேலவன் நெஞ்சொடு நொந்தது-வெம்மையும் ஒளியுமுடைத்தாகிய வேலினையுடையவன் தன்னெஞ்சுடனே உசாவினது.

---

பொன்னணி யீட்டிய வோட்டரு நெஞ்சமிப் பொங்குவெங்கா
னின்னணி நிற்கு மிதென்னென்ப தேயிமை யோரிறைஞ்சும்
மன்னணி தில்லை வளநக ரன்னவன் னந்நடையாள்
மின்னணி நுண்ணிடைக் கோபொருட் கோநீ விரைகின்றதே.

(ப-ரை.) பொன்னணி ஈட்டிய ஓட்டரு நெஞ்சம் - பொன் திரளை ஈட்டுவதாக என்னை உன் நினைவிலே ஓட்டின பெறுதற்கரிய நெஞ்சம் [பெறுதற்கருமை, குறிப்புமொழி], இ பொங்கு வெங் கானின் நணி நிற்குமிது என் என்பதே - மிக்க வெய்ய காட்டிலே பொருந்தி நிற்குமிது என்னென்று சொல்லப்படும்? [நண்ணுகை - பொருந்துகை], இமையோர் இறைஞ்சும் மன் அணி தில்லை வள நகர் அன்ன - தேவர்கள் வணங்குகிற மன்னனுடைய அழகிய பெரும்பற்றப்புலியூராகிய வளவிய நகரியை யொத்த, அன்னம் நடையாள் மின் அணி நுண் இடைக்கோ - அன்னத்தின் நடை போலும் நடையை யுடையாளது மின்னையொத்த நுண்ணிடைக்கோ, பொருட்கோ நீ விரைகின்றது -பொருள் தேடவோ நீ விரைகின்றது?

இடைக்காகில் மீண்டு போகவேண்டும்; பொருட்காயின் மேலே போகவேண்டும்; இரண்டும் செய்யாது காட்டிலே நிற்கின்றது என் பெறவேண்டி? (எ-று)

---

342. தலைவன் கூற்று.

## 343. நெஞ்சொடு புலத்தல்.

நிழற்கதிர் வேலவன்
நெஞ்சொடு நொந்தது

(இ-ள்.) நிழற்கதிர் வேலவன் - நிழலைச்செய்கிற ஒளியினை யுடைய வேலவன், நெஞ்சொடு நொந்தது - நெஞ்சுடனே விசாரித்தது.

---

நாய்வயி னுள்ள குணமு மில்லேனை நற் றொண்டுகொண்ட
தீவயின் மேனியன் சிற்றம் பலமன்ன சின்மொழியைப்
பேய்வயி னும்மரி தாகும்பிரி வெளிதாக் குவித்துச்
சேய்வயிற் போந்தநெஞ் சேயஞ்சத் தக்கதுன் சிக்கனமே.

(ப-ரை) நாய் வயின் உள்ள குணமும் இல்லேனை நல் தொண்டு கொண்ட தீவயின் மேனியன் - நாயிடத்துமுள்ள குணமுமில்லாத என்னை நல்ல தொண்டனாகக்கொண்ட தீ யிடத்து உள்ள நிறத்தையொத்த திருநிறத்தை யுடையவன்; [என்றது, நாய்.........நன்றியறியும்; நான் தன்னைத் தொழுதற்கு உறுப்புக்களுள்ள உடம்பும் கருத்தும் த(ரப்பெற்று)ம் வணங்கா திருந்தது என் அறியாமையால் என்றபடி]. சிற்றம்பலம் அன்ன சின்மொழியை - அவனுடைய சிற்றம்பலத்தையொத்து மெல்லிய வார்த்தையினையுடையாளிடத்து, பேய்வயினும் அரிதாகும் பிரிவு எளிதாக்குவித்து - பேயிடத்தும் பயின்றார் செய்தற்கரிதாகிய பிரிவை எளிதாகப்பண்ணி, சேய்வயின் போந்த நெஞ்சே - தூரத் திடத்தே போன நெஞ்சமே! அஞ்சத்தக்கது உன் சிக்கனமே - உன்னுடைய இரக்கமில்லாமை பயப்படத்தக்கதொன்றாய் வந்தது (எ-று.)

---

343. தலைவன் கூற்று.

(பா-ம்). 1. அழற்கடத் தழுக்கமிக்கு
நிழற்கதிர்வேலோ னீடுவாடியது (பே ரை).

சின்மொழியை - சிலவாகிய மொழியையுடையாளிடத்து. 'சில மெல்லியவே கிளவி (குறுந். 70. 4.)

பேய்வயினுமரிதாகும் பிரிவு: 'பேயோடே னும் பிரிவொன்று இன்னா தென்பர்' (தேவா. சுந்தர. மீளாவடிமை. 9).

## 344. நெஞ்சொடு மறுத்தல்.

நீணெறிச்சென்ற நாறிணர்த்தாரோன்
சேணெறியஞ்சி மீணெறிசென்றது.

(இ-ள்) நீள் நெறி சென்ற நாறு இணர் தாரோன் - நெடிய வழியிலே போன நாற்றத்தாற் சிறந்த கொத்துமாலையை யுடையவன், சேண் நெறி அஞ்சி மீள்நெறி சென்றது - தூரமான வழிச்செலவுக்கு அஞ்சி மீளும் உபாயத்தை அடைந்தது.

---

தீமே வியநிருத் தன்றிருச் சிற்றம் பலமனைய
பூமே வியபொன்னை விட்டுப்பொன் றேடியிப் பொங்குவெங் [கான்
நாமே நடக்க வொழிந்தனம் யாநெஞ்சம் வஞ்சியன்ன
வாமே கலையைவிட் டோபொரு டேர்ந்தெம்மை வாழ்விப்பதே.

(ப-ரை.) தீ மேவிய நிருத்தன் திருச்சிற்றம்பலம் மனைய - தீயிலே பொருந்தின கூத்தையுடையவனது திருச்சிற்றம்பலத் தெல்லையிலே நிலைபெற்ற (?), பூமேவிய பொன்னைவிட்டுப் பொன்தேடி - பூவிலே பொருந்தின பொன்னாகியவளைவிட்டு வேறு பொன் தேடி, இப் பொங்கு வெங்கான் நாமே நடக்க - மிக்க வெய்ய காட்டிலே நாமே நடப்போமாக; [என்றது, தாமிருக்கும் நல்ல தேசத்திலே நிலைபெற்ற பூவிலே பொன் னிருக்க, அந்நியமான கொடிய தேசத்து அருங் காட்டிலே சென்று தேடுகிற பொருட்காகப் போகிற நாம், என நெஞ்சினை அழித்துக் கூறினான்.] ஒழிந்தனம் யாம் - நாங்கள் ஒழிந்தோம்; [நாங்கள் என்ற பன்மை கொடுமைப்பாடு.] நெஞ்சம் - நெஞ் சமே! [நெஞ்சம் என்றது கருத்து கடவாய் என்றபடி.] வஞ்சி அன்ன வாம் மேகலை விட்டோ - வஞ்சிக்கொடியை யொத்த அழகிய மேகலையையுடையாளை விட்டோ, பொருள் தேர்ந்து எம்மை வாழ்விப்பதே - பொருள் தேடி எம்மை வாழச் செய்வது? (எ-று.)

---

344. தலைவன் கூற்று.

## 345. நாளெண்ணி வருந்தல்.

சென்றவர்திறத்து நின்றுநனிவாட
சூழிருங்கூந்தற்றோழி நனிவாடியது.

(இ-ள்.) சென்றவர் திறத்து நின்று நனிவாட - பிரிந்தவர் திறத்து மாறாமல் மிகவும் வாட, சூழ் இரும் கூந்தல் தோழி நனிவாடியது - சுருண்டு நிறைந்த கூந்தலினையுடைய தோழி மிகவும் வாடியது. என்றது, நாயகி வாட்டங்கண்டு ஆற்றுவிக்க வொண்ணாமையாலே தோழியும் அதற்கு வாடியது.

---

தெண்ணீ ரணிசிவன் சிற்றம் பலஞ்சிந்தி யாதவரிற்
பண்ணீர் மொழியிவ ளைப்பையு ளெய்தப் பணித்தடங்கண்
உண்ணீ ருகவொளி வாடநீ டுசென் றார்சென்றநாள்
எண்ணீர் மையி னிலனுங் குழியும் விரலிட்ட றவே.

(ப-ரை.) தெண்ணீர் அணி சிவன் - தெளிந்த நீராகிய கங்கையைச் சூடிய சிவன், சிற்றம்பலம் சிந்தியாதவரின் - அவனுடைய திருச்சிற்றம்பலத்தினை நினையாதாரைப்போல வருந்த, பண் நீர் மொழி இவளைப் பையுள் எய்த - பண்ணின் தன்மையவாகிய வார்த்தையினையுடைய இவளைக் கிலேசம் பொருந்த, பனிதடம் கண் உள் நீர் உக - குளிர்ந்த பெரியகண்களுளுண்டாகிய நீரைச் சிந்த, [உள்ளுண்டாகிய நீர் என்றது, கண்ணீர் மாண்டால் கண் மணியில் நீரும் விழுந்து ......] ஒளிவாட - மேனி யொளியும் வாட, நீடு சென்றார் - நீட்டித்தவர், சென்ற நாள் எண் நீர்மையின் - போன நாளை எண்ணும் இயல்பாலே, நிலனும் குழியும் விரலிட்டு அறவே - குற்றப்பட்டு நிலனும் குழியுமிட்டு விரலும் தேய நிலனும் குழியும். (எ-று.)

எனவே, தன் இன்னுமை கண்டு நாயகி ஆற்றுவது பயன்.

---

345. தோழி கூற்று.

---

## 346. ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல்

*நீடிய பொன்னி னெஞ்சநெகிழ்ந்து*
*வாடியவன் வரவுற்றது.*

(இ-ள்.) நீடிய பொன்னின் நெஞ்சம் நெகிழ்ந்து - நீடின பொன்மேலே நெஞ்சு சென்றமை யொழிந்து, வாடியவன் வரவுற்றது - வாட்ட முற்றவன் வந்தது.

---

சுற்றம் பலமின்மை காட்டித்தன் றொல்கழ றந்ததொல்லோன்
சிற்றம் பலமனை யாள்பர மன்றுதிண் கோட்டின் [1]வண்ணப்
புற்றங் குதர்ந்துநன் ஞெகொடும் பொன்னார் மணிபுலம்பக்
கொற்ற மருவுகொல் லேறுசெல் லாநின்ற கூர்ஞ்செக்கரே.

(ப-ரை.) சுற்றம் பலமின்மை காட்டித் தன் தொல் கழல் தந்த தொல்லோன் - பலமுள்ளது போலத் தோன்றுஞ் சுற்றத்தார் பலமில்லாமையைத் தரிசிப்பித்து, என்னுடைய பிறவித் துன்பம் தீர்த்தற்குப் பழையதாய் வருகிற சீபாதங்களைத் தந்தவன் [என்றது, மாயாமலமும், ஆணவமலமும் அறுத்தவன்.] சிற்றம்பலம் அனையாள் பரமன்று - அவனுடைய திருச்சிற்றம்பலத்தையொப்பாள் அளவிலேயன்று; திண் கோட்டின் வண்ணப் புற்றம் குதர்ந்து - சிக்கென்ற கொம்பாலே அழகிய புற்றை இடந்து, பொன்னார் மணி புலம்ப - பொன்னார் மணி ஒலிப்ப, கொற்றம் மருவு கொல்லேறு - வெற்றி பொருந்தின கொலைத் தொழிலால் சிறந்த ஏறு, நல் நாகொடும் செல்லா நின்ற கூர்செக்கரே - நல்ல நாகுடனே அவனிருந்த ஊரிடத்தே செல்லா நின்ற செக்கரையுடைத்தாகிய மாலையம் பொழுது. (எ-று.)

செக்கர் ஆகுபெயர்.

---

346. தலைவன் கூற்று.

பா-ம். 1. மண்ணம் புற்று: மண்ணப்புற்று.
குதர்ந்து - குதர் (சிற். 369)

உரையின் இறுதியில் 'வருத்தமானது நல்லநிறமுதலாயின கண்டால் தங் கணவர்க்குக் காட்டி......மை கேட்டு அவருவமைசொல்லாது தாமின்புறும் பொழுதாதலின்' என்று எழுதப் பெற்றுள்ளது.

---

## 347. பருவங் கண்டிரங்கல்.

மனனியபருவ முன்னியசெலவின்
இன்னலெய்தி மன்னனேகியது.

(இ-ள்.) மன்னிய பருவம் முன்னிய செலவின் - நிலைநின்ற பருவமே ......கொண்டு செல்லாநின்ற நிகழ்ச்சியிலே, இன்னல் எய்தி மன்னன் ஏகியது- வருத்தமானதுற்று நாயகன் மீண்டது.

---

கண்ணுழை யாதுவிண் மேகங் கலந்து கணமயிறொக்
கெண்ணுழை யாத்தழை கோலிநின் றாலு மினமலர்வாய்
மண்ணுழை யாவு மறிதில்லை மன்னன தின்னருள்போற்
[1] பண்ணுழை யாழ்மொழி யாளென்ன ளாங்கொல் மன்பா
[வியற்கே

(ப-ரை.) கண் நுழையாது விண் மேகம் கலந்து - மேகங்கள் விரவுதலாலே கண் நுழைவதில்லை ஆகாயமானது; கணமயில் தொக்கு எண் நுழையா தழை கோலி நின்று ஆலும் - திரண்டு மயில்கள் பெடையும் சேவலுமாகச் செறிந்திருந்து, எண் சென்று புகுதாமல் இலக்க(ம)ற்ற பீலியை விரித்து நின்று ஆலியா நின்றன; இன மலர் வாய் மண் உழை யாவும் அறிதில்லை மன்னனது - திரண்ட மலரிடத்தே, பூமியிடத்துள்ளாராய எல்லாரானும் அறியப்படுகின்ற தில்லையில் உளனாகிய மன்னனது [என்றது, மண்ணிடத்தெனவே தெற்கேயுள்ளார்க்கல்லாது தில்லையைத் தொழ வொண்ணாமையின் வடக்குள்ளார் மலரையேந்தி, தில்லையிற் சென்று தொழ மாட்டாமையால், வணங்குவரென்பது கருத்து; அல்லது பாம்பும் புலியும் முதலாயின

மலரிட்டுத் தொழத் தில்லையுள் வெளிப்பட்டா னென்றுமாம்] இன்னருள் போல - அவனுடைய இனிய அருள்போல, பண் உழை யாழ் மொழியாள் என்னளாம் கொல் மன் பாவியற்கே - திருந்தப்பட்ட உழை நரம்பையொத்த வார்த்தையினையுடையாள் எத்தன்மையாளாவள் தான், பாவத்தைச் செய்த என்காரணமாக? (எ-று)

உழையாகிய பண்ணென்று பொருளுரைப்பாரு முளர்; உழையிசையாதலானும் இசைக்குப் பண் வேறாகலானும் அது பொருளன்றென்க.

---

**347.** தலைவன் கூற்று,

பா-ம் 1. பண்ணுழையா மொழியாள் (பே-ரை.)

'இனமலர் வாய்' என்பதற்கு 'இன மலரையுடைய விடமெங்கும்' என்றும், 'பண்ணுழையாமொழி', என்றதற்குப் 'பண்ணணையாத தேமொழி' என்றும் பொருள் கூறி, 'பண்ணப்பட்ட உழையாகிய நரம்பு போலும் மொழி என்று விளக்கமும் கூறுவர் பேராசிரியர்.

---

## 348. முகிலொடு கூறல்

எனைப்பலதுயரமோ டேகாநின்றவன்
[1] துனைக்காரதற்குத் துணிந்துசொல்லியது.

(இ-ள்) எனைப் பல துயரமோடு ஏகாநின்றவன் - எத்தனையேனும் பல கிலேசத்தினோடும் போகாநின்றவன், துனை கார் அதற்கு - விரைந்து செல்லுகிற மேகத்திற்கு, துணிந்து சொல்லியது - அறுதியிட்டுச் சொன்னது.

---

அற்படு காட்டிலின் [2] றாடுசிற் றம்பலத் தான்மிடற்றின்
முற்படு நீண்முகி லென்னின்முன் னேன்முது வோர்குழுமி
விற்படு வாணுத லாள்செல்ல நீர்ப்பான் விரைமலர்தூய்
நெற்படு வான்பலி செய்தய ராநிற்கு நீணகர்க்கே.

(ப-ரை.) அல் படு காட்டில் நின்று ஆடு சிற்றம்பலத்தான்-, இருளுண்டான சுடுகாட்டிலே நின்றாடுகிற திருச்சிற்றம்பல நாதன், மிடற்றின் முற்படு நீண்முகில் - அவனுடைய மிடற்றை யொத்து விரைந்து செல்லாநின்ற நீண்ட முகிலே! முதுவோர் குழுமி வில் படு வாள் நுதலாள் செல்லல் தீர்ப்பான் - முதிய பெண்டுகள் திரண்டு வில்லை யொத்த ஒளி சிறந்த நெற்றியினை யுடையாளது கிலேசத்தை ஆற்றுவதாக, விரை மலர் தூய் - நறு நாற்றமுடைத்தாகிய பூக்களைத் தூவி, நெல்படுவான் பலி செய்து - நெல்லைப் பரப்பப்பட்ட வாவிய பலியையிட்டு, அயரா நிற்கும் நீள் நகர்க்கே - இல்லுறை தெய்வத்தைக் கொண்டாடா நிற்கிற நீண்ட நகரளவில் சென்றால், என்னில் முன்னேல் - எனக்கு முற்படாதே யொழிவாயாக வேண்டும் (எ-று.)

---

348. தலைமகன் கூற்று.

(பா-ம்.) [1] துணைக்கார் , [2] ஆடிசிற்றம்பலவன்

விரைமலர் தூய் நெல்படுவான் பலி செய்து: 'நெல்லும் மலரும் தூஉய்க் கை தொழுது' (நெடுநல். 43.); 'அகனகரெல்லாமரும் பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்' (சிலப் 9 1-2; சிந்தா. 2394)

---

## 349. தேர்வரவு கூறல்

வேந்தன்பொருளொடு மேவிவருமென
ஏந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

(இ-ள்.) வேந்தன் பொருளொடு மேவி வருமென - நாயகன் பொருள் முடித்துக்கொண்டு விருப்பத்துடனே வாராநின்றா னென்று, ஏந்திழை பாங்கி இனிது இயம்பியது - மிக்க ஆபரணங் களையுடைய தோழி இனிய வார்த்தையைச் சொன்னது.

பாவியை வெல்லும் பரிசில்லை யேமுகில் பாவையஞ்சீர்
ஆவியை வெல்லக் கறுக்கின்ற போழ்தத்தி னம்பலத்துக்
காவியை வெல்லு மிடற்றோ னருளிற் கதுமெனப்போய்
மேவிய மாநிதி யோடன்பர் தேர்வந்து மேவினதே.

(ப-ரை.) முகில் பாவை அம் சீர் ஆவியை வெல்ல கறுக்கின்ற போழ்தத்தின் - மேகமானது நாயகியுடைய அழகிய சீர்மைப்பாட்டினையுடைய உயிரைச் சாய்ப்பிப்பதாகக் கறுக்கின்ற அளவில் [கறுத்தல் நிறமும் வெகுளியும் சிலேடை], அம்பலத்து காவியை வெல்லும் மிடற்றோன் அருளில் - திருவம்பலத்தே உளனாகிய நீலப்பூக்களைத் தோற்பிக்கிற மிடற்றையுடையவனது திருவருள் வாய்த்தாற்போல, கதுமென போய் மேவிய மாநிதியோடு அன்பர் தேர் வந்து மேவியதே - போய்த்தேடப்பட்ட பொருளோடே கடிதாக அன்பருடைய தேர்வந்து பொருந்திற்று. ஆதலால், பாவியை வெல்லும் பரிசு இல்லையே - வரக்கடவ அனுபோகத்தை மாற்றும் உபாயமில்லை (எ-று.)

---

### 349. தோழி கூற்று.

சிதைந்துள்ள இப்பகுதி நாவலர் பதிப்பிற் காணுமாறு.- இனி ஒருவாற்றானும் இவளுயிர் வாழ்த லரிதென்றிருந்தனம். இது பாவியாதலின் இற்றைப்பொழுதிலாவது தேர் வந்ததென்னுங் கருத்தாற் பாவியை வெல்லும பரிசில்லையே யென்றாள். தமியரை அற்றம் பார்த்து வெல்லக் கருதிச் சிலர் வெகுள்கின்ற காலத்து அத்தமியார்க்குத் துணையாயொரு தேர் வந்து காத்ததென வேறுமொரு பொருள் விளங்கினவாறறிக. அருளின் மேவின தெனவியையும். அருளான் வந்து மேவிற்றெனினுமமையும். (பே-ரை.)

## 350. இளையரெதிர் கோடல்.

செறிகழலவன் திருநகர்புகுதர
எறிவேலிளைஞ ரெதிர்கொண்டது.

(இ-ள்.) செறி கழலவன் திருநகர் - செறிக்கப்பட்ட வீரக் கழலினையுடையவன் அழகிய நகரியிலே, புகுதர - வந்து புகுத, எறிவேல் இளைஞர் எதிர்கொண்டது - எறியும் வேலினையுடைய இளைய வீரர் எதிரேற்றுக்கொண்டது.

---

யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பலத் தானமைத்த
ஊழின் வலியதொன் றென்னை யொளிமே கலையுகளும்
வீழும் வரிவளை மெல்லிய லாவிசெல் லாதமுன்னே
சூழுந் தொகுநிதி யோடன்பர் தேர்வந்து தோன்றியதே

(ப-ரை.) ஒளி மேகலை உகளும் - ஒளியுடைத்தாகிய மேகலாபாரம் கழலுகிற மாத்திரை யன்றிக் குதித்து வீழா நின்றது, வீழும் வரி வளை - வளைகளும் கழன்று வீழா நின்றன; மெல்லியல் ஆவி செல்லாத முன்னம் - மெல்லிய இயல்பினையுடையாளுடைய உயிர் போவதற்கு முன்னே, சூழும் தொகு நிதியோடு அன்பர் தேர் வந்து தோன்றியதே - தேடப்பட்டு எதிர்கொண்ட பொருளோடே இவளாற் காதலிக்கப்பட்ட நம்முடைய அரசருடைய தேர் வந்து தோன்றிற்று; ஆதலால், யாழின் மொழி மங்கை பங்கன் - யாழோசையை ஒத்த வார்த்தையினையுடைய தேவியைப் பாகத்தே யுடையவன், சிற்றம்பலத்தான் - திருச்சிற்றம்பலத்தேயுள்ளவன், ஊழின் வலியது ஒன்று என்னை - அவனாற் செய்யப்பட்ட விதியினும் வலியதொன்றேதுதான்? (எ-று.)

---

350. இளையர் எதிர்கொள்ளுதல்.

ஊழின்வலி: 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந்தான் முந்துறும்.(குறள் 380)

---

## 351. உண்மகிழ்ந்துரைத்தல்

பெருநிதியோடு [1] திருநகர்புகுந்தவன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்தது.

(இ-ள்) பெருநிதியொடு திருநகர்புகுந்தவன் - பெரும் பொருளோடே அழகிய நகரியிலே புகுந்தவன், வளமனைக்கிழத்தியோடு உளம் மகிழ்ந்துரைத்தது - வளவிய மனைக்கிழத்தியோடே மனம் விரும்பிச்சொன்னது.

---

மயின்மன்னு சாய லிம்மானைப் பிரிந்து பொருள்வளர்ப்பான்
வெயின்மன்னு வெஞ்சுரஞ் சென்றதெல் லாம்விடை யோன் [புலியூர்க்
குயின்மன்னு சொல்லிமென் கொங்கையென் னங்கத் திடைக் [குளிப்பத்
துயின்மன்னு பூவணை மேலணை யாமுன் றுவளுற்றதே.

(ப-ரை.) மயில் மன்னு சாயல் இம்மானைப்பிரிந்து பொருள் வளர்ப்பான் - மயிலை யொத்த சாயலையுடைய நோக்கத்தால் இந்த மானையொப்பாளை விட்டுப்பொருள் தேடுவதாக, வெயில்மன்னும் வெஞ்சுரம் சென்றதெல்லாம் - ஆதித்த கிரணம் நிலைபெற்ற வெய்ய காட்டிலே போன வருத்தமெல்லாம், விடையோன் புலியூர் குயில் மன்னு சொல்லி - இடபத்தையுடையவனது பெரும்பற்றப்புலியூரிடத்துள்ளாகிய குயிலை யொத்த வார்த்தையினையுடையாள், மென் கொங்கை என் அங்கத்திடை குளிப்ப - மெல்லிய முலைகள் என்னுடைய மார்பிலே மூழ்க, துயில் மன்னு பூ அணை மேல் அணையாமுன் துவளுற்றதே - உறக்கம் நிறை பெறுதற்கிடமாகிய படுக்கையிலே அணைவதற்கு முன்னே பொடியாயிற்று. (எ-று.)

---

351. தலைமகன் கூற்று.

[1] பா-ம். திருமனை.

இம்மானென்றது. பிரிதற்கரிய இத்தன்மையாள் என்றவாறு. எல்லாமென்பது முழுவதுமென்னும் பொருள்பட நிற்பதோருரிச்சொல்; பன்மையொருமை மயக்கமென்பாருமுளர். (பே-ரை.)

எல்லாம் - முழுதும்என்னும் பொருள்பட நிற்பதோர் உரிச்சொல்; 'இறுமுறை யெழுச்சியி னெய்துவ தெல்லாம்' (சிந்தா, 333)

## பொருள்வயிற்பிரிவு முற்றிற்று.

## 25. பரத்தையிற் பிரிவு.

பரத்தையிற் பிரிவென்பது புறப்பெண்டிர் மாட்டுப் பிரியா நிற்றல். அது நாற்பத்தொன்பது துறையுடைத்து. அவை வருமாறு:-

[1] கண்டவர் கூறல், [2] காதற் றோழி
பொறையுவந் துரைத்தல், [3]பொதுப்படக் கூறி
வாடி யழுங்கல், [4] மாறுகொண் டவளொடு
கனவிழந் துரைத்தல், [5]விளக்கொடு வெறுத்தல்,
[6] வாரம் பகர்ந்து வாயின் மறுத்தல்,
[7] பள்ளியிடத் தூடல், [8]பணிமொழி யாடல்,
செவ்வணி விடுக்க வில்லோர் கூறல்,
[9] அயலறி வுரைத்தவ ளழுக்க மெய்தல்,
[10] செவ்வணி கண்ட வாயில்வர் கூறல்,
[11] மனைபுகல் கண்ட வாயில்வர் கூறல்,
[12] முகமலர்ச்சி கூறல், [13] முனிவதென் னெனக்
காலநிகழ் வுரைத்தல், [14] கலவி யெய்தலை
யெடுத்துரைத் தல்லொடு, [15] கலவி கருதிப்
புலத்தல், [16] குறிப்பறிந்து புலந்தமை கூறல்,
[17] வாயிலவர் வாழ்த்தல், [18] புனல்வர வுரைத்தல்,
[19] தேர்கண்டு மகிழ்தல், [20] சேடியர் விழவிற்
றம்மு ளுரைத்தல், [21] தன்னை வியத்தல்,
[22] நகைத்துரைத் தல்லொடு, [23] நாண்கண் டுரைத்தல்,

[24] பாணன்வர வுரைத்தல், [25] பாங்கியியற் பழித்தல்,
[26] உழையரியற் பழித்தல், [27] ஒண்ணுத லாளவற்
கியற்பட மொழிதல், [28] இயல்புணர்ந் துரைத்தல்,
[29] வாயில் பெறுது மகன்றிற நினைதல்,
[30] வாயிற்க ணின்று தோழிக் குரைத்தல்,
[31] வாயில் வேண்டத் தோழி கூறல்,
[32] மன்னிய தோழி வாயில் வேண்டல்,
[33] மனையவர் மகிழ்தல், [34] வாயின் மறுத்தல்,
[35] பாணனொடு வெகுடல், [36] பாணன் புலத்தல்,
[37] விருந்தொடு செல்லத் துணிந்தமைகூறல்,
[38] ஊடறணி வித்தல், [39] அணைந்தவழி யூடல்,
[40] புனலாட்டு வித்தமை கூறிப் புலத்தல்.
[41] கலவி கருதிப் புலவி புகறல்,
[42] மிகுத்துரைத் தூடல், [43] விறல்வேற் காளை
யூட னீட வாடி யுரைத்தல்,
[44] துனியொழிந் துரைத்தல், [45] துகளொன் றில்லாப்
புதல்வன்மேல் வைத்துப் புலவி தீர்தல்,
[46] கலவியிடத் தூடல் [47] முன்னிகழ் வுரைத்தல்,
[48] பரத்தையைக் கண்டமை பயன்படக் கூறல்,
[49] ஊதியமெடுத் துரைத் தூட றீர்த்தல்,
எண்ணொன் றிவை பரத்தையிற் பிரிவெனப்
பண்ணார் மொழியாய் பகர்ந்திசி னோரே. (பே-ரை.)

---

## 352. கண்டவர் கூறல்.

உரத்தகுவேலோன் பரத்தையிற்பிரியத்
திண்டேர்வீதியிற் கண்டோருரைத்தது.

(இ-ள்.) உரத்தகு வேலோன் பரத்தையிற் பிரிய - வலி கருதிப் பெற்ற வேலினையுடையவன் பரத்தை மனையிலே நீங்க,

திண்தேர் வீதியிற் கண்டோர் உரைத்தது - சிக்கென்ற தேருடைத்தாகிய தெருவிலே கண்டவர்கள் சொன்னது.

---

உடுத்தணி வாளர வன்றில்லை யூரன் வரவொருங்கே
எடுத்தணி கையே றினவளை யார்ப்ப விளமயிலேர்
கடுத்தணி காமர் [1]கரும்புரு வச்சிலை கண்மலரம்
படுத்தணி வாளிளை யோர்[2] சுற்றும் பற்றினர் மாதிரமே.

(ப-ரை.) உடுத்து அணிவாள் அரவன் தில்லை ஊரன் வர- கச்சாகவுமுடித்து அணியாகவும் அணிந்த ஒளி சிறந்த பாம்பையுடையவன்; [என்றது, உடுக்கப்படும் பொருள் பூணப்படாதது; பூணப்படும் பொருள் உடுக்கப்படாதது; இரண்டற்கும் (ஒருங்கே) படாத பொருளை உடுப்பதும் பூண்பதும் செய்தான் என்றது] அவனுடைய தில்லையில் தலைவன்; அவன்வர, ஒருங்கே எடுத்து அணிகை ஏறினவளை ஆர்ப்ப - தெரிந்து அணியப்பட்ட கையிற் செறிந்த வளைகள் ஆர்ப்ப, [எல்லாம் ஒருபடிப்படச் செறிந்த வளைகள் முன்னின்றன வெனவும் ஆரவாரித்தன வெனவும் அவை இவனைக் கண்டவளவிலே நெகிழ்ந்து உழன்றனவெனவும் தோன்றுகிறது; தெரிதல் இவ்விடத்துச் செறியத்தக்கன தெரிதல்] இளமயில் ஏர் கடுத்து - இளமயிலின் அழகை யொத்து, அணி காமர் கரும் புருவச் சிலை கண்மலர் அம்பு அடுத்து - மிக்க அழகினையுடைய கரிய புருவமாகிய சிலையிலே கண்மலராகிய அம்புகளைத் தொடுத்து, அணி வாள் இளையோர் - ஆபரணங்களில் உண்டாகிய ஒளியினையுடைய இளமைப் பருவத்து மகளிர், சுற்றும் பற்றினர் மாதிரமே - திக்குகள் தோறும் சூழ நின்று பிடித்துக் கொண்டார்கள்.

---

352. கண்டவர் கூற்று.

(பா-ம்.) 1. கருப்புருவச் சிலை. 2. சுற்றும் பற்றிய மாதிரம்.

அருவம் உடுத்தது: 'வீக்கினு ளுடரவம்'. (தேவா. ஞா. திருவாக் கூர்த்தாந் தோன்றி மாடம்: 5. பாம்பு அரைச்சாத்தி திருவா மாத்தூர்: 3)

அணிகாமர் என்பன ஒரு பொருட் கிளவியாய், மிகுதி தோன்றி நின்றன; ஒன்றாகவெழுந்து அணியினுங் கையினு முளவாகிய சங் கொலிப்ப இளமைக்கண் உண்டாகிய உள்ளவெழுச்சி மிக்கு, வில்லோ டம்பை யடுத்துப் பற்றி. அரைக்கணியப்பட்ட உடைவாளையுடைய இளை யோர் திசைமுழுதுஞ் சூழ்ந்து பற்றினரெனப் பிரிதுமோர் பொரு டோன்றி நின்றவாறு கண்டு கொள்க. கருப்புருவச்சிலை யென்பது பாடமாயின், காமனது உட்கையுடைய கருப்புச்சிலையோடு கண் ணாகிய கள்ளையுடைய மலரம்பை யடுத்தென் றுரைக்க. சுற்றும் பற்றிய மாதிரமென்பது பாடமாயின் சுற்றும்பற்றி மேவாநிற்ப, அவ்விடத்து நகைக் குறிப்பா லெடுக்கப்பட்டு இவர் கைகள் வளையொலிப்பத் தலைமே லேறின வெனக் கூட்டியுரைக்க. இதற்குச் சுற்றும் பற்றிப் போர் செய்யா நிற்பப் படைக்கலமெடுத்துச் சங்கொலிப்ப அணியும்கையும் ஒருங்கெழுந் தனவெனப் பிறிதுமொரு பொருளாகக் கொள்க. இதற்குப் பிறவுரைப்பாருமுளர். உரத்தகுவேல் - உரத்தாற்றக்கவேல் (பே-ரை)

---

## 353. பொறையுவந்துரைத்தல்.

கள்ளவிழ் கோதையைக் காதற்றோழி
உள்ளவிழ் பொறைகண் டுவந்துரைத்தது.

(இ-ள்.) கள் அவிழ் கோதையைக் காதல் தோழி - மது விரிகிற மாலையினையுடையாளை, உயிர்த்தோழி, உள் அவிழ் பொறை கண்டு உவந்து உரைத்தது - நாயகன் வருமளவில் நெஞ்சு நெகிழ்கிற பொறையுடைமையைக் கண்டு விரும்பிச் சொன்னது.

---

சுரும்புறு கொன்றையன் றொல்புலி யூர்ச்சுருங் கும்மருங்குற்
பெரும்பொறை யாட்டியை யென்னின்று பேசுவ பேரொலிநீர்க்
கரும்புறை யூரன் கலந்தகன் றானென்று கண்மணியும்
அரும்பொறை யாகுமென் னாவியுந் தேய்வுற் றழிகின்றதே.

(ப-ரை.) பேர் ஒலி நீர்க்கரும்பு உறை ஊரன் - மிக்க ஆரவாரமுடைத்தாகிய நீர் சூழப்பட்ட கரும்பு தங்கும் ஊரையுடையவன், கலந்து அகன்றான் என்று - கலந்துவைத்து நீங்கினானென்று, சுரும்பு உறு கொன்றையன் - வண்டுகள் அமரப்பட்ட கொன்றை மாலையினை யுடையவனது, தொல் புலியூர் - பழைய பெரும்பற்றப்புலியூரில், சுருங்கும் மருங்குல் பெரு பொறை யாட்டியை என் இன்று பேசுவல் - சிறிய இடையினையுடையளாய்ப் பெரிய பொறையையு முடையவளை இப்பொழுது என் சொல்லுவேன்! கண்மணியும் அரும் பொறையாகும் என் ஆவியும் தேய்வுற்று அழிகின்றதே! .........(எ-று.)

நாயகன் வாயில் வேண்டத் தோழி, "நாயகி நெஞ்சு நெகிழ்ந்தமை கண்டு, எம்போல்வாரன்றே இவையிற்றுக்கு வெகுள்வார்கள்; இவள் பெருமனைக்கிழத்தி யாகையால், நீ செய்த கொடுமை கண்டு நினையாது நெஞ்சு நெகிழ்ந்தாள்" ளென்று வாயில் நேர்ந்தது

353. தோழி கூற்று.

கண்மணியும்.........அழிகின்றதே என்ற பகுதிக்கு உரையில்லை அதற்கு, 'என்கண்மணியும் பயனின்மையால் தாங்குதற்கரிய பாரமாகா நின்றன; எனது உயிருந் தேய்ந்தழியா நின்றது; என்று பொருள் கூறி, 'ஆவியுமரும் பொறையாகா நின்றதென்று கூட்டுவாருமுளர்' என்று வேறுரையுங் காட்டுவர் பேராசிரியர்.

## 354. பொதுப்படக்கூறி வாடியழுங்கல்

[1]பொற்றிகழரவன் மற்றிகழ்தில்லைப்
பிரிந்தவூரனோ டிருந்துவாடியது.

(இ-ள்.) பொன் திகழ் அரவன் - அழகிய சிறந்த பாம்பை யுடையவன், மல்திகழ் தில்லை - வளப்பம் சிறந்த பெரும்பற்றப் புலியூரில், பிரிந்த ஊரனோடு இருந்து வாடியது - பிரிந்த நாயகன் வர, அவனுடனே ஒரு சயனத்திருந்து நாயகி வாடியது.

---

அப்புற்ற சென்னியன் [2]றில்லை யுறாரி னவருறுநோய்
ஒப்புற் றெழினல மூரன் கவரவுள் ளும்புறம்பும்
வெப்புற்று வெய்துயிர்ப் புற்றுத்தம் மெல்லணை யேதுணையாச்
செப்புற்ற கொங்கையர் யாவர்கொ லாருயிர் தேய்பவரே

(ப-ரை.) அப்பு உற்ற சென்னியன் தில்லை உறாரின் - கங்காசலம் பொருந்தின திருமுடியையுடையவனது பெரும்பற்றப் புலியூரைச் சேராதாரைப் போல [இரக்கமின்றி] எழில் நலம் ஊரன் கவர - தோற்றப் பொலிவையும் அழகையும் நாயகன் கொள்ளை கொள்ள, அவர் உறு நோய் ஒப்புற்று உள்ளும் புறம்பும் வெப்புற்று - அத்தில்லையைச் சேராதார் உறு நோய் போல உள்ளும் புறம்பும் வெதும்பி, [தில்லையைச் சேர்வாருக்கு நோய் வந்தாலும் நெஞ்சழியார் என்பது கருத்து], வெய்து உயிர்ப்பு உற்று - வெய்தாகப் பெருமூச்சு விட்டு, தம் மெல்லணையே துணையா - தம்முடைய மெல்லிய அணையே துணையாகக் கொண்டு, செப்புற்ற கொங்கையர் யாவர் கொல்லோ உயிர் தேய்பவரே - பொற் செப்பை யொத்த முலையினையுடையவர்கள் பெறுதற்கரிய உயிர் தேயா நின்றார் யாவர் காண்? (எ - று)

எனவே, அவர் அது செய்யார், அன்புடையராதலின் இறந்துபடுவார்கள்; நாமே இங்ஙனம் வருந்தியிருந்தோம் எனக் குறிப்பாலிகழ்ந்தாள்.

---

354. தலைமகள் கூற்று.

(பா-ம்) 1. பொற்றிகழரவணி 2. தில்லையுறாதவருறு நோய்.

## 355. கனவிழந் துரைத்தல்.

சினவிற்றடக்கைத் தீம்புன லூரனைக்
கனவிற்கண்டகாரிகையுரைத்தது.

(இ-ள்.) சினவில் தடக்கை தீம்புனலூரனை - சினத்த வில்லைப் பெரிய கையிலேயுடைய இனிய புனலூரனை, கனவிடை கண்ட காரிகை உரைத்தது - (கனவிலே) கண்ட நாயகி சொன்னது.

---

தேவா சுரரிறைஞ் சுங்கழ லோன்றில்லைச் சேரலர்போல்
ஆவா கனவு மிழந்தே னனவென் றமளியின்மேல்
பூவா ரகலம்வந் தூரன் றரப்புலம் பாய்நலம்பாய்
பாவாய் தழுவிற்றி லேன்விழித் தேனரும் பாவியனே

(ப-ரை.) அமளியின் மேல் பூ ஆர் அகலம் வந்து ஊரன் தர - சயனத்திடத்தே மாலை நிறைந்த மார்பை நம் நாயகர் வந்துத் தர, புலம்பாய் - பரத்தையர் (பால்) என்று வெறுப்பாய், நலம் பாய், பாவாய், தழுவிற்றிலேன் - நலம் பரந்த சித்திரத்தை யொப்பாய்! தழுவிக் கொள்ளப்பெற்றிலேன் காண்; விழித்தேன் அரும் பாவியனே - அதற்கு மேலே, அரிய பாவத்தைச் செய்த நான் விழித்தேன்; ஆதலால், தேவாசுரர் இறைஞ்சுறு கழலோன் - தேவரும் அசுரரும் வணங்கும் திருவடிகளை யுடையவனது, தில்லை சேரலர் போல - பெரும்பற்றப்புலியுரைச் சேராதாரைப் போல, ஆவா, கனவும் இழந்தேன் நனவென்று - ஐயோ, ஐயோ, உண்மையென்று கருதிக்கனவையும் இழந்தேன். (எ-று.)

தில்லையைச் சேராதார்க்கு உவமை; இம்மையின்பத்தை மெய்யெனக் கருதி, மறுமையின்பத்துக்குக் காரணமாகிய, தில்லையைச் சேராமையால், இம்மையும் மறுமையும் இழந்து வருந்துமதுபோல, நானும் கனவும் நனவும் பெற்றிலேன் என்றபடி.

---

355. தலைவி கூற்று.

தில்லை சேரலர் போலென்புழி ஒத்தபண்பு துன்பமுறுதலும் இன்ப மிழத்தலுமாம். (பே-ரை.)

## 356. விளக்கொடு வெறுத்தல்

பஞ்சணைத் துயின்ற பஞ்சின்மெல்லடி
[1] அன்பனோடழுங்கிச் செஞ்சுடர்க்குரைத்தது.

(இ-ள்.) பஞ்சணைத் துயின்ற பஞ்சி மெல்லடி - பஞ்சணையிலே கிடந்த பஞ்சையொத்த மெல்லிய அடியிணையுடையாள், அன்பனோடு அழுங்கி - நாயகன் திறத்து வருந்தி, செஞ்சுடர்க்கு உரைத்தது - சிவந்த அழகிய விளக்குடனே சொன்னது.

---

செய்ம்முக நீல மலர்தில்லைச் சிற்றம் பலத்தரற்குக்
கைம்முகங் [2] கூப்பிக் கழல்பணி யாரிற் கலந்தவர்க்குப்
பொய்ம்முகங் காட்டிக் கரத்தல் பொருத்தமன் றென்றிலையே
நெய்ம்முக மாந்தி யிருண்முகங் கீழ நெடுஞ்சுடரே.

(ப-ரை.) செய் முக நீல மலர் தில்லை சிற்றம்பலத்து அரற்கு - செய் இடங்கள்தோறும் நீலப்பூக்கள் மலருகிற பெரும்பற்றப் புலியூரில் திருச்சிற்றம்பலத்துத் தலைவற்கு (?), கைமுகம் கூப்பிக் கழல் பணியாரின் - கையிடத்தைக் குவித்து அவன் திருவடியை வணங்காதாரைப் போல, கலந்தவர்க்கு பொய்முகம் காட்டி கரத்தல் பொருத்தமன்று என்றிலையே - எங்களுடன் கலந்தவர்க்குப் பொய்யிடத்தைத் தோற்றுவித்து பிரியுமது பொருந்துவதொன்றன்று என்று சொல்லிற்றில்லையே, நெய்முகமாற்றி இருள் முகம் கீழும் நெடுஞ்சுடரே - நெய்யைக் குவளையிலே உண்டு இருளிடத்தைக் குழிக்கிற விளக்கே! (எ-று.)

என்றது, உனக்குணவாகிய நெய்யைப் பெற்று உண்ட செருக்காலும், உனக்குப் பகையாகிய இருள் கிழித்த மேம்பாட்டாலும் எங்களை உதாசீனம் பண்ணினாய் இத்தனை. (எ-று.)

---

356. தலைமகள் கூற்று.

(பா-ம்.) அன்பனோடே. 2. கூம்ப

விளக்கைப்பார்த்துக் கூறல் - சீவக. 1367.

## 357. வாரம்பகர்ந்து வாயின்மறுத்துரைத்தல்

வார்புன லூர னேர்திகழ்தோள்வயிற்
கார்புரைகுழலி வாரம்பகர்ந்தது.

(இ-ள்.) வார்புனல் ஊரன் - (நீண்)ட புனல்சூழ்ந்த ஊரையுடையவன், ஏர் திகழ் தோள் வயின் - அழகு சிறந்த தோளிடத்து, கார்புரை குழலி - காரையொத்த கூந்தலினையுடையவள், வாரம் பகர்ந்தது - அன்புடைமை தோன்றச் சொன்னது.

---

பூங்கு வளைப்பொலி மாலையு மூரன்பொற் றோளிணையும்
ஆங்கு வளைத்துவைத் தாரேனுங் கொள்கநள் ளாளரணந்
தீங்கு வளைத்தவில் லோன்றில்லைச் சிற்றம் பலத்தயல்வாய்
ஓங்கு வளைக்கரத் தார்க்கடுத் தோமன் னுறுவரையே

(ப-ரை) நள்ளாள் அரணம் தீங்கு வளைத்த வில்லோன்-தன்னுடனே செருக்கொண்ட அசுரருடைய முப்புரங்களையும் தீங்கு செய்த வில்லையுடையவன், தில்லை சிற்றம்பலத்து அயல்வாய் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் சிற்றம்பலத்துக்கு அயலிலே இருக்கிற, ஓங்கு வளை கரத்தார்க்கு - மிக்க வளைகளை யணிந்த கைகளையுடையார்க்கு, அடுத்தோம் மன் உறுவரையே - மன்னனை முற்றாட்டாகக் கொடுத்து விட்டோம்; இனி, பூங்கு வளைப் பொலி மாலையும் - செங்கழுநீர்ப் பூவாலே தொடுத்த சிறந்த மாலையையும், ஊரன் பொன் தோளிணையும் - நாயகனுடைய அழகிய தோளிணைகளையும், ஆங்கு வளைத்து வைத்தாரேனும் கொள்க - இங்கு வராமல் தங்களிடங்களில் மறித்து வைத்து யாவராகிலும் கொள்ள அமையும். (எ-று.)

வாரம் புகன்றபடி, முற்றாட்டாகக் கொடுத்தோம் எனவே; தன்னுரிமை போன்ற; அம்மாலையோடு கொடுத்தோம் எனவே, தன்னெஞ்சு விடாமையும், இணையாகக் கொடுத்தோம் எனவே, சிறிது கொடுமையும் தோன்றி நின்றது.

---

357. தலைவி கூற்று.

## 358. பள்ளியிடத்தூடல்

பீடிவர்கற்பிற் றோடலர்கோதை
ஆடவன்றன்னோ டூடியுரைத்தது.

(இ-ள்.) பீடு இவர் கற்பின் தோடலர் கோதை - பெருமை மிக்க கற்பினையும் இதழ் விரிகிற மாலையையும் உடையாள், ஆடவன் தன்னோடு ஊடி உரைத்தது - நாயகனுடனே வெறுத்துச் சொன்னது.

---

தவஞ்செய் திலாதவெந் தீவினையேம் புன்மைத் தன்மைக் [[1]கொள்ளா
[2]தெவஞ்செய்து நின்றினி யின்றுனை நோவதெ னத்தன் [முத்தன்
சிவன்செய்த சீரரு ளார்தில்லை யூரநின் சேயிழையார்
நவஞ்செய்த புல்லங்கண் மாட்டேந் தொடல்விடு நற்கலையே.

(ப-ரை.) தவம் செய்திலாத வெம் தீவினையேம் - உனக்கேற்க வழிபாடு செய்தற்கு முற்பிறப்பில் தவம் செய்யாதிருத்தலேயன்றி வெய்ய தீவினையைச் செய்த நாங்கள், புன்மைத் தன்மை கொள்ளாது-எங்களுடைய புல்லிய இயல்புக்கு எங்களை இகழ்ந்து கொள்ளாதே, எவம் செய்து நின்று இனி இன்று உன்னை நோவது என் - வருத்தஞ்செய்து நின்று இப்பொழுது உன்னை நோவது என்? அத்தன், முத்தன் - சுவாமி, முத்தியைத் தருகிறவன், சிவன் - தத்துவத்திலுள்ளவன், செய்த சீர் அருளார் தில்லை யூர - அவன் செய்த சீரிய அருளாலே நிறைந்த தில்லையில் தலைவனே! நின் சேயிழையார் நவம் செய்த புல்லங்கள் மாட்டோம் - நின் கருத்தொத்த சேயிழையார் பொழுதைக்குப் பொழுது புதிதாகத் தழுவுகிற தழுவுதலும் அறியோம்; தொடல்விடு நற்கலையே - ஆதலால், எங்களுடைய நல்ல மேகலையைத் தீண்டுதலும் ஒழிவாயாக. (எ-று.)

---

358. தலைவி கூற்று.

(பா-ம்) 1. எள்காது 2. எவன் செய்து நின்று.

எவ்வம், எவமென நின்றது. காதலில்லையாயினும் கண்ணோட்டமுடைமையான் இகழ்ந்து வாளாவிருப்பமாட்டாமையின், எம் (புலவியான் நினக்குத் துன்பமென்னுந் துணையே யுள்ளதென்னுங் கருத்தால்' எவம் செய்து நின்றானென்றாள். இனி, என்பது இவ்வாறாயினென்னும் பொருட்டாய் நின்றது. சிவன் செய்த சீரருளார் தில்லையூரவென்றதனால், நின்னாற் காயப்பட்டாரானும் காதலிக்கப்படா நின்றாயெனவும் தவஞ் செய்திலாத வெந்தீவினையேமென்றதனால், எம்மாற் காதலிக்கப்பட்டாரானும் காயப்படா நின்றேமெனவும் கூறியவாறாம். புல்லென்பது புல்லமென விரிந்து நின்றது. புல்லமென்பதனைப் புன்மையென்று நின்சேயிழையார் புதிதாகச் செய்த குறிகளைப் பொறுக்கமாட்டேமென்றுரைப்பினுமமையும். எவன் செய்து நின்றெனப் பாடமோதி, தவஞ் செய்திலாத வெந்தீவினையேம் இன்றுன்னை நோவது என்செய்து நின்றென்றும், என்னத்தனென்றுமுரைப்பாருமுளர். எள்காதென்பதூஉம் பாடம். (பே-ரை)

---

## 359. செவ்வணிவிடுக்க வில்லோர் கூறல்

பாற்செலுமொழியார் மேற்செலவிரும்பல்
பொல்லாதென்ன வில்லோர்புகன்றது.

(இ-ள்.) பால் செல்லும் மொழியார்......, மேல் செல விரும்பல் - அவர்களிடத்துச் செல்லவிரும்புதல், பொல்லாது என்ன இல்லோர் புகன்றது - பொல்லா ஒழுக்கமென்று மனையி லுள்ளார் சொல்லியது.

---

தணியுறப் பொங்குமிக் கொங்கைக் டாங்கித் தளர்மருங்குல்
பிணியுறப் பேதைசென் றின்றெய்து மாலர வும்பிறையு
மணியுறக் கொண்டவன் றில்லைத்தொல் லாயநல் லார்கண்முன்னே
பணியுறத் தோன்று நுடங்கிடை யார்கள் பயின்மனைக்கே.

(ப-ரை.) அரவும் பிறையும் அணியுறக் கொண்டவன் - பாம்பையும் பிறையையும் ஆபரணமாகக் கொண்டவன், தில்லை

தொல்லாய நல்லார்கள் முன்னே - அவனுடைய பெரும்பற்றப் புலியூரில் பழைய நம் ஆயக்கூட்டத்தாராகிய நல்லோர் முன்னே, பணியுறத் தோன்றும் நுடங்கிடையார் தம் பயில் மனைக்கே - பாம்பின் கழுத்தை ஒத்துத் தோன்றிய (நுடங்கிய) இடையினை யுடையாராகிய பரத்தையர் வாழும் மனையிலே, தணியுறப் பொங்கும் இக்கொங்கைகள் தாங்கித் தளர் மருங்குல் பிணியுற ......... அமையும்படி விம்முகிற முலைகள் சுமந்து தளர்கிறஇடையானது வருந்த, பேதை சென்று இன்று எய்துமால் - பேதைத் தன்மை யுடையாள் இன்று சென்று புகாநின்றாள்; இது தகுவதொன் றன்று. (எ-று.)

தகாத ஒன்றுக்குச் சொல்லுதலால், இது லோகாசாரமே யாயினும் நன்மையன்று என்னும் கருத்தால், இடைவருந்த இவள் நடக்குமதே......என இழித்துக்கூறினார். பொல்லாது. என்றது, இவ்வுலகாசாரம் எங்களுக்குப் பொருந்தி............ யிருந்தது.

359. இல்லோர் கூற்று.

இதற்குப் பிறிதுரைப்பாருமுளர். பாற்செலுமொழியார் புகன்றது. கேட்டார்க்குப் பாலின்கண் உணர்வு செல்லு மொழியையுடைய மகளிர் மேற்சென்று தூதுவிட விரும்பல் பொல்லாதெண இல்லோர் கூறியது. பால்போலும் மொழியெனினும் அமையும். ஈண்டுச் செல்லுமென்பது உவமைச் சொல். பேதை என்றது செவ்வணியணிந்து செல்கின்ற மாதரை. (பே-ரை)

---

## 360. அயலறிவுரைத்தவ ளழுக்கமெய்தல்

உலகியலயறிச் செலவிடலுற்ற
விழுத்தகு'மாதர்' அழுக்கஞ்சென்றது.

(இ-ள்.) உலகியல் அறிய - உலகியலாகிய செவ்வணியை நாயன் அறிய, செலவிடலுற்ற - செல்லவிடுவதாக நினைந்த, விழுத்தகு மாதர்அழுக்கம் சென்றது-விழுமிய தகுதியையுடைய நாயகி வருந்தினது.

---

இரவணை யும் மதி [2]போனுத லார்நுதிக் கோலஞ்செய்து
குரவணை யுங்குழ லிங்கிவ ளாலிக் குறியறிவித்
தரவணை யுஞ்சடை யோன்றில்லை யூரனை யாங்கொருத்தி
தரவணை யும்பரி சாயின வாறுநந் தன்மைகளே.

(ப-ரை.) இரவு அணையும் மதி ஏர் நுதலார் நுதி கோலம் செய்து குரவு அணையும் குழல் இங்கு இவளால் இக்குறி அறிவித்து - இராப்பொழுது தோன்றும் மதியத்தை ஒத்த நெற்றியினை உடையார் கூர்மையாலுண்டாகிய......ச் செய்து, குரவின் மணத்தை யொத்த கூந்தலினையுடைய இந்த இவளாலே அறிவித்ததாக இந்தக் குறியை அறிவித்து, அரவணையும் சடையோன் தில்லை ஊரனை - பாம்பைப் பொருந்தின திருச்சடையை யுடையவனது பெரும்பற்றப்புலியூரில் தலைவனை, ஆங்கு ஒருத்தி தர அணையும் பரிசாயினவாறு நம் தன்மைகளே-அப்பரத்தையர் சேரியிலே நின்றும் ஒருத்தி இரங்கி நமக்குத்தரக்கூடும் படியான படியே நம் பெண்மைத் தன்மை (ஆயிற்று.) (எ-று.)

ஒருத்தி என்றது அவள் உரியளல்லாமை காட்டிற்று. நம்பெண்மை என்றது, தன் உரிமையும் காட்டி, களவுக்காலத்துத் தன்னுரிமையும் காட்டிற்று. இரவணையுமதி என்றது பகல் விளங்காமையால்.

---

360. தலைமகள் கூற்று.

(பா-ம்.) 1. மாதர்க்கழுக்கஞ் சென்றது. 2. யேர்நுதல்;

நுதலார் நுதியறிவித்தென இயையும். குறி பூப்புநிகழ்தற்குறி. (பே-ரை.)

நுதி என்பதற்கு 'முன்' என்று பொருளெழுதுவர் பேராசிரியர். ஏட்டில். இதன் பொருள் சிதைந்துள்ளது.

"நுதி-முன்பு. 'மதியேர் நுதலார் நுதிக்கோலஞ் செய்து' என்றாற் போல (நச். மேற். சிந்தா. 1933 உரை.)" 'நுதியென்றது முனை; எனவே தலையென்பது தோன்றிற்று. (நச். உரை. கலி. 101.)

குரவணையுங் குழல். (சிற். 362)

## 361. செவ்வணிகண்ட வாயிலவர் கூறல்

[1]மணிக்குழல்பூப்பிய லுணர்த்தவந்த
ஆயிழையைக்கண்ட வாயிலவருரைத்தது.

(இ-ள்.) மணிக்குழல் பூப்பியல் உணர்த்திய - நீலமணியை யொத்த கூந்தலினையுடையாள் பூப்பியல்பை அறிவிப்பதாக வந்த, ஆயிழையைக் கண்ட - அழகிய ஆபரணங்களையுடையாளைக் கண்ட, வாயிலவர் உரைத்தது - வாயில் காவலர் சொன்னது.

---

சிவந்தபொன் [2]மேனி யணிதிருச் சிற்றம் பலமுடையான்
சிவந்தவன் [3]தாளணி யூரற் குலகிய லாறுரைப்பான்
சிவந்தபைம் போதுமஞ் செம்மலர்ப் பட்டுங்கட் டார்முலைமேற்
சிவந்தவஞ் சாந்தமுந் தோன்றின வந்து திருமனைக்கே.

(ப-ரை.) சிவந்த பொன்மேனி அணி திருச்சிற்றம்பல முடையான் - செம்பொன்னையொத்த திருமேனியையுடைய அழகிய திருச்சிற்றம்பலமுடையவன், சிவந்த அம் தாள் அணி ஊரற்கு - சிவந்த அழகிய சீர்பாதங்களைச் சூட்டின நாயகனுக்கு, உலகியலாறு உரைப்பான் - உலகில் முறையாலே பூப்பறிவு (உரைக்க), சிவந்த பைம்போதும் - சிவந்த பசுமை பொருந்திய பூவும், அம் செம்மலர் பட்டும் - (அழகிய) சிவந்த பூந்தொழிற் பட்டும், கட்டு ஆர் முலைமேல் சிவந்த அம் சாந்தமும் - கச்சினாற் கட்டுதலார்ந்த முலையிடத்தே அழகிய செஞ்சந்தனமுமாய், தோன்றின வந்து திருமனைக்கே - நம்முடைய அழகிய திருமனையில் (வந்து தோன்றின.) (எ-று.)

உலகியல முறைமை செய்கின்றபடி, மறைக்கப்படுவதொன்றைப் பலருமறியும்படி உறுப்புக்கள்தோறும் எழுதிய பரத்தையர் மனைக்கண் காட்டும்படியாயிருந்தது.

---

361. பரத்தை வாயிலோர் கூற்று.

(பா-ம்.) 1. மணிக்குழை. 2. மேனிமணி. 3. தாளிணை யூரற்கு.

## 362. மனைபுகல்கண்ட வாயிலவர்கூறல்

கடனறிந்தூரன் கடிமனைபுகுதர
வாய்ந்தவாயிலவ ராய்ந்துரைத்தது.

(இ-ள்.) கடன் அறிந்து ஊரன் கடிமனைபுகுதர - ஊரனானவன் இச்சிறந்த மனையிலே கடப்பாடறிந்து புக, வாய்ந்த வாயிலவர் ஆய்ந்துரைத்தது - அழகிய வாயிலுள்ளார் விசாரித்துச் சொன்னது.

---

குராப்பயில் கூழை யிவளின்மிக் கம்பலத் தான்குழையாம்
அராப்பயி னுண்ணிடை யாரடங் காரெவ ரேயினிப்பண்
டிராப்பக னின்றுணங் கீர்ங்கடை [1]யித்துணைப் போழ்திற்
[சென்று
கராப்பயில் பூம்புன லூரன் புகுமிக் [2]கடிமனைக்கே.

(ப-ரை.) பண்டு இராப் பகல் நின்று உணங்கு ஈர்ங் கடை - முன்காலத்து இரவும் பகலும் தான் வாயில் பெறாது நின்று வாடும் குளிர்ந்த வாசலை, இத்துணைப் போழ்திற் சென்று - ஒரு மாத்திரைப் பொழுதைக்குள்ளே போய், கராப்பயில பூம் புனல் ஊரன் புகும் இக்கடிமனைக்கே - பெரு முதலைகள் வாழ்கிற புனலுடைத்தாகிய ஊரினையுடையவன் இச்சிறந்த மனையில் (புகுந்தான்). குரா பயில் கூழை இவளின் மிக்கு - குரவம்பூ நெருங்கின கூந்தலினையுடைய இவளின் மேலாய், அம்பலத்தான் குழையாம் அராப் பயில் நுண் இடையார் அடங்கார் எவரே இனி - திருவம்பலநாதன் குழையாகிய பாம்பின் கழுத்தை ஒத்த நுண்ணிய இடையினை உடையார் இனிஅடங்(காதவர் யாவர்?) (எ-று.)

......குணமுடையவர் அடங்குகைக்குக் காரணம், பூப்பறிவிக்கும் அளவில் கடப்பாடறிந்து நாயகன் விரைய வருதலும்,

வந்தவிடத்து வாயில் மறுக்கக் கடவா.........ற்றுக் கொள்ளுகை யாலும், இருவரும் கடப்பாடறிந்து தங்களில் பொருந்துதலால் இனிப் பரத்தையர்க்கு மிகையில்லை போலும் என்பது கருத்து.

---

362. வாயிலவர் கூற்று.

(பி-ம்.) 1. இத்தனை போதிற் 2. கடிமனையே.

சூராப்பயில் கூழை (சிற். 360)

---

### 363. முகமலர்ச்சி கூறல்

பூம்புன லூரன் புகமுகமலர்ந்த
தேம்புனைகோதை திறம்பிறருரைத்தது.

(இ-ள்.) பூம்புனலூரன் - பூவுடைத்தாகிய புனல் சூழப் பட்ட ஊரையுடையவன், புக முகம் மலர்ந்த - மனையிடத்து புகுதுமளவில் முகமலர்ந்த, தேம்புனை கோதைதிறம் பிறர் உரைத் தது - வாசத்தைப் புனைந்த குழலினையுடையாள் செய்தியை அயலார் சொன்னது.

---

வந்தான் வயலணி யூர னெனச்சின வாண்மலர்க்கண்
செந்தா மரைச்செவ்வி சென்றசிற் [1] றம்பல வன்னருளான்
முந்தா யினவிய னோக்கெதிர் நோக்க முகமடுவிற்
பைந்தாட் குவளைகள் பூத்திருள் சூழ்ந்து பயின்றனவே.

(ப-ரை.) வந்தான் வயல் அணிஊரன் எனச் சின வாள் மலர்க்கண் செந்தாமரைச் செவ்வி சென்ற - வயல் அணிந்த ஊரையுடையவன் வந்தான் எனும் அளவிலே சினத்த வாள் போலும் தொழிலினையும் மலர்போலும் தோற்றத்தையும் உடைய கண்கள் செந்தாமரைப் பூவின் செவ்வி நிறமாகிய மிக்க சிவப்பை அடைந்தன, சிற்றம்பலவன் அருளால் - திருச்சிற்

றம்பலத்தினிடத்தே வாழும் அவனருளால், முந்தாயின வியன் நோக்கு எதிர்நோக்க - (முன் உண்டாகிய) கோபித்த நோக்கம் நாயகன் நோக்கி எதிர்பார்த்தபொழுது, முகமடுவில் - முகமடு வில் - முகமாகிய மடுவிலே, பைந்தாள் குவளைகள் பூத்து - அழகிய தாளையுடைய நீலப் பூப்போலே பொலிவுற்று மலர்ந்து, இருள் சூழ்ந்து பயின்றனவே - இருண்டு நெருங்கின. (எ-று.)

---

363. கண்டவர் கூற்று.

(பி-ம்) 1. அம்பலத்தானருளான்

இயல் நோக்கென்று பிரித்து முன்னுண்டாகிய துணிந்த இயல்பை யுடைய நோக்கெனினுமமையும். கண்களது பிறழ்ச்சிப் பன்மையாற் குவளைப்பூக்கள் பல கூடினாற்போன்றிருந்தன என்பதுபோதர, பயின் றன வென்றார். காதலனொடு பழகினவெனினுமமையும். தலைமகற்குப் புலவிக்காலத்து வரும் துன்பமிகுதியும் புலவி நீக்கத்துவரும் இன்ப மிகுதியும் நோக்கி, சிற்றம்பலவனருளால் எனக் காரணத்தை மிகுத் துக் கூறினார். (பே-ரை.)

---

## 364. காலநிகழ்வுரைத்தல்

[1] இகழ்வதெங்கே திகழ்வதிவ்வாறெனச்
செழுமலர்க்கோதை யுழையருரைத்தது.

(இ-ள்.) இகழ்வது எங்கே திகழ்வது இவ்வாறு என இகழ்ந்திருந்த..........திகழாநின்ற காலம் இக்காலமல்லவோ வென்று, செழுமலர்க்கோதை உழையர் உரைத்தது - வளவிய பூமாலையையுடையாள் பக்கத்தே நின்றவர் சொல்லியது.

---

வில்லி கைப்போதின் விரும்பா வரும்பா வியர்களன்பிற்
செல்வி கைப்போதி னெரியுடை யோன்றில்லை யம்பலஞ்சூழ்
மல்லிகைப் போதின்வெண் சங்கம்வண் டூதவிண் டோய் [பிறையோ
டெல்லிகைப் போதியல் வேல்வைய லூரற் கெதிர்கொண்டதே.

(ப-ரை.) வில்லி கைப் போதின் விரும்பார் அரும்பாவி யர்கள் அன்பிற் செல்வி-காமன் கையில் பூ அம்பாலே மகளிரை விரும்பாத அரிய பாவத்தை யுடையவர்கள் செய்த அன்பிலே செல்லுகிறவன், கைப்போதின் எரி உடையோன் - கைம்மல ராகிய பூவிலே நெருப்பை ஏந்தினவன், தில்லை அம்பலம்சூழ் மல்லிகைப்போதின் - அவனுடைய திருவம்பலத்தைச் சூழ்ந்த மல்லிகைப் பூவாகிய, வெண் சங்கம் வண்டுஊத - வெள்ளிய சங்குகளை வண்டுகள் ஊத, விண்தோய் பிறையொடு - விசும்பு தோய்ந்த பிறையோடே, எல்லி - இரவானது, கைப்போது இயல்வேல் - கையாகிய பூவிலே சீவித்த வேலையுடைய, வயல் ஊரற்கு எதிர்கொண்டது - வயல் சூழ்ந்த ஊரையுடையவர்க்கு எதிராய் வந்து நின்றது. இக்காலத்தை இகழப்படுமோ? (எ-று.)

---

364. உழையர் கூற்று.

(பா-ம்.) 1. இகழ்வதெவன்கொ னிகழ்வதிவ்வாறெனச். சங்கம் வண்டூத. (நளவெண்பா.)

"என்றது, 'வண்டூது மல்லிகைப் போதானும், அந்திப் பிறையானும்; கங்குற்பொழுதானும் ஆற்றாளாய்ப் புகுதரா நின்றான்; இனி நீ புலக்கற் பாலையல்லை' என வாயில் நேர்வித்தவாறு. வில்லிகைப் போதாற் புலன்களை விரும்பாத அரும்பாவியரெனினுமமையும். கைப்போதின் கண்ணே எரியையுடையானெனினுமமையும். இகழ்தல் - தலைமகன் ஆற்றாமை நீக்காதிருத்தல். எல்லி ஊரற்கு வாயிலாக ஏற்றுக்கொண் டது. புலவாது உள்நெகிழ்ந்தாள் என்று இவளை நாம் இகழ்கின்ற தென்? இதுவன்றோ பொழுது? என உழையர் தம்முட் புறங்கூறினா ராக வுரைப்பினுமமையும்." (பே-ரை.)

---

## 365. எய்தலெடுத்துரைத்தல்.

சீர்திகழுலகிற் றிகழ்தரக்கூடி
வார்புனலூரன் மகிழ்வுற்றது.

(இ-ள்) சீர்திகழ் உலகில்-சிறப்பு விளங்கின உலகத்தே, திகழ்தரக் கூடி - விளக்கமுண்டாம்படி கூடி, வார்புனல் ஊரான் மகிழ்வுற்றது-ஒழுங்குபட்ட புனலாற் சூழ்ந்த ஊரன் மகிழ்ச்சி யுடைந்தது.

---

புலவித் திரைபொரச் சீறடிப் பூங்கலஞ் சென்னியுய்ப்பக்
கலவிக் கடலுட் கலிங்கஞ்சென் றெய்திக் கதிர்கொண்முத்தம்
நிலவி நிறைமது வார்ந்தம் பலத்துநின் றோனருள்போன்
றுலவிய லாத்தனஞ் சென்றெய்த லாயின வூரனுக்கே.

(ப-ரை.) புலவித் திரை பொர-புலவியாகிய திரை பொர, சீறடிப் பூங் கலம் சென்னி உய்ப்ப-அத்திரை நீக்குதற்கு நாயகி யுடைய சிறிய அடியிலே பொலிந்த ஆபரணங்கள் சென்னிபட, [என்றது, வணங்க என்றபடி], கலவிக்கடலுள் கலிங்கம் சென் றெய்தி - இருவருடைய நெஞ்சாகிய கடலும் கடந்தவிடத்துப் புடவையைச் சென்றுய்த்து, கதிர்கொள் முத்தம் நிலவி நிறை மது வார்ந்து-ஒளியுடைத்தாகிய முத்தையொத்த முறுவலிலே நிலைபெற்று நிறைந்த நீராகிய தேனையுண்டு, அம்பலத்து நின் றோன் அருள்போன்று உலவு இயலாத் தனம் சென்று எய்த லாயின ஊரனுக்கே-திருவம்பலத்தே நின்றவனுடைய திருவருளை ஒத்துத் தளராத முலைகள் ஊரனுக்குச் சென்று பெறலாயின அன்றே. (எ-று.)

என்றது, நாயகன் அன்புடைமையும், நாயகி புலவிச் செவ்வியறிந்து நீர்த்த காமச்சுவை மதுவுண்டு, அவளுள்ளத்தே மகிழ்ச்சியுங் கூறினவாறு.

---

365. அவ்விடத்துள்ளார் கூற்று.

(பா-ம்). 1. சீரியலுலகிற்.

"புலவுநாறித் திரைகள் வந்து மோதச் சிறியவடியையுடைய பொலிவையுடைய மரக்கலத்தைக் கடலின் சென்னியிலே செலுத்தக் கடலுட்கலந்து, கலிங்கமாகிய தேயத்தைச் சென்றெய்தி, ஒளிபொருந்

திய முத்துக்கள் தன்கண் வந்து நிலைபெற அவ்விடத்துள்ள மதுக்களை நுகர்ந்து, அம்பலத்துநின் றவன தருளையொத்து, ஒருஞான்றுங் கேடில்லாத பொருள் சென்றெய்தலாயினவென வேறுமொருபொருள் விளங்கியவாறறிக. சீரியலுலகிற் றிகழ்தரக்கூடி - சீர்மையியன்றவுலகி னுள்ள இன்பமெல்லாவற்றினும் விளங்கக்கூடி. சீரியலுலகு தேவருலகு மாம். இதுவும் துறைகூறிய கருத்து." (பே-ரை)

---

## 366. கலவிகருதிப் புலத்தல்

மன்னியவுலகிற் றுன்னியவன்பொடு
[1] கலவிமகிழ்ந்து புலவியெய்தியது.

(இ-ள்.) மன்னிய உலகில் துன்னிய அன்பொடு - நிலை நின்ற உலகத்தோடு செறிந்த அன்புடனே, கலவி மகிழ்ந்து புலவி எய்தியது - கலவியிலே களித்துப் புலவியுற்றது.

---

செவ்வாய் துடிப்பக் கருங்கண் பிறழச்சிற் றம்பலத்தெம்
மொய்வார் சடையோ னருளின் முயங்கி மயங்குகின்றாள்
வெவ்வா யுயிர்ப்பொடு விம்மிக் கலுழ்ந்து புலந்துனைந்தாள்
இவ்வா றருள்பிறர்க் காகு மெனநினைந் தின்னகையே.

(ப-ரை.) செவ்வாய் துடிப்பக் கருங்கண் பிறழ - சிவந்த வாய் துடிப்பவும் கரியகண்கள் உலாவவும், சிற்றம்பலத்து எம் மொய் வார் சடையோன் (அருளின்) முயங்கி மயங்குகின்றாள் - சிற்றம்பலத்தே உளனாகிய எம்முடைய செறிந்து நீண்ட சடையினையுடையவன் திருவருள் பெற்றாரைப் போலத் தழுவிக் கொண்டு களிக்கின்றவள், வெவ் வாய் உயிர்ப்பொடு - வெய்ய விடத்தை யுள்ளே உடைத்தாகிய பெருமூச்சோடே, விம்மிக் கலுழ்ந்து புலந்து நைந்தாள் - பொருமி யழுது வெறுத்துக் கிலேசித்தாள், இவ்வாறு அருள் பிறர்க்கு ஆகுமென நினைந்து இன்னகையே - இத்தன்மையாகிய அருள் மேலொரு காலத்திற்

பிறர்க்கும் செய்ய அடுக்குமோ என்று கருதி இனிய முறுவ லினையுடையாள் நைந்தாள். (எ-று.)

---

**366.** தலைமகள் புலத்தல்.

(பா-ம்.) 1. கலவிகருதி.

அருளின் முயங்குகின்றாளென்புழி அருள்பெற்றவர் உவமையா தல் ஆற்றலான் வந்தது. அருளான் முயங்கி என்பாருமுளர். வெவ் வுயிர்ப்பென்பது 'கலுழ்கட் சின்னீர்' (குறுந்.) என்பதுபோல நின்றது. 'தவறுபற்றிப் புலப்பளென்று நீ கூறுதி; இதுவன்றோ இவள் புலக் கின்றவாறு?' எனத் தோழிக்குத் தலைமகன் கூறியது. மன்னிய உலகில் துன்னிய அன்பொடு - நிலைபெற்ற உலகத்தில் வைத்துச் செறிந்த அன்போடு. இதுவும் துறைகூறிய கருத்து.

---

## 367. குறிப்பறிந்து புலந்தமை கூறல்.

குறிப்பினிற்குறிப்பு நெறிப்படநோக்கி
மலர்நெடுங் கண்ணி புலவியுற்றது.

(இ-ள்.) குறிப்பினில் குறிப்பு நெறிப்பட நோக்கி-நாயக னுடைய முகக்குறிப்பாலே நெஞ்சிற் கருத்தை முறைப்பட விசாரித்து, மலர் நெடுங்கண்ணி புல்வியுற்றது-மலர்களையொத்த கண்களையுடையாள் புலந்தது(என்ன, புலந்தபடியைச் சொன்னது என்றுபடும்.)

---

மலரைப் பொருவடி மானுந் தமியண்மன் னன்னொருவன்
பலரைப் பொருதென் றிழிந்துநின் றுள்பள்ளி காமனெய்த
அலரைப் பொருதன் றழல்விழித் தோனம் பலம்வணங்காக்
கலரைப் பொருச்சிறி யாளென்னை கொல்லோ கருதியதே.

(ப-ரை.) மலரைப் பொரு அடி மானும் தமியள்-மலரினை மிதிக்கவும் பொறுத மெல்லிய அடியினையுடைய, மானை ஒப்பவ

ளும் தனியளாயிருந்தாள்; மன்னன் ஒருவன் - அவள் நாயகனும் தனியனாயிருந்தான்; [அவனுக்கொரு பாங்கனாதல், அவளுக் கொரு தோழியாதல் அருகிருந்தாரில்லை. என்றபடி]; பலரைப் பொருது என்று இழிந்து நின்றாள் பள்ளி-இந்தச் சயனம் பலரைப் பொருது என்று இழிந்து நின்றாள்; காமன் எய்த அலரைப் பொருது அன்று அழல் விழித்தோன்-காமனால் எய்யப்பட்ட பூவம்பைப் பொருதே அன்று அழலாக விழித் தவன், அம்பலம் வணங்காக் கலரைப் பொருச் சிறியாள்-அவனுடைய திருவம்பலத்தை வணங்காத அறிவிலாதாரைப் போல் பொருத சிறியவள், [என்றது, அம்பலம் வணங்கா தாருடனே கெழுமியிருக்கப் பொருதவள், அம்பலம் வணங்காதாரைப்போல, ஒரு காரணமின்றிச் சிறிறாள் என்பது கருத்து.], என்னை கொல்லோ கருதியதே-இவள் கருத்து என் தான்? (எ-று.)

இவ்வுடலுக்கு முதல் நெஞ்சு ஒன்றைக் கருதலால், தன் குறிப்புக்கு வேறுபட இப்பொழுது இவன் கருத்து நம்மேல் அல்லவென்று வெறுத்தாள்.

---

367. உரையர் கூற்று.

பலரைப் பொருதுபள்ளி: "நங்கை யொருத்தியொடு நாமிருவர் மூவரையும் பொங்கு மமளி பொறுக்குமோ - சங்கம், குழைய வரால் பாயுங் குருநாடர் கோவே, பழைய வராலென்ன பயன்'' (தனிப்பாடல்)

''இழிந்து நின்றாள் என்புழி நின்றாள் என்பது ஆண்டு நிற்றல், கருதிற்றன்று; விரைய விழிந்தாள் என்பதுபட நின்றது. குறிப்பாலே, தலைமகன் குறிப்பையறிந்து தலைமகள் புலப்ப வாயில்கள் தம்முட் சொல்லியது.'' (பே-ரை.)

---

## 368. வாயிலவர் வாழ்த்தல்

தலைமகனது தகவுடைமை
நிலைதருவாயி னின்றோருரைத்தது.

(இ-ள்.) தலைமகனது தகவுடைமை - தலைமகன் தக வுடைமையை, நிலைதருவாயில் நின்றோர் உரைத்தது - நிலைமை தக்கவாயில் நின்றவர்கள் சொன்னது.

---

வில்லைப் பொலிநுதல் வேற்பொலி கண்ணி மெலிவறிந்து
வல்லைப் பொலிவொடு வந்தமை யானின்று வான்வழுத்துந்
தில்லைப் பொலிசிவன் சிற்றம் பலஞ்சிந்தை செய்பவரின்
[1] மல்லைப் பொலிவய லூரன்மெய் யேதக்க வாய்மையனே.

(ப-ரை.) வில்லைப் பொலி நுதல் வேல் பொலி கண்ணி மெலிவு அறிந்து - வில்லையொத்த நெற்றியினையும் வேலையொத்த கண்களையுமுடையாளது வாட்டத்தையும் அறிந்து, வல்லைப் பொலிவொடு வந்தமையால் - விரையச் சிறந்து வந்தமையால், நின்று வான் வழுத்தும் தில்லைப் பொலிசிவன் - மரளாதே தேவர்கள் வாழ்த்தும் பெரும்பற்றப்புலியூரிலே சிறந்தவன், சிற்றம்பலம் சிந்தை செய்பவரின் - அவனுடைய திருச்சிற்றம் பலத்தை நெஞ்சாலே நினைப்பாரைப் போலே, மல்லல் பொலி வயல் ஊரன் - வளப்பமுடைத்தாகிய பொலிவுபெற்ற ஊரை யுடையவன், மெய்யே தக்க வாய்மையனே - உண்மையாகத் தகுதிபெற்ற ஒரு சொல் வாசகத்தை யுடையனாயிருந்தான். (எ-று)

என்றது, இவள் வாடாமல் வந்தமையால், அவன் அன்புடையனென்று சொல்லிய வார்த்தை சத்தியமாயிருந்தது.

---

368. வாயிலவர் கூற்று.

(பா-ம்) 1. மல்லற்பொலி.

"வில்லையென்னும் ஐகாரம்" இசைநிறையாய் வந்தது. காதலன்வா இவள் இடையின்றிப் பொலிந்தமையாற் பொலிவொடென ஒடுக் கொடுத்துக் கூறினார். பொலி சிற்றம்பலமென வியையும். மல்லல் கடைக்குறைந்து ஐகாரம் விரிந்து நின்றது. மல்லற்பொலி யென்பதூஉம் பாடம். (பே-ரை.)

---

## 369. புனல்வாவுரைத்தல்.

[1]புனலாடுவதெனப் புனைந்துகொண்டு
மனைபுகுந்தவனை வையமுரைத்தது.

(இ-ள்.) புனலாடுவதெனப் புனைந்துகொண்டு - விரும்பிப் புனலாடப் புகாநின்றானென்று, மனை புகுந்தவனை ஐயமுற்றது - மனையை விரும்பி வந்தவனைப் பூமியிலுள்ளார் சொன்னது.

---

சூன்முதிர் [2]துன்னு நடைப்பெடைக் கிற்றுணைச் சேவல்செய் [வான்
தேன்முதிர் வேழத்தின் [3]மென்பூக் குதர்செம்ம லூரன்றிண் டோள்
மான்முதிர் நோக்கினல் லார்மகி ழத்தில்லை யானருளே
போன்முதிர் பொய்கையிற் பாய்ந்தது வாய்ந்த புதுப்புனலே.

(ப-ரை.) சூன் முதிர் துன்னுநடைப் பெடைக்கு இல் துணை சேவல் செய்வான் - சூன் முதிர்ந்த குறுக அடியிடும் நடையினையுடைய தன் பெடைக்குச் சேவலானது கூடு எடுப்பதாக, தேன் முதிர் வேழத்தின் மென்பூக் குதர்ச் செம்மல் ஊரன் திண் தோள் - தேன் மிக்க வேழமாகிய கரும்பின் மெல்லிய பூவைக் கோலுகிற தலையான ஊரையுடையவன், (என்றது குறிப்பு மொழி. மகப்பேறு காரணமாக எடுக்க நினைந்தமையல்லது தன் பெடை மேலுள்ள அன்பாகில் முன்னமே எடுக்கும் என்றும், தன் காரியமுற்றி நாற்றமில்லாத பூவைக்

கோதினுற்போலப் புதல்வன் காரணமாகத் தன் நாயகியிடத்து வியாபரிக்கிருனென்பது கருத்து.) சிக்கென்ற தோள்களே, மான் முதிர் நோக்கி நல்லார் மகிழ - மானேக்கத்தின் தன்மை முதிர்ந்த நோக்கினையுடையவர்கள் பெற்று மகிழ, தில்லையான் அருளே போல் முதிர் பொய்கையில் பாய்ந்தது வாய்ந்த புதுப் புனலே - தில்லையானருளை யொக்க முதிர்ந்த பொய்கையிலே புதுப்புனல் வந்து பாய்ந்தது. (எ-று.)

ஆதலால், இவன் புதுப்புனலாடிப் பரத்தையரை மகிழ் வித்துத் தன் காதலியை வெகுள்விக்கும் போலுமெனக் கண்டார் சொல்லியது.

---

369. வையத்தார் கூற்று.

(பா-ம்.) 1. புனலாடுகவெனப் 2. துன்னுநடை. 3. வெண்பூ.

சேவல்-பறவையின் ஆண்பாற் கெல்லாம் சேவலென்னும் பெயர் உரியது (தொல். மரபு. 48 பேர்) சேவலன்னம். (சிந்தா. 65)

சூன்முதிர்......குதர் செம்மலூரன்:— "உள்ளூர்க் குரீஇத் துள்ளு நடைச் சேவல், சூன்முதிர் பேடைக் கீனில்இழை இயர், தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின், நாறு வெண்பூக் கொழுதும் யாண ரூரன்" (குறுந். 85. 2-6). "கரும்பின், வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி, முதுக்குறை குரீஇ முயன்று செய் குடம்பை" (நற். 366 : 7-9). "மனையுறை குருவி வளைவாய்ச் சேவல், சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி, ஈனில் இழைக்க வேண்டி யாறு, அன்பு பொறை கூர மேன்மேன் முயங்கிக், கண்ணுடைக் கரும்பி னுண்டோடு கவரும், பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை, வருபுன லூரன்" (பதினோராந்: திருவாரூர் மும்மணி. 19).

"தில்லையான் அருள்பெற்றவர்போல் நல்லார் மகிழ என்றுரைப் பாருமுளர். சேவல் சூன்முதிர்ந்த பேடைக்கு ஈனில்லிழைத்துப் பார்த்துக் காக்கின்றாற்போல இவனுந் தன் காதலிக்கு வேண்டுவன செய்து மனைவயிற்றங்கி இன்புறுகின்றானென்ன உள்ளுறை காண்க. துன்னுநடையெனப் பாடமோதி, சூன் முதிர்தலாற்பயில அடியிடுநடை யென்றுரைப்பாருமுளர். வெண்பூ என்பதூஉம் பாடம்." (பே-ரை.)

## 370. தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறல்

பயில்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
[1]கயன்மணிக்கண்ணியர் கட்டுரைத்தது.

(இ-ள்.) பயின்மணித் தேர் செல்லப் பரத்தையர் சேரி - பரத்தையர் தெருவிலே பயின்ற மணியழுத்தப்பட்ட தேர் செல்ல, கயன்மணிக் கண்ணியர் கட்டுரைத்தது. கயலையொத்த தூய கண்களையுடையாராகிய பரத்தையர் சொன்னது.

---

சேயே யெனமன்னுந் தீம்புன லூரன்றிண் டோளிணைக
டோயீர் புணர்தவந் தொன்மைசெய் தீர்[2]சுடர் கின்றகோலந்
தீயே யெனமன்னு சிற்றம் பலவர்தில் லைநகர்வாய்
வீயே யெனவடி வீர்நெடுந் தேர்வந்து மேவியதே.

(ப-ரை.) சுடர்கின்ற கோலம் தீயே என மன்னு - விளங்காநின்ற திருநிறம் தீ நிறமே யென்ன நிலைபெற்ற, சிற்றம்பலவர் தில்லை நகர்வாய் - திருச்சிற்றம்பல நாதருடைய பெரும்பற்றப் புலியூராகிய நகரியின் தெருவிலே, நெடுந்தேர் வந்து மேவியதே- நெடியதேர் வந்து பொருந்திற்று. (ஆதலால்), சேயே என மன்னும் தீம்புனல் ஊரன் திண்தோள் இணைகள் - சுப்பிரமணியனே என்னும்படி நிலைபெற்ற இனிய புனலணைந்த ஊரையுடையவன் திண்கென்ற தோளிணைகள், புணர் தவம் தொன்மை செய்தீர்- புணர்ச்சிக்கு வேண்டும் புண்ணியத்தை முற்பிறப்பிலே செய்தவர்களே! வீயே யென் வடிவீர் - பூவே என்று சொல்லும்படி மெல்லிய வடிவினை உடையீர், தோயீர் - இனித் தோயீர், தோள். (எ-று.)

---

**370.** பரத்தையர் கூற்று.

(பா-ம்) 1. கயல்மணி கட்டுரைத்தது. 2. சுடர்கின்றகொலந்.

"ஒன்றிற் கொன்று இணையாயிருத்தலின் இணையெனத் தனித்தனிக் கூறப்பட்டன. இதுவும் ஊடல் நிமித்தம். கயல்மணி கட்டுரைத்

தது என்பது பாடமாயின் பரத்தையர் சேரிக்கண் தலைமகன் தேர் செல்லத் தலைமகள் நொந்துரைத்ததாம். இப்பொருட்கு நெடுந்தேர் நமது சேரிக்கண் வந்து தங்கிற்றென்றுரைக்க." (பே-ரை.)

---

## 371. புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தல்.

தீம்புனல்வாயிற் சேயிழைவருமெனக்
காம்பனதோளியர் கலந்துகட்டுரைத்தது.

(இ-ள்.) தீம்புனல் வாயில் சேயிழை வருமென-இனிய புனலாடிடத்தே சிவந்த ஆபரணங்களையுடையாளாகிய காதற் பரத்தையர் வருமென்று, காம்பன தோளியர் கட்டுரைத்தது - வேயையொத்த தோள்களையுடையராகிய இற்பரத்தையர் சொன்னது.

---

அரமங் கைய ரெனவந்து விழாப்புகு மவ்வவர்வா
னரமங் கையரென வந்தணு கும்மவ ளன்றுகிராற்
சிரமங் கயனைச்செற் றோன்றில்லைச் சிற்றம்ப லம்வழுத்தாப்
புரமங் கையரினை யாதைய காத்துநம் பொற்பரையே.

(ப-ரை.) அரமங்கையர் என வந்து விழாப் புகும் அவ்வவர் - நீரரமங்கையர் என்னும்படி நீர்விழவிலே வந்து புகுதுகிற அவ்வவர் தாங்களே, [என்றது, விழவுக்குப் புகுதுகிற மகளிர் பலரையும்] வானர மங்கையரென வந்தணுகும் அவள் - தெய்வ மகளென்று சொல்லும்படி வந்தணுகா நிற்பள், [அவன் காதற் பரத்தையாராதலால்], அன்று உகிரால் சிரம் அங்கு அயனைச் செற்றோன் - அன்று உகிராலே அவ்விடத்து அயனைத் தலை அறுத்தவன், தில்லைச் சிற்றம்பலம் வழுத்தார் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரில் திருச்சிற்றம்பலத்தை வாழ்த்தாத, புர மங்கையரின் நையாது-புரத்திலுள்ள அசுரமகளிர் வருந்தினாற்

போல வருந்தாதே, ஐய காத்தும் நம் பொற்பரையே - தம் முடைய நாயகரைக் கண்டோர் வியக்கும்படி நம்மிடத்தே தரக் கடவோம். (எ-று.)

புனலாடு மகளிர் பலரும் நீரரமகளிர்க்கு உவமையாவது, நீரைவிட்டு நீங்காமையும் நீருடன் விருப்பமும்; காதற்பரத்தை தெய்வமகளிர்க்கு உவமையாதல், அலங்காரமும் நாயகனைக் கண்டால் விடாமையும்.

---

**371.** *பரத்தையர் கூற்று.*

"வானரமங்கையரென்றது சாதி நோக்கி நின்றது. ஐய பொற்பரை எனக் கூட்டினுமமையும். 'பரத்தைவாயி லெனவிரு வீற்றுங்- கிழவோட் சுட்டாக் கிளப்புப் பயனிலவே' (தொல். பொருள். செய்யுள். 200). என்பதனான் இது கிழவோள் சுட்டாக் கிளவியாயினும், இப்பரத்தையாது மாறுபாடு தலைமகள் ஊடுதற்கு நிமித்தமாதலின் பயனுடைத்தாம்." (பே-ரை.)

---

## 372. தன்னை வியந்துரைத்தல்

அரத்தைத் துவர்வாய்ப் பரத்தைத்தலைவி
முனிவுதோன்ற நனிபுகன்றது.

(இ-ள்.) அரத்தைத் துவர்வாய்ப் பரத்தைத் தலைவி - மிகவும் சிவந்த வாயினையுடையாளாகிய பரத்தையாகிய தலைவி [அவளைத் தலைவி என்றது, பொதுவகையாற் பரத்தைமாத் திரையன்றி.........] முனிவு தோன்ற நனி புகன்றது - வெறுப்புத் தோன்றுதலாலே மிகவும் சொன்னது.

---

கனலூர் கணைதுணை யூர்கெடச் செற்றசிற் றம்பலத்தெம்
மன்லூர் சடையோ னருள்பெற் றவரி னமரப்புல்லு
மினலூர் நகையவர் தம்பா லருள்விலக் காவிடில்யான்
புனலூ ரனைப்பிரி யும்புன லூர்கணப் பூங்கொடியே.

(ப-ரை) கனல் ஊர் கணை ஊர்கெடச் செற்ற-அழல் பரந்த அம்பாலே ஒத்த ஊராகிய முப்புரங்களும் பொடியாகச் சீறின, [ஒத்த, மூன்றூர்களிலுமுள்ளார் தங்கள் நினைவு ஒத்திருத்தல்] சிற்றம்பலத்து எம் அனல் ஊர் சடையோன் அருள் பெற்றவரின் அமரப் புல்லும்............அவனுடைய திருவருளைப் பெற்றவர் களைப் போல, நாயகனைச் சிக்கெனப் பொருந்தியிருக்கிற, மினல் ஊர் நகையவர் தம்பால் அருள் விலங்காவிடில் - மின்னுதல் பரந்த முறுவலையுடையார் தம்மிடத்து நாயகன் வைத்தவருள் விலக்கி என்னிடத்தாக்கிக் கொண்டிலேனாகில், யான் புனல் ஊரனைப் பிரியும் புனலூர்கண் அப்பூங் கொடியே - நான் புன லணிந்த ஊரனைப் பிரிந்திருக்கும் கண்ணின் நீர் பரந்த கண்களை யுடைய பூங்கொடியை ஒப்பாளாகிய அவன் மனைக் கிழத்தி யாகக் கடவேன். (எ-று.)

மனைக் கிழத்திக்கு இவள் தன்மையாகக் கருதினது, நாயக னுக்கேற்ப வழிபடமாட்டாமையாலே அவன் பிரிந்தானைக் கருதி.

---

372. பரத்தைத் தலைவி கூற்று.

---

## 373. நகைத்துரைத்தல்.

வேந்தன்பிரிய வேந்திழைமடந்தை
பரத்தையை[1] நொந்து விரித்துரைத்தது.

(இ-ள்.) வேந்தன் பிரிய ஏந்திழை மடந்தை - நாயகன் பிரிய மிக்க ஆபரணங்களையுடைய நாயகி, பரத்தையை நொந்தது விரித்துரைத்தது - பரத்தைக்கு வருந்துவாள்போன்று விரித் துரைத்தது.

---

இறுமாப் பொழியுமென் றேதங்கை தோன்றினென் னெங்கை
[யங்கைச்
சிறுமான் றரித்தசிற் றம்பலத் தான்றில்லை யூரன்றிண்டோள்
பெறுமாத் தொடுந்தன்ன பேரணுக்குப் பெற்ற பெற்றியினோ
டிறுமாப் பொழிய விறுமாப் பொழிந்த விணைமுலையே.

(ப-ரை.) அங்கைச் சிறுமான் தரித்த சிற்றம்பலத்தான் - அங்கையிலே இளமானை ஏந்தின திருச்சிற்றம்பலநாதனுடைய, தில்லை ஊரன் திண்டோள் - பெரும்பற்றப்புலியூரில் நாயகனுடைய, சிக்கென்ற தோள்களை, பெறு மாத்தோடும் - பெற்ற மேம்பாட்டோடே, தன்ன பேரணுக்குப்பெற்ற பெற்றியினோடு - தன்னுடைய பெரிய அணுக்கை இயலாகப்பெற்ற முறைமையோடே, இறுமாப்பு ஒழிய - செம்மாப்பொழியும்படி, இறுமாப்பு ஒழிந்த இணைமுலையே. இணையொத்த முலைகள்செம்மாத்தலை ஒழிந்தன. ஆதலால், இறுமாப்பு ஒழியும் என்றே தங்கை தோன்றின் என் எங்கை-இனித் தனக்கொரு தங்கை தோன்றில், என் தங்கையாகிய தான் செம்மாப்பொழிய...........(எ-று.)

என்று பரத்தைக்கு நோவாரைப்போலே நயப்புக் கூறினாள். என் எங்கை என்ற இரட்டிப்பு, இனித்தானும் எனக்குத் தங்கையாய் நாயகனைப் பெறுதிருத்தலல்லது அவன் விரும்புந் தன்மைக்கு அழன்று தோன்றியபடி (?)

---

373. தலைவி கூற்று.

(பா-ம்.) 1. நோக்கி.

மாத்து – 'மாமாத்தாகிய மாலயன்' (தேவா. திருநா. 1506)

என்னெங்கை - எங்கை யென்றது பரத்தையை. என்னைப் புதியது பணியலுற் றீரெம தெங்கை யென்பாள்' (திருவாரூர். 467);

"எங்கை யென்றது என் தங்கை என்றவாறுயினும், என்னெங்கை யென இயைபு மிகுதி கூறி நகையாடினாள். மாத்து - தலைமகற்குரியளாய் நிற்றலால் உண்டாகிய வரிசை. பெற்றி-அணுக்காற்றனை மதித்தல். தன்னபெற்றியென வியையும். பெற்றியினோடுமென்னும் உம்மைதொக்கு நின்றது. ஒழிந்த வென்னு மிறந்தகாலம் விரைவு பற்றி வந்தது." (பே-ரை.)

## 374. நாணுதல்கண்டு மிகுத்துரைத்தது.

மன்னவன்பிரிய நன்மனைக்கிழத்தியை
[1] நாணுதல்கண்ட பாணனுரைத்தது

(இ-ள்.) மன்னவன் பிரிய - நாயகன் பிரிய, நன்மனைக் கிழத்தியை - நல்லமனைக் கிழத்தியை, நாணுதல் கண்ட பாணன் உரைத்தது - நாணின படியைக் கண்ட பாணன் சொன்னது.

---

வேயாது செப்பி னடைத்துத் தமிவைகும் வீயினன்ன
தீயாடி சிற்றம் பலமனை யாடில்லை யூரனுக்கின்
றேயாப் பழியன நாணியென் கண்ணிங்ங னேமறைத்தாள்
யாயா மியல்பிவள் கற்புநற் பால வியல்புகளே.

(ப-ரை.) வேயாது செப்பின் அடைத்து தமி வைகும் வீயின் அன்ன - சூடாது செப்பிலே அடைத்துத் தனியிருந்த பூவை யொப்பாள்; தீயாடி சிற்றம் பலமனையாள் - தீயை ஏந்தி ஆடுகிறவனுடைய திருச்சிற்றம்பலத்தை யொப்பாள்; தில்லை ஊரனுக்கு இன்று ஏயாப் பழி என நாணி என்கண் இங்ஙனே மறைத்தாள் - தில்லையில் தலைவனுக்குப் பொருந்தாத பழியி தென்று நாணி இப்பொழுது என்னிடத்து இப்படியே கரந்தாளாதலால், யாய் ஆம் இயல்பு இவள் கற்பு - இவளுடைய கற்பு தாயான தன்மையயுடைத்தாயிருந்தது; நற்பால இயல்புகளே - குணங்கள் நல்ல கூறுபாட்டையுடையனவாயிருந்தன. (எ-று.)

என்றது, பாணன் வாயில் வேண்டவும் நாணுடன்படவும் வேண்டுவது. நாயகன் பரத்தையரிடத்திற்..........ஒவ்வாது செய்யார், கருமக்குறைபாட்டுக்குப் பிரிந்தாரென்ற தலைமகளை நோக்கிப் பாணன் கூறியது.

---

374. பாணன் கூற்று.

(பா-ம்.) 1. நாணுதல் கண்டு வாணுதலுரைத்தது.

செப்பிற்பூ: "மடைமான் செப்பிற் றமிய வைகிய, பெய்யாப் பூவின்" (குறுந் 9: 2-3). "புடையமை பொலிந்த வகையமை செப்பிற் ............கமழ்நறும்பூ'. (மதுரை. 421-3); 'செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை, நறுமலர் (சிலப். 22:121-2) ; வகைவரிச் செப் பினுள் வைகிய மலர்போல்" (மணி 4: 65)

"தமிவைகும்வீ அக்காலத்து வேறுபாட்டுக்குவமை. இயற்கை நலத் திற்குவமை." (பே-ரை.)

## 375. பாணன்வரவுரைத்தல்

இகல்வேலவ னகல்வறியாப்பாணனை
பூங்குழல்மாதர்க்குப் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) இகல் வேலவன் அகல்வறியாப் பாணனை-மாறுபாட் டாற் சிறந்த வேலினையுடையவன் அகன்றபடியறியாப் பாணனை, பூங்குழை மாதர்க்கு-பொலிந்த மாக்குழையையுடைய நாயகிக்கு, பாங்கி பகர்ந்தது-தோழி சொன்னது.

---

விறலியும் பாணனும் வேந்தற்குத் தில்லை யிறையமைத்த
திறலியல் யாழ்கொண்டு வந்துநின் றூர்சென் றிராத்திசை
போம்
பறலியல் வாவல் பகலுறை மாமரம் [1]போலுமன்னே
வறலியல் கூழைநல் லாய்தமி யோமை யறிந்திலரே.

(ப-ரை.) விறலியும் பாணனும், தில்லை இறை அமைத்த இயல் யாழ், வேந்தர்க்குக் கொண்டுவந்து நின்றூர்-பாணிச்சியும் பாணனும், நம் நாயகற்கு மங்கலம் பாடுவதற்காகத் தில்லை இறையிலே சமைக்கப்பட்ட ஓசையால் மற்றுள்ள யாழை வென்ற யாழைக்கொண்டு வந்து நின்றார்கள். சென்று இரா திசை போம்-போய் இரவிடத்தே திக்குகளைக் கிழிக்கிற, பறல்

இயல் வாவல்-பறத்தலை இயல்பாகவுடைய வாவல், பகல் உறை மாமரம் போலும் தமியோமை அறிந்திலரே-(பகலிலே உறையும் பெரிய மரம்போலும்) தனித்திருக்கிற நம்மை அறிந்திலர்; (அறல் இயல் கூழை நல்லாய்-அறல்போலும் கூழையையுடைய நல்லாய்) (எ-று.)

அறியாமல் அவர் இருந்ததாகக் கருதி மங்கலம் பாட வந்தார்கள்; என்றது, அவர் போமிடம் இவர்கள் அறியாம லிருக்க நாம் எங்ஙன் அறிவோம் என்பது கருத்து.

---

375. தோழி கூற்று.

(பா-ம்) போல.

தில்லையிறையமைத்த, திறலியல் யாழ்: 'எம்மிறை நல்வீணை வாசிக்குமே' (தே. திருநாவு) 'மறையேழிசையும், தோய்வீணை வாசிக்கு மாரூர்த் தியாகர்' (திருவாரூர்க். 460)

பறல்-பறத்தல்; 'விரிசிறைப் பறலின் கடுமையாவெய்தி, (வில்லி பார. இந்திர. 21).

---

## 376. தோழி இயற்பழித்தல்.

[1] தலைமகனைத் தகவிலலெனச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பியது.

(இ-ள்.) தலைமகனைத் தகவிலன் என - நாயகன் தமக் குத்.........தகவுடையன் அல்லனென்று, சிலைநுதல் பாங்கி தீங்கு செப்பியது - வில்லையொத்த நெற்றியினையுடைய பாங்கி குற்றம் சொன்னது.

---

திக்கி னிலங்குதிண் டோளிறை தில்லைச்சிற் றம்பலத்துக்
கொக்கி னிறக தணிந்துநின் ருடிதென் கூடலன்ன
வக்கின் னகையிவ ளைய வயல்வயி னல்குதலால்
தக்கின் றிருந்தில னின்றசெவ் வேலெந் தனிவள்ளலே.

(ப-ரை.) திக்கின் இலங்கு திண்டோள் இறை - திக்கு களாகிய விளங்கின சிக்கென்ற தோள்களையுடைய சுவாமி, தில்லைச் சிற்றம்பலத்து - பெரும்பற்றப்புலியூரிலே திருச்சிற்றம் பலத்திலே, கொக்கின் இறகது அணிந்து நின்றாடி தென்கூடல் அன்ன - கொக்கின் இறகை அணிந்து நின்று ஆடுவானுடைய தெற்கின்கண் உண்டாகிய கூடலையொத்த, அக்கின் நகை இவள் நைய - அக்கை யொத்த முறுவலையுடைய இவள் வருந்த, அயல் வயின் [2]நல்குதலால் - [இங்ஙன் அன்பால் வருந்தும் வருத்தத் திற்கு] அயலாராகிய பரத்தையரிடத்தே தலையளி செய்தலாலே, தக்கின்றிருந்திலன் நின்ற செவ்வேல் எம் தனி வள்ளலே - நிலை நின்ற சிவப்பாற் சிறந்த வேலினையுடைய எம்முடைய ஒப்பில் லாத வள்ளல் தகுதியுடையவனாயிருந்திலன். (எ-று.)

வள்ளல்களுக்குத் தகுதியாவது, தராதரப் பருவமறிந்து கொடுத்தல். இவ்வள்ளல் நல்கவேண்டுமிடத்து நல்காமையா லும், வேண்டாதவிடத்து நல்குதலாலும், அத்தகுதியுடைய னல்லன். வேலுக்குச் சிவப்பு, கொலைத் தொழிலாலே இரத்தம் பட்ட சிவப்பு.

---

376. தோழி கூற்று.

(பா-ம்) தலைமகனது தகவின்மை.

2. அல்குதலால் என்றும் கொண்டு பொருள் கொள்ளலாம்.

"அயல்வயினென்பதற்குப் பொருணசை யுள்ளத்தராகலிற் காமத் திற் கயலென்றுரைப்பினு மமையும்." (பே-ரை)

## 377. உழையரியற் பழித்தல்.

அரத்தவேலண்ணல் பரத்தையிற்பிரியத்
திண்டேர்வீதியிற் கண்டோருரைத்தது.

(இ-ள்.) அரத்தவேல் அண்ணல் பரத்தையிற் பிரிய-சிவந்த வேலினையுடைய நாயகன் பரத்தையரிடத்துப்பிரிய, திண்தேர்

வீதியிற் கண்டோர் உரைத்தது-சிக்கென்ற தேருடைத்தாகிய வீதியிலே கண்டவர்கள் சொன்னது.

---

அன்புடை நெஞ்சத் திவள்பே துறவம்ப லத்தடியார்
என்பிடை வந்தமிழ் தூறநின் ருடி யிருஞ்சுழியற்
றன்பெடை நையத் தகவழிந் தன்னஞ் சலஞ்சலத்தின்
வன்பெடை மேற்றுயி லும்வய லூரன் வரம்பிலனே.

(ப-ரை.) தன் பெடை நைய-தன் பெடை அன்னமானது வருந்த, தகவழிந்து-தகுதியழிந்து, அன்னம் சலஞ்சலத்தின் வன்பெடைமேல் துயிலும் வயல் ஊரன் - சேவலன்னமானது சங்கினுடைய வலிய பெடையிடத்தே கிடந்துறங்குகிற வயல் சூழ்ந்த ஊரையுடையவன், அன்புடை நெஞ்சத்து இவள்பேதுற வரம்பிலனே-(அன்புடைய நெஞ்சத்தையுடைய இவள் பேதுறும்படியாக)வரம்பு கடந்தான். அம்பலத்து அடியார் என்பிடை வந்து அமிழ்தூற நின்றுடி இரும் சுழியல் - அடியார் எலும்புக்குள்ளெல்லாம் அமுதம் வந்து ஊறும்படி அம்பலத்து நின்றுடி அருளுகிறவனுடைய பெரிய திருவலஞ்சுழி யென்னும் படை வீடாகிய [வயலூரன், எனக் கூட்டுக] (எ-று.)

தன் பெடையென, நாயகி அருமை காட்டியும், வன்பெடையெனப் பரத்தையர் அன்பிலாமை காட்டியும் நின்றது.

அன்புடை தன்பெடை வருந்த அன்பிலாத தன் மரபுக்குப் பொருந்தாத சங்கின் பெடையுடனே அன்னம் துயில்கின்ற நாடனுதலால் தன் நாயகி வருந்தத் தனக்கன்பிலாதாரும் தன் மரபுக்குப் பொருந்தாருமாகிய பரத்தையருடனேயுறையும் தகுதியின்மை.

---

377. உழையர் கூற்று.

---

## 378. இயற்பட மொழிதல்

வரிசிலை [1]யூரன் பரிசுபழித்த
உழையர்கேட்ப வெழினகையுரைத்தது.

(இ-ள்.) வரிசிலை ஊரன் பரிசு பழித்த - வரிபொருந்திய வில்லினையுடையவனாகிய ஊரனது ஒழுக்கத்தை முன்பு பழித்த, உழையர் கேட்ப எழில் நகை உரைத்தது - அடுத்தார் கேட்ப அழகிய நகையை யுடையாள் கூறியது.

---

அஞ்சார் புரஞ்செற்ற சிற்றம் பலவ ரந்தண்கயிலை
மஞ்சார் புனத்தன்று மாந்தழை யேந்திவந் தாரவரென்
[2]நெஞ்சார் விலக்கினு நீங்கார் நனவு கனவுமுண்டேல்
பஞ்சா ரமளிப் பிரிதலுண் டோவெம் பயோதரமே.

(ப-ரை.) அஞ்சார் புரம் செற்ற - தனக்கடங்காதாருடைய முப்புரங்களைக் கெடுத்த, திருச்சிற்றம்பலவரது, அந்தண் கயிலை - அழகிய குளிர்ந்த ஸ்ரீ கயிலாயத்தின்கண், மஞ்சு ஆர் புனத்து அன்று - மஞ்சு சூழ்ந்த புனத்தின்கண், அன்று, மாந்தழை ஏந்தி - மாந்தழையை ஏந்தி, வந்தார் அவர் - வந்தாராகிய அவர், என் நெஞ்சார் - இன்று கனவில் என் நெஞ்சத்தின் கண்ணார்; விலக்கினும் நீங்கார் - தடுப்பினும் அவ்விடத்தினின்றும் நீங்கார்; நனவு கனவும் உண்டேல் - நித்திரையால் கனவுண்டாயினும், பஞ்சாரமளி - பஞ்சார்ந்த அமளியின் கண்ணும், பிரிதல் உண்டோ எம் பயோதரமே - எனது பயோதரத்தைப் பிரிதலுண்டோ? ஆதலால் நீர் கொடுமையொடு கூறுகின்றதென்ன? (எ-று.)

---

378. தலைமகன் கூற்று.

(பா-ம்.) 1. ஊரனைப் பரிசு பழித்த. 2. நெஞ்சர்.

".........கனவுமுண்டேல் என்பதற்குத் துயில் பெற்றுக் கனாக் காணின் என்றுரைப்பினுமமையும். நெஞ்சாரேன்பதூஉம், ஊ(ரனை)ப் பரிசு பழித்த வென்பதூஉம் பாடம். (பே-ரை.)

## 379. நினைந்துவியந்துரைத்தல்.

மெல்லியற்பரத்தையை விரும்பிமேவினேன்
அல்லியங்கோதையை யகனமர்ந்துரைத்தது.

(இ-ள்) மெல்லியல் பரத்தையை விரும்பி மேவினேன்- மெல்லிய இயல்பினையுடைய பரத்தையை விரும்பிப் பொருந்தினேன், அல்லியம் கோதையை அகனமர்ந்து உரைத்தது-அல்லியால் தொடுத்த அழகிய மாலையையுடையாளை நெஞ்சாலே விரும்பிச் சொன்னது.

---

தெள்ளம் புனற்கங்கை தங்குஞ் சடையன்சிற் றம்பலத்தான்
கள்ளம் புகுநெஞ்சர் காணு விறையுறை காழியன்னாள்
உள்ளம் புகுமொரு காற்பிரி யாதுள்ளி யுள்ளுதொறும்
பள்ளம் புகும்புனல் போன்றகத் தேவரும் பான்மையளே.

(ப-ரை) தெள் அம் புனல் கங்கை தங்கும் சடையன்- தெளிந்த நீருடைத்தாகிய கங்கை நிலைபெற்ற திருச்சடையை யுடையவன், சிற்றம்பலத்தான்-திருச்சிற்றம்பலத்தேயுள்ளவன், கள்ளம் புகு நெஞ்சர் காணு இறை-பொய் நுழையும் நெஞ்சினாற் காணப் படாத இறைவன், உறை காழி அன்னாள்-அவன் உறைகிற காழியை யொப்பான், உள்ளம் புகும் ஒருகால் பிரியாது உள்ளி- தான் ஒருகால் விடாதே நினைந்து என் உள்ளத்திலே புகுதா நின்றாள். உள்ளுதொறும்-தான் நினைக்குந்தோறும். பள்ளம் புகும் புனல் போன்று அகத்தே வரும் பான்மையரே-(உயர்ந்த விடத்தினின்றும் பள்ளத்திற் புகும் புனலையொத்துத் தடுப்பரிய ளாய் மனத்தின்கண் வரும் முறைமையளாகாநின்றாள். அதனால், பிரிந்தீண்டிருத்தல் அரிதுபோலும். (எ-று)

அவர்கள் பாவமான செய்தி தன் நெஞ்சுக்குப் பொருந் தாமையாலே, தன் நாயகியுடைய உண்மையான செய்தியை விரும்பிச் சொன்னது.

---

379. தலைமகன் கூற்று.

*.ஏட்டில் இப்பகுதிக்கு உரை இல்லை. இங்கு கொடுக்கப்பெற்றது பேராசிரியர் உரையினின்று எடுக்கப்பெற்றது.

பள்ளம் புகும் புனல்: 'பள்ளத்துப்பாயு நன்னீரனையர்' (கம்ப. பால. உலாவியல். 4)

---

## ௩௩௩. வாயில்பெறாது மகன்றிறநினைதல்

*பொற்றொடிமாதர் நற்கடைகுறுகி*
*நீடியவாயிலின் வாடினன்மொழிந்தது.*

(இ-ள்.) பொற்றொடி மாதர் நற்கடை குறுகி - அழகிய வளைகளையுடைய நாயகியது நல்ல வாசலிடத்தே குறுகி நீடிய வாயிலின் வாடினன் மொழிந்தது - வாயில் நீடிக்கையாலே மெலிந்து சொன்னது.

---

தேன்வண் டுறைதரு கொன்றையன் சிற்றம் பலம்வழுத்தும்
வான்வண் டுறைதரு வாய்மையன் மன்னுகு தலையின்வா
யான்வண் டுறைதரு மாலமு தன்னவன் வந்தணையான்
நான்வண் டுறைதரு கொங்கையெவ் வாறுகொ ணண்ணுவதே.

(ப-ரை.) தேன் வண்டு உறைதரு கொன்றையன் - தேனும் வண்டும் வாழும் திருக்கொன்றை மாலையையுடையவன், [தெனென்பது, வண்டில் ஒரு சாதி; அல்லதூஉம், பூவின் தேனென்றுமாம்.] சிற்றம்பலம் வழுத்தும் வான் - அவனுடைய திருச்சிற்றம்பலத்தை வாழ்த்துவார் பெறுகிற தெய்வலோகங் களில், வண் துறைதரு வாய்மையன்-வள்ளிய இடத்தை எனக்குத் தருகிற உண்மைத் தன்மையை யுடையவன், [என்றது, கதி பெறுவது புதல்வராலே என்கையால்,] மன்னு குதலையின் வாயான் - நிலைபெற்ற இளஞ் சொல்லைச் சொல்லுகிற இனிய வாய்மையை யுடையவன், துறை தருமால் அமுதன்னவன் -

வளவிய கடற்றுறையால் தரப்பட்ட பெரிய அமுதத்தை யொப்ப வன், வந்து அணையான் - இவ்விடத்தே வந்து அணைகிறானில்லை; நான் வண்டு உறைதரு கொங்கை எவ்வாறுகொல் நண்ணுவதே- சந்தன குங்குமத்தாலும் மாலைகளாலும் வண்டு உறையும் கொங்கைகளை நான் எத்தன்மையாலே சேர்வேன்? (எ-று.)

இது தோழிக்கு முன்னிலைப் புறமொழியாகத் தோழியைக் கொடுமை கூறியது.

---

380. தலைவன் கூற்று.

'இப்பொழுது குதலையையுடைத்தாகிய வாயான்மேல் வளவிய நூற்றுறைகளைச் சொல்லி எனக்கின்பத்தைச் செய்யும் அமிழ்தன்ன வன் என்றுரைப்பினுமமையும்' (பே-ரை.)

---

## 381. வாயிற்கணின்றுதோழிக்குரைத்தல்

பெருந்தகைவாயில் பெறாதுநின்
றருந்தகைபாங்கிக் கறியவுரைத்தது

(இ-ள்.) பெருந்தகைவாயில் பெறாது நின்று - பெரிய தகைமைப் பாட்டினையுடையவன் வாயில் பெறாதே நின்று, அருந்தகை பாங்கிக்கு அறிய உரைத்தது - அரிய தகைமைப் பாட்டினையுடைய பாங்கிக்கு அறியும்படி சொன்னது.

---

கயல்வந்த கண்ணியர் கண்ணிணை யான்மிகு காதரத்தான்
மயல்வந்த வாட்ட மகற்று விரதமென் மாமதியின்
அயல்வந்த வாடர வாடவைத் தோனம் பலநிலவு
புயல்வந்த மாமதிற் றில்லைநன் னாட்டுப் பொலிபவரே.

(ப-ரை.) மா மதியின் அயல் வந்த ஆடரவு ஆட வைத் தோன் - மிக்க மதியின் பக்கத்தே தன்னை ஏதம் செய்யவந்த

ஆடரவை ஆடும்படி வைத்தவன், அம்பலம் நிலவு - (அம்பலம் நிலைபெற்ற), புயல் வந்த மா மதில் தில்லை நல் நாட்டுப் பொலி பவரே - மேகத்தைச் செல்ல உயர்ந்த பெரிய மதிலாற் சூழப் பட்ட பெரும்பற்றப்புலியூரைச் சூழ்ந்த நலல நாட்டிற் சிறந்த வர்கள், கயல் வந்த கண்ணியர் - கயலையொத்த கண்களையுடைய வர்கள், கண் இணையால் மிகு காதரத்தால் மயல் வந்த வாட்டம் அகற்று விரதம் என் - கண்ணிணைகளாலே உண்டான மிக்க அச்சத்தோடே பொருந்தின மயக்கத்தால் உண்டாகிய வாட் டத்தை அகற்றார்; இத் தீ விரதம் என் தான்? (எ-று.)

---

381. தலைவன் கூற்று.

'இது மின்னிலைப் புறமொழி. இதனுள் கயல் வந்த கண்ணியர் என்றது தலைமகளை; தில்லை நன்னாட்டுப் பொலிபவரென்றது தோழியை; இனி மதிக்குவமை தலைமகளும் அரவிற்குவமை தலைமகனும் ஈசனுக் குவமை தோழியுமென்றாக்கி, அவ்வகைத்தாகிய பாம்பையும் மதியை யும் தம்மிற்பகையறுத்து ஓரிடத்தே விளங்கவைத்தாற்போல என் னுடன் அவட்குண்டாகிய வெறுப்பைத் தீர்த்து விளங்கவைத்தல் உனக்குங் கடனென்றாயிற்றெனை உள்ளுறை காண்க. மதியை அரவு ஏதங்குறித்து வந்தாற்போலத் தலைமகளைத் தலைமகன் ஏதங் குறித்து வருதவாவது தலைமகளுக்கு ஊடல் புலவி துனி என்னும் வெறுப்புத் தோன்றுதற்குத் தக்க காரணங்களைத் தலைமகன் உணடாக்கிக்கொண்டு வருதல். அரவைக்கண்டு மதிக்கு அச்சந்தோன்றினாற்போலத் தலை மகனைக் கண்டு தலைமகளுக்கும் ஊடல் புலவி துனியென்னும் வெறிப்புத் தோன்றிற்று; ஆதலால் அத்தலைமகனையும் தலைமகளையும் மதிக்கும் அரவுக்கும் ஒப்பச் சிலேடித்த சிலேடைக்கு மறுதலையாகாது' (பே-ரா).

---

## 382. வாயில்வேண்டத் தோழிகூறல்

வைவேலண்ணல் வாயில்வேண்டப்

பையரவல்குற் [1] பாவைபகர்ந்தது.

(இ-ள்.) வைவேல் அண்ணல்வாயில் வேண்ட - கூரிய வேலினையுடைய நாயகன் வாயில்வேண்ட, பை அரவு அல்குல்

பாவை பகர்ந்தது - பாம்பின் படத்தினையொத்த அல்குலினை யுடைய பாங்கி சொன்னது.

---

கூற்று யினசின வாளியெண் ணீர்கண்கள் கோளிழித்தாற்
போற்றான் செறியிருட் பொக்கமெண் ணீர்கன்ற கன்றபுனிற்
றீற்று வெனநீர் வருவது பண்டின்றெம் மீசர்தில்லைத்
தேற்றார் கொடிநெடு வீதியிற் போதிரத் தேர்மிசையே

(ப-ரை.) கூற்றுயின சில வாளி எண்ணீர் கண்கள் கோள் இழித்தால் போல் தான் செறி இருட் பொக்கம் எண்ணீர் - கொடுந் தொழிலால் கூற்றுவன் தானேயாய் இருக்கிற சினத்த அம்புகளென்று விசாரியீர்; கண்களைக் கெடுத்தாற் போன்ற செறிகிற இருளின் குற்றத்தை விசாரியீர்; [அம்புகள் என்றது அம்புகளையுடைய மறவரை.] கன்று அகன்ற புனிற்றீற்று வென நீர் வருவது பண்டு - கன்றைப் பிரிந்த ஈன்றணிமையுடைத்தாகிய ஈற்றுப்பசுவைப் போல.........பண்டு காணும்; இன்று எம் ஈசர் தில்லைத் தேற்றார் கொடி நெடு வீதியிற் போதிர் அத் தேர் மிசையே - இப்பொழுது எம்முடைய ஈசருடைய பெரும்பற்றப் புலியூரி(ல்) தெளியப்படாத பரத்தையருடைய கொடி கட்டப் பட்ட நெடிய தெருவிலே போகா நின்றீர், அங்ஙனம் வருந்தி எங்களிடத்து வந்த தேரின் மேலேறி; (எ-று)

எனவே, நீர் வந்து இப்பொழுது சொல்லுகின்ற......... அன்புடைமையெல்லாம் பொய்; இப்படி எங்களுடன்......... சொல்ல வேண்டுவதில்லை; முன்பு சிலகாலம் இடையூறு எண்ணாதே கன்று நினைத்த பசுப்போல வந்திலிரோ எனக் கொடுமை கூறியது.

---

382. தோழி கூற்று:

(பா-ம்) 1. பாங்கி.

பேராசிரியர். 'சில ஆளி எண்ணீர்,' என்று பிரித்துக்கொண்டு 'யாளிகளை ஊறு செய்வன வாகக் கருதாது' என்று பொருள் கூறுவர். இன்னும், 'கண்களுக்குக் கோளென்பது பார்வை; இதனை இழித்த லென்பது கண்மணியை வாங்குதல்' என்றும் அவர் விளக்குவர்.

## 383. தோழிவாயில் வேண்டல்

வாயில்பெறுது மன்னவனிற்ப
ஆயிழையவட்குத் தோழிசொல்லியது.

(இ-ள்.) வாயில்பெறுது மன்னவன் நிற்ப - வாயில் பெறுதே நாயகன் நிற்ப, ஆயிழையவட்குத் தோழி சொன்னது - அழகிய ஆபரணத்தையுடையாளுக்குத் தோழி சொன்னது.

---

வியந்தலை நீர்வைய மெய்யே யிறைஞ்சவிண் டோய்குடைக்கீழ்
வயந்தலை கூர்ந்தொன்றும் வாய்திற வார்வந்த வாளரக்கன்
புயந்தலை தீரப் புலியூ ரானிருக் கும்பொருப்பிற்
கயந்தலை யானை கடிந்த விருந்தினர் [1]கார்மயிலே.

(ப-ரை.) கார் மயிலே - கார் காலத்து மயிலை யொப்பாய்; வந்த வாள் அரக்கன் - பேதம் செய்ய வந்த வாளரக்கனுடைய, புயம் தலை தீர - தோளும் தலையும் நெரிய, புலியூரான் இருக்கும் பொருப்பில் - பெரும்பற்றப்புலியூரில் தலைவன் வாழும் மலையில், கயம் தலையானை கடிந்த விருந்தினர் - மெல்லிய தலையினையுடைத்தாகிய யானையை நம்மைக் கொல்லாமையில் மாற்றினவருமாய், அந்நாயகர் நம்மிடத்து விருந்தினராய் வந்தவர், வியந்து அலை நீர் வையம் மெய்யே யிறைஞ்ச - அலையுடைத்தாகிய கடல் சூழ்ந்த உலகத்தார் உண்மையாக வணங்கவும், விண் தோய் குடை கீழ் - விசும்பு தோய்ந்த குடையின் கீழே, வயம் தலை கூர்ந்து ஒன்றும் வாய் திறவார் - வேட்கை பெருகத் தம்மிடத்தே ஒரு வார்த்தையும் சொல்லுகிறுரில்லை, காண். (எ-று.)

---

383. தோழி கூற்று.

(பா-ம்.) 1. கார்புனத்தே.

பதவுரையின் கீழ் ஏட்டில் பின்வரும் பகுதி காணப்படுகிறது.

'வந்த வாளரக்கன் என்பது, பத்த.....கையாற் பொருப்பட்டது முயற்சியன்றி யிருத்தல், நெரிக்க வண்டும் உற்சாகம் பண்ணுதே பழையபடியே யெழுந்தருளியிருக்க அவனைநிர்த்தான் என்பது கருத்து'.

## 384. மனையவர் மகிழ்தல்

கன்னிமானோக்கி கனன்றுநோக்க
மன்னியமனையவர் [1]மறித்துரைத்தது.

(இ-ள்.) கன்னி மான் நோக்கி கனன்று நோக்க - இளைய மான் நோக்கம் போன்ற நோக்கினையுடையாள் கோபித்துப் பார்க்க, மன்னிய மனையவர் மறித்துரைத்தது - நிலைபெற்ற மனையிலுள்ளார் மறுத்துச் சொன்னது.

---

தேவியங் கண்டிகழ் மேனியன் சிற்றம் பலத்தெழுதும்
ஓவியங் கண்டன்ன வொண்ணு தலாடனக் கோகையுய்ப்பான்
மேவியங் கண்டனை யோவந் தனனென வெய்துயிர்த்துக்
காவியங் கண்கழு நீர்செவ்வி வௌவுதல் கற்றனவே.

(ப-ரை.) தேவி அங்கண் திகழ் மேனியன் - தன் தேவியுடைய அழகிய கண் விளங்குகிற திருமேனியை யுடையவன்; [என்றது, நாச்சியார் அன்புடைமையாலே, திருவடி தொடங்கி திருமுடியளவும் திருவழகு பார்க்கையே தொழிலாகையாலே, அத்திரு நயனங்களில் அவர் மேனி முழுதும் விளங்காநின்ற தென்க], சிற்றம்பலத்து எழுதும் ஓவியம் கண்டன்ன ஒண்ணுதலாள் - அவனுடைய திருச்சிற்றம்பலத்தே எழுதப்பட்ட சித்திரத்தைப் பார்த்தாலொத்த ஒண்ணுதலாள், தனக்கு ஓகை உய்ப்பான்-அவளுக்கு மாயை சொல்லுவதாக (?), மேவியம் கண்டனையோ வந்தனன் என - பொருந்தின எழுச்சி தொடரு மயலிலே (?) கேட்டாயோ? இனி வந்தான் காண் என்று சொல்லுமளவில், வெய்துயிர்த்துக் காவியங்கண் கழுநீர் செவ்வி வௌவுதல் கற்றனவே - வெய்தாகப் பெருமூச்சு விட்டு நீலப் பூவையொத்து அழகிய கண்கள் செங்கழு நீரின் செவ்வியைப் பற்றிக்கொள்ளக் கற்றன (எ-று.)

முன்பு நாம் வெறுப்பன செய்யினும் முனிந்து பார்க்கவறியாத கண்கள் இவன் செய்த கொடுமையாலே மாராயம் சேரவும்(?)

வெகுண்டு பார்க்கும்படியாயிற்று, என நாயகனைக் கொடுமை கூறியவாறு.

---

384. மனையவர் கூற்று.

(பா-ம்). 1. மகிழ்ந்துரைத்தது.

'தேவியுடைய அழகிய கண்மலர்கள் சென்று விளங்கு மேனியையுடையவனேனினுமமையும். மேவியங்கண்டனையோ வந்தன னெனவென்பதற்கு, அழகிய கண்டன் வந்தானென்று மேவியுரைப்ப வெனினுமமையும்' (பே-ரை.)

அம்பலத்தெழுதும் ஓவியம்: 'எழுதெழிலம்பலம்'; 'இன்ன பல பல வெழுத்து நிலை மண்டபம்' (பரி 18:28; 19:53).

---

## 385. வாயின் மறுத்துரைத்தல்.

மடவாற்றோழி வாயில்வேண்ட
அடல்வேலவ னருளுரைத்தது.

(இ-ள்.) மடவரல் தோழி வாயில்வேண்ட - மடப்பத்தை வெற்றியாகவுடைய நாயகி தோழிவாயில் வேண்ட, அடல் வேல வன் அருளுரைத்தது - வெற்றிவேலுடையவன் நிறைந்த அரு ளிருந்தபடியைச் சொன்னது.

---

உடைமணி கட்டிச் சிறுதே ருருட்டி யுலாத்தருமிந்
நடைமணி யைத்தந்த பின்னர்முன் னுன்முகன் மாலறியா
[1]விடைமணி கண்டவர்வண் டில்லைமென் றோகையன் னார்கண் [முன்னங்
கடைமணி வாணகை யாயின்று கண்டனர் காதலரே.

(ப-ரை.) உடை மணி கட்டிச் சிறு தேர் உருட்டி உலாத் தரும் - உடைமணியைக் கட்டிச் சிறு தேருருட்டி உலாவுகிற,

இந்நடைமணியைத் தந்தபின் - நடவாநின்ற இம்மாணிக்கத்தை யொப்பாளைப் பெற்றபின், முன் நான்முகன் மால் அறியா விடைமணிகண்டர் - முற்காலத்து அயனும் மாலும் அறியப்படாதே வைத்தும், விடையை மேல்கொண்டு திரியும் நீல மணி போலும் திருமிடற்றையுடையவர் [என்றது, இடபவாகனனை நீலகண்டனை வாகன ரூபியாகப் பெற்றும் அயனும் மாலும் அறிந்திலரென்பது கருத்து], வண் தில்லை மென் தோகை அன்னார்கண்முன் - அவனுடைய வளவிய பெரும்பற்றப்புலியூரில் மெல்லிய மயிலை யொப்பார்கள் முன்பு, நம் கடைமணிவாள் நகையாய் இன்று கண்டனர் காதலரே - முத்துமணியையொத்த ஒளி சிறந்த முறுவலினையுடையாய்! நம்முடைய வாசலைக் காதலர் இன்று கண்டார் இத்தலையல்லவோ? (எ-று.)

புதல்வனைத் தந்த பின்பு புலத்தல் முறைமையன்றாயினும், மணிவாணகையார் முன்பு வாயினேர்தல் பெண்மையன்றென மறுத்தாள் போலும். உலாத்தரும் புதல்வன் என்றமையால், இவன் உலாத்தருமளவும் புறத்தொழுக்கத்தே நின்றான் என்பது கருத்து. நடவாநின்ற மாணிக்கமெனவே, நம்மை வேண்டாராயினும் மாணிக்க நடைபெற்றாலொத்த தம் புதல்வனை வேண்டாராயினர் பரத்தையர் மேல்வைத்த அன்பினாலென்பது.

---

385. தலைமகள் கூற்று.

(பா-ம்.) விடமணிகண்டர்.

உடைமணி - பலமணிகள் கோக்கப் பெற்ற ஓர் அரையணி. 'திருவரையுடைமணி (தக்க. காப்பு). 'உடைமணி கணகணென (பெரியாழ்வார். திருமொழி.) ''ஒருவரைப் பங்கி னுடையாள் குமாரனுடை மணிசேர், திருவரை (கந்தரலங். 13) 'உடைமணியினோசைக் கொதுங்கி' (திருவிடை. மும். 11.) 'உடைமணி பொற்சிலம் பொலிக்கும் கோயில்' (சீவக. 2407).

## 386. பாணனொடு வெகுளுதல்.

மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண்ட
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்தது.

(இ-ள்.) மன்னி யாழ்ப் பாணன் வாயில் வேண்ட - நிலை பெற்ற யாழினையுடைய பாணன் வாயில் வேண்ட, மின்னிடை மடந்தை வெகுண்டு உரைத்தது - மின்னையொத்த இடையினை யுடைய நாயகி கோபித்துச் சொன்னது.

---

மைகொண்ட கண்டர் வயல்கொண்ட தில்லைமல் கூரர்நின் [வாய்
மெய்கொண்ட வன்பின ரென்பதன் விள்ளா வருள்பெரியர்
வைகொண்ட வூசிகொற் சேரியின் [1]விற்றெம்மில் வண்ண [வண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை யாத்தின்னி போந்ததுவே.

(ப-ரை.) மைகொண்டகண்டர் - கருமை நிறத்தைக் கௌவிக்கொண்ட திருமிடற்றையுடையவர், வயல் கொண்ட தில்லை - அவருடைய வயல் சூழ்ந்த பெரும்பற்றப்புலியூரில், மல்கூரர் - சிறந்த தலைவர் (?), நின்வாய் மெய்கொண்ட அன்பினர் என்பதென் - உன்னிடத்து உண்மை பொருந்தின அன்பை யுடையவர் இன்று எனக்குச் சொல்வதென்? விள்ளா அருள் பெரியார் - நீங்காத அருள் பெரியவர் அல்லரோ அவர்? வைகொண்ட ஊசிகொற்சேரியின் விற்று - கூரிய ஊசியைக் கொற் சேரியிலே விற்று [எங்களுக்கு நீ அவர் செய்தி சொல்லுவது கொற்சேரியில் ஊசிவிற்றதனோடு ஒக்கும்; ஊசி(யின்) கூர்மை சொல்லுவாள் போன்று, இவள் சொற் கூர்மை சொன்னபடி] எம்மில் வண்ண வண்ணப் பொய் கொண்டு நிற்கலுற்றோ புலை ஆத்தின்னி போந்ததுவே - (எம் இல்லத்து) உன்னுடைய மிகவும் அழகியதாய்த்தோன்றும் பொய் யைக்கொண்டு நிற்பதாக (உற்றோ), புலையனாகி ஆத்தின்கிற வனே, நீ வந்தது? (எ-று.)

நீங்காத அருள் புரிவோர் என்றது, அவர் பரத்தைய ரிடத்து அன்பினாற் பிரிந்தாரல்லர்; தம் காரணத்தால் அவர்கள் வருந்துகையில் அருளுடைமையாற் பிரிந்தார் என்க. இப் பொய் சொல்லியும் என் முன்னே நிற்பதாகவோ வந்தாய் என் கையில், கல்லுங் கட்டியும் முதலாயின கொண்டு வெருவிக்கத் தொடங்கினார்களாகக் கொள்க. ஆத்தின்னி சொல்லினிமை நோக்கி ஒற்றுமிக்கது.

---

386. தலைமகள் கூற்று.

1. (பா-ம்) விற்குநின்.

நின்வாய்.........வன்பினர் - நின்சொல்லின் அளவில் அன்பி னர் உண்மையில் அன்பில்லாதவர். 'யாரினு மினியன் பேரன்பினனே .........யாணரூரன் வாணன் வாயே' (குறுந். 85) என்றதையும் காண்க.

ஆத்தின்னி: 'கன்றுபெறு வல்சிப் பாணன்' (நற். 310. 9). 'கன்றுதின்னி புலையா' (தஞ்சை. 393). 'வன்மேதிதின்னி' (கலைசைக். 410).

---

## 387. பாணன்புலந்துரைத்தல்.

கருமலர்க்கண்ணி கனன்றுகட்டுரைப்ப
புரியாழ்ப்பாணன் புறப்பட்டது.

(இ-ள்.) கருமலர்க் கண்ணி கனன்று கட்டுரைப்ப - கரிய மலரையொத்த கண்களையுடையாள் கோபித்துச் சொல்ல, புரியாழ்ப்பாணன் புறப்பட்டது - விரும்பத்தக்க யாழினையுடைய பாணன் புறப்பட்டது.

---

கொல்லாண் டிலங்கு மழுப்படை யோன்குளிர் தில்லையன்னாய்
வில்லாண் டிலங்கு [1]புருவநெரியச் [2]செவ்வாய் துடிப்பக்
கல்லாண் டெடேல்கருங் கண்சிவப் பாற்று கறுப்பதன்று
பல்லாண் டடியே னடிவலங் கொள்வன் பணிமொழியே

(ப-ரை.) கொல் ஆண்டு இலங்கு மழுப் படையோன் - கொல்தொழில் இடத்தே விளங்குகிற மழுவாயுதத்தையுடையவன், குளிர் தில்லை அன்னாய் - அவனுடைய குளிர்ந்த பெரும்பற்றப் புலியூரை யொப்பாய்! வில் ஆண்டு இலங்கு புருவம் நெரிய - வில்லை அடிமைகொண்டு விளங்குகிற புருவம் நெரியவும், செவ்வாய் துடிப்ப - சிவந்த வாய் துடிப்பவும், கல் ஆண்டு எடேல் - அவ்விடத்துக் கல் எடாதே கொள்; கருங்கண் சிவப்பு ஆற்று - கரிய கண்கள் சிவப்பை ஆற்றுவாயாக. [இவை என்னெனில்,] கறுப்பது அன்று — நான் விண்ணப்பம் செய்த வார்த்தை கோபிக்கப்படுவதொன்றன்று காண். பல்லாண்டு - உனக்குப் பல்லாண்டுகள் சொல்லுவதாக; அடியேன் அடிவலம் கொள்வன் பணிமொழியே - தாழ்ந்த வார்த்தையினையுடையாய்! அடியேன் சீர்பாதம் வலங்கொண்டு போகிறேன். (எ-று)

இனனுகையாலே கல்லெடுத்த விடத்தும் கலங்காதுநின்று புகழ்ந்தும் பல்லாண்டு கூறியும் தன் பொய் மெய்யாக்கியும் கோபம் நீக்கிக் கழன்றனன். தாழ்ந்த வார்த்தையினை யுடையாளென்றமையால், 'உனக்கு இக்கடுஞ் சொல் தகாது' என்றது.

---

387. பாணன் கூற்று.

(பா-ம்) 1. புருவநெளிய: புருவநெறிக்க. 2. வெவ்வாய்.

---

## 388. விருந்தொடுசெல்லத் துணிந்தமை கூறல்.

பல்வளை பரிசுகண்
டில்லோ ரியம்பியது.

(இ-ள்.) பல வளை பரிசுகண்டு - பலவளைகளையுடையாள் இயல்பைக்கண்டு, இல்லோர் இயம்பியது - இல்லினுள்ளார் சொன்னது.

மத்தக் கரியுரி யோன்றில்லை யூரன் வரவெனலுந்
தத்தைக் கிளவி முகத் தாமரைத் தழல்வேன் மிளிர்ந்து
முத்தம் பயக்குங் கழுநீர் விருந்தொடென் றுதைமுன்னங்
கித்தக் கருங்குவ ளைச்செவ்வி யோடிக் கெழுமினவே

(ப-ரை.) மத்தக் கரி உரியோன் - மதயானையின் தோலைப் போர்த்தவன், தில்லை ஊரன் வரவெனலும் - அவனுடைய பெரும்பற்றப்புலியூரிற்றலைவன் வாரானின்றானென்று சொல்லு மளவில், தத்தைக் கிளவி முகத்தாமரைத் தழல் வேல் மிளிர்ந்து முத்தம் பயக்கும் கழுநீர் - கிளியையொத்த வார்த்தையினையுடை யாள் முகமாகிய தாமரைப்பூவில் வெம்மையுடைத்தாகிய வேல் போல் உலாவிக் கண்ணின் நீர்த்துளியாகிய முத்துக்களை விடுகிற கண்ணாகிய செங்கழுநீர்கள் [செங்கழுநீர் என்றது, கோபத்தால் எறிவிக்கையால்], விருந்தொடு என்றுதை முன்னம் - விருந்தினருடனே வந்தான் என்று சொல்லுவதற்கு முன்னே, கித்த - விரைய, கருங்குவளைச் செவ்வி ஓடிக் கெழுமினவே - கரிய நீலப் பூவின் செவ்வியை யடைந்தன. (எ-று.)

என்ன இல்லக் கிழத்தியோ; என்றது.

---

388. இல்லோர் கூற்று.

1. மத்தம் - களிப்பு 'மத்தமதமாக்கவுட்டு' (குமரகுரு. 47.1)

## 389. ஊடல்தணிவித்தல்

தோன்றலைத்துணையொடு தோழிகண்டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்தது.

(இ-ள்.) தோன்றலைத் துணையொடு தோழிகண்டு - பிள்ளை யைத் துணையாக வருதலோடே தோழி கண்டு, வான்றகை மடந்தையை வருத்தந் தணித்தது - பாலியத் தகைமைப்பாட்டை யுடைய நாயகியை வருத்தம் தணியும்படி சொன்னது.

கவலங்கொள் பேய்த்தொகை பாய்தரக் காட்டிடை யாட்டுகந்த
தவலங்கி லாச்சிவன் றில்லையன் னாய்தழு விம்முழுவிச்
சுவலங் கிருந்தநந் தோன்றற் றுணையெனத் தோன்றுதலால்
அவலங் களைந்து பணிசெயற் பாலை யரசனுக்கே.

(ப-ரை.) கவலங்கொள் பேய்த்தொகை பாய்தரக் காட்டிடை ஆட்டுகந்த - கானம் பாய்கிற (?) பேய்த்திரள்கள் திருக்கூத்தைக் கண்டு களித்து இரண்டு கால்களையும் கூப்பி (?)க் குதிபா........சுடுகாட்டிலே ஆடுதலை விரும்பின, தவல் அங்கு இலாச் சிவன் தில்லை அன்னாய் - கெடுதல் தன்னிடத்தில்லாத சிவனுடைய பெரும்பற்றப் புலியூரை யொப்பாய்! தழுவி முழுவி-முத்தமிட்டுக் கொண்டு, சுவல் அங்கு இருந்த - (சுவலிடத்து ஏறியிருந்த), நம் தோன்றல் - நம் தோன்றலை, துணையெனத் தோன்றுதலால் அவலம் களைந்து பணி செயற்பாலை அரசனுக்கே - புதல்வனைக் கொண்டு மனையிடத்தே வருகிறபொழுதே நாயகி ஊடல் அறிவான்போல் பிள்ளையைப் பாராட்டி வருதல், இந்நிலத்தைக் குலைந்து நீ ஊடுதல் போல ஆங்கு அவலமாயிருந்தது; அதனால் ஒழிவாயாக; கிலேசத்தைப் போட்டு அரசன் ஏவினது செய்கையே முறைமை. (எ-று.)

அரசனென்றது ஈண்டு உவமை வாசகம்.

---

**389.** தோழி கூற்று.

கவலம் கொள் பேய்த்தொகை பாய்தர - கவற்சி கொள்ளுதற்கேதுவாகிய பேய்த்திரள் கரணங்களைப் பாயா நிற்ப. (பே-ரை.)

## 390. அணைந்தவழியூடல்.

தெளிபுன லூரன் சென்றணைந்தவழி
ஒளிமதி நுதலி யூடியுரைத்தது.

(இ-ள்.) தெளிபுனல் ஊரன் சென்றணைந்தவழி - தெளிந்த புனலையுடைத்தாகிய ஊரையுடையவன் சென்றணைந்த விடத்து,

ஒளிமதி நுதலி ஊடி உரைத்தது - ஒளியுடைத்தாகிய மதியை யொத்த நெற்றியினையுடையாள் வெறுத்துச் சொன்னது.

——

சேறுன் றிகழ்வயற் சிற்றம் பலவர்தில் லைநகர்வாய்
வேறுன் றிகழ்கண் ணிளையார் வெகுள்வர்மெய்ப் பாலன் [செய்த
பாறுன் றிகழும் [1]பரிசின மேவும் படிறுகவேம்
காறுன் றொடறொட ரேல்விடு தீண்டலெங் கைத்தலமே

(ப-ரை.) சேல் தான் திகழ் வயல் சிற்றம்பலவர் தில்லை நகர்வாய் வேல்தான் திகழ் கண் இளையார் வெகுள்வர் - சேல் சிறந்த வயல் சூழ்ந்த சிற்றம்பலத்தே யுள்ளவருடைய பெரும் பற்றப்புலியூராகிய நகரிடத்துள்ள வேல்போலச் சிறந்தகண்களை யுடைய இளையோர் கோபிப்பர்; அதுவேயுமன்றி, மெய்ப்பாலன் செய்த பால்தான் திகழும் பரிசினம்; மேவும் படிறு உகவேம் - உடம்பானது பிள்ளையாலே உண்டாக்கப்பட்ட முலைப்பாலால் இகழத்தக்க பரிசினையுடையேம்; அதுவேயுமன்றி, நீர் செய்யும் வஞ்சகங்களை விரும்போம்; ஆதலால், கால்தான் தொடல் - காலைப்பிடியாதேகொள்; விடு, தீண்டல் எம் கைத்தலமே - எங்களைத் தீண்டப் பெறாய்; ஆதலால் எம் கைத்தலங்களை விடுவாயாக (எ-று.)

தான் - நாலடியும் அசை.

இளையார் வெகுள்வர் என்றது, என்வெகுளிக்கு நீ பயப்படுமாறு கண்டால் இளையவர் வெகுளிக்கும் அஞ்சவேண்டுமென்றது. இளையாரென்றது, பண்டை இளையோரில் நின் பரத்தையரில்லாதாரில்லை என்றது; யான் ஒருத்தியை ஊடல் தணிக்கப் புகுந்து வீணைப் பகைகொள்ளா நின்றாய் என்றது; பகைகொண்டாலும் இவ்விடத்தின்பமில்லை என்பது பட்டு இகழும் பரிசினம் என்றாள்; பெற்றவின்பங்கொண்டு நிற்கினும் நாங்கள் இனி நம்போம் என்பதுபட 'படிறுகவேம்' என்றாள்.

390. தலைமகள் கூற்று.

(பா-ம்.) 1. பரிசினமேறும்.

குறிப்பு: பதவுரையிலும் விளக்கவுரையிலும் இகழும் பரிசினம் என்றுகொண்டே பொருள் கூறப்பெற்றுள்ளது.

---

## 391. புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தல்

ஆங்கதனுக் கழுக்கமெய்தி
வீங்குமென்முலை விட்டுரைத்தது.

(இ-ள்.) ஆங்கதனுக் கழுக்கமெய்தி - அவன் முன்பு செய்துவந்த புதுப்புனலாட்டுக்கு வெறுத்து, வீங்குமென்முலை விட்டுரைத்தது - பொழுதைக்குப் பொழுது விம்முகிற முலையினையுடையாள் தோன்றச் சொன்னது.

---

செந்தார் நறுங்கொன்றைச் சிற்றம்பலவர் [1] தில்லைநகர்வாய்
பந்தார் விரலியைப் பாய்புன லாட்டிமன் பாவியெற்கு
வந்தார் பரிசுமன் றாய்நிற்கு மாறென் வளமனையிற்
கொந்தார் தடந்தோள் விடங்கா லயிற்படைக் கொற்றவரே.

(ப-ரை.) செந்தார் நறுங்கொன்றைச் சிற்றம்பலவர் - நறுநாற்ற முடைத்தாகிய கொன்றை மாலையாகிய சிவந்த மாலையை யுடைய திருச்சிற்றம்பலநாதருடைய, தில்லை நகர்வாய் - பெரும் பற்றப்புலியூராகிய நகரியிடத்து, பந்தார் விரலியைப் பாய் புனலாட்டி - பந்தின் தொழில் பயின்ற விரலினையுடையாளைப் புனலாடப் பண்ணி, வந்தார் பரிசும் அன்றாய் - புனலாடவந்தவர்கள் செய்தியும்........, பாவி யெற்கு.........., நிற்குமாறு என் - நிற்கிறபடி என்தான்? வளமனையில் - வளவிய மனையிடத்திலே வந்து, கொந்தார் தடந்தோள் விடங்கால் அயில்படை கொற்ற

வரே - கொத்துமாலை நிறைந்த பெரிய தோள்களையும் விஷத்தைக் காலுகிற வேலையுமுடைய வெற்றியையுடையவர்; [நிற்கிற படி என் என்று கூட்டுக.] (எ-று.)

புதுப்புனலாடப் பண்ணி அவ் ஈரக்கோலத்துடன் நிற்றல் மகளிர்க்கு பொறாமை செய்யும்; அதுவேயுமன்றி, அவரணிந்த கோலத்து மாலையையும் அணிந்து நின்றமையால் புதுப்புனலாடி வந்தார் பரிசு மன்றாய் இருந்தது (என்றாள்.) கொற்றவரென்றது மாலை சூடிவந்தார் என்னுங் கருத்தால், விடங்காலையிற் படை யென்றது, சத்துரு ஜயம் பண்ண வேலெடுத்தது போலும் மகளிரை வருத்த மாலை சூடினது..............

---

391. தலைமகள் கூற்று.

(பா-ம்.) 1. தில்லை நகரோர்.

'வந்தார் பரிசு மன்றாய்' என்றதற்குப் 'புனலாட வந்தவர்கள் செய்தியுமுடையாய்' என்றும், 'பாவியெற்கு' என்றதற்கு 'தவம் செய்தார்' என்றும், பதவுரையிலும், விளக்கவுரையின் இறுதியில், 'எனவிரண் சேர்த்தெண்ணினுஞ் சேர்த்துயணிதுறல் மகளிர்க்குப் பெரும்பான்மையாதலின் இவன் மாறுடியணிந்தானெனக' என்றும் ஏட்டில் எழுதப்பெற்றுள்ளன. இவை விளக்கமின்மையால் விடப்பட்டன.

## 392. கலவிகருதிப்புலத்தல்.

கலைவளரல்கு றலைமகன் றன்னொடு
கலவிகருதிப் புலவிபுகன்றது.

(இ-ள்.) கலைவளர் அல்குல் - மேகலையணிந்த அல்குலினையுடையாள், தலைமகன் தன்னொடு - நாயகனுடனே, கலவி கருதிப் புலவி புகன்றது - கலவியைக்கருதிப் புலவியான வார்த்தையைச் சொன்னது.

மின்றுன் னியசெஞ் சடைவெண்மதியன் விதியுடையோர்
சென்றுன் னியகழற் சிற்றம் பலவன் றென்னம்பொதியின்
நன்றுஞ் சிறியவ ரில்லெம தில்லநல் லூரமன்னே
இன்றுன் றிருவரு ளித்துணை சாலுமன் னெங்களுக்கே.

(ப-ரை.) மின் துன்னிய செஞ்சடை வெண் மதியன் - ஒளி சிறந்த செஞ்சடையிலே வெள்ளிய பிறையை வைத்தவன்; விதியுடையோர் சென்று உன்னிய கழல் சிற்றம்பலவன் - தொண்டு செய்து தன்னை அடைதற்கு ஆகமவிதியுடையோர்கள் கன்ம காண்டத்தினின்று ஞானகாண்டத்திலே சென்று நினைக்கிற திருவடிகளையுடைய திருச்சிற்றம்பலநாதன்; தென்னம் பொதியின் - அவனுடைய தெற்கின்கண் உண்டாகிய அழகிய பொதியின் மலையிடத்து, நன்றும் சிறியவர் இல் எமது இல்லம் - மிகவும் சிறியோராகிய குறவர் குடி எங்கள் குடி; நல் ஊர - நல்ல ஊரையுடையவனே! இன்று உன் திருவருள் இத்துணைசாலும் எங்களுக்கே - இக்காலத்து உன்னுடைய திருவருள் இத்தனையும் வேண்டுவதுபோலும் எங்கள் அளவில்.

எனவே, முற்காலம் இவன் கிலேசிக்கவும் தாங்கள் அறியாரானமை தோன்றச் சொன்னது.

392. தலைவி கூற்று.

## 393. மிகுத்துரைத்தூடல்.

நாடுமூரு மில்லுஞ் சுட்டி
ஆடற்பூங்கொடி யூடியுரைத்தது.

(இ-ள்.) நாடும் ஊரும் இல்லும் சுட்டி - நாட்டையும் ஊரையும் விட்டையும் குறித்து, ஆடல் பூங்கொடி ஊடி உரைத்தது - அசைந்த பூங்கொடியினையொப்பாள் வெறுத்துச் சொன்னது.

செழுமிய மாளிகைச் சிற்றம் பலவர்சென் றன்பர்சிந்தைக்
கழுமிய கூத்தர் கடிபொழி லேழினும் வாழியரோ
விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுக்குடியீர்
விழுமிய வல்லகொல் லோவின்ன வாறு [1]விரும்புவதே

(பதவுரை) செழுமிய மாளிகைச் சிற்றம்பலவர் - வளவிய மாடங்களாலே சூழப்பட்ட திருச்சிற்றம்பலத்தேயுள்ளவர், சென்று அன்பர் சிந்தை கழுமிய கூத்தர் - அன்பர் சிந்தைகளிலே சென்று செறிகிற திருக்கூத்தையுடையவர், கடிபொழில் ஏழினும் வாழியரோ - அவராலே காக்கப்பட்ட பூமிகளேழினும் வாழியரோ [வாழியும், அரோவும் அசைநிலை]; விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுக்குடியீர் - சீரிய நாட்டில் சீரிய நல்லூரில் சீரிய குடியிலுள்ளீர் ! விழுமிய வல்ல கொல்லோ இன்னவாறு விரும்புவதே - இவ்வொழுக்கத்தை விரும்புவது சீரியதன்றுபோலேயிருந்தது. (எ-று.)

என, நாடும் ஊரும் இல்லும் புகழ்ந்து, 'நீர் இவற்றிற்குத் தக்க ஒழு(க்கமுடையீர்) அல்லீர் எனவே, கூட்டத்துக்கு உடன்பாடில்லாமை தோன்றினது.

---

393. தலைவி கூற்று.

(பா-ம்.) 1. விரும்புதல்.

---

## 394. ஊடனீடிவாடியுரைத்தல்.

வாடா ஊட
னீடா வாடியது.

(இ-ள்.) வாடாஊடல் நீடா - குறையா ஊடல் நீட்டிப்ப, வாடியது - நாயகன் வாடினது.

---

திருந்தே னுயநின்ற சிற்றம் பலவர்தென் னம்பொதியில்
இருந்தே னுயவந் திணைமலர்க் கண்ணினின் னோக்கருளிப்
பெருந்தே னெனநெஞ் சுகப்பிடித் தாண்டநம் பெண்ணமிழ்தம்
வருந்தே லதுவன் றிதுவோ வருவதொர் வஞ்சனையே.

(ப-ரை.) திருந்தேன் உய நின்ற சிற்றம்பலவர் - ஒரு வழியாலும் திருந்ாதவன் உய்யும்படி தன்கண் வரும் திருமேனி காட்டி நின்ற சிற்றம்பலநாதன், தென்னம் பொதியில் இருந்தேன் உய வந்து இணை மலர்க் கண்ணின் இன் நோக்கு அருளி - அவருடைய தெற்கின்கண் உண்டாகிய அழகிய பொதியின் மலையிடத்தே ஒருமுயற்சியின்றியே இருந்த நான் பிழைக்கும்படி வந்து இணையொத்த மலரையொத்த கண்களின் இனிய நோக்கைத் தந்து, பெருந்தேன் என நெஞ்சு 'உகப் பிடித்தாண்ட நம் பெண்ணமிழ்தம் - பெருந்தேனை யொப்ப இனிதாய நெஞ்சு உருகும்படி பற்றித் தன் வசமாக்கிக்கொண்ட நம் பெண்ணாகிய அமிழ்தே, அதுவன்று; இதுவோ, வருவதோர் வஞ்சனையே - அல்லகாண் இது; வரக்கடவதொரு வஞ்சனைகாண்; வருந்தேல் - நெஞ்சமே, வருந்தாதேகொள்.

---

**394.** தலைமகன் கூற்று.

'தன்னை நோக்கியொரு முயற்சியுமில்லாத யான் பிறவித்துன்பத்திற் பிழைக்கத் தானே வந்து தன்னிணை மலர்க்கண்ணினதினிய கடைக்கண் நோக்கத்தைத் தந்து பெருந்தேன்போன்றினிதாய், என் வன்மனநெகிழ என்னை வலிந்து பிடித்தடிமைகொண்ட பெண்ணமிழ்தமென வேறுமொரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க' (பே-ரை.)

---

## 395. துனியொழிந்துரைத்தல்

[1]தருதியினாரன் மிருபதநோக்கிப்
பனிமலர்க்கோதை துனியொழிந்தது.

(இ-ள்.) தருதியினாரன் மிருபதம் நோக்கி - நாயகனுடைய அன்புமிக்க செவ்வியைப் பார்த்துத் தருதியுடைமையாலே, ஆங்

கொரு சூழல் பாங்கி பகர்ந்தது - அவ்விடத்தே ஒரு விசாரத்தைப் பாங்கி சொன்னது.

---

இயன்மன்னு மன்புந் தார்க்கென் னிலையிமை யோரிறைஞ்சுஞ்
செயன்மன்னுஞ் சீர்க்கழற் சிற்றம் பலவர்தென் னம்பொதியிற்
புயன்மன்னு குன்றிற் பொருவே றுணையாப்போம் மென்
[னிருள்வாய்
அயன்மன்னும் யானை துரந்தரி தேரு மதரகத்தே.

(ப-ரை.) இமையோர் இறைஞ்சும் செயல் மன்னும் சீர் கழல் - தேவர்கள் வணங்குகிற செய்தி நிலைபெற்ற சிறந்த திருவடிகளையுடைய, சிற்றம்பலவர் தென்னம் பொதியில் - சிற்றம்பலநாதனுடைய தெற்கின்கணுண்டாகிய அழகிய பொதியின்மலையிடத்து, புயல் மன்னுகுன்றில் - மேகங்கள் நிலைபெற்ற பக்கமலையிடத்தே, பொருவேல் துணையா - சிறந்த வேலைத் துணையாக, பொம்மென் இருள்வாய் - செறிந்த இருளிடத்தே, அயல் மன்னும் ஆனை துரந்து அரி தேரும் அதரத்தே-வழிப்பக்கங்கள் தோறும் நிலைபெற்ற யானைகளை ஓட்டிச் சிங்கங்கள் உணவு தேடுகிற வழியிடத்தே, வ.........இயல் மன்னும் அன்பு தந்தார்க்கு என் நிலை - இயற்கை நிலைபெற்ற அன்பைத் தந்தவர்க்கு நீ இங்ஙனே வெறுத்து நிற்கிற நிலை என்தான்? (எ-று,)

இயல் மன்னுமன்பு தருதல் - செயற்கையாகில் அப்படி வந்து வருந்தவேண்டியதில்லை; ஆதலால் அவருடைய அன்பு இயற்கை அளவிலே (அமைந்தது) எனமுன் நிகழ்ந்தது கூறி நெஞ்சு நெகிழ்ந்தது.

---

**395.** தலைவி கூற்று.

(பா-ம்.) 1. தகுதியிலூரன்.

பொம்மென். 'பொம்மென்ன வண்டலம்பும்' (கம்ப. பால. கார்முக. 22.) 'பொம்மலோதி' (குறுந். 191: 6)

## 396. புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தல்.

புதல்வனது திறம்புகன்று
மதராிக்கண்ணி [1]வாட்டமுற்றது.

(இ-ள்.) புதல்வனது திறம் புகன்று - பிள்ளையுடைய...... யைச் சொல்லுவாள்போன்று, மதர் அரிக் கண்ணி வாட்ட முற்றது - ...........த்துடனே நல்ல நிறம்பரந்த கண்களை யுடையாள் வாடினது.

---

கதிர்த்த நகைமன்னுஞ் [2]சிற்றவ்வை மார்தம்மைக் கண் [பிழைப்பித்
தெதிர்த்தெங் குநின்றெப் பரிசளித் தானிமை யோரிறைஞ்சு
மதுத்துங் கியகொன்றை வார்சடை யீசர்வண் டில்லைநல்லார்
பொதுத்தம் பலங்கொணர்ந் தோபுதல் வாவெம்மைப் பூசிப் [பதே.

(ப-ரை.) இமையோர் இறைஞ்சும் மதுத்துங்கிய கொன்றை வார் சடை ஈசர் - தேவர் வணங்கப்பட்ட, மதுநிலை பெற்ற கொன்றைமாலையினை அணிந்த நீண்ட திருச்சடையையுடைய ஈசர், வண் தில்லை நல்லார் பொதுத் தம்பலம் கொணர்ந்தோ புதல்வா எம்மைப் பூசிப்பது - அவருடைய வளவிய பெரும்பற் றப்புலியூரிடத்து நல்லோராகிய பரத்தையர்க்கெல்லாம் பொது வாகிய பின் பிதாவின் தம்பலத்தைக் கொண்டு வந்தோ, புதல் வனே! நீ எம்மைக் கொண்டாடுவது? (அது) கிடக்க; கதிர்த்த நகை மன்னும் சிற்றவ்வைமார் தம்மைக் கண்பிழைப்பித்து - ஒளியுடைத்தாகிய முறுவல் நிலைபெற்ற சின்றன்னையராகிய தில்லை நல்லாரைக் கண் புதைப்பித்து, எதிர்க்து எங்கு நின்று எப்பரிசு அளித்தான் - அவ்வளவிலே உன்னைச் சிந்தித்து எவ்விடத்தே... .........யாலே உனக்குத் தம்பலம் இட்டான் நின்று? (எ-று.)

என்றது, அவர்கள் காணுதது ஓரிடம் எங்குப் பெற்ருன் என்றும், எப்பரிசு அளித்தானென்றும். ...........அவர்கள் காண்கிருர்களோ என்று பயப்பட்டு நடுங்குகையாலே அந் நடுக்கத்திலே உனக்கிட்ட விரகு எனென...........ட்டஞ்சலி

பண்ணி அன்றோ, பரத்தையர்க்குப் பொதுவாகிய தம்பலத்தைக் கொண்டு பூசிக்குமது புதல்வர்க்கு இயல்பன்று (என்றும் கொண்டு கூறினாள் எனக் கொள்க.)

---

396. தலைவி கூற்று.

(பா-ம்) 1. வாட்டடங்தவிர்ந்தது. 2. சிற்றவ்வைமார்களைக்

---

## 397. கலவியிடத்தூடல்

சீறடிக்குடைந்த நாறிணர்த்தாரவன்
தன்மைகண்டு பின்னுந்தளர்ந்தது.

(இ-ள்.) சீறடிக்கு உடைந்த நாறு இணர்த் தாரவன் - சிறிய அடியினையுடையாள் காரணமாக. ........................

---

சிலைமலி வாணுத லெங்கைய தாக மெனச்செழும்பூண்
மலைமலி மார்பி னுதைப்பத்தந் தான்றலை மன்னர்தில்லை
உலைமலி வேற்படை யூரனிற் கள்வரி லென்னவுன்னிக்
கலைமலி காரிகை கண்முத்த மாலை கலுழ்ந்தனவே.

(ப-ரை.) சிலை மலி வாணுதல் எங்கையது ஆகம் என - வில்லை யொத்து ஒளி சிறந்த நெற்றியினையுடைய என் தங்கையுடைய.........தன் மார்பைக் கருதி, செழும் பூண் மலை மலி மார்பின் உதைப்பத் தந்தான் தலை - (வளவிய பூணையுடைய) மலையை யொத்த மார்பினை நான் உதைப்ப மார்(பினால்) ஏலாதே தலை(யால்) ஏற்றான். [நெஞ்சிலிருக்கிறவர்களுக்கு நோமென்று கருதித் தலை(யால்) ஏற்றானென்க.] மன்னர் தில்லை உலைமலிவேல் படை ஊரனின் கள்வர் இல் என்ன உன்னி - முதலியாரின் பெரும்பற்றபுலியூரிடத்துக் உலைத்தொழிலால் சிறந்த வேலாயுதத்தையுடைய நாயகரைப் போலக் கள்வரில்லையென்று விசாரித்து, கலை மலி காரிகைகண் முத்துமாலை கலுழ்ந்தனவே -

மேகலையாற் சிறந்த நாயகியின் கண்கள் முத்தமாலை போலக் கண்ணீர்த்துளி தாரை தோன்றும்படி அழுதன. (எ-று.)

---

397. உழையர் கூற்று. தோழி கூற்றும், தலைவன் கூற்றுமாம்

இப்பாடலைப் பின்வரும் கம்பராமாயணச் செய்யுளோடு ஒப்பிடுக:-

கொள்ளைப்போர் வாட்க ணாளங் கொருத்தி யோர்குமரன் றன்
வள்ளத்தா மகலந் தன்னை மலர்க்கையாற் புதைப்ப நோக்கி
உள்ளத்தா ருயிரன் னான் மேலுதைபடு மென் றுநீயின்
கள்ளத்தாற் புதைத்தி யென்று முன்னையிற் கனன்று மிக்காள்.

(பால. உண்டாட்டு. 59)

---

## 398. முன்னிகழ்வுரைத் தூடறீர்த்தல்.

முன்னிகழ்ந்தது நன்னுதற்குரைத்து
மன்னுபுன லூரன் மகிழ்வுற்றது.

(இ-ள்.) முன் நிகழ்ந்தது நன்னுதற்கு உரைத்து - (முன் நிகழ்ந்த) படிகளை நல்ல நெற்றியினையுடையாளுக்குச் சொல்லி, மன்னு புன லூரன் மகிழ்வுற்றது - நிலைபெற்ற புனலாற் சிறந்த ஊரினையுடைய (வன் மகிழ்ந்தது).

---

ஆறூர் சடைமுடி யம்பலத் தண்ட ரண்டப்பெறினு
மாறூர் மழவிடை யாய்கண் டிலம்வண் கதிர்வெதுப்பு
நீறூர் கொடுநெறி சென்றிச் செறிமென் முலை[1]நெருங்கச்
சிறூர் [2]மரையத ளிற்றங்கு கங்குற் சிறுதுயிலே

(ப-ரை.) ஆறு ஊர் சடைமுடி அம்பலத்து அண்டர் அண்டம் பெறினும் - கங்கையானது இற்றைவரை ஊ(மு)குகிற

சடைமுடியினையுடைய அழகிய அம்பலத்தில் தேவராகிய முதலியாரால் காணப்பட்ட உலகங்கள் எல்லாவற்றையும் பெறினும், மாறார் மழவிடையாய் - தவழாநின்ற இளைய இடபத்தினையுடையாய்! கண்டிலம் - ஒப்பாகக் கண்டிலோம்; வண்கதிர் வெதுப்பு நீறு ஊர் கொடு நெறி சென்று - வளவிய கிரணங்கள் வெதுப்பும் தூளிபரந்த கொடிய வழியிலே போய், செறிமென் முலை நெருங்க - இந்தச் செறிந்த முலைகள் முயங்க, சிறார் மறை அதளின் தங்கு கங்குல் சிறு துயிலே - சிற்றாரிலே மறைத்தோலிலே அவதரித்தவற்றை இரவிற் சிறிது துயிலு........உலகங்களெல்லாம் பெற்றாலும் நேராகக் கண்டிலோம் (எ-று.)

சிறிய துயிலென்றது சிறுகுடியில் மறைத்தோலில் கிடந்து புல்லிய உறக்கம்; ........னைந்தென்னுடன் போந்தா யென்றபடி. அன்றிப் பெறுது பெற்றமையால் துயிலும் பொழுதில் துயிலாப் பொழுதே பெரிதாதலால் சிறு துயிலென்றுரைப்பாருமுளர்.

---

398. தலைமகன் கூற்று;

(பா-ம்.) 1. ஞெமுங்க. 2. மரவதள்

இப்பாடலின் உரை மிகவும் சிதைந்துள்ளது

மழவிடை - புதல்வன்

மரையதட்பள்ளி - மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி (பெரும்பாண் 89.)

'அண்டரண்டமுழுதும் பெறுதலால் வருமின்பமும் அத்துயிலான் வந்த இன்பத்திற்கு மாறல்லவென்றவாறு. தமக்குத் தக்க பள்ளியிடமுமின்மையிற் சிறுதுயிலென்றான். துயிலும் பொழுதிற் றுயிலாப் பொழுது பெரிதாகலின் அவ்வாறு கூறினானெனினுமமையும். முன்னிகழ்ந்தது கூறுவானாய் உண்ணின்ற சிவப்பாற்றுவித்தது' (பே-ரை.)

## 399. பரத்தையைக் கண்டமை கூறிப்புலத்தல்.

பரத்தையைக்கண்ட பவளவாய்மாதர்
[1] அரத்தகுநெடுவே லண்ணற்குரைத்தது.

(இ-ள்.) பரத்தையைக் கண்ட பவளவாய் மாதர் - அவன் பரத்தையைக் கண்டேனென்ற பவளம் போலும் வாயினை யுடைய மாதர் அரத்தகு நெடுவேல் அண்ணற்கு உரைத்தது - சிவந்த நெடிய வேலினையுடைய நாயகனுக்குச் சொன்னது.

---

ஐயுற வாய்நம் மகன்கடைக் கண்டுவண் டேருருட்டும்
மையுறு வாட்கண் மழலைத் தழுவமற் றுன்மகனே
மெய்யுற வாமி துன்னில்லே வருகென வெள்கிச்சென்றாள்
கையுறு மான்மறி யோன்புலி யூரன்ன காரிகையே.

(ப-ரை.) ஐயுறவாய் நம் அகன் கடைக்கண்டு வள் தேர் உருட்டும் மையுறு வாள் கண் மழலைத் தழுவ - வளவிய சிறு தேரை யுருட்டி விளையாடுகிற மைபொருந்தின ஒளி சிறந்த கண்களையுடைய பிள்ளை நம்...........டத்தே கண்டு தன் பிள்ளையாகக் கருதி நம் வாயிலிலே நிற்கையால் ஐயப்பட்டு அவ்வையத் துடனே தழுவிக்கொண்டபொழுது, மற்று உன் மகனே - உன் பிள்ளையே காண்; அது, மெய் உறவாம் - உன்னுடன் உண்டாகிய உறவு மெய்யான உறவே காண்; உன் இல்லே - உன் அகமே காண், வருக என வெள்கிச் சென்றாள் - நான் வாராய், என்று சொல்வதற்கு நாணி மேனி வெளுத்துப் போனாள், கையுறு மான்மறியோன் புலியூர் அன்ன காரிகையே - கையிலே பொருந்தின மான்மறியையுடையவனுடைய பெரும்பற்றபுலியூரை யொத்த விறுபட்ட அழகினையுடையவள். (எ-று.)

---

399. தலைமகள் கூற்று.

[1] (பா-ம்) அரத்த நெடுவேல்.

ஆற்றாமையே வாயிலாகப் புக்க தலைமகன் தலைமகளைச் சிவப்பாற்றுவிப்பான் நின்னின் வேறு சிலர் எனக்கில்லையால் நீ வெகுளற்க வென்றாற்குத் தலைமகள் இவ்வகை சொன்னாளென்பது. (பே-ரை.)

---

## 400. ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல்.

இரும்பரிசி லேற்றவர்க்கருளி
விரும்பினர்மகிழ மேவுதலுரைத்தது.

(இ-ள்.) இரும்பரிசில் ஏற்றவர்க்கருளி - வந்து ஏற்றவர்க்குப் பரிசிலைக் கொடுத்து, விரும்பினர் மகிழ மேவுதல் உரைத்தது - மற்று விரும்பினர் விரும்பின பொருள் பெற்று மகிழும்படி பலர்க்கும் பொருந்த மேவுதலைச் சொன்னது.

---

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
[1] ஊரணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே

(ப-ரை.) ஊரன் - நாயகன், கார் - வரையாது கொடுத்தலால் மேகத்தை(ஒப்பான்); அணி கற்பகம் - வேண்டினது கொடுத்தலால் அழகிய கற்பக விருக்ஷத்தை ஒப்பான்; கற்றவர் நற்றுணை - நூலறிவால் நல்ல துணையாயிருப்பான்; பாணர் ஒக்கல் - இச்சையாலும் கெழுதகைமையாலும் பாணர்க்கு இனமுறையாயிருப்பவன்; சீரணி சிந்தாமணி - நினைத்தது கொடு.........முடைத்தாகிய சிந்தாமணியென்னும் வள்ளலையொப்பான்; அணி தில்லைச் சிவனடிக்குத் தாரணி கொன்றையன் - அழகிய பெரும்பற்றப் புலியூ......அடிகளுக்கு மாலையாகிய கொன்றையையொப்பான்; (தக்கோர்தம் சங்கநிதி - சான்றோர் தமக்குத் தொலையாத நிதி

யாயிருத்தலிற் சங்கநிதியோடொப்பான்;) விதி - சுற்றத்தார்க்கும் பகைவர்க்கும்...........துக்கங்களைத் தப்பாமற் செய்கையால் விதியை யொப்பான்; சேர் ஊரணி உற்றவர்க்கு - தன்னை வந்து சேர்வார்க்கெல்லாம் ஊர்க்கண்ணிய ஊரணியோடொப்பான்; மற்றுயாவர்க்கும் ஊதியம் - ஆதலால், மற்றுமெல்லார்க்கும்...... ஞயிருப்பன் (எ-று.)

எனவே இவன் கண் மகிழ உருவினனாதலாலே இவனைக் கண்டு பரத்தையர் விரும்புதலால், அவர்கள் வேட்கை தணிக்கச் செல்லு.........மேல் அன்புடையனாய் நின்மேல் அன்பிலாமை பிரிகின்றானலன். அருளாற் செய்யுமவனை வெறுத்தல் உனக்கு மேன்மை..............என்று உண்ணின்ற சிவப்பாற்றுவித்தாள்.

---

400. தோழி கூற்று.

(பா-ம்.) 1. ஊருணி

இப்பாட்டு ஐவகைத்திணைக்கும் உரித்தாகலிற் பொது வகைத் தெனப் பெறுமென்பது (பே-ரை.)

கொன்றையன் - கொன்றைப்பூவின் தன்மையன். 'வேம்பன்' "கொன்றையன்" என்பதுபோல நின்றது. (சிலப். 16:149. அடி) உரை மேற்கோள்',

ஊரணி - 'ஊர்க்கு மணித்தே பொய்கை' (குறுந். 113). ஊருக்கு அணித்தானமையின் ஊரணி யென்று கூறுதலும், ஊரினரால் உண்ணப்படும் தகுதியையுடைய நீர்நிலையை ஊருணியென்று கூறுதலும் வழக்கென்று கொள்ளுதல் பொருந்தும்(மகாமகோ. ஐயர். குறுந். 113. குறிப்புரை).

## பரத்தையிற்பிரிவு முற்றிற்று

---

திருக்கோவையாருரை முற்றுப்பெற்றது

திருச்சிற்றம்பலம்.

# பொருளடக்கம்

## களவித் தொகையும் துறைவகையும்

# பாட்டு முதற்குறிப்பகராதி.



## திருச்சிற்றம்பலக் கோவையார்

# அரும்பத முதலியவற்றின் அகராதி

(எண்—பாட்டெண்.)

சிவபெருமானைக் குறிக்கும் சில அருந்தொடர்கள்:—

